**மனோரஞ்சன் ஜா** (பிறப்பு 1928) 1952 ஆம் ஆண்டில் பாட்னு பல்கலைக் கழகத்திலிருந்து எம். ஏ. பட்டம் பெற்றார். "1930–35 ஆம் ஆண்டுகளில் அமெரிக்காவும் இந்தியாவும்: 1930–35 ஆம் ஆண்டுகளில் இந்தியாவில் ஏற்பட்ட அரசியல் மாறுதல்கள் பற்றி அமெரிக்காவின் அதிகார வட்டங்களிலும் இவ்வட்டங்களுக்கு வெளியேயும் நிலவிய அபிப்பிராயங்கள்" என்னும் தலைப்பில் இவர் எழுதிய வியாசத்துக்காக, இந்தியன் ஸ்கூல் ஆஃப் இன்டர் நேஷனல் ஸ்டடீஸ் இவருக்கு டாக்டர் பட்டம் அளித்துக் கௌரவித்துள்ளது. தற்போது இவர் காசி இந்து பல்கலைக் கழகத்தின் அரசியல் கலைப் பிரிவில் ஓர் விரிவுரையாளர். 'காதரின் மேயோவும் இந்தியாவும்' என்ற தலைப்பில் இவருடைய ஒரு புத்தகம் 1971 ஆம் ஆண்டு பிரசுரமாயிற்று.

# சுதந்திரப் போராட்டமும் மத்திய சட்டசபையும்

மனோரஞ்சன் ஜா

*தமிழாக்கம் :*

சாலை இளந்திரையன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

புது தில்லி

1974



ரூ. 10-50

*Original Title* : *Role of Central Legislature in the Freedom Struggle (English)*

TAMIL TRANSLATION : *SUTHANTHIRA PORATTAMUM MADHIA SATTA SABAIYUM*

*விநியோகிப்பாளர் :*

**பாரி நிலையம்**

1/59, பிராட்வே, சென்னை-1

PUBLISHED BY THE DIRECTOR, NATIONAL BOOK TRUST, INDIA,
A-5, GREEN PARK, NEW DELHI-110016, AND PRINTED BY
TAX AND COMPANY LAW PRESS, GUINDY, MADRAS-600032.

# அணிந்துரை

நமது சுதந்திரப் போராட்டத்தில் மத்திய சட்டசபைகளுக்கு இருந்துவந்த பங்கைப் பற்றிப் புலமையுடனும் வாசக ரஞ்சக மாகவும் விவரிக்கின்ற இந்தப் புத்தகத்தை அறிமுகம் செய்து வைப்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். சட்டசபைக்கு வெளியே நடந்த வெகுஜன இயக்கங்களே போராட்டத்தின் முக்கியமான களங்களாக அமைந்திருந்தாலும், நமது தேசியத் தலைவர்களிலே பலர், பிரிட்டிஷ் சிங்கத்தை அதன் குகையிலேயே (சட்டசபையிலேயே) சந்திக்கும் அளவு, சட்டசபை விவாதக் கலையிலும் தேர்ச்சியும் திறமையும் பெற்றவர்களாக விளங்கினார்கள். சட்டசபையில் நிகழ்த்திய திறமை மிக்க வாதங்களால், ஏகாதிபத்திய அடக்கு முறைக்கும் சுரண்டலுக்கும் எதிரான ஓர் உணர்ச்சியை உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் ஏற்படுத்துவதில் அவர்கள் கணிசமான வெற்றி பெற்றார்கள். 1909 மற்றும் 1919 ஆம் ஆண்டுக் கவுன்சில் சட்டங்களின் மூலம் வழங்கப்பட்ட குறைந்த வாய்ப்புக்களை முழுமையாகப் பயன்படுத்தி, காலனி ஆட்சிமுறையின் கேடுகளையும், இந்தியச் சுயஆட்சி உரிமை மற்றும் ஒற்றுமை உணர்வின் தேவையையும் அவர்கள் நன்கு எடுத்து விளக்கினார்கள். வித்தல்பாய் படேல் சட்ட சபைத் தலைவர் பதவிக்குரிய உயர்ந்த மரபுகளை நிறுவியதோடு, நெருக்கடியான அந்தச் சூழ்நிலையிலும், தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகளின் உரிமைகளையும் சலுகைகளையும் முடிந்த அளவு கட்டிக் காத்துள்ளார். மோதிலால் நேருவின் தலைமையில் அமைந்த சுயராச்சியக் கட்சி, எந்த நிலையிலும் தேசிய நலனை விட்டுக் கொடுக்காமல் பணியாற்றியது. கடுமையான தணிக்கைச் சட்டங்களின் காரணமாகச் சட்டசபைக்கு வெளியே வேகமாகவும் வெளிப்படையாகவும் பேச முடியாத விவகாரங்களை எல்லாம், அவர்கள் தெள்ளத் தெளிவாகச் சட்டசபையிலே எடுத்து முழக்கினார்கள்.

நமது சுதந்திரப் போராட்டத்தின் முக்கியமான கட்டங்கள் சட்டசபைகளிலே வெளிப்பட்ட விதம் இந்தப் புத்தகத்தில் தெளிவாக எடுத்துரைக்கப் படுகிறது. இந்த அருமையான புத்தகத்தைக் குறுகிய காலத்தில் எழுதிய டாக்டர் மனோரஞ்சன் ஜாவையும், அவரோடு ஒத்துழைத்த அன்பர்களையும், இதைத் தயாரித்து வெளியிட ஏற்பாடு செய்த இந்திய வரலாற்று ஆராய்ச்சிக் கழகத்தையும் நான் மிகவும் பாராட்டுகிறேன். பாராளுமன்ற விவகார அமைச்சர் திரு. ராஜ்பகதூர், உள்துறை அமைச்சர், திரு. கே. சி. பந்த் ஆகியோரின் தூண்டுதலால் உருவாகி, நமது சுதந்திரத்தின் வெள்ளி விழாவின் போது வெளி வருகின்ற இந்தப் புத்தகம், சட்டசபையில் தம்முடைய வாதத் திறன் மூலம் சேவைபுரிந்த பல சிறந்த சட்டசபை வல்லுநர்களுக்கு —இவர்களில் பலர் இன்று நம்மிடையே இல்லை—படைக்கப்படும் சிறந்த காணிக்கையாக அமைந்துள்ளது. வாசகர்களுக்கு இந் நூலைச் சிபாரிசு செய்கிறேன்.

புது தில்லி,
ஆகஸ்ட் 15, 1972

எஸ். நுருல் ஹசன்

# முகவுரை

நமது சுதந்திரப் போராட்டத்தில் மத்திய சட்டசபை ஏற்றிருந்த பங்கின் சில அம்சங்களைப் பற்றி நிகழ்த்தப்பட்ட ஓர் ஆராய்ச்சியே இந்தப் புத்தகம். அந்த வரலாற்றில் 1919 முதல் 1947 வரையுள்ள காலக்கட்டத்துக்கு மட்டுமே இதில் சிறப்பிடம் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த மூல நோக்குக்குப் பின்னணியாக, கவுன்சில் சட்டங்கள் மற்றும் தேசீயக் கோரிக்கையைப் பற்றிய ஒரு சுருக்க விவரணம் முதலாவது அத்தியாயத்தில் தரப் பட்டுள்ளது. குறைந்த வாக்குரிமை அமைப்பை மட்டுமே கொண்டதாயினும் மத்தியச் சட்டமன்றத்தின் கீழ்ச்சபையே, மற்றதை விட மிகுதியான பிரதிநிதித்துவப் பண்பு வாய்ந்ததாக இருந்தது. ஆகையினால்தான், அந்தச் சபையின் நடவடிக்கை களுக்கே இந்த ஆராய்ச்சியில் அதிகமான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த நூலுக்கு ஓர் அணிந்துரை வழங்கிய மத்தியக் கல்வி அமைச்சர் பேராசிரியர் எஸ். நுருல் ஹசன் அவர்களுக்கும், ‘அயல் வேலை விடுப்பு’ வழங்கி, நான் இந்த ஆய்வை மேற் கொள்ளுதற்கு வசதி செய்து தந்த காசி இந்துப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் ஸ்ரீமாலி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் எஸ். கோபால் அவர் களும் பேராசிரியர் பிபன் சந்திரா அவர்களும் இந்தப் புத்தகத்தில் தட்டெழுத்துப் பிரதியைப் படித்துப் பார்த்து அரிய ஆலோசனை களைத் தெரிவித்தார்கள். இந்திய வரலாற்று ஆராய்ச்சிக் கழகத்தின் தலைவர் பேராசிரியர் ராம் சரண் சர்மா அவர்கள், இந்த ஆராய்ச்சியை மேற்கொள்ளுமாறு என்னை நியமித்து உற்சாகமூட்டினார்கள். இந்தப் புத்தகத்தை அச்சிடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்வதில் இந்திய அரசின் இணைக்கல்வி ஆலோசக ரான திருமதி எஸ். துரைசாமி அவர்கள் மிகவும் உதவியாக இருந்தார்கள். டாக்டர் கே. ஆர். பிள்ளை, திரு. ராஜ்குமார்

மற்றும் திரு. எஸ். சி. துபே ஆகியோர், குறுகிய காலத்தில் இந்தப் புத்தகத்துக்குத் தேவையான கருத்து விவரங்களைத் திரட்டு வதற்குப் பெரிதும் துணைசெய்தார்கள். சப்ரூ ஹவுஸ் நூல் நிலையம், மத்திய அரசுத் தலைமைச் செயலக நூல்நிலையம், நேரு நினைவு பொருட்காட்சி நிலைய நூலகம், இந்தியத் தேசீயத் தொல் பொருட் காப்பகம் முதலியவற்றின் பொறுப்பதிகாரிகள் இந்த ஆராய்ச்சிக்குத் தேவையான பல வசதிகளைச் செய்து தந்து உதவினார்கள். இந்திய வரலாற்று ஆராய்ச்சிக் கழகத்தில் ஆராய்ச்சி அதிகாரியாக இருக்கும் செல்வி பி. எஸ். லட்சுமி அவர்கள் இந்தப் புத்தகத்தின் அச்சுத்தாள் (புரூப்)களைத் திருத்தி உதவினார்கள். திரு. பி. ஆர். அஜ்மானியும் திரு. பிஸ்ட்டும் பிரதியை அழகாகத் தட்டெழுதித் தந்தார்கள். இவர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன். புத்தகத்தை மிகக் குறைந்த காலத்தில் வெளியிட்டு வைத்த இந்திய வரலாற்று ஆராய்ச்சிக்கழகம் மற்றும் தேசீயப் புத்தக நிறுவனத்தின் அதிகாரிகளுக்கும் ஊழியர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றி உரியது.

மத்திய சட்டசபையில் தங்களுக்குக் கிடைத்த மிகக் குறை வான வாய்ப்புக்களை நல்லபடியாகப் பயன்படுத்திக் கொண்டு தங்களால் இயன்ற அளவில் இந்தியத் தேசீயத்தை வளர்த்த பெரியோர்களுக்கு இந்தப் புத்தகத்தை என் எளிய காணிக்கை யாகப் படைக்கிறேன்.

புது தில்லி<br>ஆகஸ்ட் 15, 1972

மனோரஞ்சன் ஜா

# பொருளடக்கம்

அத்தியாயம் 1

# கவுன்சில் சட்டங்களின் படிப்படியான வளர்ச்சியும் தேசீயக் கோரிக்கையும்: 1858—1919

### 1857 புரட்சியும் அதன் பின்விளைவுகளும்:

இனிமேல் கிழக்கிந்தியக் கம்பெனியைக் கொண்டு இந்தியாவை மறைமுகமாக ஆள முடியாது என்று பிரிட்டிஷ்காரர்களுக்கு உணர்த்தும் அளவிலாவது, 1857ஆம் ஆண்டுப் புரட்சி வெற்றி பெற்றது. புரட்சி முழுவதுமாக அடக்கப்படுவதற்கு முன்பே (இந்திய) ஆட்சி அதிகாரத்தைக் கம்பெனியிடமிருந்து பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு மாற்றிக் கொள்ளும் மசோதா ஒன்று (பிரிட்டிஷ்) பாராளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது. பல விதமான கருத்தாடல்களுக்குப் பிறகு, 1858 ஆகஸ்ட் 2ல் இந்தியா மசோதா அரசியின் ஒப்புதலைப் பெற்றது; அதன் மூலம், இந்தியா ஆங்கிலேய அரசின் நேரிடையான ஆட்சியின் கீழ் வந்தது.

இந்தப் புதிய ஏற்பாட்டின்படி, இந்தியாக் கவுன்சில் ஒன்று ஏற்படுத்தி, அதன் தலைவரான இந்தியா மந்திரி ஒருவர் மூலம், ஆங்கிலேய அரசாங்கமே இந்தியாவை ஆட்சி புரியலாயிற்று. இந்தியாக் கவுன்சில் பதினைந்து உறுப்பினர்களைக் கொண்டது. இவர்களில் எட்டுப் பேரை அரசர் நியமிப்பார்; எஞ்சிய ஏழு பேர், கோர்ட் ஆஃப் டைரக்டர்ஸ் என்னும் நெறியாளர் கழகத்தால் நியமிக்கப்படுவார்கள். இந்தியாக் கவுன்சில் என்பது உண்மையில் ஓர் ஆலோசனைச் சபையே; அதற்கு மிகக் குறைவான (ரத்து) அதிகாரம்தான் இருந்தது. பிரிட்டிஷ் மந்திரிசபையின் ஓர் உறுப்பினர் என்ற முறையில், இந்தியா மந்திரி, இந்திய விவகாரங்களில் பிரிட்டிஷ் பாராளுமன்றத் துக்குக் கட்டுப்பட்டவரே. ஆனாலும், இந்த ஒரு கட்டுப்பாட்டுக்கு

அப்பால், இந்திய ஆட்சியைப் பொறுத்தவரை அவர் ஒரு சர்வாதிகாரியே.

இங்கே, இந்தியாவில் மிகப் பெரிய அதிகாரம் உடையவர் கவர்னர் ஜெனரல். மகாராணியார் 1858 நவம்பர் 1ஆம் தேதி வெளியிட்ட பிரகடனத்துக்குப் பிறகு இவர் வைசிராய் என்று அழைக்கப்பட்டார். பிரிட்டிஷ் பிரதமரின் ஆலோசனையின் பேரில், அரசரே வைசிராயை நியமிப்பார். இவர், இந்தியா தொடர்பான எல்லா விவகாரங்களையும் இந்தியா மந்திரியைக் கலந்துகொண்டே செய்யவேண்டும்.

கவர்னர் ஜெனரலுக்கு அவரது கடமைகளை நிறைவேற்று வதில் உதவி செய்ய நான்கு பேரைக் கொண்ட ஒரு நிருவாகக் கவுன்சில் இருந்தது. கொள்கையளவில், கவர்னர் ஜெனரலும் அவரது கவுன்சிலுமே எல்லாப் பொது விவகாரங்களையும் கவனித்து நடத்த வேண்டும் என்பது ஏற்பாடு. ஆனாலும், கவுன் சிலின் பெரும்பான்மை ஒப்புதலை ஏற்றே கவர்னர் ஜெனரல் எந்த நடவடிக்கையும் மேற்கொள்ள வேண்டும். அவசரகால நிலைமை களில் மட்டும், கவுன்சிலின் தீர்ப்பை மீறிச் செல்ல அவருக்கு அதிகாரம் இருந்தது.

அப்போது நிலவிய அரசாங்க அமைப்பின்படி, சட்டங்கள் செய்வதற்காக வைசிராயின் கவுன்சில் விரிவுபடுத்தப்பட வேண்டி யிருந்தது. இதன்படி, மேலும் ஆறு உறுப்பினர்கள் சேர்க்கப் பட்டார்கள்; இவ்வாறு சேர்க்கப்பட்ட உறுப்பினர்களுக்கு "இணை உறுப்பினர்கள்" என்ற அந்தஸ்தே வழங்கப்பட்டது. பன்னிரண்டு உறுப்பினர்களைக் கொண்ட இந்தச் சபைதான் இந்தியச் சட்டசபை என்று சொல்லப்பட்டது. ஆனாலும், இது பொதுவாக வழங்கப்பட்ட பெயரே தவிர, சட்டப்படி அதற்கு அந்தப் பெயர் சூட்டப்படவில்லை. இதன் உறுப்பினர்கள் எல்லோரும் உத்தியோகச் சார்புள்ளவர்களாகவோ நியமிக்கப் பட்டவர்களாகவோ இருந்ததால் இது ஒரு பிரதிநிதித்துவ சபை யாகவும் இல்லை. அரசாங்கம் வகுத்த ஒழுங்கு முறைகளைச் சட்ட மாக்கித் தருவதற்கு மட்டுமே இச்சபை பயன்பட்டதால், இதை பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைப் போன்ற ஒரு அமைப்பாகக்

கருத முடியாது. தவிர, இச்சபை இயற்றுகின்ற எந்தச் சட்டமும் கவர்னர் ஜெனரலின் ஒப்புதல் பெறாவிட்டால் செல்லுபடியாகாது. எனவே, இதுவும் நடைமுறையில் ஓர் ஆலோசனைச் சபையாகத்தான் இருந்தது.

### 1861ஆம் ஆண்டின் இந்தியாக் கவுன்சில் சட்டம்:

இந்தியச் சட்டசபை பிரிட்டிஷ் பார்லிமெண்டின் நிழலாக இருக்க வேண்டுமென்று கூட அரசாங்கம் கருதியதில்லை. ஆனாலும், அதுவாகவே சில நடைமுறைகளை வகுத்துக்கொண்டு, ஒரு "சொற்போர்ச் சங்கம்" அல்லது "குட்டிப் பாராளுமன்றம்" என்ற அளவுக்கு வளர்ந்துவிட்டது. இதைக்கண்டு அரசாங்கம் மிகவும் சங்கடப்பட்டது. மேலும், பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துக்கு எதிராக இந்தியர்கள் மத்தியில் ஏற்பட்டிருந்த வெறுப்புணர்ச்சி (1857) புரட்சியின் மூலம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குத் தெளிவாகிவிட்டிருந்தது. செல்வாக்குள்ள உயர்வகுப்பு இந்தியர்களை அரசாங்கத்தோடு இணைத்துக் கொள்வதன் மூலம் இந்தக் காழ்ப்புணர்ச்சியை நீக்கிவிடலாம் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கருதியது. குறிப்பாக, பெரிய ஜமீன்தார்களையும், நிலச்சுவான்தார்களையும், வணிகர்களையும், சுதேச மன்னர்களையும் சேர்த்துக்கொள்ளவே அவர்கள் விரும்பினார்கள்.

இந்தியாவிலும் அரசியல் உணர்வு ஏற்பட்டு, உத்தியோகச் சார்பற்றவர்களையும் கவுன்சிலில் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்ற கோரிக்கை உருக்கொண்டு வந்தது. கல்கத்தாவில் இருந்த பிரிட்டிஷ் இந்தியச் சங்கம், 1852ல் பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கு அனுப்பிய கோரிக்கை விண்ணப்பத்திலேயே, ஓரளவாவது மக்களின் உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கக் கூடியதாகவும், தங்கள் கருத்துக்கு இடம் தருவது என்று மக்கள் நினைக்கத் தக்கதாகவும் பிரதிநிதித்துவச் சட்டசபை ஒன்றை இங்கே அமைக்க வேண்டும் என்று விரும்பி வேண்டிக்கொண்டது. அதே ஆண்டில் பம்பாய் (பிரிட்டிஷ் இந்தியச்) சங்கமும் சென்னைச் சுதேசிச் சங்கமும் அனுப்பிய வேண்டுகோள் விண்ணப்

பங்களிலும் இது போன்ற கோரிக்கை இடம் பெற்றிருந்தது. ஸையத் அகமத் கான் என்பவர் இந்தியப் புரட்சி என்று ஒரு புத்தகம் எழுதினார். அதிலே, இந்தியச் சட்டசபையில் இந்தியர் யாரும் சேர்க்கப்படாதது புரட்சிக்குரிய முக்கியமான காரணங் களில் ஒன்று என்று சுட்டிக்காட்டி, இந்தியாவில் ஆங்கில ஆட்சி நீடிக்க வேண்டுமானால் இந்தக் குறை தவிர்க்கப்பட வேண்டும் என்று அவர் எடுத்துரைத்திருந்தார்.

இந்த விதமான உணர்ச்சி பெருகி வந்ததன் காரணமாக, அப்போது இந்தியா மந்திரியாக இருந்த சர். சார்லஸ் உட் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் ஒரு மசோதாவைக் கொணர்ந்தார். இந்தியச் சட்டசபைகள் திருத்தி அமைக்கப்பட வேண்டும் என்று இந்த மசோதா கோரியது. இந்த மசோதாதான், 1861 ஆகஸ்ட் 1ல், இந்தியாக் கவுன்சில் சட்டமாக உருக்கொண்டது.

மசோதாவை முன்மொழிந்து பேசுகையில், நாம் எதிர்பார்த்த தற்கு மாறாக இந்தியச் சட்டசபை ஒரு "குட்டிப் பாராளு மன்றம்" ஆகிவிட்டது, அதனால் கவர்னர் ஜெனரலின் வேலையே வெகுவாகத் தடைப்படுகிறது, இதைச் சீர்செய்யவே இந்த மசோதா கொண்டுவரப்படுகிறது, என்று சர் சார்லஸ் விளக்கி னார். சட்டம் இயற்றும் பணியில் சில இந்தியர்களையும் சேர்த்துக் கொள்ளுவது விரும்பத்தக்கதுதான் என்றாலும், இந்தியாவில் "பிரதிநிதித்துவ சபை" போன்ற ஒன்றை ஏற்படுத்த முடியாது என்றும் அவர் தெரிவித்தார்.

இந்த நோக்கத்தோடுதான் 1861ஆம் ஆண்டின் இந்தியாக் கவுன்சில் சட்டம் கொண்டுவரப்பட்டது. அதன்படி, கவர்னர் ஜெனரலின் நிருவாகக் கவுன்சிலில் ஐந்து உறுப்பினர்கள் இருப் பார்கள். அவர்களில் மூன்று பேரை இந்தியா மந்திரி நியமிக்க, இரண்டு பேரை அரசர் நியமிப்பார். முன்பு போலவே, சேனாதிபதி யைக் கவுன்சிலின் சிறப்பு உறுப்பினராக நியமிக்கும் அதிகாரம் இந்தியா மந்திரிக்கு வழங்கப்பட்டது. கவுன்சிலின் கூட்டம் எந்த மாநிலத்தில் நடக்கிறதோ அந்த மாநிலக் கவர்னரும் கவுன்சிலின் சிறப்பு உறுப்பினராகக் கலந்துகொள்வார்.

சட்டங்கள் இயற்றுவதற்காகக் கவுன்சிலுக்கு இணை உறுப்பினர்களை நியமித்துக்கொள்ள கவர்னர் ஜெனரலுக்கு உரிமை வழங்கப்பட்டது. அவ்வாறு நியமிக்கப்படும் உறுப்பினர்களின் தொகை ஆறுக்குக் குறையாமலும் பன்னிரண்டுக்கு மேற்படாமலும் இருக்கவேண்டும் என்பதுதான் ஒரே நிபந்தனை. நியமனம் பெறும் உறுப்பினர்களில் பாதிப் பேர் அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் உத்தியோகச் சார்பற்ற ஐரோப்பியர்களாகவோ மற்றவர்களாகவோ இருக்கலாம். இணை உறுப்பினர்கள், சட்டங்களும் விதிமுறைகளும் இயற்றும் வேலையில் மட்டுமே பங்கு கொள்வார்கள்; கவுன்சில் மற்ற விவகாரங்களை விவாதிக்கும் போது அதில் பங்குகொள்ளவும் வாக்களிக்கவும் இணை உறுப்பினர்களுக்கு உரிமை கிடையாது. உறுப்பினர்கள் இரண்டாண்டுக்காலம் பதவி வகிப்பார்கள்.

உறுப்பினர்களை நியமிப்பதோடு விரிவுபடுத்தப்பட்ட கவுன்சிலின் நடைமுறை விதிகளையும் கவர்னர் ஜெனரலே வகுப்பார். கவுன்சிலின் கூட்டங்களுக்குத் தலைமை வகிப்பவரும் அவரே. பரிசீலனைக்கும் சட்டம் செய்வதற்குமாகத் தன் முன் கொண்டு வரப்படும் விவகாரங்களுக்கு அப்பாற்பட்ட எதையும் செய்ய, கவுன்சில் என்னும் இந்தச் சட்டசபைக்கு அதிகாரம் கிடையாது. யாராவது ஓர் உறுப்பினர் இந்தியாவின் நிதி, இந்திய மக்களின் மதம், மதப் பழக்கவழக்க உரிமை, தரைப்படை மற்றும் கடற்படை ஒழுங்கு விதிகள், அயல்நாட்டு உறவு போன்ற விவகாரங்களைச் சட்டசபையில் எழுப்ப விரும்பினால், அதற்கு முன்பே அப்படிச் செய்ய கவர்னர் ஜெனரலின் அனுமதி பெற்றாக வேண்டும். (இங்கே நிறைவேற்றப்படும்) எந்தச் சட்டமும் அமுலாகுமுன் கவர்னர் ஜெனரலின் ஒப்புதலைப் பெற்றாக வேண்டும். மேலும், ஒரு சட்டத்துக்குரிய எல்லா அதிகாரங்களோடும் ஆறுமாத காலம் அமுலில் இருக்கக்கூடிய அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்கவும் கவர்னர் ஜெனரலுக்கு அதிகாரம் உண்டு. அவசரகால நிலைமை பிரகடனம் செய்யவும் அவருக்கு உரிமை உண்டு. சுருக்கமாக, சட்டசபையானது சட்டங்களை இயற்றிக் கொடுப்பதற்குரிய ஓர் இடம் என்ற அளவில் ஒடுக்கப் பட்டது; சட்டசபையால் எந்த முறையிலும் பாதிக்கப்பட்டு

விடாதபடி கவர்னர் ஜெனரலின் அதிகாரம் அரண்செய்து பாதுகாக்கப்பட்டது. ஓராண்டு கழித்து வைசிராய் எல்ஜினுக்கு எழுதிய ஒரு கடிதத்தில், "இந்தியாவில் நிலவுகிற சூழ்நிலைக்கு இங்கிருந்து (இங்கிலாந்திலிருந்து) நடத்தப்படும் ஓர் ஏதேச்சதிகார ஆட்சிதான் பொருத்தமானது" என்று குறிப்பிட்டார் இந்தியா மந்திரி சர் சார்லஸ் உட்.

## நடைமுறையில் 1861 ஆம் ஆண்டின் இந்தியாக் கவுன்சில் சட்டம் :

தொடக்கத்தில், 1857 புரட்சியின்போது பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குத் துணையாக இருந்த இந்திய மன்னர்கள், தலைவர்கள் அல்லது அவர்களின் அமைச்சர்களையே (சட்டசபைக்கு) நியமிக்க விரும்பினார் கவர்னர் ஜெனரல். எனவே, பாட்டியாலா மகாராஜா சர் நரேந்திரசிங், குவாலியர் ராஜா தினகரராவ் ரகுநாத், ராஜா தேவநாராயண சிங் பகதூர் ஆகிய மூவரே முதன்முதலாக இந்தியச் சட்டசபையின் இந்திய உறுப்பினர்களாக நியமனம் பெற்றார்கள். அடுத்த நிலையில் இந்தச் சலுகையைப் பெற்றவர்கள் நிலப் பிரபுக்கள். 1862 முதல் 1892 வரை நாற்பத்தைந்து இந்தியர்கள் இணை உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டார்கள். இவர்களில் ஏழுபேர் (சுதேச) மன்னர்கள் அல்லது அவர்களைப் போன்ற தலைவர்கள்; இருபத்தைந்து பேர் பெரிய ஜமீன்தார் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். ரிப்பன் வைசிராயாக இருந்த காலத்தில் இந்த நிலைமை மாற்றப்பட்டது. துர்கா சரண் லா (வணிகர்), ராஜா சிவப் பிரசாத் (பள்ளி ஆய்வாளர்), ஸையத் அமீர் அலி (மாகாண நீதிபதி) போன்றவர்கள் இவர் காலத்தில் சட்ட சபைக்கு நியமிக்கப்பட்டார்கள். வங்காளக் குடிவார மசோதா கவுன்சிலில் விவாதிக்கப்பட்டபோது, வங்காள ஜமீன்தார்களின் பிரதிநிதியாக ஒருவரைச் சிபாரிசு செய்யுமாறு கல்கத்தா, பிரிட்டிஷ் இந்தியச் சங்கத்தைக் கேட்டுக்கொண்டார் ரிப்பன். அந்தச் சங்கம் "இந்து தேசாபிமானி" (இந்து பேட்ரியாட்) இதழின் ஆசிரியரான கிறிஸ்தோதாஸ் பால் என்பவரைச் சிபாரிசு செய்தது; அதன்படியே, அவரை 1883ல் சட்டசபை உறுப்பினராக நியமித்துக் கொண்டார் வைசிராய்

ரிப்பன். கிறிஸ்தோதாஸ் பால் இறந்தபின், அவர் இடத்துக்குப் பியாரி மோகன் முகர்ஜி நியமிக்கப்பட்டார்.

1872க்கும் 1892க்கும் இடைப்பட்ட காலக்கட்டத்தில் ஸையத் அகமத் கான், வி. என். மாண்டலிக், கே. எல். நூல்க்கர், ராஷ் பிகாரி கோஷ் போன்ற அறிவாளிகளும் மக்கள் தலைவர்களும் சட்ட சபைக்கு நியமிக்கப்பட்டார்கள்.

1861க்கும் 1892க்கும் இடைப்பட்ட காலக்கட்டத்தில் மிகுந்த அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த இரண்டு மசோதாக்கள் சட்ட சபையில் கொண்டுவரப்பட்டன. அவைகளுள் ஒன்று இந்திய மொழிப் பத்திரிகை மசோதா; இது 1878ல் கொண்டுவரப் பட்டது. மற்றது இல்பர்ட் மசோதா என்னும் தீங்கியல் சட்டத் திருத்த மசோதா. இது 1883–84ல் கொண்டுவரப்பட்டது. அரசாங்கத்தைக் கடுமையாக விமர்சித்து வந்த இந்திய மொழிப் பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டுப் போடுவதே முதலாவது மசோதா வின் நோக்கம். மகாராஜா ஜே. எம். தாகூர்தான் அப்போது சட்டசபையில் ஒரே இந்திய உறுப்பினர். சில மட்டரகமான இந்தியமொழிப் பத்திரிகைகள் சரிவர நடந்துகொள்ளவில்லை என்று வருத்தம் தெரிவித்துக்கொண்டே, மசோதாவுக்குத் தம்முடைய ஆதரவைத் தெரிவித்தார் மகாராஜா. இல்பர்ட் மசோதா முந்திய (இந்திய மொழிப் பத்திரிகை) மசோதாவைவிடக் கடுமையான கருத்து முரண்பாடுகளை எழுப்பியது. ஐரோப்பிய நீதிபதிகளே (குற்றஞ்சாட்டப்பட்ட) ஐரோப்பியர்களை விசாரிக்க வேண்டும் என்ற உரிமையை இந்த மசோதா பறிக்க விரும்பியதால் இந்தியாவிலிருந்த ஐரோப்பியர் அனைவரும் அதை எதிர்த்தார்கள். அதே சமயத்தில் சட்டசபையின் இந்திய உறுப்பினர்களான ஜே. எம். தாகூரும் கிறிஸ்தோதாஸ் பாலும் இந்த மசோதாவைக் கொண்டு வந்ததற்காக அரசாங்கத்தைப் பாராட்டி நன்றி தெரிவித்துக் கொண்டார்கள். ஆயினும், பிற்பாடு ஐரோப்பியர் களின் நிர்ப்பந்தத்துக்கு அரசாங்கம் விட்டுக்கொடுத்து, மாவட்ட நீதிபதி அல்லது செஷன்ஸ் நீதிபதியின் முன்பாக விசாரிக்கப்படும் ஐரோப்பியர்கள், தாங்கள் ஜூரர்களால் விசாரிக்கப்பட வேண்டும் என்று கோரலாம் என்ற திருத்தத்தை ஏற்றுக்

கொண்டது. இந்தச் சமயத்தில், அமீர் அலி, "நாட்டு மக்கள் அனைவரும் சமமாக நடத்தப்படுவார்கள்" என்று 1858ல் மகாராணியார் விடுத்திருந்த பிரகடனத்தை நினைவூட்டினார். கிறிஸ்தோதாஸ் பாலும், இப்படி ஒரு திருத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டது பற்றி வருத்தம் தெரிவித்தார். தர்பங்கா மகாராஜா கொஞ்சம் துணிவாக, பிரிட்டிஷ் இந்தியப் பிரஜைகள் எல்லோருக்குமே ஜூரர்களால் விசாரிக்கப்படும் உரிமை இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இருப்பினும், கடைசியில் ஐரோப்பியருக்குச் சலுகை வழங்கும் திருத்தங்களுடனேயே மசோதா ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் மக்களின் எதிர்ப்பை மீறி எந்தவிதமான நிருவாகச் சீர்திருத்தத்தையும் கொண்டுவர இந்திய அரசாங்கத்தால் இயலவில்லை என்பதையே இந்த நிகழ்ச்சி அடிக்கோடிட்டுக் காட்டியது.

நிதி, பொருளாதாரம், சமுதாயச் சீர்திருத்தம் போன்ற விவகாரங்களிலும் இந்திய உறுப்பினர்கள் ஆர்வம் காட்டியே வந்தார்கள். மிகுதியான வரிகளை விதிப்பதையும் அவர்கள் எதிர்த்து வந்தார்கள். ஆனாலும், இந்திய மகாராஜாக்களும், ஜமீன்தார்களும், வணிகர்களும் அரசாங்கம் விதித்த உப்பு வரிக்கு ஆதரவளித்தார்கள். தக்கண விவசாயிகள் நிவாரண மசோதாவிலும் கட்டாய அம்மைகுத்து மசோதாவிலும் ஸையத் அகமத் கான் பெரிதும் அக்கறை காட்டினார். உண்மையில், கட்டாய அம்மைகுத்து மசோதாவைத் தயாரித்தவரே அவர்தான். இந்த மசோதாவின் விதிகள் மிகவும் எளிமையாக இருக்க வேண்டும் என்பதிலும் மக்களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தி விடக்கூடாது என்பதிலும் மிகவும் விழிப்பாக இருந்தார் அவர். இந்த நல்ல மனிதருக்கு, தேர்தல் முறை என்பது மட்டும் கட்டோடு பிடிக்கவில்லை. தல ஆட்சிக் கழகங்கள் நகராட்சிகள் முதலியவற்றுக்குத் தேர்தல் நடத்துவதைக்கூட அவர் எதிர்த்தார்!

## இந்தியத் தேசீயக் காங்கிரசின் உதயமும் சட்டசபை விரிவாக்கக் கோரிக்கையும் :

இந்தியத் தேசீயக் காங்கிரஸ் 1885ல் அமைக்கப்பட்டது. அப்போதிருந்தே, மத்திய சட்டசபையிலும் மாநிலச் சபை

களிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கூடுதலாகச் சேர்த்து அவைகளை விரிவுபடுத்த வேண்டும் என்று காங்கிரஸ் கோரிக்கை வெளியிட்டு வந்தது. தல ஆட்சிக் கழகங்கள், நகராட்சிகள் முதலியன மாநிலச் சட்டசபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், மாநிலச் சட்டசபைகள் மத்திய சட்ட சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் மறைமுகத் தேர்தல் முறையே பின்பற்றப்பட வேண்டும் என்பதையும் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. வரவு செலவுத் திட்டம் பற்றி விவாதிக்கும் உரிமையையும் அரசாங்கத்திடம் விவரங்கள் கோரிச் சபையில் கேள்விகள் எழுப்பும் உரிமையையும் வழங்கி சட்ட சபைகளின் பணிகளை விரிவுபடுத்த வேண்டும் என்றும் அது கேட்டுக் கொண்டது. சட்டசபைகளின் முடிவை நிராகரிப்பதற்கு அரசாங்கத்துக்கு இருந்துவந்த மேலுரிமையை ஏற்றுக் கொண்ட போதிலும், சட்டசபையின் தீர்மானங்களை நிருவாகம் நிராகரிப் பதற்குச் சபையின் பெரும்பான்மை உறுப்பினர்கள் எதிர்ப்புத் தெரிவிக்கும்போது அதைப் பரிசீலிப்பதற்காக, (பிரிட்டிஷ்) மக்கள் சபையின் (உறுப்பினர்களைக் கொண்ட) நிரந்தரக் குழு ஒன்றை அமைக்க வேண்டும் என்று காங்கிரஸ் கேட்டுக் கொண்டது.

இந்தியப் பொதுமக்களிடையே இந்தச் சபைகளைப் பற்றி அவ்வளவாக நல்லெண்ணம் நிலவவில்லை. உயர் வகுப்புக்களைச் சேர்ந்த தலைவர்களும், பெரிய ஜமீன்தார்களும், வளமிக்க வணிகர் களுமே இந்தச் சபைகளின் இந்திய உறுப்பினர்களாக நியமிக்கப் பட்டிருந்தார்கள். இவர்களை எல்லாம், இந்தியப் பொதுமக்கள் தங்களின் பிரதிநிதிகளாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை. சில ஆங்கில அதிகாரிகளேகூட இந்தச் சபைகளின் நடவடிக்கைகளைப் பற்றி அவ்வளவு நல்லெண்ணம் கொண்டிருக்கவில்லை. "இந்தச் சட்டசபைகள் நிறைவேற்றும் சட்டங்களெல்லாம் உண்மையில், அரசாங்கம் (நிருவாகம்) பிறப்பிக்கும் ஆணைகளென்றே சொல்வது தவறாகாது" என்று 1888ல் குறிப்பிட்டார் லார்டு மெக் டோனெல். இந்தியத் தேசியக் காங்கிரஸ், மேற்கண்ட கோரிக்கை களோடு, லண்டனிலுள்ள இந்தியாக் கவுன்சில் ஒழிக்கப்பட வேண்டும் என்றும் குரலெழுப்பி வந்தது.

**1892ஆம் ஆண்டின் இந்தியாக் கவுன்சில் சட்டம் :**

கவுன்சில் இந்தியர்களிடையே எழுப்பி விட்டிருந்த உணர்ச்சி வேகம் எளிதில் புறக்கணித்துவிடக் கூடியதாக இல்லை. இதன் விளைவாக, துணை இந்தியா மந்திரி கர்ஸன், (பிரிட்டிஷ்) மக்கள் சபையில் ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார். இதுவே, சட்டமாகி, 1892ஆம் ஆண்டின் இந்தியாக் கவுன்சில் சட்டம் என்று பெயர் பெற்றது. சட்டசபைகளின் உறுப்பினர் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதும், வரவு செலவுத் திட்ட விவாத உரிமை மற்றும் சபையில் கேள்வி கேட்கும் உரிமையைச் சபை உறுப்பினர்களுக்கு வழங்குவதுமே இந்த மசோதாவின் அடிப்படை நோக்கங்கள்.

1892ஆம் ஆண்டின் இந்தச் சட்டம், மத்திய சட்டசபைக்கு கவர்னர் ஜெனரல் நியமிக்கும் உறுப்பினர்களின் எண்ணிக்கை பத்திலிருந்து பதினாறுக்கு உட்பட்டதாகவே இருக்க வேண்டும் என்று விதித்தது. இந்த நியமனங்கள் எப்படி நடைபெற வேண்டுமென்பதற்கான விதிமுறைகளை, இந்தியா மந்திரியின் ஒப்புதலின் பேரில் கவர்னர் ஜெனரலே வகுத்துக் கொள்வார் என்றும் விதிக்கப்பட்டது. நியமன உறுப்பினர் பதினாறு பேரில் பத்துப்பேர் மட்டும் உத்தியோகச் சார்பற்றவர்களாக இருக்குமாறு இந்த விதிமுறைகள் வகுக்கப்பட வேண்டும் என்பதும், மேற்படிச் சட்டத்தின் ஒரு விதி. சட்டசபையில் அதிகாரிகளே பெரும்பான்மையாக இருக்குமாறு பார்த்துக்கொள்ளவே இந்த விதி நுழைக்கப்பட்டது என்பது தெளிவு. உத்தியோகச் சார்பற்ற நியமன உறுப்பினர்களில் நால்வரை மாநிலச் சட்டசபைகளின் உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்களின் சிபாரிசின்பேரிலும், ஒரு உறுப்பினரைக் கல்கத்தா வாணிகக் கழகத்தின் சிபாரிசின் பேரிலும் கவர்னர் ஜெனரலே நியமிக்க வேண்டும் என்றும் விதிக்கப்பட்டிருந்தது.

சட்டசபை உறுப்பினர்களுக்கு வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி விவாதிக்க உரிமை வழங்கப்பட்டதே தவிர, அதன்மீது ஓட்டெடுப்பு நடத்த உரிமை தரப்படவில்லை. ஒரு குறிப்பிட்ட அளவு கேள்விகள் கேட்கவும் உறுப்பினர்களுக்கு உரிமையளிக்கப் பட்டது. ஆனால், காரணம் எதுவும் காட்டாமலே, எந்தக்

கேள்வியையும் நிராகரிக்க கவர்னர் ஜெனரலுக்கு உரிமை இருந்தது. கேள்விகளுக்குத் தரப்படும் பதில்களை விவாதிக்கவும் உறுப்பினர்களுக்கு உரிமை இருக்கவில்லை.

1892ஆம் ஆண்டின் இந்தியாக் கவுன்சில் சட்டம் செயற்பட்டு வந்த 1892க்கும் 1909க்கும் இடைப்பட்ட காலத்தில் ஃபிரோஷா மேத்தா, கோபாலகிருஷ்ண கோகலே, ராஷ் பிகாரி கோஷ், ஜி. எம். சிட்னவிஸ், பி. அனந்தாசார்லு, பிஷ்வாம்பர்நாத், முஹம்மது ரஹிமத்துல்லா சயானி போன்ற சில காங்கிரஸ் பெருந் தலைவர்கள் மத்திய சட்டசபையில் உறுப்பினர்களாக இருந்தார்கள். சட்டசபையில் தங்களுக்குக் கிடைத்த குறைந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, அரசியல், பொருளாதாரம் மற்றும் சமுதாயச் சீர்திருத்தம் பற்றிய பிரச்சினைகளில் இந்திய மக்களுக்கு இருந்துவந்த மனக்குறைகளை அவர்கள் போதியபடி எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

### "புத்தெழுச்சி"யின் முன்னோடி ஃபிரோஷா மேத்தா :

1895ல் ஃபிரோஷா மேத்தா சட்டசபைக்கு நியமிக்கப்பட்டார். இவருடைய சட்டசபை நுழைவால் அதன் விவாதங்களிலேயே ஒரு சுறுசுறுப்பு ஏற்பட்டது. இந்திய மக்களிடம் அரசாங்கம் நடந்துகொண்ட முறையையும் கடைப்பிடித்த கொள்கைகளையும் பற்றிய மேத்தாவின் துணிவும் தீரமும் மிக்க விமரிசனங்கள் சட்டசபை நடவடிக்கைகளிலேயே ஒரு புத்தெழுச்சியை ஊட்டின. 1861ஆம் ஆண்டின் போலீஸ் சட்டத்துக்குச் சில திருத்தங்கள் கொண்டுவர வேண்டும் என்று கோரும் மசோதா ஒன்றை அரசாங்கம் கொண்டுவந்தது. கலவரங்கள் ஏற்படும் மாவட்டங்களிலுள்ள தனி மனிதர்களையும் வகுப்பினரையும் தனிமைப்படுத்தி அவர்களிடமே போலீஸ் செலவை வசூலிக்கும் அதிகாரத்தை அதிகாரிகளுக்கு வழங்கியது இந்தத் திருத்தம். வேற்றிடத்தில் வாழும் நில உடைமையாளர்கள், அவர்களின் சொத்து உள்ள பகுதியில் ஏற்படும் கலவரங்களுக்குக் காரணம் என்று நிரூபிக்கப்பட்டால் அவர்களிடம் தண்டம் வசூலிக்கவும் அதிகாரிகளுக்கு அதிகாரம் வழங்கியது இத்திருத்தம். இது

போலவே, ஊர்வலங்களை ஒழுங்குபடுத்துதல் போன்ற வேறு பல தன்னிச்சை அதிகாரங்களையும் நீதிபதிகளுக்கு வழங்கியது இத்திருத்தம்.

இந்த மசோதாவில் கண்டிருந்த அடக்குமுறைகளை, அச்சமோ தயக்கமோ இன்றி, வன்மையாகக் கண்டித்தார் ஃபிரோஷா மேத்தா :

"இதுபோன்ற ஏகாதிபத்தியப் போக்குடையதும், பிற்போக்குத் தனமானதும், தவருகப் பயன்படுத்தத் தக்கதும், மக்களை நடுக்குவதுமான சட்டம் வேறு எதுவுமே இருக்க முடியாது. நிருவாக அதிகாரிகளுக்கு மட்டுமே பிடித்தமான ஏகாதிபத்தியச் சட்டம் இது. குற்றமற்றவர்களைப் புண்படுத்தாமலும் துன்புறுத்தாமலும் குற்றவாளிகளைக் கண்டறிந்து தண்டிக்கும் முறையே இந்த அதிகாரிகளுக்குத் தெரியாது; அப்படிப்பட்ட ஒரு முறையை அவர்களால் புரிந்துகொள்ளவும் இயலாது. அவர்களைப் பொறுத்த வரை, அவர்களே தகுதி வாய்ந்தவர்கள்; அவர்களே உண்மையானவர்கள்; அவர்களே மனச்சாட்சி உள்ளவர்கள். அவர்களுக்கு மேம்பட்ட நீதிமுறை எதுவும் இருப்பதாகவே அவர்கள் நினைப்பதில்லை. அப்படிப்பட்ட அதிகாரிகள், அந்த அதிகார இனத்துக்கே உரிய குறைபாடுகளும், பாரபட்ச உணர்வும், தவருன எண்ணங்களும் இல்லாமல் இருப்பார்கள் என்று எதிர்பார்ப்பது நம்முடைய தவறே தவிர வேறில்லை!" என்று சாடினர் மேத்தா.

ஃபிரோஷா மேத்தாவின் இந்தத் தாக்குதல் கவுன்சிலிலிருந்த அரசாங்கத் தரப்பினரைப் பதட்டங் கொள்ளச் செய்தது. நிதி அமைச்சர் சர் ஜேம்ஸ் வெஸ்ட்லாண்டு, சட்டசபையில் மேத்தா புகுத்திய இந்தப் "புதிய உணர்ச்சி"யினல் கோபமடைந்து, நிருவாக அதிகாரிகளின் தகுதிப்பாடுகளையும் உண்மைத் தன்மையையும் அரண் செய்யும் விதமாக ஒரு சொற்பொழிவை நிகழ்த்தினர் :

" இப்போது இங்கே (மேத்தா) எடுத்துரைத்த கருத்துக்களை என்ஞல் ஏற்றுக்கொள்ளவே முடியாது; மாண்புமிக்க கவர்னர் ஜெனரலின் கவுன்சிலைச் சேர்ந்த ஒவ்வொரு உறுப்பினரும் எனது கருத்தை ஆதரிப்பார் என்றே நம்புகிறேன். பெருந்தன்மை,

நிதானம், தெளிவான செயல்முறை என்னும் பண்புகளுக்குப் பெயர்போனது இந்தக் கவுன்சில். இங்கே எனக்கு முன்பு நிகழ்த்தப்பட்ட உரையானது இந்த நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் முறையில் அமைந்துள்ளது'' என்றார் வெஸ்ட் லாண்டு.

இந்தப் பேச்சிலிருந்து, அரசாங்க அதிகாரிகள் மேத்தாவின் கண்டனத்தால் எவ்வளவு அதிர்ச்சியடைந்துபோனார்கள் என்பது தெளிவாக விளங்கியது. மேத்தாவும் ஜி.ஆர். சிட்னுவிஸ், தர்பங்கா மகாராஜா ஆகியோரும் மசோதாவுக்குப் பல திருத்தங்களைக் கொண்டுவந்தார்கள். அவை அனைத்திலும், மசோதாவின் அடக்குமுறைத் தன்மைகளைக் குறைக்க வேண்டுமென்ற தொனியே மேலோங்கி நின்றது. ஆனாலும், அரசாங்கத் தரப்பினர் அவைகளை எல்லாம் நிராகரித்து விட்டு மசோதாவை நிறைவேற்றிக் கொண்டார்கள்.

### ராஷ் பிகாரி கோஷ்:

அந்த நாளில் மத்திய சட்டசபையில் கீர்த்தி பெற்றவராயிருந்த மற்றொருவர் ராஷ் பிகாரி கோஷ். இனிய மொழியில் கிண்டல் மிளிரப் பேசக் கூடிய ஆற்றல் வாய்ந்தவர் கோஷ். நாட்டுத் துரோகம் தொடர்பான மசோதாக்கள், வரிவிதிப்புக் கொள்கை, வரவு செலவுத் திட்டம், தீங்கியல் மற்றும் சிவில் சட்டங்கள், ஆரம்பகாலக் கல்வி மற்றும் பல்கலைக்கழகக் கல்வி முதலானவை பற்றி கோஷ் நிகழ்த்திய அரிய உரைகளால் சட்டசபை விவாதங்களுக்கே ஒரு தனிக் கவர்ச்சி ஏற்பட்டது.

1894ல் இந்திய வரிவிதிப்புத் திருத்த மசோதா ஒன்று மத்திய சட்டசபையில் வந்தது. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பல பொருள்களுக்குச் சுங்கவரி விதிக்க வேண்டும் என்று கோரிய இந்த மசோதா பருத்தித் துணிகள், இழை, திரிநூல் ஆகியவைகளுக்கு மட்டும் வரிவிலக்கு அளித்தது. இதுபற்றிப் பேசிய கோஷ், ''நாட்டிலே ஏற்பட்டுள்ள பொருளாதார நிலையைச் சரிக்கட்டவே இந்த வரி விதிக்கப்படுகிறது என்று சொல்லுகிற நிதி உறுப்பினர் இந்தப் பொருள்களுக்கு

விலக்களித்திருப்பது வேடிக்கையாக இருக்கிறது" என்றார். "ஒருவேளை, லங்காஷயர் மற்றும் மான்செஸ்டர் (முதலாளி)களைத் திருப்திப்படுத்துவதற்காக இப்படிச் செய்தாரா?" என்று கேட்டார் கோஷ். அவர் மேலும் பேசுகையில், "இன்றைக்கு மான்செஸ்டர், நாளைக்கு நியூகாஸில், நாளைமறுநாள் பர்மிங்ஹாம் என்று இப்படியே நாம் ஒவ்வொருவரையும் திருப்திப்படுத்திக் கொண்டே போனால், ஒரு காலத்தில் சுறுமீன் இறக்கைகளையும் சிப்பித் தோடுகளையும் தவிர வரிவிதிப்பதற்கு வேறு ஒன்றுமே இராது!" என்று குத்திக் காட்டினார் 1894 மார்ச் 10ல்.

1905ல் ஏற்பட்ட வங்காளப் பிரிவினையால் நாடெங்குமே ஒரு பெரிய தேசீய ஆவேசம் பீறிட்டு எழுந்தது; வங்காளத்தில் இந்த எழுச்சி கடுமையாக அலைமோதியது. தன்னிடம் மிகுதியான அதிகாரம் இருந்தால்தான் இந்தத் தேசீய எழுச்சியை அடக்க முடியும் என்று கருதிய அரசாங்கம், தேசத் துரோகக் கூட்டத் தடுப்பு மசோதாவை 1907ல் சட்டசபையில் கொண்டுவந்தது. மசோதாவை உடனடியாக நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆத்திரத்தில், சட்டசபையில் சிம்லா கூட்டத் தொடரில் முக்கியமான சட்டங்களை இயற்றுவதில்லை என்று இருந்துவந்த நீண்ட சம்பிரதாயத்தைக்கூட மீறிவிட்டது அரசாங்கம்! 1907 நவம்பர் 1ல் இந்த மசோதாவின் மீது உரையாற்றிய ராஷ் பிகாரி கோஷ், இந்த மசோதா இப்போது தேவையே இல்லை என்று ஆணித்தரமாக வாதாடியதோடு, அரசாங்கத்தின் வாதங்களைக் கொண்டே அரசாங்கத்தை மடக்கினார்!

"நிலைமை எந்தவிதத்திலும் ஆபத்தாக இல்லை என்பதை நான் வலியுறுத்த விரும்புகிறேன். இல்லாத இடத்தில் அபாயம் இருப்பதாக நினைத்துக்கொண்டு கச்சையை வரிந்து கட்டுவது சிறந்த ராஜதந்திரமாகாது என்பதையும் நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஒருவேளை,—நான் நினைக்கிற மாதிரி அல்லாமல், —நிலைமை உண்மையிலேயே கவலைக்கிடமாகி இருந்தால், அது எதைக் காட்டுகிறது? எண்ணித் தொலையாத பாவங்கள் செய்து அவைகளின் விளைவாக இப்படி ஒரு அரசாங்கத்தைத் தேடிக் கொண்டிருக்கிறோம் என்பதைத்தான் காட்டுகிறதே தவிர,

சிலரெல்லாம் நினைப்பது போல இந்த நிருவாகமே சரியான அரசியல் நிருவாகம் என்பதைக் காட்டவே இல்லை!" என்று சாடினார் கோஷ்.

### "எதிரணித் தலைவர்" கோபால கிருஷ்ண கோகலே :

கோகலே 1901 டிசம்பரில் மத்திய சட்டசபை உறுப்பினர் ஆனார். அது முதல், 1892 ஆம் ஆண்டின் இந்தியாக் கவுன்சில் சட்டம் அமுலிலிருந்த காலம் முழுவதும், கோகலே சட்டசபையின் புகழோங்கிய உறுப்பினர்களுள் ஒருவராக விளங்கி வந்தார். அவரை எதிரணித் தலைவர் என்றே பலர் அழைக்கத் தொடங்கினார்கள். ஆனாலும், இந்தியாவின் அரசியல் அமைப்பையும் அதிலே தம்முடைய நிலையையும் கவனித்தால், "எதிரணித் தலைவர்" என்ற பட்டம் தமக்குப் பொருந்தாது என்பார் கோகலே.

1905ல் பனாரசில் (காசியில்) நடந்த இந்தியத் தேசியக் காங்கிரசுக்குத் தலைமை வகித்தார் கோகலே. அதுமுதல், அவர் காலமாகும் வரை, தேசிய இயக்கத்தின் முக்கியமான தலைவர்களில் ஒருவராகவே அவர் திகழ்ந்தார். தவிர, ஒரு சிறந்த சிந்தனையாளரும் பொருளாதார வித்தகருமாவார் கோகலே. அவர் மெதுவாகத்தான் பேசுவார்; ஆனால், அப்பேச்சு எல்லோரையும் கவர்ந்து வசப்படுத்துவதாக இருக்கும். அவருடைய ஆளுமையின் இந்தப் பல்வேறு குணத்தன்மைகள், அவருடைய சட்டசபைப் பேச்சுக்களில் அப்படியே பிரதிபலிப்பதைக் காண முடிகிறது.

வரவு செலவுக் கணக்குகள் காண்பித்த வருமான மிச்சம் நாட்டின் செழுமையைக் காட்டுகிறது என்று அரசாங்கம் சட்டசபையில் சொல்லிக்கொண்ட போதெல்லாம், நாட்டில் நாளுக்கு நாள் அதிகரித்து வந்த வறுமையைப் புள்ளிவிவரங்களோடு எடுத்துக் காட்டி அரசாங்கத்தின் கூற்றை மறுத்தார் கோகலே. ராணுவத்திற்கு அரசாங்கம் மிதமிஞ்சிச் செலவிடுவது, அரசாங்கத்தின் கடுமையான வரிவிதிப்புக் கொள்கை, நெசவு போன்ற உள்நாட்டுத் தொழில்களுக்கு கலால் வரிவிதிப்பு, விவசாயிகளுக்கு அரசாங்கம் போதிய நீர்ப்பாசன வசதி செய்து

தராமலிருப்பது இவைகளாலேயே நாட்டில் வறுமை வளர்கிறது என்றும் விளக்கினர் அவர். 1903 மார்ச் 25ல் வரவு செலவுத் திட்டத்தின் மீது நிகழ்த்திய உரையில் அவர் குறிப்பிட்டதாவது :

"இப்போது உள்ள நிலைமையில் நமது பொருளாதாரம் முழுக்க முழுக்க ராணுவ நோக்கங்களை அனுசரித்தே இயங்க வேண்டியுள்ளது. நாட்டின் பொருளியல் முன்னேற்றம் மற்றும் மக்களின் ஒழுக்கநெறி வளர்ச்சி போன்றவைகளுக்கு அரசாங்கம் திட்டமிட்ட முயற்சிகளை மேற்கொள்ளவே இல்லை. நமது வருமானத்தில் பெரும்பகுதியை ராணுவமே விழுங்கிக்கொண்டு வந்தால், மேற்குறித்த முன்னேற்றங்களையும் வளர்ச்சிகளையும் நாம் அடையவே இயலாது."

பொதுமக்களின் வாழ்க்கை நிலையில் முன்னேற்றம் ஏற்பட வேண்டுமானால் உப்புவரியைக் குறைத்து (நாளடைவில் அதை ஒழித்து) விட வேண்டும் என்றும், பருத்திப் பொருள்களின் மீதுள்ள கலால் வரியை நீக்க வேண்டும் என்றும், நிலவரியைக் குறைக்க வேண்டும் என்றும் வற்புறுத்தி வந்தார் கோகலே. எல்லோருக்கும் இலவச ஆரம்பக் கல்வி வழங்க வேண்டும் என்பதையும் தொழிற்சாலை உரிமையாளர்கள், தொழிலாளர்களின் குழந்தைகளுக்குக் கல்வி வழங்கும் பொறுப்பை ஏற்கவேண்டும் என்பதையும் அவ்வாறே வலியுறுத்தி வந்தார் அவர். இது தொடர்பாக, 1911 மார்ச் 21ல் சட்டசபையில் அவர் கூறியதாவது :

"இந்தக் குழந்தைகள் மூலமாகவும் இவர்களின் பெற்றோர்களான தொழிலாளர்கள் மூலமாகவும் தொழிற்சாலை உரிமையாளர்கள் பணம் சம்பாதிக்கிறார்கள். தவிர, ஆலைகளில் வேலை செய்வதால் அந்தத் தொழிலாளர்கள் தங்கள் குழந்தைகளின் கல்வியில் தேவையான அளவு கவனம் செலுத்த முடிவதில்லை. எனவே, அந்தப் பொறுப்பைத் தொழிற்சாலை உரிமையாளர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டியதே நியாயம்."

இந்திய அரசியலும் மற்றத் தேசீய அம்சங்களும் வளர்ச்சியடைய வேண்டுமானால், அரசாங்க ஊழியம் இந்தியமய

மாக்கப்பட வேண்டும் என்பதில் கோகலே மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். எனவே, சமயம் வாய்க்கும் போதெல்லாம், இதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு அரசாங்கத்தை வற்புறுத்தி வந்தார் அவர்.

"உயர்ந்த உத்தியோகங்களுக்கு இந்தியர்களை நியமிக்க வேண்டும் என்பது வெறும் தொழில் சம்பந்தமான கோரிக்கை மட்டுமல்ல; அது, எங்கள் கவுரவத்தையும் தன்மானத்தையும் அடிப்படையாகக் கொண்ட கோரிக்கை. நம்பிக்கைப் பொறுப்பும் அதிகாரமும் உள்ள உயர் பதவிகளை எல்லாம் ஒரு குறிப்பிட்ட கூட்டத்தாரே ஏகபோகமாகக் கைப்பற்றிக் கொள்ளும்போது, அதற்கு அப்பாற்பட்ட எல்லோரும் தாழ்ந்த நிலைக்கே தள்ளப் படுகிறார்கள். இப்படிப்பட்டவர்களிலே மிக உன்னதமானவர்களும் கூட,—நிலைமையை அனுசரித்து,—அந்த ஏகபோகர்களிடம் பணிந்தே நிற்க வேண்டியதாகி விடுகிறது. இது தேசீய கவுரவத்தோடும் நாட்டு மக்களின் தன்மானப் பிரச்சினையோடும் தொடர்புடையதாக இருப்பதால், இதற்குக் காணப்படும் பரிகாரமே எங்கள் எதிர்கால வளர்ச்சியை நிர்ணயிக்கும்." 1905 மார்ச் 29ல் சட்டசபையில் கோகலே நிகழ்த்திய பேச்சின் ஒரு பகுதி இது.

சுதந்திர வேட்கையில் அழுத்தமான பிடிப்புள்ளவரான கோகலே மக்களின் உரிமைகளையும் சலுகைகளையும் பேணிக் காப்பதில் என்றைக்குமே பின் நின்றதில்லை. அரசாங்கம் 1903 டிசம்பரில் அலுவல் ரகசியங்கள் (திருத்த) மசோதாவைச் சபையில் கொணர்ந்தபோது, அதைக் கடுமையாக எதிர்த்தார் கோகலே. சில அன்றாட சிவில் விவகாரங்களையும் (பாதுகாப்பு முக்கியத்துவம் வாய்ந்த) ராணுவ மற்றும் கடற்படை விவகாரங்களைப் போல் ஆக்க வேண்டும் என்பதே அந்த மசோதாவின் ஒரு முக்கிய நோக்கம். இப்படிச் சட்டம் செய்துகொண்டால், நாட்டில் பத்திரிகைச் சுதந்திரம் வெகுவாகப் பாதிக்கப்படும் என்பதை நன்கு உணர்ந்த கோகலே மசோதாவைக் கடுமையாக எதிர்த்தார்:

"மேற்கத்திய நாடுகளைப் போல இங்கே, மக்களுக்கு அரசாங்கம் நிறைவேற்ற வேண்டிய கடமைகள் சட்டத்தால் அரண் செய்யப்படவில்லை; ஒருவிதமான தார்மிகக் கடமையாக

மட்டுமே அரசாங்கம் (இங்கே) அந்தப் பொறுப்பை நிறைவேற்றி வருகிறது. ஒரு குறிப்பிட்ட வகுப்பினரின் நலனுக்காகப் பொது மக்களின் நலன் பலியிடப்படாமல் தடுப்பதற்கு மேற்கு நாடுகளில் சரியான (அரசியல்/நிருவாக) அமைப்புகள் உள்ளன; இங்கே அவைகள் இல்லை. எல்லா அதிகாரங்களையும் கொண்டதாக இருக்கும் அதிகார வர்க்கத்தைத் தட்டிக் கேட்கவும் விமரிசிக்கவும் உள்ள சாதனம் பத்திரிகை ஒன்றுதான். இந்த நிலையில், இங்கே உள்ள கேடுகளைப் போக்க வேண்டுமென்று கருதினால், இந்த மசோதாவில் கண்டுள்ளபடி பத்திரிகைகளுக்கு வாய்ப் பூட்டுப் போடக்கூடாது; அது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தகுதிக்கு உகந்த நடவடிக்கையும் ஆகாது. பாராளுமன்றச் சட்டங்களின் மூலமும் பிரகடனங்களின் மூலமும் மக்களுக்கு வழங்குவதாக வாக்களிக்கப்படும் உரிமைகளை இருட்டிலே தட்டிப் பறிக்கும் விதமாக ரகசியச் சுற்றறிக்கைகள் பிறப்பிப்பதை இந்த அரசாங்கம் தடுத்து நிறுத்த வேண்டும்; நிலைமையைச் சீர்படுத்த இது ஒன்றே சிறந்த வழி" என்று எடுத்து விளக்கி வற்புறுத்தினார் கோகலே.

கோகலே பயங்கரப் புரட்சிவாதிகளையோ வேறுவிதமான புரட்சி நடவடிக்கைகளில் நம்பிக்கை கொண்டவர்களையோ ஆதரிப்பவரல்ல என்பது உண்மைதான். ஆனாலும், 1908–1909ல் தேசீய வன்முறைக் கிளர்ச்சியில் சம்பந்தப்பட்டதாகக் குற்றஞ் சாட்டி, வங்காளத் தேசீய வாதிகள் ஒன்பது பேரை அரசாங்கம் நாடு கடத்தியபோது, இந்த விவகாரம் மறுபரிசீலனை செய்யப்பட்டு இந்தத் தேசீயவாதிகள் விடுதலை செய்யப் படவேண்டும் என்று தீவிரமாக வாதாடினார் கோகலே. அப்படி (விடுதலை) செய்வதே தனிப்பட்டவர்களுக்கு வழங்கப்படும் நீதியாகவும் அடுத்துவரும் (அரசியல்) சீர்திருத்தங்களுக்கு ஒரு நல்ல சகுனமாகவும் அமையும் என்றும் எடுத்துரைத்தார் அவர்.

### அதிகமான பிரதிநிதித்துவத்துக்கான கோரிக்கை:

1892ஆம் ஆண்டின் கவுன்சில் சட்டம் ஒரு முன்னேற்றத்தைக் குறிக்கிறது என்ற விதத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் அதை

ஏற்றபோதிலும், அச்சட்டம் தேர்தல் முறையை அங்கீகரிக்க வில்லை என்பதையும் காங்கிரஸ் மறந்துவிடவில்லை. 1895ல் சட்டசபையில் உறுப்பினர்கள் கேள்வி கேட்க உரிமை வழங்கப் பட்டதைக் காங்கிரஸ் வரவேற்று மகிழ்ச்சி தெரிவித்தது. அத்துடன், தங்கள் கேள்விகளுக்கு முன்னால் ஒரு சிறிய விளக்க உரை நிகழ்த்தவும் உறுப்பினர்களுக்கு உரிமை வேண்டும் என்று காங்கிரஸ் கோரியது. காலப்போக்கில், கவுன்சில் விரிவுபடுத்தப் பட வேண்டும் என்றும் நிதி தொடர்பான விவகாரங்களிலும் ஓட்டெடுப்பு நடத்தச் சபைக்கு உரிமை இருக்க வேண்டும் என்றும் காங்கிரஸ் வேண்டிக் கொண்டது. இவைகளுக்கு அப்பால், இங்கிலாந்து மக்கள் சபையிலும் அங்குள்ள இந்தியா மந்திரியின் கவுன்சிலிலும் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்றுகூட, காங்கிரஸ் கோரியது! 1906ல், மற்ற சுய ஆட்சி டொமினியன்களில் உள்ளது போன்ற ஆட்சி முறையே இந்தியா விலும் அமைய வேண்டும் என்று வற்புறுத்திய காங்கிரஸ், முழுமையான பிரதிநிதித்துவமும் நிதி மற்றும் நிருவாகத்தைக் கட்டுப்படுத்தி நடத்தும் அதிகாரமும் உள்ளதாகச் சட்டசபை விரிவுபடுத்தப்பட வேண்டும் என்றும் வேண்டியது.

இதற்கிடையில், 1905ல் ஏற்பட்ட வங்காளப் பிரிவினை காரண மாக இளைஞர்கள் மத்தியில் அரசாங்கத்துக்கு எதிரான கசப்புணர்ச்சி பொங்கிப் பரவியது. லோகமானிய திலகர், பிபின் சந்திர பால், அரவிந்த கோஷ் மற்றும் பலர் தலைமையில் சுதேசி இயக்கமும் ஆரம்பிக்கப்பட்டது. ஆங்கில ஆட்சி இந்திய மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்டது என்பது தெளிவாகத் தெரிந்து விட்டது. பனாரஸ் (காசிக்) காங்கிரசுக்கு (1905)த் தலைமை ஏற்ற கோகலே, இந்தச் சூழ்நிலையைக் குறிப்பிட்டு, "ஆங்கில ஆட்சி இங்கே கால்கொண்ட பிறகு இப்போதுதான் முதன் முதலாக ஒரு குறிப்பிட்ட பிரச்சினையில் இந்திய மக்கள் ஒன்று பட்டுப் போராட முன்வந்திருக்கிறார்கள்; இந்தப் பொது உணர்ச்சிக்கு அடிப்படையான மாபெரும் மக்கள் எழுச்சி நமது தேசீய வரலாற்றிலேயே ஒரு முக்கியமான திருப்பம்" என்று பெருமிதத்தோடு குறிப்பிட்டார்.

***மார்லி-மிண்டோ சீர்திருத்தங்கள் :***

இதே சமயத்தில் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் வேறு பல முக்கியமான மாறுதல்களும் ஏற்பட்டன. புகழ்பெற்ற லிபரல் கட்சியாளரான ஜான் மார்லி 1905 இறுதியில் இந்தியா மந்திரியாகப் பொறுப்பேற்ருர். இந்தியாவில், 1905 நவம்பரில் மிண்டோ கவர்னர் ஜெனரலானுர். இங்கிலாந்தில் லிபரல் கட்சி பதவிக்கு வந்து, மார்லியும் இந்தியா மந்திரியாகப் பொறுப்பேற்ற தால் இந்தியாவில் ஒரு புதிய நம்பிக்கை உதயமாயிற்று. இங்கே அரசியல் சட்டச் சீர்திருத்த முனையில் பெரிய முன்னேற்றம் ஏற்படும் என்று எல்லோருமே எதிர்பார்க்கத் தொடங்கினர்கள். இதே எதிர்பார்ப்போடுதான், மார்லியுடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக 1906 ஏப்ரலில் இங்கிலாந்துக்குப் புறப்பட்டார் கோகலே.

அங்கே, கோகலே பலமுறை மார்லியைப் பேட்டி கண்டார். மார்லி கோகலேயின் அரசியல் ஞானத்தைப் புகழ்ந்து பாராட்டினு ரென்ருலும், கோகலேயின் திட்டம் முழுவதையும் அவரால் ஏற்க முடியவில்லை. ஏற்கனவே, அரசியல் சட்டச் சீர்திருத்தம் தொடர்பாக மிண்டோவுடன் ஆலோசனை நடத்திவந்த மார்லி, கோகலேயின் சந்திப்புக்களால் ஏற்பட்ட புதிய நிலையையும் அவருக்குத் தெரிவித்தார். மிண்டோவுக்கு 1906 ஆகஸ்ட் 2ல் எழுதிய கடிதத்தில் மார்லி குறிப்பிட்டதாவது :

"நேற்று, ஐந்தாவது முறையாகக் கோகலேயுடன் பேசினேன் ; அவருடன் இதுவே எனது கடைசிச் சந்திப்பு. அவரோடு நாம் இணக்கமாக இருப்பதால் மிகுந்த நன்மை ஏற்படும் என்றே தெரிகிறது. ஓர் அரசியல்வாதிக்குரிய மதிநுட்பமும், நிருவாகப் பொறுப்புக்களைப் பற்றிய புரிந்துணர்வும், பொது அறிவின் அடிப்படையிலான செயல் நாட்டமும் உடையவராக விளங்கு கிருர் கோகலே. இந்தியா ஒரு சுய ஆட்சிக் காலனியாக உருவாக வேண்டும் என்பதே அவருடைய லட்சியம் ; அதை அவர் எந்த நிலையிலும் மூடி மறைத்துப் பேசவில்லை. நானும் அவரிடம் எதையும் மறைக்கவில்லை ; நம்முடைய வாழ்நாளில் இந்த லட்சியம் நிறைவேருது என்பதைத் திட்டவட்டமாகவே சொல்லி விட்டேன் ".

இந்திய அரசியல் சட்டச் சீர்திருத்தங்களைப் பற்றிய தம்முடைய நோக்கை மார்லி மறைத்துப் பேசியதே இல்லை. 1907ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின்மீது நிகழ்த்திய உரையிலும் அவர் அதைத் தெளிவாகவே சொல்லிவிட்டார்: "என்னுடைய கற்பனைக்கு எட்டக்கூடிய மிக நீண்ட காலம் வரை இந்தியா இப்போது உள்ளது போன்ற ஆட்சிமுறையிலேயே இருந்துவரும் என்பதுதான் என் நம்பிக்கை" என்றார் அவர். 1908 டிசம்பர் 17ல், தமது சீர்திருத்தத் திட்டத்தைப் பிரபுக்கள் சபையில் வெளியிட்டபோதும், "இந்தியாவில் பாராளுமன்ற ஆட்சி முறையைக் கொண்டுவருவது என்னுடைய நோக்கமே அல்ல!" என்று அழுத்தம் திருத்தமாக அறிவித்தார் அவர். "இந்திய மக்கள் நம்மை விரும்பவில்லை என்பது உண்மைதான்; ஆனால், நாம் வெளியேறினால் என்ன செய்வது, எப்பக்கம் திரும்புவது என்பதுகூட அவர்களுக்குத் தெரியாது. இடையன் இல்லாத ஒரு ஆட்டு மந்தை போன்றவர்தாம் அவர்கள்" என்று பிரைட் ஒருமுறை இந்திய மக்களைப் பற்றிக் கூறியதை பிரபுக்கள் சபைக்கு நினைவூட்டினார் மார்லி.

## தனி வாக்காளர் தொகுதி பற்றி இந்தியாவில் கலந்துரையாடல்

மார்லி இங்கிலாந்தில் நிகழ்த்திய உரைகளாலும் மிண்டோ இந்தியாவில் நிகழ்த்திய பேச்சுக்களாலும் அரசியல் சட்டச் சீர்திருத்த முயற்சி ஒன்று உருவாகி வருகிறது என்பது தெளிவாகத் தெரிந்தது. அதேபோல், மார்லியைத் தம்முடைய கருத்துக்கு இணங்கச் செய்யும் முயற்சிகளில் கோகலே தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார் என்பதும் எல்லோருக்கும் தெரிந்தது. இவைகளால், பிற்போக்குவாதிகளும் வகுப்புவாதிகளுமான முஸ்லிம் தலைவர்களிடையே பெரிய பரபரப்பு உண்டாயிற்று. அதன் பேரில் அலிகார் கல்லூரியின் முதல்வரான டபிள்யூ. ஏ. வி. ஆர்ச்பால்ட் மற்றும் சில ஆங்கில அதிகாரிகளின் உதவியால், முஸ்லிம் தூதுக் குழு ஒன்று 1906 அக்டோபர் 1ல் மிண்டோவைச் சந்திக்க ஏற்பாடு செய்யப்பட்டது. ஆகா கான் தலைமையில் சென்ற அந்தத் தூதுக்குழு காருண்யமிக்க வைசிராயைக் கேட்டுக் கொண்டதாவது:

"இந்த நாட்டின் பிரதிநிதித்துவ முறை விரிவுபடுத்தப் பட்டாலும் அளவுபடுத்தப்பட்டாலும், ரஷ்யா நீங்கலாக உள்ள எந்த ஐரோப்பிய முதல்தர நாட்டையும்விட அதிகமான மக்கட் தொகையைக் கொண்ட ஒரு வகுப்பினர் (முஸ்லிம்கள்) இந்த நாட்டின் அரசியலில் உரிய முக்கியத்துவம் கோருவது நியாய மானது என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். மேன்மை தங்கிய வைசிராய் அவர்களின் அனுமதியோடு நாங்கள் வேறொன்றையும் வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறோம்: அதாவது, நேர்முகமாகவோ மறைமுகமாகவோ முஸ்லிம் வகுப்பினருக்கு வழங்கப்படும் பிரதிநிதித்துவம் மற்றும் அவர்களைப் பாதிக்கும் நடவடிக்கைகளில் அவர்களின் அரசியல் பலம் (எண்ணிக்கை) எவ்வளவு என்ற அடிப்படையில் கணக்கிடாமல், அவர்களின் அரசியல் முக்கியத்துவத்தையும் பிரிட்டிஷ் சாம்ராச்சிய ராணுவத் துக்கு முஸ்லிம்கள் ஆற்றியுள்ள சேவையையும் சேர்த்தே கணக்கிட வேண்டும். இதுதவிர, சுமார் ஒரு நூறு ஆண்டு களுக்கு முன்பாக முஸ்லிம்கள் இந்த நாட்டில் எய்தியிருந்த நிலையையும் அந்தப் பெருமையின் நினைவு இன்னமும் முஸ்லிம் களின் நெஞ்சைவிட்டு நீங்கவில்லை என்ற உண்மையையும் மேன்மை தங்கிய தாங்கள் கணக்கில் கொள்வீர்கள் என்றே நம்புகிறோம்"

முஸ்லிம்களின் இந்த வேண்டுகோள் வீண்போகவில்லை. அவர்கள் வேண்டி நின்ற கருணையைப் பொழிந்து அவர்களுக்கு உறுதியும் வழங்கினார் வைசிராய்:

"இங்குள்ள பல்வேறு வகுப்பினரின் நம்பிக்கைகள், பாரம்பரிய மரபுகள் முதலியவற்றைப் புறக்கணித்து (ஒருவருக்கு ஒரு ஓட்டு என்ற) வாக்குரிமையைப் பொதுவாக வழங்கினால் இந்த நாட்டின் பிரதிநிதித்துவ முறையே கேலிக்குரியதாகித் தொலைந்துபோகும் என்ற உங்கள் கருத்தே என்னுடைய கருத்துமாகும்... இப்போதைக்கு, (திட்டவட்டமாக எதுவும் அறிவிக்க முடியா விட்டாலும்) இங்கே எந்த நிருவாகச் சீர்திருத்தம் ஏற்பட்டாலும், அதிலே முஸ்லிம்கள் ஒரு தனி வகுப்பினர் என்ற முறையில், அவர்களுடைய அரசியல் உரிமைகளும் நலன்களும் பாதுகாக்கப் படும் என்று மட்டும் உங்களுக்கு உறுதியளிக்கிறேன்".

"கெட்டிக்காரத்தனமான" இந்தச் சாதனையைத் தொடர்ந்து, மார்லி–மிண்டோ சீர்திருத்தங்களை உள்ளடக்கிய ஒழுங்கு முறைகளை உருவாக்கி (முஸ்லிம்களுக்குத்) தனித் தொகுதி வழங்குவதற்கான ஏற்பாடு நடைபெறத் தொடங்கியது. 1909 நவம்பர் 15ல் அது சட்டமாகவும் நிறைவேறியது.

## 1909 ஆம் ஆண்டின் இந்தியக் கவுன்சில் சட்டம்:

"சட்டங்களையும் ஒழுங்குமுறை விதிகளையும் இயற்றிக் கொடுப்பதற்கே அமைக்கப்பட்ட கவுன்சில்களை" 1909 ஆம் ஆண்டின் கவுன்சில் சட்டம்தான் முதன் முறையாகச் "சட்டசபைகள்" என்று குறிப்பிட்டது. சபை இணை உறுப்பினர்களின் தொகை அறுபதாக உயர்த்தப்பட்டது; இவர்கள் வெறும் நியமன உறுப்பினர்களாக மட்டும் இராமல், இவர்களில் சிலர் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகளாக இருப்பார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது. இந்தியா மந்திரியின் ஒப்புதலுடன் கவர்னர் ஜெனரல் இந்த உறுப்பினர்களை நியமிப்பதற்கும் தேர்ந்தெடுப்பதற்கும் உரிய விதிமுறைகளை வகுப்பார் என்றும் சட்டத்தில் கண்டிருந்தது.

அவ்வாறு வகுக்கப்பட்ட விதிமுறைகளின்படி, முப்பத்து மூன்று உறுப்பினர்கள் நியமிக்கப்படுவார்கள் என்றும் இருபத் தேழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்றும் முடிவு செய்யப்பட்டது. முப்பத்து மூன்று நியமன உறுப்பினர்களில் இருபத்து எட்டுப் பேர் அதிகாரிகளாகவும், மூன்று பேர் தனிக் குழுக்களின் பிரதிநிதிகளாகவும் இரண்டு பேர் மற்ற வகையின ராகவும் இருப்பார்கள். சட்டசபையில் அரசாங்கம் தோற்கடிக்கப் பட்டால் அரசாங்கத்தில் மாறுதல் ஏற்படவேண்டியிருக்கும்; அதைத் தவிர்ப்பதற்காகவே, உறுப்பினர் நியமனமுறை இந்த விதமாக வகுக்கப்பட்டு, சட்டசபையில் அரசாங்கத் தரப்புக்குப் பெரும்பான்மை ஏற்படுத்திக் கொள்ளப்பட்டது. இந்த அமைப் பின் படி, நிருவாகத்தின் எந்த நடவடிக்கையையும் சட்டசபை நிராகரிக்க முடியாது. ஆனாலும், மாநிலச் சட்டசபைகளில் அரசாங்கத் தரப்பினரல்லாத உறுப்பினர்களின் தொகை அதிக மாக இருப்பது அனுமதிக்கப்பட்டது.

இருபத்தேழு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் பொதுவான வாக்குரிமை முறையோ பிரதேசப் பிரதிநிதித்துவ முறையோ ஏற்றுக்கொள்ளப்படவில்லை; வகுப்புகள், வர்க்கங்கள், குழுக்கள் மற்றும் மாநிலச் சட்டசபைகளே அவர்களைத் தேர்ந்தெடுக்க வகை செய்யப்பட்டது. இருபத்தேழு உறுப்பினர்களில் ஐந்து பேரை முஸ்லிம்கள் தேர்ந்தெடுப்பார்கள்; ஆறுபேரை நிலச்சுவான்தார்கள் தேர்ந்தெடுப்பார்கள்; ஒருவரை முஸ்லிம் நிலச்சுவான்தார்கள் தேர்ந்தெடுப்பார்கள்; ஒருவரை வங்காள வணிகக்கழகங்கள் தேர்ந்தெடுக்கும்; ஒருவரை பம்பாய் வணிகக் கழகங்கள் தேர்ந்தெடுக்கும்; எஞ்சியுள்ள பதின்மூன்று உறுப்பினர்களை, மாநிலச் சட்டசபைகளிலுள்ள உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்கள் தேர்ந்தெடுப்பார்கள். இந்தத் திட்டத்தின்படி முஸ்லிம்களுக்கு மட்டுமே தனித் தொகுதி வழங்கப்பட்டது என்பது தெளிவு. மற்றத் தொகுதிகளிலிருந்து முஸ்லிம்கள் தேர்ந்தெடுக்கப்படவும் வாய்ப்பு இருந்தது. இது தவிர, சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட முஸ்லிம்கள் மிகவும் குறைவாக இருந்தால், ஒதுக்கப்பட்ட சில இடங்களை அவர்களுக்குத் தந்து, அவைகளிலே முஸ்லிம்களை நியமிக்கவும் வசதி இருந்தது.

1909ஆம் ஆண்டுச் சட்டத்தின் விதிகளின்படி, சட்டசபையின் நடவடிக்கைப் பரப்பு விரிவுபடுத்தப்பட்டது. குறிப்பிட்ட சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு, பொதுநலன் சம்பந்தமான விவகாரங்களைக் குறித்துத் தீர்மானங்களைக் கொண்டுவரவும் அவைகளின் மீது வாக்கெடுப்பு நடத்தவும் உறுப்பினர்களுக்கு உரிமை வழங்கப்பட்டது. வரவு செலவு பற்றி விவாதிக்கவும் அவர்கள் அனுமதிக்கப்பட்டார்கள்; அதாவது, செலவினங்கள் மற்றும் வரி வருமானம் தொடர்பாகத் தீர்மானம் கொண்டு வந்து விவாதிக்கவும் வாக்கெடுப்பு நடத்தவும் அவர்களுக்கு உரிமை கிடைத்தது: ஆனாலும், சில இனங்களின் மீது மட்டும் வாக்கெடுப்பு நடத்த அவர்களுக்கு உரிமை தரப்படவில்லை. மேலும், சட்ட சபையின் தலைவர் என்ற முறையில், எந்தத் தீர்மானமாவது தாக்கல் செய்யப்படுவதற்குப் பொதுமக்களின் நலனைக் கருதி அனுமதி மறுக்கும் உரிமை கவர்னர் ஜெனரலுக்கு இருந்தது; சட்டசபையின் முடிவை ரத்துச் செய்யும் பெரிய அதிகாரமும்

அவருக்கு உண்டு. தேர்தல் விதிகளின்படி, தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு உறுப்பினரைச் சட்டசபையில் சேர்த்துக் கொள்ளாமல் தள்ளிவிடும் அதிகாரமும் கவர்னர் ஜெனரலுக்கு வழங்கப்பட்டிருந்தது.

அதாவது, சட்டசபையின் அளவும் பணிப்பரப்பும் விரிவுபடுத்தப்பட்டாலும், தேர்தல் சம்பந்தமான கொள்கைகள் விரிந்த அளவில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. மார்லியே குறிப்பிட்டது போல, "கவுன்சிலின் அரசியல் மற்றும் நிருவாக நடவடிக்கைகள் (பிரிட்டிஷ்) அரசியல் சட்டம் எதிர்பார்க்கின்ற முறையிலேயே தொடர்ந்து நடைபெறவேண்டும்; இந்தக் கவுன்சிலானது மேன்மை தங்கிய மன்னரின் அரசாங்கத்துக்கும் பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்குமே கட்டுப்பட்டதாக இருக்கவேண்டும்." இதுதான் இந்தச் சீர்திருத்தங்களின் அடிப்படையான நோக்கம்.

**காங்கிரசின் கருத்து:**

1907 சூரத் காங்கிரசில் ஏற்பட்ட பிளவுக்குப் பிறகு காங்கிரசில் மிதவாதிகளின் செல்வாக்கே மேலோங்கி நின்றது. 1908ல் கூடிய காங்கிரஸ் (மேற்படி) சீர்திருத்த ஆலோசனைகளை உற்சாகமாக வரவேற்றது. ஆனாலும், சட்டம் நிறைவேறி விதிமுறைகள் வகுக்கப்பட்டபோது காங்கிரஸ் தலைவர்கள் மிகவும் ஏமாற்றமடைந்தார்கள். "முஸ்லிம்களுக்குத் தனித்தொகுதி வழங்கப்பட்டிருக்கிறது; தேர்தல்களில் மற்ற வகுப்பினருக்கு இழுக்கு ஏற்படும் அளவுக்கு முஸ்லிம்களுக்குத் தனிச்சலுகை வழங்கப்பட்டுள்ளது; ஒருவரைத் தேர்தலில் நிற்க ஒட்டாதபடித் தடுக்கும் அதிகாரம் அரசாங்கத்துக்கு வழங்கப்பட்டுள்ளது. பொதுவாக, படித்த இந்தியர்களின்மீது ஓர் அவநம்பிக்கைதான் இந்தச் சீர்திருத்தச் சட்டம் முழுவதிலும் வெளிப்படுகிறது" என்று கூறி, சட்டத்தை நிராகரித்து, 1909ல் தீர்மானம் நிறைவேற்றியது காங்கிரஸ். (1912ல் "ஆங்கிலம் தெரியாதவர்கள் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்படக் கூடாது" என்று காங்கிரஸ் ஒரு தீர்மானம் நிறைவேற்றியதும் இங்கே நினைவுகூரத் தக்கது.)

1909 லாகூர் காங்கிரசின் தலைமை உரையில் இந்தச் சீர்திருத்தங்களைக் கடுமையாகத் தாக்கி, வகுப்புவாரி வாக்காளர் தொகுதி

முறையைச் சாடினுர் மதன் மோகன் மாளவியா. அதே விதமாக, 1916 பெல்காம் காங்கிரசில் சீர் திருத்தங்களை எள்ளி நகையாடினுர் திலகர்.

**கோகலேயின் கருத்து :**

இந்தச் சீர்திருத்தங்களைப் பற்றிய கோகலேயின் கருத்து என்ன என்பதைப் பற்றிப் பரவலான குழப்பம் நிலவியது; குறிப்பாக, வகுப்புவாரி வாக்காளர் தொகுதி பற்றிய அவருடைய கருத்து என்ன என்பது புரியாத புதிராக இருந்தது. இந்தச் சட்டம் உருவாவதற்கு முன்னுல் கோகலே மார்லியைப் பலமுறை சந்தித்திருந்தார்; கருத்துரைக் குறிப்பு ஒன்றையும் வழங்கி யிருந்தார். ஆகவே, திட்டத்திலுள்ள வகுப்புவாரி வாக்காளர் தொகுதி உள்ளிட்ட அனைத்து அம்சங்களுக்கும் கோகலேயும் உடந்தையாக இருந்திருக்கிறுர் என்ற ஓர் எண்ணமே பரவலாக நிலவியது.

முக்கியமான சிறுபான்மைக் குழுவினருக்குத் தனி வகுப்புவாரி வாக்காளர் தொகுதி வேண்டும் என்பதுதான் கோகலேயின் கருத்து. ஆனுல், அவர், எல்லாச் சிறுபான்மையினருக்கும் அந்த உரிமை வேண்டும் என்று கோரினுர்; முஸ்லிம்களுக்கு மட்டுமே அந்த உரிமை வேண்டும் என்று அவர் கோரியதில்லை. தவிர, அவருடைய திட்டம், பிரதேசவாரி வாக்காளர் பட்டியலுக்கு ஒரு மாற்ருக வகுப்புவாரி வாக்காளர் தொகுதிகள் அமையவேண்டும் என்பதல்ல. முக்கியமாக, தனித் தொகுதி என்பதன் மூலம் அவர் வற்புறுத்திய கருத்தே வேறு: அதாவது, பிரதேசவாரிப் பொது வாக்காளர் முறையில் தேர்தல் நடந்த பிறகு, ஏதாவது சிறுபான்மை வகுப்பினர் தங்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கவில்லை என்று குறைப்பட்டால், அவர்களுக்கு மட்டும் தனித்தொகுதி வழங்கித் துணைத்தேர்தல் நடத்த வேண்டும் என்பதே கோகலேயின் திட்டம். 1909 மார்ச் 29ல் வரவு செலவுத் திட்டத்தின் மீது உரை நிகழ்த்துகையில், இது பற்றிய தமது கருத்தை விளக்கினுர் கோகலே:

"குறிப்பிட்ட ஒரு குறைந்த அளவு இடங்களுக்காவது பிரதேச வாரியாகப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

வாக்குரிமை உடைய எல்லோரும், இன வேறுபாடோ கொள்கை வேறுபாடோ இல்லாமல் இந்தத் தேர்தலில் பங்குகொள்ள வாய்ப்பு இருக்க வேண்டும். அதன் பிறகு, கணிசமான தொகையினரான சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் முறையில் துணைத்தேர்தல் நடைபெற வேண்டும்; இதிலே, அந்தந்தச் சிறுபான்மையினரே பங்குகொள்ள வேண்டும். இது தான் பிரதிநிதித்துவத் தேர்தலைப் பொறுத்தவரை நியாயமான ஏற்பாடு என்பதே என்னுடைய கருத்து''.

மார்லி முதலில் சீர்திருத்தங்களை அறிவித்தபோது கோகலே அதை மிகுந்த உற்சாகத்தோடு எதிர்நோக்கினர். "இதுவரை நாம் வெளியிலிருந்து போராடி வந்தோம்; இனிமேல், நிருவாகத்துடன் பொறுப்பான ஒத்துழைப்பு என்னும் பணியிலே நாம் ஈடுபடப்போகிறோம்'' என்று கருதினர் கோகலே. ஆனல், சட்டம் உருவாகி அதன் அடிப்படை விதிமுறைகளும் வகுக்கப்பட்ட போது அவருடைய உற்சாகம் குன்றிவிட்டது. 1911 ஜனவரி 24ல் மத்திய சட்டசபையில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார் மாளவியா. "தேர்தலைப் பொறுத்தவரை வெவ்வேறு வகுப்பினருக்கு வழங்கப்பட்டுள்ள உரிமைகளில் ஏற்றத்தாழ்வு இருக்கிறது; (தேர்தல்) வேட்பாளர்களின் தகுதிப்பாடுகள் பற்றிய விதி பொருத்தமற்றதாக இருக்கிறது; மாநிலச் சட்டசபைகளில் உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்கள் பெரும்பான்மையினராக இருந்தும் அவர்கள் சரியாகச் செயல்பட முடியாத நிலைமையே இருக்கிறது. சீர்திருத்தச் சட்டத்திலுள்ள இந்தக் குறைகளை ஆராய்ந்து இவைகளை நீக்குவதற்கான வழிவகைகளைக் கண்டு சொல்ல ஒரு குழுவை நியமிக்க வேண்டும்'' என்று கோரும் தீர்மானம் அது. இதன் மீது உரை நிகழ்த்திய போது, சீர்திருத்தத் திட்டத்தைப் பற்றிய தம்முடைய கருத்தைத் தெளிவுபடுத்தும் நல்ல வாய்ப்பு ஒன்று கோகலேக்குக் கிடைத்தது. நிலச்சுவான்தார்களுக்கும் முஸ்லிம்களுக்கும் தனிப் பிரதிநிதித்துவம் வழங்குவதை அவர் ஆதரித்தார். 1892 ஆம் ஆண்டின் கவுன்சில் சட்டம் நாடெங்கும் பொதுத் (தொகுதி) தேர்தல் முறைக்கு வழி செய்தது. இந்த முறை செயல்படுத்தப்பட்ட போது, எல்லாச் சட்டசபைகளுக்கும் முஸ்லிம்களை விட

இந்துக்களே மிகுதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள் ; "இது முஸ்லிம்களுக்குப் பெரிய மனக் கிலேசத்தைக் கொடுத்தது. எல்லோருக்கும் பொதுவான தேசீயத்தின் பேரால் முஸ்லிம்கள் இப்படி ஒரு நிலையை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்று வற்புறுத்துவது சரியாகாது." இந்த நோக்கில் பார்க்கும் போது முஸ்லிம்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவ உரிமை வழங்க வேண்டியது அவசியமே என்று வற்புறுத்தினர் கோகலே. ஆனாலும், ஒழுங்குமுறைகளின் படி முஸ்லிம்களுக்கு அளிக்கப் பட்டுள்ள பிரதிநிதித்துவம் அதிகம் என்றும் இது தவிர்க்கப்பட வேண்டும் என்றும் அவர் எடுத்துக் காட்டினர். வாக்குரிமையிலும் வேட்பாளர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் தகுதிகளிலும் உள்ள தேவையற்ற பல வேறுபாடுகள் அகற்றப்படவேண்டும் என்றும் அவர் கருதினர். தவிர, மாநிலச் சட்டசபை உறுப்பினர்களில் பெரும்பான்மையானவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருப் பதால் எந்த ஆபத்தும் ஏற்பட்டு விடாது என்று கூறிய அவர், "வங்காளத்தில் இந்த முறை பாதுகாப்பானது என்ருல் மற்ற மாநிலங்களில் மட்டும் அதனல் பாதகம் விளையுமென்று நாம் ஏன் நினைக்க வேண்டும்?" என்றும் வினவினர்.

குறைகளை இவ்வாறு சுட்டிக்காட்டிய பின், முஸ்லிம் தனிப் பிரதிநிதித்துவத்தைச் சபையில் எழுப்ப வேண்டாம் என்றும் தீர்மானத்தை வற்புறுத்த வேண்டாம் என்றும் மாளவியாவைக் கேட்டுக் கொண்டார் கோகலே.

"இதுபோன்ற பிரச்சினை இங்கே எழுப்பப்படுமாஞல், வேறு சிலர் பசுவதை மற்றும் இந்து முஸ்லிம் வகுப்புக் கலவரங்களைப் பற்றிய பிரச்சினைகளையும் எழுப்ப முனையலாம். அப்படி நடக்கு மாஞல், இந்தச் சட்டசபையின் மூலம் நாம் கட்டிக் காக்க விரும்பும் வகுப்பு ஒற்றுமை சிதையக் கூடும்; நாடெங்கும் இந்த ஒற்றுமை படரவேண்டும் என்று விரும்புகிற நாம் அத்தகைய சிதைவுக்கு வழிகோலலாகாது. தவிர, அப்படி ஒரு நிலைமை ஏற்படுமாஞல் மதிப்புக்குரிய நண்பர் பண்டித மதன் மோகன் மாளவியாவின் மனத்துக்கினிய நல்லநோக்கமே சிதைந்துபடும்" என்று எச்சரித்து வேண்டினர் கோகலே.

நண்பர்களின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், பல்வேறு அரசியல் சீர்திருத்தங்களின்பால் அவர் தோழமையும் பரிவும் காட்டியும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் கோகலேயின் மீது நம்பிக்கை வைக்கவில்லை. இங்கிலாந்தில், கன்சர்வேட்டிவ் கட்சியினர் அவரை ஓர் "இந்துக் குழப்பவாதி" என்றே சொல்லி வந்தார்கள். மார்லிக்கு எழுதிய கடிதத்தில், வைசிராய் மிண்டோவும், "நமது சீர்திருத்தங்களைத் தீவிரவாதிகள் வரவேற்பார்கள் என்று நான் என்றும் எதிர்பார்த்ததில்லை. ஆனால், கோகலே இப்படி மடத்தனமாக நடந்துகொள்வார் என்று நான் நினைக்கவே இல்லை" என்று குறிப்பிட்டார். "அதிகாரவர்க்கம் காங்கிரசை அடக்குகிறது என்றும் தம்மையும் தமது நண்பர்களையும் ஒதுக்கித் தள்ளுகிறது என்றும் கோகலே பிதற்றித் திரிகிறார்" என்றும் அதிலே சாடியிருந்தார் மிண்டோ. கோகலேயின் வார்த்தைகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்காதிருக்குமாறு மிண்டோ எச்சரித்தது மார்லிக்கு விநோதமாகவே இருந்தது. "இதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்; நான் எப்போதும் உண்மை ஸ்காட்லாந்தியனைப் போலச் சந்தேகக் கண்ணோடும் மிகுந்த எச்சரிக்கையோடுமே இருக்கிறேன்" என்று மிண்டோவுக்குப் பதில் எழுதினார் மார்லி.

## புயலுக்கு முற்பட்ட அமைதி (1910—1917):

1909 ஆம் ஆண்டின் கவுன்சில் சட்டம் அமுலில் இருந்த (1910க்கும் 1920க்கும் இடைப்பட்ட) காலம் பல முக்கியமான கட்டங்களைத் தாண்ட வேண்டியிருந்தது. 1916 வரை தேசீய இயக்கத்தினர், தீவிரவாதிகளாகவும் மிதவாதிகளாகவும் பிளவுபட்டு நின்றதால் அரசியல் முனை மிகவும் மந்தப்பட்டுக் கிடந்தது. இந்த மந்தநிலை, அப்போது நிகழ்ந்த மத்திய சட்டசபையின் விவாதங்களிலும் அப்பட்டமாகப் பிரதிபலித்தது. (1918 ஆம் ஆண்டின்) மாண்டேகு — செம்ஸ்போர்டு அறிக்கையின்படி, 1910க்கும் 1917க்கும் இடைப்பட்ட காலத்தில், சட்டசபை நூற்றுமுப்பத்தொரு மசோதாக்களை நிறைவேற்றியது; இதில் எழுபத்தேழு மசோதாக்கள் (அதாவது 59 சதவீத மசோதாக்கள்) எந்தவிதமான விவாதமும் இல்லாமலே நிறைவேற்றப்பட்டன. அரசாங்

கத்துக்கும், மிதவாதிகள் மற்றும் லிபரல்களான கவுன்சில் உறுப்பினர்களுக்கும் இடையே ஓர் இணக்கமான போக்கு நிலவியதாலேதான் இது சாத்தியமாயிற்று என்பது தெளிவு.

ஆனாலும், இதைக் கொண்டு, சட்டசபையில் அரசாங்கத்துக்கு எதிர்ப்பே இல்லை என்றோ அது தீவிரமாக விமரிசிக்கப்படவே இல்லை என்றோ முடிவு செய்துவிடலாகாது. சீர்திருத்திய கவுன்சிலின் முதலாவது கூட்டத் தொடரிலேயே, 1907ஆம் ஆண்டின் நாட்டுத் துரோகக் கூட்டங்கள் தடைச் சட்டத்தை மேலும் ஐந்து மாதக் காலம் நீடிக்கக் கோரும் மசோதா ஒன்றை 1910 ஆகஸ்ட் 6ல் அரசாங்கம் கொண்டு வந்தது. இதன்மீது உரை நிகழ்த்திய கோகலே, நாடு ஓரளவு அமைதியாக இருக்கின்ற போது இதுபோன்ற கொடுஞ் சட்டத்தைக் கொண்டு வருவது மக்களுக்கும் அரசுக்கும் நல்லிணக்கம் ஏற்பட உதவாது என்று எச்சரித்தார். இந்தச் சட்டம் மிகமிக ஆபத்தான பெரும் அதிகாரங்களை நிருவாகத்துக்கு வழங்குவதால், இது தவருகப் பயன்படுத்தப்பட்டு நாட்டின் நடைமுறையே முடமாக்கப்படும் வாய்ப்பு இருக்கிறது என்றும் சுட்டிக் காட்டினர் கோகலே. "மக்கள் கலந்து பேசும் உரிமையை மட்டுப்படுத்தி, அவர்களைத் தட்டிக் கேட்கும் உரிமையைப் போலீசின் கையில் கொடுக்கிறது இந்தச் சட்டம். எனவே, இச்சட்டம் மக்கள் மத்தியில் பரவலான அருவருப்பையும் அரசுக்கு எதிரான கசப்புணர்ச்சியையுமே உண்டாக்கும்" என்ருர் சச்சிதானந்த சின்ஹா. தேசீய முஸ்லிமான மஸ்ஸருல் ஹக், மதன் மோகன் மாளவியா, பி. என். பாசு, ஆர். என். முதோல்கர் ஆகியோரும் மசோதாவை எதிர்த்துக் குரல் எழுப்பினர். ஆனாலும், தேசீயவாதிகளின் எதிர்ப்பை மீறி, மசோதா நிறைவேற்றப்பட்டது.

வரவு செலவுத் திட்ட விவாதங்களின் போதும் உத்தியோகச் சார்பில்லாத கவுன்சில் உறுப்பினர்கள் அரசாங்கத்தின் நிதிக் கொள்கையைக் கடுமையாக விமர்சனம் செய்தே வந்தார்கள். 1910ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின்மீது உரையாற்றிய சச்சிதானந்த சின்ஹா, இப்போதுள்ள நிதி ஏற்பாட்டின்படி மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கங்களை மொட்டையடித்து

விட வாய்ப்பு இருக்கிறது ; இந்த நிலையை மாற்றி, மாநில அரசுகள் பொதுப் பணிகளுக்கு மிகுதியாகச் செலவு செய்யும் வகையில், மத்திய மாநில அரசுகளுக்கிடையே புதிய நிதி ஏற்பாடுகளை உருவாக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். 1911ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டப் பேச்சில், இந்தியாவில் நிறுத்தி வைக்கப் பட்டுள்ள பிரிட்டிஷ் படைகளுக்கு ஆகும் செலவுகளை இந்திய அரசாங்கமும் பிரிட்டிஷ் அரசாங்கமும் நியாயமான முறையில் பகிர்ந்து ஏற்க வேண்டும் என்று வலியுறுத்தி வற்புறுத்தினார் சின்ஹா. இந்த ஏற்பாட்டின் மூலம் இந்தியாவின் பங்கில் மிச்சமாகும் தொகையை இங்கே கல்வி வளர்ச்சிப் பணிகளுக்காகச் செலவிட வேண்டும் என்று கேட்டுக்கொண்ட சின்ஹா, கல்விக்குச் செலவாகும் தொகையைப்போல் இருபத்தைந்து மடங்கு அதிகமான தொகை போலீசுக்கும் ராணுவத்துக்கும் செலவிடப்படுவது குறித்து மிகுந்த கவலை தெரிவித்தார்.

மார்லி—மிண்டோ சீர்திருத்தங்களின்படி, வருடாந்தர வரவு செலவுத் திட்டத்தின்மீது தீர்மானம் கொண்டுவரும் உரிமை உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்டிருந்தது ; அது தொடர்பான விவாதத்தின்மீது வாக்கெடுப்பு நடத்தவும் கவுன்சிலுக்கு உரிமை கிடைத்திருந்தது. உத்தியோகச் சார்பற்ற கவுன்சில் உறுப்பினர்கள் இந்த உரிமைகளைச் செவ்வனே பயன்படுத்திக் கொண்டார்கள். வரவு செலவில் கிடைக்கும் உபரித் தொகை, மக்களின் கல்வி, சுகாதாரம் மற்றும் மருத்துவ வசதிகளைப் பெருக்குவதற்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்னும் தம்முடைய கொள்கையை வலியுறுத்தினார் கோகலே. எழுது பொருள் மற்றும் அச்சடிப்பு, ரெயில்வே, நாணயச்சாலை, உப்பு, போலீசு போன்ற துறைகளின் செலவைக் குறைக்க வேண்டும் என்று கோரும் தீர்மானங்களையும் அவ்வப்போது கொண்டுவந்து வற்புறுத்தினார் கோகலே. இந்தியத் தொழில்களின் அபிவிருத்தியிலும் உத்தியோகச் சார்பற்ற இந்திய உறுப்பினர்கள் மிகுந்த அக்கறை காட்டி வந்தார்கள். இறக்குமதிச் சர்க்கரை வியாபாரத்தின் போட்டியால் மிகுதியும் பாதிக்கப்பட்டுள்ள இந்தியச் சர்க்கரைத் தொழில் தலைதூக்கும் விதமாக இறக்குமதிச் சர்க்கரைக்கு அதிகப்படியான சுங்கவரி விதிக்கப்பட வேண்டும்

என்று கோரும் ஒரு தீர்மானத்தை 1911 மார்ச் 9ல் சட்டசபையில் கொண்டு வந்தார் மாளவியா. இந்தத் தீர்மானத்தை அனுசரித்த தாக, "இந்தியச் சர்க்கரைத் தொழில் வளர்ச்சிக்கு என்னென்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளலாம் என்பதை நிர்ணயிப்பதற் காக, அத் தொழிலின் நிலைமையை ஆராய ஒரு தகுதிவாய்ந்த குழுவை நியமிக்க வேண்டும்" என்னும் திருத்தத்தைக் கொணர்ந் தார் கோகலே.

சுரேந்திரநாத பானர்ஜி 1913ல்தான் மத்திய சட்டசபையில் உறுப்பினரானார். அடுத்த மாதமே தீங்கியல் நீதி பரிபாலனத் தின் நீதிப் பகுதியையும் நிருவாகப் பகுதியையும் தனித்தனியே பிரித்துவிட வேண்டும் என்று கோரும் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். 1910ல் நிறைவேற்றப்பட்டபோதே சட்ட சபையிலும் வெளியிலும் பெரிய புயலைக் கிளப்பிய பத்திரிகைச் சட்டத்தைத் திருத்தி அமைக்க வேண்டும் என்றும் பானர்ஜி வற்புறுத்தி வந்தார். இந்தச் சட்டம் போலீசுக்கு அளவு மீறிய அதிகாரத்தை வழங்குகிறது என்றும் அந்த அதிகாரம் விதி முறையின்றி அமுல் செய்யப்படுகிறது என்றும் அவர் புகார் கூறினார். இதே நோக்கில்தான், 1915 மார்ச் 18ல் கொண்டு வரப்பட்ட தீங்கியல் சட்டத் திருத்த மசோதாவையும் கடுமை யாகத் தாக்கினார் பானர்ஜி.

சட்டசபையின் இந்திய உறுப்பினர்கள் மிகுதியாக வற்புறுத்தி வந்த மற்றப் பிரச்சினைகளில், இந்திய ராணுவத்தையும் அரசாங்க ஊழியத்தையும் இந்திய மயமாக்க வேண்டும் என்ற கோரிக்கை யும் ஒன்று. இந்திய சிவில் சர்வீசுக்கான (ஐ. சி. எஸ்.) தேர்வுகள் இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஒரே சமயத்தில் நடைபெற வேண்டும் என்றும், இந்த சர்வீசில் இந்தியர்களுக்கு 50 சதவிதப் பிரதிநிதித்துவம் தரப்பட வேண்டும் என்றும் கோரும் தீர்மானம் ஒன்று, 1917 செப்டம்பர் 21ல் சட்டசபையில் கொண்டுவரப் பட்டது. இதன்மீது பேசிய டி. இ. வாச்சா, இந்திய சிவில் அலுவல்களில் பிரிட்டிஷ்காரர்கள் அதிகமாக இருப்பதே இந்தியா வில் நிலவும் குழப்பங்களுக்குரிய அடிப்படைக் காரணங்களில் ஒன்று என்று சுட்டிக்காட்டி இந்தக் குறை நீக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தினார். "இந்தத் தீர்மானம் இந்திய சர்வீசுகளில்

பிரிட்டிஷ்காரர்கள் பெரும்பான்மையினராக இருக்கக்கூடாது என்கிறது; அப்படிச் செய்தால் பல சங்கடங்கள் ஏற்படும்" என்று உள்துறை உறுப்பினர் சொல்லியிருந்தார். அதைக் குறிப்பிட்டுக் காட்டிய எம். ஏ. ஜின்னு, "இந்திய சர்வீசுகளில் பிரிட்டிஷ்காரர்கள் கணிசமான தொகையினராக இருக்க வேண்டிய அவசியம் என்ன?" என்று கேட்டார். ராயல் எஞ்சினியர்களுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள சில இடங்கள் தவிர, பொதுப்பணித் துறையிலும் ரெயில்வேயிலும் உள்ள எஞ்சினியர் பதவிகளுக்கெல்லாம் இந்தியாவிலேயே ஆளெடுக்க வேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றை வி. எஸ். ஸீனிவாச சாஸ்திரி 1918 பிப்ரவரி 27ல் சட்டசபையில் கொண்டு வந்தார். இந்தியர்கள் என்பதாலேயே இந்திய எஞ்சினியர்கள் பிரிட்டிஷ் எஞ்சினியர்களைவிடத் தகுதியில் குறைந்தவர்கள் என்ற வாதத்தை அவர் கண்டிப்பாக மறுத்துரைத்தார். தீர்மானம் தோல்வியடைந்தபோது, ரெயில்வேயிலும் தபால் தந்தித் துறையிலும் இந்தியர்களுக்கு மேலாக ஆங்கிலோ இந்தியருக்குத் தனிச் சலுகை எதுவும் வழங்கப்படக்கூடாது என்ற தீர்மானத்தை மொழிந்தார். இந்தத் தீர்மானமும் தோற்கடிக்கப்பட்டது. உடனேயே, பப்ளிக் சர்விஸஸ் கமிஷன் சிபாரிசுகளின்படி, விஞ்ஞான மற்றும் தொழில் நுணுக்கப் பணிகளுக்கு இந்தியாவிலேயே ஆளெடுக்க வேண்டும் என்ற மற்றொரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். இப்படிச் செய்வது இயலாது என்று அரசாங்கம் தெரிவித்துக் கொண்டதன் பேரில் இந்தத் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டார் சாஸ்திரி.

## ரௌலட் மசோதாக்களுக்கு எதிர்ப்பு (1918—1919):

போர் முடியப் போவதற்கான அறிகுறிகள் தென்பட்டதும், இந்தியப் புரட்சி இயக்கங்களையும் இந்தியத் தேசீய இயக்கத்தையும் ஒடுக்குவதற்குத் தனக்கு அதிகமான அதிகாரங்கள் தேவைப்படும் என்பதை அரசாங்கம் புரிந்து கொண்டது. இந்திய அரசியல் சூழ்நிலையும் சிறுகச் சிறுகச் சூடுபிடித்து வந்தது.

1916ஆம் ஆண்டில் ஏற்பட்ட லக்ளே ஒப்பந்தத்தின் காரணமாக, இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே இணக்க உணர்வும் ஏற்பட்டு வந்தது. அரசாங்கம் ஆபத்துக்களை எதிர்நோக்கத் தயாராக இல்லை; 1917 டிசம்பர் 10லேயே, நீதிபதி சிட்னி ரௌலட் தலைமையில் நாட்டுத் துரோக விசாரணைக் குழு ஒன்றை நியமித்தது. புரட்சி இயக்கத்தை நாட்டுத் துரோக இயக்கம் என்றே குறிப்பிட்டு வந்தது அரசாங்கம்; இந்த இயக்கத்தின் நடவடிக்கைகளை ஆராய்ந்து அதை அடக்குவதற்குரிய ஆலோசனைகளைத் தெரிவிக்குமாறு குழு கேட்டுக்கொள்ளப்பட்டது. இந்த இயக்கத்தை ஒடுக்கு வதற்கு நாட்டிலுள்ள பொதுவான சட்டம் போதாது என்றும், போர் முடிந்ததும் காலாவதியாகி விடப் போகிற இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் சில கடுமையான அதிகாரங்களைச் சாதாரணச் சட்டங்களோடு நிரந்தரமாகவே இணைத்துக் கொள்ள வேண்டும் என்றும் ரௌலட் குழு சிபாரிசு செய்தது.

இந்தக் குழுவின் சிபாரிசுகளுக்கு நாடெங்கும் பெரிய எதிர்ப்புக் கிளம்பியது. இந்தச் சிபாரிசுகள் மத்திய சட்டசபையில் விவாதிக்கப்படுவதைத் தடுத்து நிறுத்தும் நோக்குடன், 1918 செப்டம்பர் 19ல் ஜி. எஸ். கபார்டே ஒரு தீர்மானத்தைக் கொணர்ந்தார். அடக்குமுறைச் சட்டங்களை அமுல்படுத்துவதற் குரிய தேவையை ஆராய்வதற்கு ஒரு குழுவை நியமிக்க வேண்டும் என்று கோரியது அந்தத் தீர்மானம். இதனெல்லாம் அரசாங்கத்தின் போக்குத் தடைப்படவில்லை; ரௌலட் குழுவின் சிபாரிசுகளை அமுல்படுத்தவே விரும்புவதாக அரசாங்கம் அறிவித்தது. அதன்படியே, மத்திய சட்டசபையில் இரண்டு மசோதாக்களையும் தாக்கல் செய்தது. அவைகளில் ஒன்று, இந்தியக் குற்றவியல் சட்டத்திருத்த மசோதா; மற்றது குற்ற வியல் சட்ட (அவசரகால அதிகாரங்கள்) மசோதா. ரௌலட் மசோதாக்கள் என்று குறிப்பிடப்படுபவை இந்த மசோதாக்களே.

இந்தியா முழுவதும் இந்த மசோதாக்களுக்கு எதிராகக் கிளர்ந்து நின்றது. அப்போதே இந்திய அரசியல் வானில் முகம் காட்டியிருந்த காந்தியடிகள், "இந்த மசோதாக்கள் சட்டங்க

ளாக்கப் படுமானுல், சத்தியாக்கிரகம் ஒன்றைத் தொடங்கி அந்தச் சட்டங்களுக்கு எதிராகச் சட்ட மறுப்பிலும் ஈடுபடுவேன்!" என்று அறிவித்தார். நாட்டிலே சுற்றுப்பிரயாணம் ஒன்றையும் மேற்கொண்டு, மக்களைத் தட்டி எழுப்பி, அரசாங்கத்தின் அடக்கு முறைச் சட்டங்களை எதிர்த்து நிற்குமாறு அவர்களைத் தூண்டி வந்தார் காந்தியடிகள்.

மக்களின் ஒன்றுபட்ட முழுமூச்சான எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், குற்றவியல் சட்ட (அவசரகால அதிகாரங்கள்) மசோதாவை 1919 பிப்ரவரி 6ல் சட்டசபையில் தாக்கல் செய்தார் உள்துறை உறுப்பினர். இந்த மசோதாவை ஒரு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்ப வேண்டும் என்றும் அந்தக் குழு 1919 மார்ச் 6ஆம் தேதியளவில் தனது சிபாரிசுகளைத் தெரிவிக்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார். உடனேயே, ஒரு திருத்தத் தீர்மானத்துடன் எழுந்தார் வித்தல்பாய் படேல். "இந்தச் சட்டசபையின் அலுவல் காலம் முடிந்து (காலாவதியாகி) ஆறு மாதத்துக்கு அப்பால்தான் இந்த மசோதாவைப் பரிசீலனை செய்ய வேண்டும்" என்றது அந்த திருத்தம்.

அராசகவாதிகள் மீது தமக்கு எந்த அனுதாபமும் கிடையாது என்று தெரிவித்த படேல், நாட்டில் நிலவும் அரசியல் தேக்கமும் நிருவாகத் தேக்கமுமே புரட்சிக் குற்றங்கள் ஏற்படுவதற்குக் காரணம் என்று சுட்டிக் காட்டினுர். அரசியல் நடவடிக்கைகளை அடக்கி ஒடுக்குவதன் மூலம் மேற்படிக் குற்றங்களைத் தவிர்த்திட முடியாது; மக்களுக்குள்ள குறைகளை நீக்குவதே அதற்குரிய சரியான மருந்து என்றும் அவர் எடுத்துரைத்தார். மாண்டேகு–செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் உருவாகி வருகின்றன; இந்திய அரசியல் தலைவர்களின் கருத்துக்களுக்கு ஏற்ற மாற்றங்களுடன் அந்தச் சீர்திருத்தங்கள் வரும்போது புரட்சிக் குற்றங்கள் தாமாகவே ஒழிந்து போகும் என்றும் குறிப்பிட்டார் வித்தல்பாய்.

காந்தியடிகளின் எதிர்ப்பு முறையாகிய ஒத்துழையாமை இயக்கத்தை மிதவாதிகளும் லிபரல் கட்சியாரும் ஏற்கவில்லை.

அதே சமயம், மக்களின் அரசியல் நடவடிக்கைகளை ஒடுக்குவதாகிய அரசாங்கத்தின் கொள்கைகளையும் அவர்கள் ஆதரிக்கவில்லை. எனவே, சட்டசபையில், ரௌலட் மசோதாக்களை அவர்கள் ஒவ்வொரு கட்டத்திலும் எதிர்த்தார்கள். "மக்களின் உரிமைகளுக்கு இந்த அரசாங்கம் எள்ளளவு மதிப்பும் வைக்கவில்லை என்பதையே இந்த அவசர அதிகாரங்கள் மசோதா காட்டுகிறது" என்று கசந்தார் சீனிவாச சாஸ்திரி. "இந்தியன் என்று உரிமை பாராட்டும் எவனும் இந்தச் சமயத்தில் மதில் மேல் பூனையாக இருக்க முடியாது" என்று கூறிய தேஜ் பகதூர் ஸப்ரூ, "நான் என்ன செய்யவேண்டுமென்பது தெள்ளத் தெளிவாகி விட்டதால், அரசாங்க மசோதாவை எதிர்த்துப் படேலின் தீர்மானத்தை ஆதரிக்க வேண்டியதே என் கடமை" என்று உறுதி கூறினார். மசோதாவை எதிர்த்துப் பேசிய கே. வி. ரங்கசாமி அய்யங்கார், "காட்டுமிராண்டிக் காலத்து அரசன் ஒருவன் எதிர்பார்க்கும் விதமான ஆலோசனைகளை (இச்சபை உறுப்பினராகிய) நாங்கள் நிச்சயமாக வழங்க முடியாது!" என்று சாடினார். இந்தியப் புரட்சி இயக்க வன்முறைகளின் வரலாற்றை விவரித்து, அவை அனைத்துக்கும் அரசாங்கமே காரணம் என்று முடித்தார் மாளவியா. ராஜா ராம்பால் சிங்கும், ஸீதாநாத் ராயும் படேலின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார்கள். பானர்ஜி பேசுகையில், இந்த மசோதா நிறைவேறினால், நாட்டின் அரசியல் நடவடிக்கைகள் முடக்கப் பட்டுப் பொதுவாழ்வில் ஒரு பெரிய தேக்கமே ஏற்படும் என்று எச்சரித்தார்.

மஹ்மூதாபாத் ராஜா, மசோதாவை எதிர்த்துப் பேசுகையில், "இந்த நடவடிக்கைக்கு இது சமயமல்ல; இது சரியான நடவடிக்கையோ தேவையானதோ அல்ல; பிரிட்டிஷ் பெருமைக்கு உகந்ததுமல்ல!" என்று வருணித்தார். மஸ்ஸருல் ஹக், அரசாங்கம் ஆபத்தான பாறைச் சரிவிலே நின்று கொண்டிருக்கிறது என்று எச்சரித்தார். முன்பு ஒரு முறை, 1918 செப்டம்பர் 23ல் ரௌலட் குழு அறிக்கையின் பரிசீலனையை நிறுத்தி வைக்க வேண்டும் என்று கபார்டே தீர்மானம் கொண்டு வந்தபோது, "குழு அறிக்கை சுட்டிக்காட்டியுள்ள புரட்சிக் குற்றங்களைத்

தடுத்து நிறுத்துவதில் (சபையின்) இந்திய உறுப்பினர்கள் மிகுந்த அக்கறை கொண்டுள்ளார்கள். ஆனால், எங்களைக் கலந்து ஆலோசிக்காமலே கொள்கையை வகுத்துக்கொள்ளும் நீங்கள், குற்றத் தடுப்புக்கு மட்டும் எங்களை உதவிக்கு அழைத்தால் எப்படி?'' என்று காரமாகக் கேட்டிருந்தார் ஜின்னா. ''நாங்கள் உங்களுக்கு உதவ வேண்டுமானால், இந்த நாட்டு ஆட்சிக்குரிய கொள்கைகளை வகுப்பதில் ஓரளவு அதிகாரத்தையும் பொறுப்பையுமாவது நீங்கள் எங்களுக்கு வழங்கவேண்டும்'' என்றும் அவர் வற்புறுத்தினார். 1916 பிப்ரவரி 6ல் உள்துறை உறுப்பினர் மசோதாவைத் தாக்கல் செய்தபோதும் அதை எதிர்த்து நீண்ட உரையாற்றினார் ஜின்னா.

இத்தனை எதிர்ப்புக்கு மத்தியிலும், அரசாங்கம் கொண்டுவந்த (ரௌலட்) மசோதா 1919 மார்ச் 18ல் சபையில் நிறைவேறியது. இதனால் மிகுந்த அதிர்ச்சியடைந்த ஜின்னா, மார்ச் 28ல் வைஸிராய்க்கே பின்கண்ட கடிதத்தை எழுதிவிட்டார்: ''இந்திய அரசாங்கம் ரௌலட் மசோதாவை நிறைவேற்றி, மேன்மை தங்கிய தாங்கள், கவர்னர் ஜெனரல் என்ற முறையில் அதற்கு ஒப்புதலும் அளித்திருப்பது ஆங்கில நீதியின்மீது மக்களுக்கு இருந்து வந்த நம்பிக்கைகளின் அடித்தளத்தையே அசைத்து விட்டது! தவிர, மத்திய சட்டசபை பெயரளவிலேயே ஒரு சட்டசபை என்பதும் அதன் முடிவுகளை அந்நிய ஆட்சியே பின்னாலிருந்து இயக்கி வருகிறது என்பதும் வெட்டவெளிச்சமாகி விட்டது. சட்டசபையிலுள்ள இந்திய உறுப்பினர்களின் ஏகோபித்த கருத்துக்கோ வெளியில் உள்ள பொதுமக்களின் எதிர்ப்பு உணர்ச்சிக்கோ (அரசாங்கம்) கொஞ்சம் கூட மதிப்பளிக்கவில்லை. அமைதியான காலத்தில் இத்தகைய ஒரு சட்டத்தை இயற்றுகின்ற எந்த அரசாங்கமும் நாகரிகமான அரசாங்கம் என்று சொல்லப்பட முடியாது என்பதே என் கருத்து!''.

இந்தக் கருத்துக் கொதிப்பின் சிகரமாக, ஜின்னா, தம்முடைய மத்திய சட்டசபைப் பதவியையும் ராஜினாமாச் செய்தார்.

**புதுமை எதுவும் இல்லாத**
***மார்லி–மிண்டோ சீர்திருத்தங்கள் :***

இந்தியா மந்திரி எட்வின் மாண்டேகுவும் இந்திய வைசிராய் செம்ஸ்போர்டு பிரபுவும் கூட்டாக வெளியிட்ட இந்திய அரசியல் சட்டச் சீர்திருத்த அறிக்கையிலேயே (மார்லி–மிண்டோ) சீர்திருத்தங்களில் புதுமை எதுவும் இல்லை என்பதை ஒப்புக் கொண்டார்கள். "தொடக்கநிலை ஆர்வத்தில் இந்தச் சீர்திருத் தங்கள் பெரிதுபடுத்தப்பட்டது உண்மையே என்றாலும் அவை களில் புதிய கொள்கை எதுவும் உள்ளோடியிருப்பதாகச் சொல்ல முடியாது" என்று தெளிவாகவே அவர்கள் குறிப்பிட்டார்கள். எல்லாப் பிரச்சினைகளையும் தீர்க்கும் முடிவான அதிகாரம் அரசாங்க நிருவாகத்திடமே இருக்கவேண்டும் என்ற கொள்கை யின் அடிப்படையிலேதான் இந்தச் சீர்திருத்தங்கள் உருவாகி யுள்ளன என்றும் அவர்கள் தெளிவுபடுத்தினார்கள்.

1918க்குப் பிறகு முழுவதுமாகச் செல்வாக்கு இழந்துபோய் இந்திய லிபரல் கட்சியை உருவாக்கிய மிதவாதிகள், சீர்திருத்தங் களின் தோரணையில் புதுமை எதுவும் இல்லை என்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டார்கள். லிபரல் கட்சியின் மிகப் பழைய உறுப்பினரான எஸ். என். பானர்ஜி, சீர்திருத்தங்களைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கையில், மார்லி–மிண்டோ சீர்திருத்தங் களின்படி அமைந்த சட்டசபைகள் உண்மையில் "ஆலோசனைச் சபைகளே; (இதற்கு எதிராக) இந்தியப் பொதுமக்களின் கருத்து தெள்ளத் தெளிவாகவும் ஒன்றுபட்ட குரலிலும் எடுத்து உணர்த்தப்பட்ட பிறகும், கடைசி வரை இந்தச் சபைகள் ஆலோசனைச் சபைகள் என்ற எல்லைக்குமேல் உயரவே இல்லை" என்றே கூறியுள்ளார். லண்டனிலிருந்த இந்தியக் கவுன்சிலில் சிறிது காலம், உறுப்பினராகப் பொறுப்பேற்றிருந்த சர். சி. சங்கரன் நாயர், இந்தச் சீர்திருத்தங்களைப் பற்றிய மதிப்பீட்டில் இன்னும் கடுமையாகக் காணப்படுகிறார். இதுபற்றி அவருடைய நினைவுக் குறிப்புகளில் நாயர் சொல்லியிருப்பதாவது :

"சட்டசபைகளையும், அவைகளின் மூலம் ஏற்படும் என்று எதிர்பார்க்கப்பட்ட சீர்திருத்தத்தையும் பொறுத்த அளவில்,

அவைகளால் (சீர்திருத்தங்களால்) எதுவும் செய்யமுடியவில்லை; மக்களின் குறைகளைப் போக்கவும் அவை உதவவில்லை. மார்லி—மிண்டோ சீர்திருத்தங்கள் உருக்கொள்வதற்குக் காரணர்களாக இருந்தவர்கள் (இந்தியர்கள்), அவைகளின் மூலம் இந்தியப் பொது மக்களின் அபிப்பிராயங்களை அரசாங்கம் புரிந்து கொள்வதற்கான வாய்ப்பு ஏற்படும் என்று எதிர்பார்த்தார்கள்; அதேபோல், அவை இந்திய பத்திரிகையாளர்களுக்கு அரசாங்கத்தில் பெரிய பாதிப்பை ஏற்படுத்தி மக்களின் குறைகள் நிவர்த்திக்கப்படத் தக்க சூழ்நிலையை உருவாக்க உதவும் என்றும் அவர்கள் நம்பினார்கள். ஆனால், அப்படி ஒன்றும் நடக்கவில்லை. கல்வி, தலசுய ஆட்சி, தொழில்கள், அரசு ஊழியம், வருவாய், நிதி முதலியவை தொடர்பாகச் சட்டசபை நிறைவேற்றிய தீர்மானங்கள் எல்லாம் புறக்கணிக்கப்பட்டன. இதற்கு விதி விலக்காக ஒன்றிரண்டு ஏற்கப்பட்டிருக்கலாம். ஆனால், அவை, புறக்கணிக்கத் தக்க அளவு மிகமிகக் குறைவே".

அந்தக் காலத்தில் அதிதீவிரவாதிகளாகக் கருதப்பட்ட லாலா லஜ்பத் ராய் மற்றும் தேசியத் தீவிரவாதிகள், சட்டசபைகளில் (இந்தியர்கள்) பங்குகொண்டதால் இந்தியத் தேசியத்துக்குப் பெரிய பாதகம் ஏற்பட்டதாகவே கருதினார்கள். "**தி ட்ரிபியூன்**" பத்திரிகையில் 1920 ஜூலை 3ல் லஜ்பத் ராய் எழுதியதாவது:

"(1910) பத்திரிகைச் சட்டத்தை நிறைவேற்ற (அரசுக்கு) கோகலே உதவினார்; (1915) இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை நிறைவேற்ற மாளவியா உதவினார்; (1917–18) உலகமகா யுத்தச் செலவுக்கு பத்துக் கோடிப் பவுன்கள் வழங்குவதில் தேசீயக் கட்சி உறுப்பினர்கள் ஒத்துழைத்தார்கள். இவைகளும் இவை போன்ற மற்ற சில நடவடிக்கைகளும், கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் சட்ட சபையின் இந்திய உறுப்பினர்கள் அனைவரும் சேர்ந்து செய்த சேவையையெல்லாம் விடப் பெரிய தீங்கை நாட்டுக்கு விளைவித்துள்ளன என்பதே என் கருத்து. இதுவரை, அரசாங்கத்தின் அடிப்படைக் கொள்கைகளை மாற்றும் விதமாகச் சட்டசபைகளில் இந்திய உறுப்பினர்கள் எந்தச் சிறிய பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை".

சட்டசபையின் இந்திய உறுப்பினர்கள் அரசாங்கத்திற்கு எதிராகச் சரியான எதிர்ப்பை நிலைநாட்டிக் கொள்ள முடியவில்லை என்பது உண்மையே. இந்திய அரசியல் சட்டச் சீர்திருத்தத்தின் மீதான அறிக்கை எடுத்துக்காட்டியிருப்பது போல, 1909க்குப் பிறகு எட்டே மசோதாக்களுக்குத்தாம் (சட்டசபையில்) கணிசமான எதிர்ப்பு இருந்தது; தனியார் மசோதாக்களில் ஐந்தே ஐந்து மசோதாக்களை மட்டுமே சபை ஏற்று நிறைவேற்றியது. ஆனால், 1911ல் கேட்கப்பட்ட கேள்விகளைப் போல் இரண்டு மடங்கு எண்ணிக்கை உள்ள கேள்விகள் (சபையில்) 1917ல் கேட்கப்பட்டிருப்பதைக் கவனிக்கும் போது, உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்ட கேள்வி கேட்கும் உரிமைக்கு அவர்கள் மிகவும் அக்கறை அளித்தார்களெனத் தெரிகிறது, என்று குறிப்பிட்டுள்ளது அந்த அறிக்கை.

தீர்மானம் கொண்டுவரத் தங்களுக்கு வழங்கப்பட்ட உரிமையையும் இந்திய உறுப்பினர்கள் நல்லவிதமாகவே பயன்படுத்திக் கொண்டார்கள்; மக்கள் நலன், நிதி போன்ற விவகாரங்கள் தொடர்பான தீர்மானங்களைக் கொண்டுவந்து, மக்களின் முக்கியமான குறைகளை எடுத்து உணர்த்துவதிலும் அரசாங்கம் தன்னுடைய கொள்கையை வெளியிடுமாறு வற்புறுத்துவதிலும் அவர்கள் கணிசமான வெற்றிகளைப் பெற்றார்கள். இதனால் அரசாங்கம் எப்போதும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் ஆயத்தநிலையிலேயே இருக்கவேண்டியிருந்தது. "அரசாங்கம் பெரும்பான்மை பலம் உடையதாகவே இருந்தாலும், இந்திய உறுப்பினர்கள் பல சந்தர்ப்பங்களில் அரசாங்கத்தைத் தீவிரமான சங்கடத்துக்கு உள்ளாக்கினார்கள் என்பதை மறக்க முடியாது" என்று மாண்டேகுவும் செம்ஸ்போர்டும் தங்கள் (கூட்டு) அறிக்கையிலேயே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

சட்டசபைகள் வெறும் ஆலோசனைச் சபைகளே என்று மிதவாதிகள் உணர்ந்தாலும், சட்டசபை நடவடிக்கைகளில் அவர்கள் ஆர்வம் குன்றியதில்லை. தங்கள் வாக்குவன்மையால் சட்டசபை விவாதங்களுக்கே பெருமை சேர்த்ததோடு, பல சமயங்களில் அரசாங்கத்தின் கொள்கையையும் திட்டங்களையும் எதிர்த்து

விமர்சிப்பதிலும் அவர்கள் அபாரத் திறமையைக் காட்டினார்கள். குறிப்பாக, அரசு ஊழியத்தையும் ராணுவத்தையும் இந்தியமய மாக்குதல், இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளித்தல், வரி விகிதங்களைக் குறைத்தல், வறுமையை ஒழித்தல், கல்வி வளர்ச்சி போன்ற விவகாரங்களில் அவர்கள் (இந்திய உறுப்பினர் களான மிதவாதிகள்) மிகுந்த அக்கறை காட்டிக் காரசாரமாக வாதாடினார்கள்.

இந்தியாவுக்குச் சுய ஆட்சி வேண்டும் என்று கோரிப் பகிஷ்காரங்களும் சுதேசிய இயக்கங்களும் நடந்து கொண்டிருந்த ஒரு தேசீயப் போராட்டச் சூழ்நிலையில்தான் மார்லி–மிண்டோ சீர்திருத்தம் உருக்கொண்டது. இந்தியாவில் அப்போது செல் வாக்குப் பெற்றிருந்த பல்வேறு அரசியல் குழுக்களின் போக்கை ஆராய்ந்து, அவரது சீர்திருத்தங்களின் உள்நோக்கம் என்ன என்பதைக் குறிப்பாக உணர்த்தியுள்ளார் மார்லி. இந்த நோக்கம் துலங்குமாறு 1909 பிப்ரவரி 23ல் (பிரிட்டிஷ்) பிரபுக்கள் சபையில் அவர் கூறியதாவது: "இதுபோன்ற ஒரு திட்டத்தை வகுக்கும்போது மூன்று வகுப்பினரான (இந்திய) மக்களை நாம் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியுள்ளது. அவர்களுள் முதல் வகையினரான தீவிரவாதிகள், என்றைக்காவது ஒருநாள் நம்மை இந்தியாவை விட்டு விரட்டிவிட முடியும் என்று கனவு கண்டு கொண்டிருப்பவர்கள்... இரண்டாவது வகையினருக்கு இந்த விதமான ஆசை எதுவும் இல்லை. ஆனால், காலனி வகையைச் சேர்ந்த சுய ஆட்சி ஒன்றை நிறுவிவிட வேண்டும் என்று இவர்கள் விரும்புகிறார்கள். மூன்றாவது வகையினர் இப்படி எதையும் எதிர்பார்க்கவில்லை; நிருவாகத்தில் ஒத்துழைப்பதற்கு உரிமை கிடைத்தால் போதும் என்றே அவர்கள் விரும்புகிறார்கள்.

"இவர்களில் இரண்டாவது வகையினரான காலனிச் சுய ஆட்சிக்காரர்களை, நியாயமான முழு ஒத்துழைப்புக் கோரும் மூன்றாவது வகையினராக மாற்றி இந்த இரண்டு வகையினரையும் ஒன்றாக இணைப்பதே நமது தீர்மானங்களின் நோக்கமாக இருந் துள்ளது; தொடர்ந்தும், அது அப்படியே இருந்து வரவேண்டும் என்பதே எனது விருப்பம்".

சீரிய புதிய கொள்கையாக அல்ல, சுய ஆட்சி இயக்கத்தை முறியடித்துத் தேசீயத் தலைவர்களிடையே பிளவை உண்டாக்கும் தந்திரோபாயமாகவே இந்தத் தீர்மானங்கள் உருவாயின என்பதையே, மார்லியின் இந்தப் பச்சையான பேச்சு தெளிவாக உணர்த்துகிறது. ஆனால், தேசீயக் கோரிக்கையையும் தேசீயப் போராட்டத்தையும் உந்தி நடத்தி, அவைகளை மேலும் உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லக் கூடிய சக்திகள் இந்திய வாழ்வில் உருக்கொள்ளத் தொடங்கி விட்டதையும், இந்திய மிதவாதிகள் அவைகளால் பாதிக்கப்படாமல் இருக்க முடியாது என்பதையும், பாவம், மார்லி உணர்ந்து கொள்ளவில்லை!

*அத்தியாயம் 2*

# 1919-ஆம் ஆண்டுச் சீர்திருத்தச் சட்டமும் மிதவாதிகளும்

## *முதலாம் உலகப் போரும் இந்தியாவின் புதிய நிலையும்:*

*1914* ஆம் ஆண்டில் திடீரெனத் துவங்கிய முதலாவது உலகப் போர் இந்தியாவில் தொடர்ச்சியான பல நிகழ்ச்சிகளுக்குக் காரணமாயிற்று. ஹார்டிஞ்ச் பிரபு விடுத்த வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு இந்தியத் தலைவர்கள் உள்நாட்டுத் தகராறுகளை ஒத்திப்போட இணங்கினார்கள்; *1915* ஆம் ஆண்டின் சட்டசபைக் கூட்டத் தொடரில், அரசாங்கத்தை எதிரிட்டுக் கொள்ளாமல், அதனோடு ஒத்துழைப்பதிலும் அவர்கள் ஆர்வம் காட்டினார்கள். எனவே, இந்திய அரசாங்கம், தொடக்கத்தில் இத்தலைவர்களின் போக்கு "பாராட்டத் தக்கது" என்று கருதியது. ஆனாலும், சில புரட்சிக் குழுக்களைச் சேர்ந்தவர்கள் பஞ்சாபிலும் வங்காளத்திலும் சுறுசுறுப்பாகவே இருந்து வந்தார்கள். போர் நடந்து கொண்டிருந்த காலத்தில் அவர்கள் உலகின் பல நாடுகளோடு தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு இந்திய அரசாங்கத்துக்குத் தொல்லை கொடுத்து வந்தார்கள். இந்திய அரசாங்கமும், இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் பெற்றிருந்த விரிவான அதிகாரங்களைக் கொண்டு அவர்களை ஒடுக்குவதில் தீவிரமாக ஈடுபட்டது.

*1911*ல் இத்தாலிக்கும் துருக்கிக்கும் போர் ஏற்பட்டதைத் தொடர்ந்து இந்திய முஸ்லிம் லீக் தலைவர்களிடம் ஏற்பட்டிருந்த மனமாற்றமும் இந்திய அரசாங்கத்துக்குப் புதிய தலைவலியை ஏற்படுத்தியது. இந்தச் (*1911*) சமயத்திலும் அதைத் தொடர்ந்தும் இங்கிலாந்து துருக்கியிடம் காட்டிய பராமுகம் இந்திய முஸ்லிம்களுக்கு ஆத்திரமூட்டியது. மேலும், நடுத்தர வகுப்பு முஸ்லிம் இளந் தலைமுறையினர், தேசியத் தீவிரவாதச்

சுழலால் பெரிதும் பாதிக்கப்பட்டு, இந்தியத் தேசீய இயக்கத்தில் சேரத் தொடங்கினார்கள். இந்தப் புதிய மாறுதலின் விளைவு தான் 1916ல் ஏற்பட்ட காங்கிரஸ்—லீக் ஒப்பந்தம்.

**காங்கிரஸ்—லீக் சீர்திருத்தத் திட்டம்:**

இந்தியாவின் எல்லாத் தரப்பினரையும் தழுவிய கொந்தளிப்பு ஒன்று பரவலாக உருக்கொண்டு வந்தது. இதுவே, எல்லா அரசியல் தலைவர்களும் ஒன்று சேரவும் அவர்களின் அரசியல் கோரிக்கை புதிய வேகங் கொள்ளவும் தூண்டுகோலாயிற்று. காங்கிரசும் முஸ்லிம் லீக்கும் கூட்டாகத் தயாரித்து, 1916ல் கல்கத்தாவில் கூடிய முஸ்லிம் லீக் கூட்டத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்ட இந்திய அரசியல் சீர்திருத்தத் திட்டம் இதைத் தெளிவாக உணர்த்தியது. இந்தக் காலக்கட்டம் வேறு வகையிலும் காங்கிரசின் வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்தது: 1907 முதல் தீவிரவாதிகள் என்றும் மிதவாதிகளென்றும் பிரிந்துபோன காங்கிரஸ் தலைவர்கள் இந்தக் காலத்திலேதான் மீண்டும் ஒன்று சேர்ந்தார்கள்.

காங்கிரஸ்—லீக் கூட்டுத்திட்டம், இப்போது உள்ள ஆட்சி அமைப்பு "மக்களின் நியாயமான லட்சியங்களோடு இணங்கிப் போவதாக இல்லை" என்று சுட்டிக்காட்டி, "இந்தியாவுக்குச் சுய ஆட்சி வழங்குவதே பிரிட்டனின் கோட்பாடு என்று மேன்மை தங்கிய மன்னர்பிரான் அவர்கள் அறிவித்தருள வேண்டும்" என்றும் கேட்டுக்கொண்டது. அத்துடன், ஆங்கில சாம்ராச் சியத்தைத் திருத்தி அமைக்கையில், "இப்போது இந்தியாவுக்கு உள்ள சார்புநாடு என்ற நிலையை மாற்றி, சுய ஆட்சி கொண்ட பல டொமினியன்களில் ஒன்றாகவும் மற்ற நாடுகளோடு சம உரிமை உள்ள நாடாகவும் இந்தியாவை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றும் அந்தத் திட்டம் கோரியது.

மத்தியிலும் மாநிலங்களிலும் அமைய வேண்டிய அரசாங்கங் களின் அமைப்பு முறையைப் பற்றியும் இத்திட்டம் தெளிவாக விவரித்திருந்தது. வைசிராயின் நிருவாகக் கவுன்சில் உறுப்பினர் களில் பாதிப்பேர் இந்தியர்களாக இருக்கவேண்டும் என்றும்,

மத்திய சட்டசபையிலும் மாநிலச் சட்டசபைகளிலும் பெரும்பான்மையான உறுப்பினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்க வேண்டும் என்றும் அதில் கோரப்பட்டிருந்தது. சட்டசபைகளின் அதிகாரம் இன்னும் அதிகரிக்க வேண்டும் என்பதும், அதற்கேற்ப, சட்டசபைகள் நிறைவேற்றும் தீர்மானங்கள் நிருவாக சபையைக் கட்டுப்படுத்துவதாக இருக்க வேண்டும்—கவர்னர் ஜெனரல் அல்லது கவர்னர்களுக்கு மட்டுமே அவைகளை ரத்துச் செய்யும் அதிகாரம் இருக்கலாம்—என்பதும் மற்றொரு கோரிக்கை. தவிர, இவ்வாறு ரத்துச் செய்யப்பட்ட ஒரு தீர்மானம், அந்தத் தேதியிலிருந்து ஓராண்டுக்குள் மீண்டும் சட்டசபையால் நிறைவேற்றப்படுமானால் அது அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தப்பட்டிருந்தது. சுருக்கமாக, நிருவாகம் திட்டவட்டமான உரிமைகளும் பொறுப்பும் உடையதாக இயங்க வேண்டும் என்பதே இந்தத் திட்டத்தின் நோக்கம்.

மாநிலச் சட்டசபைகளில் ஐந்தில் நாலு பங்கு உறுப்பினர்கள் நேரிடைத் தேர்தல் மூலமே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை இத்திட்டத்தின் மற்றொரு முக்கிய அம்சம். முக்கியமான சிறுபான்மை வகுப்பினர்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் வழங்கவும் முஸ்லிம்கள் தனித்தொகுதி (வாக்காளர்)களால் தேர்ந்தெடுக்கப்படவும் திட்டத்தில் வழி செய்யப்பட்டிருந்தது. (அதாவது பஞ்சாப் சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த உறுப்பினர்களில் 50 சதவீதத்தினரும் வங்காளத்தில் 40 சதவீதத்தினரும் முஸ்லிம்களாக இருப்பார்கள்). மத்திய சட்டசபைக்குப் பல மாநிலங்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படுவோரில் மூன்றில் ஒரு பகுதியினர் முஸ்லிம் தனி (வாக்காளர்)த் தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். தங்கள் முஸ்லிம் தனித்தொகுதிக்கு அப்பால் உள்ள இடங்களில் முஸ்லிம்கள் பங்கு கொள்ளுதல் கூடாது என்றும் தடுக்கப்பட்டது.

மாண்டேகு, செம்ஸ்போர்டு ஆகியோரின் கருத்துப்படி, "இதுவே இந்தியாவின் முக்கியமான அரசியல் நிறுவனங்களின் உரிமைகளை அதிகார பூர்வமாக வகுத்துக் காட்டும் முழுமையான திட்டம்." இதற்கு மிகப் பெரிய ஆதரவு இருப்பதாக அவர்கள்

கருதியதால், (சீர்திருத்தம் தொடர்பான) தங்கள் பரிசீலனையில் இதற்கே முதல் இடம் கொடுத்தார்கள்.

இதற்கிடையில், முக்கியமான மிதவாதிகளும் மற்றவர்களுமான பத்தொன்பது மத்திய சட்டசபை உறுப்பினர்கள் இந்திய அரசியலில் அபிவிருத்தி கோரும் வேண்டுகோள் ஒன்றை வைசிராயிடம் கொடுத்திருந்தார்கள் : நிருவாகக் குழு உறுப்பினர்களில் பாதிப்பேர் இந்தியர்களாக இருக்க வேண்டும், மாநிலச் சட்ட சபைகளுக்கும் மத்திய சட்டசபைக்கும் தேர்ந்தெடுக்கப் படுவோரில் பெரும்பான்மையானவர்கள் இந்தியர்களாக இருக்க வேண்டும், எல்லா விவகாரங்களைப் பற்றியும் சட்டம் இயற்ற இந்தச் சபைகளுக்கு முழு அதிகாரம் தரப்பட வேண்டும், (இங்கிலாந்திலுள்ள) இந்தியா மந்திரியின் கவுன்சில் ஒழிக்கப்பட வேண்டும் என்பன போன்ற கோரிக்கைகளை அவர்கள் அதிலே எழுப்பியிருந்தார்கள். அடிப்படையில், இந்தக் கோரிக்கைகளுக்கும் காங்கிரஸ்–லீக் திட்டத்துக்கும் வேறுபாடு எதுவும் இல்லை.

### தேசீய உணர்வு கூர்மையடைகிறது :

1917 ஆம் ஆண்டில் இந்திய மக்களின் தேசீய உணர்வில் ஒரு புதிய கூர்மை ஏற்பட்டது. ஹோம்ரூல் இயக்கம் என்னும் சுயாட்சி இயக்கம் இந்தியா எங்கும் பரவிப் படர்ந்தது ; காந்தியடிகளின் தலைமையில், பீகாரிலுள்ள சம்பரானில் ஐரோப்பிய அவுரித்தோட்ட முதலாளிகளின் அக்கிரமங்களுக்கு எதிராக விவசாயிகளின் சத்தியாக்கிரகம் ஒன்று தொடங்கியது. இந்தியாவின் பல பகுதிகளில் நடந்த "சதி"களையும் "புரட்சி"களையும் கண்டு இந்திய அரசாங்கம் நடுநடுங்கியது. ரஷ்யாவில் ஒரு புரட்சி உண்டானதைத் தொடர்ந்து இந்தப் பீதி உச்சக்கட்டத்தை அடைந்தது. மாண்டேகு–செம்ஸ்போர்டு கூற்றுப்படி, இந்த (ரஷ்ய)ப் புரட்சியே "இந்தியரின் அரசியல் நோக்குக்கு ஒரு புதிய உந்துதலாக அமைந்தது." இதே சமயத்தில், அமெரிக்க ஜனதிபதி வில்சனும் நாடுகளின் தன்னுரிமை பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். இவை எல்லாமாகச் சேர்ந்து, ஏற்கனவே

இந்திய முற்போக்காளர்களிடையே பரவியிருந்த சுயஆட்சிக் கோரிக்கைக்குப் புதிய வேகமும் விறுவிறுப்பும் கொடுத்தன.

### 1917 ஆகஸ்டு 20ஆம் தேதிய மாண்டேகு பிரகடனம் :

தேசீயக் கிளர்ச்சியில் ஏற்பட்டு வந்த இந்த எழுச்சியைச் சமாளிக்க, இந்திய அரசாங்கம் வழக்கம் போலவே முதலில் அடக்குமுறைகளைக் கட்டவிழ்த்து விட்டுப் பார்த்தது. ஆனால், "இந்திய நிருவாகத்தில் சங்கடங்கள் அதிகரித்துக் கொண்டு வந்ததால்" இந்தச் சூழ்நிலையைப் புதுவிதமாகச் சமாளிக்க வேண்டும் என்று அரசாங்கம் எண்ணலாயிற்று. இந்தியாவைப் பொறுத்தவரை பிரிட்டன் மேற்கொள்ளும் கொள்கையின் நோக்கம் என்ன என்பதைத் திட்டவட்டமாக அறிவிக்காவிட்டால் சரியான நடவடிக்கைகளை மேற்கொள்ள இயலாது என்று செம்ஸ்போர்டு அரசாங்கமும் கருதியது. இதன் விளைவு தான் புதிய இந்தியா மந்திரி எட்வின் மாண்டேகு 1917 ஆகஸ்ட் 20ல் வெளியிட்ட அறிக்கை.

இங்கிலாந்து மக்கள் சபையில் இந்தியா மந்திரி அறிவித்ததாவது : "நிருவாகத்தில் இந்தியர்களைப் பெருமளவில் இணைத்துக் கொண்டு சுய ஆட்சி அமைப்புக்களை வலுப்படுத்துவதன் மூலம் இந்தியாவைப் பொறுப்பாட்சிக்குத் தயார் செய்வதே மேன்மை தங்கிய மன்னர்பிரான் அரசாங்கத்தின் நோக்கம். அவ்வாறு பொறுப்பாட்சி பெற்ற இந்தியா ஆங்கில சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாகவே இயங்கும்." அவர் மேலும் பேசுகையில், "இந்த நோக்கத்தைப் படிப்படியாகத்தான் நாம் நிறைவேற்ற முடியும் ; ஒவ்வொரு நிலையிலும் எந்தவிதமான முன்னேற்ற நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டும் என்பதை இந்திய அரசாங்கமும் பிரிட்டிஷ் அரசாங்கமுமே தீர்மானிக்க வேண்டும்".

தவிர, இந்தியா மந்திரி இந்தியாவுக்குச் சென்று வைசிராயோடு கலந்து பேசுவதுடன் மற்ற பிரதிநிதித்துவ ஸ்தாபனங்களின் ஆலோசனைகளையும் கேட்பார் என்றும் அறிவிக்கப்பட்டது. இந்த அறிவிப்பின்படியே, மாண்டேகு 1917 நவம்பரில் இந்தியாவுக்கு

வந்து அதிகாரிகளுடன் ஆலோசனை கலந்ததோடு இந்தியத் தலைவர்களையும் பேட்டி கண்டார். அவரும் செம்ஸ்போர்டும் சேர்ந்து தயாரித்தளித்த கூட்டறிக்கை 1918 ஜூலையில் வெளியிடப்பட்டது. இந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்ட ஆலோசனைகளின் பேரில் தெளிவான திட்டங்களை வகுப்பதற்காகச் சில குழுக்கள் நியமிக்கப்பட்டன. பிரிட்டிஷ் பாராளுமன்றம் இந்தக் குழுக்களின் சிபாரிசுகளைப் பரிசீலனை செய்து 1919 ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டத்தை 1919 டிசம்பர் 23 ஆம் தேதி நிறைவேற்றியது.

## 1919-ஆம் ஆண்டின் இந்தியச் சட்டம் :

கவர்னரின் மாகாணங்கள் என்று சொல்லப்பட்ட மாநில அரசாங்கங்களுக்கு அதிகாரத்தை மாற்றித் தர வேண்டும் என்பது 1919ஆம் ஆண்டு இந்தியாச் சட்டத்தின் நோக்கம். பின்னர் வகுக்கப்பட்ட விதிகளின்படி, தல சுய ஆட்சி, பொது சுகாதாரம், கல்வி, போலீஸ் போன்றவை மாநில அரசின் அதிகாரத்துக்கு உட்படுத்தப்பட்டன ; அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்த நாட்டுப் பாதுகாப்பு, அயல்நாட்டு விவகாரங்கள், சுங்கவரி, ரெயில்வே, தபால்—தந்தி, வருமான வரி போன்றவை மத்திய அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்டன. மாநில அரசுக்கு உட்பட்ட விவகாரங்கள் "மாற்றப்பட்டவை" என்றும் "ஒதுக்கப்பட்டவை" என்றும் இரண்டாகப் பிரிக்கப்பட்டன. இவற்றுள் முந்தியவை (மாற்றப்பட்டவை)களை நிருவகிக்கும் பொறுப்பு, சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களிலிருந்து கவர்னர் நியமிக்கும் அமைச்சர்களுக்குத் தரப்பட்டது. பிந்தியவை (ஒதுக்கப்பட்டவை)களை நிருவகிக்கும் பொறுப்பு கவர்னரிடமும் அவருடைய நிருவாக சபையிடமும் விடப்பட்டது. இந்தச் சபையின் நாலு உறுப்பினர்களில் இரண்டு பேர் இந்தியர்களாக இருப்பார்கள். மாநில ஆட்சிக்கு உட்பட்ட விவகாரங்களை "மாற்றப்பட்டவை" என்றும் "ஒதுக்கப்பட்டவை" என்றும் இரண்டாகப் பிரித்து அமைத்த முறையே இரட்டையாட்சி முறை என்று பேர் பெற்றது. மாநிலச் சட்டசபை விரிவுபடுத்தப்பட்டதோடு, அதன் நடைமுறை வேலைத் திட்டமும் விரிவடைந்தது.

பிரதிநிதித்துவ பாணியைப் பொறுத்த அளவில், முஸ்லிம்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் என்ற முறையே பின்பற்றப் பட்டது; பஞ்சாபிலுள்ள சீக்கியர்களுக்கும் வேறு சில சிறுபான்மையினருக்கும் இதே பிரதிநிதித்துவ முறை வழங்கப் பட்டது. மற்றவர்களுக்கெல்லாம் பிரதேசத் தொகுதிவாரியான நேரிடைத் தேர்தல் முறை பின்பற்றப்பட்டது.

கவர்னர் ஜெனரலின் மத்திய அரசாங்க நிருவாகக் குழுவில் ஆறு சாதாரண உறுப்பினர்கள் இருந்தனர்; அவர்களில் மூன்று பேர் இந்தியர்கள். ஆனாலும், கவர்னர் ஜெனரல், வழக்கம்போல், இந்தியா மந்திரியின் மூலம் பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கே கட்டுப்பட்டவராக இருந்தார்; இந்தியச் சட்டசபைக்கு அவர் கட்டுப்பட வேண்டியதில்லை.

மத்திய அரசாங்கத்தில், ஒவ்வொன்றும் மற்றதைக் கட்டுப்படுத்தும் விதமாக இரண்டு சபைகள் அமைய இந்த சட்டம் வகை செய்தது. அவைகளுள் ஒன்று ராச்சிய சபை; மற்றது சட்டசபை. ராச்சிய சபையின் 60 உறுப்பினர்களில் 33 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்; மற்றவர்கள் நியமிக்கப்பட வேண்டும். நியமன உறுப்பினர்களில் அதிகாரிகளின் தொகை 20க்கு மேல் போகக்கூடாது. சட்டசபையில் 145 உறுப்பினர் இருப்பார்கள். அவர்களில் 104 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்; எஞ்சியவர்களில் அதிகாரிகளிலிருந்து 26 பேர்களும் அதிகாரிகள் அல்லாதவர்களிலிருந்து 15 பேரும் நியமிக்கப்படுவார்கள். நிலச்சுவான்தார்கள் மற்றும் வணிக நிறுவனங்களின் பிரதிநிதிகள் தனித் தொகுதிகள் மூலம் தேர்ந்தெடுக்கப்படவும் சட்டம் வகை செய்தது. தேர்ந்தெடுக்கப்பட்டு வரும் பெரும்பான்மையானவர்களைப் பொறுத்த அளவில், பிரதேச வாரியான தொகுதிகளின் நேரிடைத் தேர்தல் மூலம் அவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை பின்பற்றப்பட்டது. சட்டசபை உறுப்பினர்களைத் தெர்ந்தெடுக்கும் வாக்காளர்களைவிட ராச்சிய சபை உறுப்பினர்களைத் தெர்ந்தெடுக்கும் வாக்காளர்களுக்கு உயர்வான தகுதிகள் வரையறுக்கப்பட்டன. சட்டசபை உறுப்பினர் பதவிக்காலம் 3 ஆண்டு; ராச்சிய சபை உறுப்பினர் 5 ஆண்டுக் காலம் பதவியில் இருப்பார்கள்.

முதல் நாலு ஆண்டுக் காலம் வரை சட்டசபையின் தலைவரைக் கவர்னர் ஜெனரலே நியமிப்பார்; அதன் பிறகு சபை உறுப்பினர்களே தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். ஆயினும், சபையின் துணைத்தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை தொடக்க முதலே சபை உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்டது. ராச்சிய சபைக்குக் கவர்னர் ஜெனரலே தலைவராக இருப்பார். இந்திய எல்லைக்கு உட்பட்ட மக்கள், நீதிமன்றங்கள், இடங்கள், பொருள்கள் ஆகியவைகளைப் பற்றி ஒரு சில நிபந்தனைகளுக்கு உட்பட்டுச் சட்டங்கள் இயற்றும் உரிமையை இச்சட்டம் இந்தியச் சட்ட சபைகளுக்கு வழங்கியது. இந்த நிபந்தனைகளின்படி, இந்திய அரசாங்கக் கடன் அல்லது வருமானம், பிரிட்டிஷ் இந்தியக் குடிகளின் மதம் அல்லது மதச்சம்பிரதாயங்கள், மக்களின் பழக்க வழக்கங்கள், விமானப்படை, கப்பல்படை, தரைப்படை ஆகியவைகளின் நிருவாகம் அல்லது அவைகளைப் பற்றிய ஒழுங்குகள், வெளி நாடுகள் அல்லது வெளிநாட்டு மன்னர்களோடு கொள்ளும் தொடர்புகள் முதலியவை சம்பந்தப்பட்ட சட்டங்களை இயற்றுமுன் (இந்தியச் சட்டசபைகள்) கவர்னர் ஜெனரலின் அனுமதி பெற வேண்டும். இதே போல், வரவு செலவுத் திட்டத்தைப் பரிசீலனை செய்யவும் சட்டசபைக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. ஆனாலும், பாதுகாப்புச் செலவினங்களில் பெரும்பகுதியைப் பற்றியும் அதுபோன்ற வேறுசில விவகாரங்களிலும் ஓட்டெடுப்பு நடத்தச் சட்ட சபைக்கு உரிமை கிடையாது. இந்த நிபந்தனைகளுக்கு உட்பட்டு, மானியக் கோரிக்கைகளை நிராகரிக்கவும் மானியத் தொகையைக் குறைக்கவும் சட்டசபைக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. நிதி விவகாரம் தவிர மற்றெல்லாவற்றிலும், சட்டசபைக்கு உள்ள எல்லா அதிகாரமும் ராச்சிய சபைக்கும் வழங்கப்பட்டது.

இந்தியச் சட்டசபைகள் நிறைவேற்றும் மசோதாக்களை ரத்துச் செய்யும் அதிகாரத்தோடு, தேவை என்று கருதினால் ஒரு மானியத்தில் சபை விதித்த குறைப்பை ஓர் அறிவுப்புச் சட்டத்தின் மூலம் ரத்துச் செய்யும் அதிகாரமும் கவர்னர் ஜெனரலுக்கு இருந்தது. பொதுவான சட்டசபை நடவடிக்கை விவகாரங்களிலும் இவ்வாறு அறிவிப்புச் சட்டத்தின் மூலம் ரத்து செய்யும்

அதிகாரம் அவருக்கு இருந்தது. அதாவது, ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் சட்டசபையால் நிராகரிக்கப்பட்ட மசோதாவை அதே விதமாகச் சட்டமாக்க அவருக்கு அதிகாரம் இருந்தது. நிராகரிக்கப்பட்ட அத்தகைய மசோதாக்களை, பிரிட்டிஷ் இந்தியா அல்லது அதன் எந்த ஒரு பகுதியின் பாதுகாப்பு, அமைதி, பொதுநலன் போன்றவைகளுக்கு மிகத் தேவையானவை என்று அறிவித்துச் சட்டமாக்கிக் கொள்ள அவருக்கு உரிமை இருந்தது.

சட்டசபைக்கு இருந்து வந்த வினு எழுப்பும் உரிமை மற்றும் விசாரணை உரிமைகளின் பரப்பும் இப்போது விரிவு செய்யப் பட்டது. ஒரு கேள்வியைக் கேட்டவர் மட்டுமல்லாமல், மற்றவர்களும் அதை ஒட்டிய துணைக் கேள்விகளைக் கேட்கலாம் என்று உரிமை அளிக்கப்பட்டது. மற்றும், உறுப்பினர்கள் தீர்மானங்களைக்கொண்டு வரலாம்; அவை சபையில் நிறைவேறினால், அவை நிருவாகக் கவுன்சிலுக்கு வழங்கப்பட்ட சிபாரிசுகளாகவே கொள்ளப்படவேண்டும்.

இவ்விதமாக, மத்தியிலிருந்த அதிகாரம் தல ஆட்சிகளுக்கு மாற்றித்தரப்பட்டது; சட்டசபையின் அமைப்பிலும், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதித்துவம் என்ற கோட்பாடு மிகுதியாக இடம் பெற்றது; அவைகளுக்கு (சட்டசபைகளுக்கு), சட்டம் இயற்றுதல், வரவு செலவுத் திட்டம் போன்ற இனங்களில் முன்னைவிட அதிகமான அதிகாரமும் கிடைத்தது. என்றாலும், நிருவாகப் பகுதியின் தொடர்ச்சி, அதன் உறுதிப்பாடு, அதன் கொள்கை ஆகியவைகளை நிலைநிறுத்திக் கொள்வதிலும் அரசாங்கம் மிக விழிப்பாகவே நடந்துகொண்டது என்பதும் கவனிக்கத்தக்கது.

### சீர்திருத்தங்கள் பற்றி இந்தியரின் கருத்து:

1917 ஆகஸ்ட் 20ல் வெளியிடப்பட்ட மாண்டேகு அறிக்கை இந்தியாவில் பரவலான வரவேற்பைப் பெற்றது. (1917ல்), கல்கத்தாவில் நடந்த இந்தியத் தேசீயக் காங்கிரசின் வருடாந்திரக் கூட்டத்தில், 'இந்தியாவில் பொறுப்பாட்சியை நிறுவுவதே பிரிட்டிஷ் இந்தியக் கொள்கையின் நோக்கம்' என்ற அறிவிப்பை வரவேற்று "நன்றியும் மகிழ்ச்சியும்" தெரிவிக்கப்பட்டது.

இந்தியாவில் பொறுப்பாட்சி ஏற்படுத்துவது சம்பந்தமாகப் பாராளுமன்றச் சட்டம் ஒன்றை நிறைவேற்றுமாறும், இதற்கு ஒரு குறிப்பிட்ட கால எல்லையை வரையறுக்கும் விதியையும் அந்தச் சட்டத்திலேயே இணைக்குமாறும் காங்கிரஸ் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டது. காங்கிரசும் முஸ்லிம் லீக்கும் இணைந்து, இந்தியா மந்திரிக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் விடுத்த ஒரு வேண்டுகோளில், காங்கிரஸ்–லீக் கூட்டுச் சீர்திருத்தத் திட்டத்தை உடனேயே அமுல் படுத்தும்படிக் கேட்டுக் கொண்டார்கள். இதுவே மீண்டும் கல்கத்தாவில் நடந்த முஸ்லிம் லீகின் வருடாந்திரக் கூட்டத்திலும் (1917) வற்புறுத்தப் பட்டது.

மாண்டேகு–செம்ஸ்போர்டு அறிக்கை வந்ததும், காங்கிரசின் சிறப்புக் கூட்டம் ஒன்று 1918 ஆகஸ்டில் பம்பாயில் கூடியது. அறிக்கையிலுள்ள சில சிபாரிசுகள் ஓரளவு முன்னேற்றம் காட்டு கின்றன என்பதை ஏற்றுக்கொண்டாலும், பொதுவில் இவை "ஏமாற்றமளிப்பனவாகவும் திருப்தி இல்லாதவையாகவுமே" இருக்கின்றன என்றே இக்கூட்டம் கருத்துத் தெரிவித்தது. முக்கியமாக, மாநிலச் சட்டசபைகளின் அதிகாரத்துக்குட்பட்ட இனங்கள் மாற்றப்பட்டவை என்றும் ஒதுக்கப்பட்டவை என்றும் பிரிக்கப்பட்டிருப்பது போலவே மத்திய அரசாங்கத்திற்கு உட்பட்ட இனங்களும் பிரிக்கப்படும்படி இச்சீர்திருத்தம் மாற்றப் படவேண்டும் என்று அது கோரிக்கை விடுத்தது.

ஜின்னாவும் இதுபோன்ற கருத்துக்களையே தெரிவித்தார். 1918 செப்டம்பர் 7ல் மத்திய சட்டசபையில் உரை நிகழ்த்துகை யில், பிரிட்டிஷ் அரசாங்கம் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டு மென்பதில் ஆர்வமுள்ளதாகக் காட்டிக் கொண்டிருக்கிறது என்பதை ஏற்றுக்கொண்ட ஜின்னா, அதே சமயத்தில் இந்தச் சிபாரிசுகளைப் பார்க்கையில் போதிய நடவடிக்கை எடுக்கப்பட வில்லை என்றுதான் வருந்த வேண்டியிருக்கிறது, என்று குறிப் பிட்டார். தொடர்ந்து பேசுகையில் ஜின்னா கூறியதாவது: "சில மாநிலங்கள் போதிய தகுதி பெற்றிருப்பதால், அந்த மாநிலங் களில் போலீஸ், நீதிபரிபாலனம் என்பவை தவிர மற்றெல்லா இனங்களும் "மாற்றப்பட்டவை"களாகக் கருதப்பட வேண்டும்.

மத்திய அரசாங்கத்தைப் பொறுத்த வரையில், கவர்னர் ஜெனரலுக்கு ஏகமாக அதிகாரம் தரப்பட்டிருக்கிறது; அதே சமயம், தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்களுக்கு "அரசாங்கத்தை நிர்ப்பந்தப்படுத்துவதற்கான சில வாய்ப்புக்கள்" என்பதற்கு அப்பால் எந்த அதிகாரமும் இல்லை. கவர்னர் ஜெனரலுக்கு வழங்கப்பட்டுள்ள ரத்து அதிகாரம் மற்றும் அறிவிப்புச் சட்ட அதிகாரம் ஆகியவைகளின் பின்னணியில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்கள் "பொறுப்பற்ற விமர்சகர்களின் நிலை"க்குக் குறுக்கப்பட்டு விட்டார்கள்!" என்றார் ஜின்னா.

1919ஆம் ஆண்டில் இந்திய அரசியல் சூழ்நிலை வெகுவாக மாறியிருந்தது. இந்தியர்களெல்லாம் ஒருமுகமாக எதிர்ப்புத் தெரிவித்தும் ரௌலட் சட்டம் நிறைவேற்றப்பட்டு விட்டது; ஏப்ரல் 13ல் ஜாலியன்வாலாபாக் படுகொலையும் நடந்தது. நாடே, பிரிட்டிஷ் ரத்தவெறிக்கு எதிராகக் கிளர்ந்து நின்றது. நாட்டு மக்களின் கோபக் கொந்தளிப்பு அமிர்தசரஸில் நடந்த இந்தியத் தேசியக் காங்கிரசின் (1919) வருடாந்திரக் கூட்டத்தில் அப்பட்டமாகப் பிரதிபலித்தது. சீர்திருத்தச் சட்டத்தை "போதாதது, திருப்தி தராதது, ஏமாற்றம் தருவது" என்றெல்லாம் கண்டித்த காங்கிரஸ், வைசிராயை உடனே திருப்பி அழைத்துக் கொள்ள வேண்டும் என்றும் கோரியது. "பூரணப் பொறுப்பாட்சிக்கு இந்தியா தகுதி பெற்றிருக்கிறது" என்று அறிவித்ததோடு, "இதற்கு மாறாக வெளியிடப்பட்ட ஊகங்களையும் கருத்துத் திணிப்புகளையும்" வன்மையாகக் கண்டித்தது. ஆனாலும், பிரிட்டிஷாரின் நன்னோக்கில் காங்கிரசுக்கு அழுத்தமான நம்பிக்கை இருந்ததால், இப்போதும், "இயன்ற அளவில் இந்தச் சீர்திருத்தங்களை நடைமுறைப்படுத்தி அதன் மூலம் விரைவிலேயே பொறுப்பாட்சியை அமைக்க முயல்வோம்" என்றே காங்கிரஸ் தீர்மானித்தது. இந்தச் சீர்திருத்தங்களை உருவாக்குவதற்கு மாண்டேகு மேற்கொண்ட உழைப்பையும் காங்கிரஸ் பாராட்டி நன்றி தெரிவித்துக் கொண்டது. ஆனாலும், ரௌலட் சட்டம் அமுலுக்கு வந்து ஜாலியன்வாலாபாக் படுகொலையும் நடந்தபின் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு "பேயரசு" என்ற முடிவுக்கு வந்துவிட்டார் காந்தி அடிகள். 1919

டிசம்பர் 31 **யங் இந்தியா**வில் இதுபற்றி அவர் பின்வருமாறு எழுதியுள்ளார் :

"சீர்திருத்தச் சட்டமும் அதனோடு இணைந்த அதிகாரபூர்வ அறிக்கையும், இந்தியாவுக்கு நீதி வழங்க வேண்டுமென்பதில் பிரிட்டிஷ்காரர்கள் கொண்டுள்ள உண்மையான ஆர்வத்தின் விளைவுகளே. ஆயினும் அவை (சட்டமும் அறிக்கையும்), இது தொடர்பாக எந்த விதமான சந்தேகங்களுக்கும் இடமில்லாமல் செய்யவேண்டும்......சீர்திருத்தங்களைக் கண்டித்துக் கொண்டிருப்பதே நமது வேலையாக இருக்கக்கூடாது; அவைகளைப்பற்றி அமைதியாகச் சிந்தித்து, அவை வெற்றிகரமாகச் செயல்பட வழி வகுத்து அதன் மூலம் முழுப் பொறுப்பாட்சி ஏற்படும் தருணத்தை எதிர்நோக்குவதே நமது கடமையாக இருக்க வேண்டும்."

## ஒத்துழையாமையும் சீர்திருத்தப் பகிஷ்காரமும் :

நாட்டு நிலைமை இத்தகைய அமைதிப் போக்குக்கு உகந்ததாக இல்லை. எங்கும் எதிர்ப்பு உணர்வே மேலோங்கியிருந்ததால், மக்களோடு நேரிடையான தொடர்புடைய எந்த நிறுவனமும் அந்த உணர்வின் பாதிப்புக்கு ஆட்படவே வேண்டியிருந்தது. "பஞ்சாப் கொடுமை"யும் நாட்டு மக்களின் உணர்ச்சியை மிகவும் புண்படுத்தியிருந்தது. ஆகவே 1919ல் பம்பாய்த் தொழிற்சாலைகளில் ஒரு லட்சம் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள்; 1919 ஏப்ரல் 6ல் கடையடைப்புச் செய்யுமாறு காந்தியடிகள் விடுத்த வேண்டுகோளும் முழுவெற்றி பெற்றது. பிரிட்டிஷ்காரர்கள் துருக்கியர்பால் நன்றாக்குக் கொண்டிருக்கவில்லை என்பதை ஸிவ்ரேஸ் ஒப்பந்தம் தெளிவாகக் காட்டிவிடவே, முஸ்லிம்கள் பெரிதும் ஏமாற்றமும் கோபமும் அடைந்தார்கள். கிலாஃபத் இயக்கமும் இங்கே ஏற்கெனவே வேர்கொள்ளத் தொடங்கிவிட்டது. அரசுச் சார்புடைய வரலாற்றுளரும், "இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே என்றும் இல்லாத நல்லிணக்கம் ஏற்பட்டிருந்ததாகவே" குறிப்பிட்டுள்ளார். "அரசியல் விழிப்புடையவர்களிடையே ஏற்பட்டுள்ள சஞ்சலம், முன்னேறிய முகம்மதியர்களிடையே பரவியுள்ள கவலை,

சாதாரண மக்கள் அனுபவித்து வரும் துன்பம் இந்த மூன்றும் இங்கே உள்நாட்டுக் குழப்பத்தை உண்டாக்குவது திண்ணம்'' என்று அவர் குறிப்பிட்டார். 1920 செப்டம்பரில் நடந்த காங்கிரஸ் சிறப்பு அவையில் காங்கிரஸ் தலைவர் லாலா லஜ்பத் ராய், ''புரட்சிமயமான ஒரு காலக்கட்டத்தில் நாம் இருந்து வருகிறோம் என்பதை மூடிமறைப்பதில் பயனில்லை'' என்று அடித்துப் பேசும் அளவுக்கு நாட்டின் எழுச்சி நரம்பு வில்லிட்டு நின்றது. காந்தியடிகளும் ஒரு போராட்டத்தைத் துவக்க ஆயத்தமானார். எனவே, ''(பஞ்சாபுக்கும் கிலாஃபத்துக்கும்) இழைக்கப்பட்டுள்ள தீங்குகள் சரிசெய்யப்பட்டு இங்கே சுதந்திர ஆட்சி ஏற்படாதவரை, நாட்டுமக்கள், காந்தியடிகளின் முற்போக்கான அகிம்சை நெறி ஒத்துழையாமைப் போராட்டத்தை (1920 ஆகஸ்ட் 1 முதல்) ஏற்று நடத்துவதைத் தவிர வேறு வழி இல்லை'' என்று காங்கிரஸ் முடிவு செய்தது.

இதுவே நாடெங்கும் ஒத்துழையாமை இயக்கத்துக்குப் போதுமான களம் அமைத்தது. தொடர்ந்து (மாண்டேகு–செம்ஸ்போர்டு) சீர்திருத்தப் பகிஷ்காரம் தொடங்கியது; அடுத்து நடைபெற இருந்த சட்டசபைத் தேர்தல்களைப் பகிஷ்கரிக்கும் இயக்கமும் தொடங்கியது.

### மிதவாதிகளின் போக்கு:

லக்னோவில் நடந்த (1916) இந்தியத் தேசியக் காங்கிரசின் வருடாந்திரக் கூட்டத்தில் மிதவாதிகளும் தீவிரவாதிகளும் மீண்டும் ஒன்று சேர்ந்தார்கள்; காங்கிரஸ்–லீக் சீர்திருத்த அறிக்கையையும் மிதவாதிகள் ஏற்றுக் கொண்டார்கள். ஆனாலும், 1917ல், லோகமானிய திலகர், அன்னி பெசன்ட் ஆகியோர் தலைமையில் நடந்த ஹோம்ரூல் இயக்கம், மிதவாதிகளுக்கும் தீவிரவாதிகளுக்குமிடையே மீண்டும் பிளவை வளர்த்து விட்டது.

மாண்டேகு செம்ஸ்போர்டு அறிக்கை 1918 ஜூலையில் வெளிவந்தது. அப்போது தீவிரவாதியாகக் கருதப்பட்டு வந்த அன்னி பெசன்ட், ''இப்படிப்பட்ட ஓர் அறிக்கையை வழங்குவது இங்கிலாந்தின் தகுதிக்கு இழுக்கு: அதை ஏற்றுக் கொள்வதோ

இந்தியாவின் தகுதிக்கு இழுக்கு!'' என்று கூறி அறிக்கையைக் கண்டித்தார். சென்னையைச் சேர்ந்த பதினைந்து காங்கிரஸ் தலைவர்கள் அந்த அறிக்கையைக் கண்டித்து ஓர் அறிக்கை வெளியிட்டார்கள். இந்தத் திட்டம் ''கொள்கை அளவிலும் உள்ளடக்க விவர வகையிலும் பெருங் குறைபாடு உடையதாக இருப்பதால்'' இதன் அடிப்படையில் எந்தப் பரிசீலனையும் நடைபெற முடியாது ; இதன்மீது விவாதம் நடந்து இணக்கமான முடிவு ஏற்பட வேண்டுமானால் இது முழுக்க முழுக்க மாற்றி அமைக்கப்பட வேண்டும்'' என்று அதிலே குறிப்பிட்டிருந்தார்கள். வங்காளத்தைச் சேர்ந்த காங்கிரஸ் தீவிரவாதிகளின் கருத்தை வெளிப்படுத்துவதாக வங்காள மாநிலக் காங்கிரஸ் கமிட்டி வெளியிட்ட குறுநூல் ஒன்றும் (மாண்டேகு செம்ஸ் போர்டு) சீர்திருத்தத்தில் அடிப்படையான பெரிய மாறுதல்கள் செய்யப்பட வேண்டும் என்று கோரியது. திலகர், ''இந்தத் திட்டம் ஏற்கத் தக்கதே அல்ல!'' என்று முழங்கினார்.

காங்கிரஸ்காரர்களில் சிலர் வெளியிட்ட இந்த அறிக்கைகளால் மிதவாதிகள் பெரிதும் பீதியடைந்தார்கள். (1919 வரை காங்கிரஸ் இயற்றியுள்ள தீர்மானங்களை நோக்குகையில் இந்தப் பீதி காரணமற்றது என்றே தோன்றுகிறது.) மிதவாதிகளைப் பொறுத்தவரை, சீர்திருத்தத்தில் கண்ட ஆலோசனைகள் ஏற்கனவே உள்ள நிலைமைகளில் முன்னேற்றம் காட்டுகின்றன என்றே அவர்கள் கருதினார்கள். எனவே, அதைக் கண்டித்து விமர்சிப்பதைவிட அதிலே காணப்படும் நல்லெண்ணத்தை ஏற்று மதிப்பதே தக்கது என்று அவர்கள் நினைத்தார்கள். தவிர, இந்தத் திட்டத்துக்கு இந்தியாவில் ஏற்படும் எதிர்ப்பு இங்கிலாந்திலுள்ள பிற்போக்குவாதிகளுக்கே சாதகமாகுமென்றும் அதனால் இந்தியாவின் நலன்தான் பாதிக்கப்படும் என்றும் அவர்களுக்குத் தோன்றியது.

இதற்கிடையில், முஸ்லிம் வகுப்புவாதிகளையும் மிதவாதிகளையும் தேசீய எழுச்சியிலிருந்து பிரித்துவிடும் முயற்சியும் ஒருபக்கம் நடந்து வந்தது. தொடக்கத்திலிருந்தே, தம்முடைய திட்டத்தை ஆதரிக்கக் கூடிய இந்தியர்கள் சிலராவது கிடைத்தால் போதும்

என்றே மாண்டேகு கருதி வந்தார். அவருடைய நாட்குறிப்பில் 1917 டிசம்பர் 22ல் அவர் பின்கண்டவாறு எழுதியுள்ளார் :

"இந்தத் திட்டம் நாங்கள் அறிவிக்கும் கொள்கைகளில் சிலவற்றையாவது உள்ளடக்கியதாக இருக்கிறது என்று நம்பி அதை ஆதரிக்க இந்தியாவில் ஒரு சிறு கூட்டத்தாராவது தயாராக இருக்க வேண்டும். இல்லாவிட்டால், இத்திட்டத்தை இந்தியாவில் செயல்படுத்த முடியும் என்று நான் சொன்னால் மந்திரி சபையார் எப்படி ஏற்பார்கள் ?"

"நம்மை ஆதரிக்க ஒரு கூட்டத்தைத் தயார் செய்துகொண்டாலன்றி நமது திட்டத்தைச் செயல்படுத்தவே முடியாது" என்று மாண்டேகு நன்கு உணர்ந்திருந்தார். 1918 ஜனவரி 21ல் சில மிதவாதத் தலைவர்களுடன் அவர் பேசினார். அதுபற்றித் தமது நாட்குறிப்பில் அவர் சொல்லியிருப்பதாவது: "மிதவாதக் கட்சி ஒன்றை அமைப்பது பற்றிப் பேசினோம். அதிலே அவர்கள் மிகுந்த ஆர்வம் காட்டினார்கள். இது தொடர்பான பத்திரிகைகள் வெளியிடுவது பற்றி எல்லாம் கூடப் பேசினார்கள். இதில் அவர்கள் உண்மையான நாட்டம் உடையவர்களாக இருப்பதாகவே தோன்றுகிறது."

"அரசாங்கம் (ஏதாவது ஒரு கொள்கையின் அடிப்படையில்) தன் நிலைமைத் தெளிவுபடுத்தி விடுமானால் மிதவாதிகள் அரசின் பக்கம் சேர்ந்து விடுவார்கள்" என்று திடமாக நம்பினார் மாண்டேகு. அரசாங்கம் இதைச் செய்யத் தவறுமானால், அதன் பொறுப்பு அரசாங்கத்தைச் சேர்ந்தது ; மிதவாதிகளைக் குறை சொல்ல முடியாது. அரசாங்க ஆதரவே மிதவாதிகளுக்கு (இப்போது) மிகமிகத் தேவை.

"அரசாங்கக் கட்சியின் உண்மையான தலைவர்களான அதிகாரிகள் மிதவாதிகளுக்கு ஆதரவளிக்காமலும் அவர்களைப் பலப்படுத்தாமலும் அவர்களுக்கு உதவி செய்யாமலும் விட்டதாலேயே அவர்கள் (மிதவாதிகள்) நம்பிக்கை தளர்ந்து போனார்கள்."

இந்தத் தவறு திருத்தப்பட வேண்டும். மாண்டேகு 1917 டிசம்பர் 12ல் தம்முடைய திட்டத்தை வகுத்த போது

தமது ஆலோசனைகளுள் பின்வரும் ஆலோசனையையும் ஒன்றாகக் குறிப்பிட்டுள்ளார் :

"இந்தியர்களின் புதிய ஸ்தாபனம் ஒன்றை ஏற்படுத்த வேண்டும். அரசாங்கம் அவர்களுக்கு எல்லா வகையிலும் உதவி செய்ய வேண்டும். உதவி செய்து, நம்முடைய திட்டங்களைப் பிரசாரம் செய்ய அவர்களையே பயன்படுத்திக் கொள்ள வேண்டும். (அவர்களில் சிலரைத் தேர்ந்தெடுத்து) நமக்கு உதவியாக இருக்கக்கூடிய ஒரு தூதுக் குழுவை இங்கிலாந்துக்கு அனுப்ப வேண்டும்."

இவைகளின் விளைவாகவே, காங்கிரஸ் (1918 ஆகஸ்டில்) ஒரு சிறப்பு அவையை பம்பாயில் கூட்டியபோது மிதவாதிகள் யாரும் அதில் கலந்து கொள்ளவில்லை. அதுமட்டுமல்ல; சிறிது காலத்துக்குப் பிறகு, 1918 நவம்பரில் அதே நகரில் ஒரு தனி அகில இந்திய மாநாட்டையே மிதவாதிகள் கூட்டினார்கள். அங்கே "மிதவாதக் கட்சியினராகிய நாங்கள் முறையான பரிணாம வளர்ச்சியின் நண்பர்கள்—புரட்சியின் எதிரிகள் !" என்று வெளிப்படையாகவே அறிவித்துக் கொண்டார்கள். "இயன்ற போதெல்லாம் அரசாங்கத்துடன் ஒத்துழைப்போம், தேவை ஏற்படும்போதெல்லாம் குறை கூறி எதிர்ப்போம் !" என்பதைக் குறிக்கோள் வாக்காக ஏற்றுக்கொண்ட அவர்கள் "இதை விட்டால், ஆட்சி இயல் அபிவிருத்திக்கு அரசியலில் வேறு குறுக்குவழி கிடையாது" என்று உறுதியாக நம்பினார்கள்.

இந்த முடிவுகளின் காரணமாக, பல மிதவாதத் தலைவர்களும் தொண்டர்களும் போராட்டப் பாதையையே முதன்மைப் படுத்திய காங்கிரஸ் தீவிரவாதிகளோடு சேர்ந்து கொண்டார்கள். எஞ்சியிருந்த மிதவாதிகள் மட்டும், தங்களைத் தனி ஒரு அரசியல் கட்சியாக அமைத்துக் கொண்டு, அதற்கு அகில இந்தியத் தேசீய மிதவாதக் கூட்டணி என்று பெயரும் சூட்டினார்கள். அவர்களும், சீர்திருத்தத் திட்டத்தில் திருத்தம் செய்யப்பட வேண்டும் என்றும் அத்திட்டம் மேலும் விரிவுபடுத்தப்பட வேண்டும் என்றும் சுட்டிக்காட்டத்தான் செய்தார்கள். ஆனாலும், அதற்கு முட்டுக்கட்டை போடுவதைவிட அதைச் செயற்படுத்துவதில்

அரசாங்கத்தோடு ஒத்துழைக்க வேண்டும் என்பதே அவர்களின் நோக்கமாக இருந்தது.

### முதல் மூன்று ஆண்டுகளில் சீர்திருத்தச் சட்டம் :

1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டத்தின்படி அமைந்த மாநிலச் சட்டசபைகளுக்கும் மத்திய அரசின் இரண்டு சபைகளுக்குமான தேர்தல் 1920 நவம்பரில் நடத்தப்பட்டது. காங்கிரஸ் இந்தத் தேர்தலைப் பகிஷ்கரித்து விட்டதால் மிதவாதிகளே வேட்பாளர்களாக நின்றார்கள். தனித்தன்மையும் வேறுபட்ட கொள்கைகளும் வேலைத் திட்டங்களும் கொண்ட அரசியல் கட்சிகள் போட்டியிடாததால், தேர்தலில், அதற்கு வேண்டிய எதார்த்தத் தன்மையே இல்லை.

புதிய விதிமுறைகளின்படி வாக்குரிமை கட்டுப்படுத்தப் பட்டிருந்தது ; பெண்களுக்கு வாக்குரிமையே இல்லை. சுமார் 6,200,000 பேரே வாக்காளர்களாகப் பதிவு செய்யப்பட்டிருந்தார்கள். பிரிட்டிஷ் இந்தியாவின் மக்கள்தொகையில் அவர்கள் $2\frac{3}{4}$ சதவிகிதத்தினரே. காங்கிரசாரின் தேர்தல் பகிஷ்காரமும் தேர்தலை வெகுவாகப் பாதித்தது. அதாவது, பதிவு செய்யப்பட்ட வாக்காளர்களில் 20 சதவீதத்தினர் மட்டுமே சட்டசபைத் தேர்தலில் வாக்களித்தார்கள்.

காங்கிரஸ் தேர்தலில் போட்டியிடாததால் மிதவாதிகள் சுலபமாகவே வெற்றி பெற்றார்கள். எனவே, (மாண்டேகு–செம்ஸ்போர்டு) சீர்திருத்தங்களின்படி முதல் மூன்றாண்டுக்காலம் நடந்த சட்டசபையை மிதவாதச் சட்டசபை என்றே சொல்ல வேண்டும்.

வெளியிலே மக்கள், பொதுஜன இயக்கம் ஒன்றுக்கு அணி திரண்டு வருகிறார்கள் என்பதும் ஆங்கில ஆட்சியாளர்கள் இழைத்த கொடுமைகளால் அவர்களின் உள்ளம் மிகவும் புண்பட்டிருக்கிறது என்பதும் மிதவாதிகளுக்குத் தெரிந்துதான் இருந்தது, எனவே, அவர்கள் மிகமிக இக்கட்டான ஒரு பணியை மேற்கொள்ள வேண்டி இருந்தது. தாங்கள் பிரிட்டிஷ் அரசாங்

கத்துக்கு வக்காலத்து வாங்குகிறவர்கள் அல்லர் என்று அவர்கள் (மக்களுக்குக்) காட்டியாக வேண்டும்; அதே சமயம், சீர்திருத் தத்தைச் செயற்படுத்துவதற்குத் தடையாகவும் அவர்களின் நடைமுறை அமைந்துவிடக் கூடாது. அரசாங்கத்தாரும், அந்தச் சீர்திருத்தம் காங்கிரஸ்காரர்கள் சொல்வதுபோலப் போலியான தல்ல என்று மெய்ப்பிக்கவேண்டிய கட்டுப்பாடு உடையவர்களாக இருந்தார்கள். ஆகவே, அவர்கள், அரசாங்கத்தின் நலனுக்குக் குந்தகம் ஏற்படாத வகையில் சட்டசபை உறுப்பினர்களின் கருத்துக்களுக்குச் செவிசாய்க்க வேண்டிய கட்டாய நிலையிலும் இருந்தார்கள்.

இந்தச் சங்கடமான நிலைமை சட்டசபையின் முதலாவது கூட்டத்திலேயே வெட்ட வெளிச்சமாகி விட்டது. 1921 பிப்ரவரி 15ஆம் தேதி, பிரிட்டிஷ் சாம்ராச்சியத்தோடு சம உரிமை அடிப் படையில் அமைந்த ஓர் உறவை ஏற்படுத்திக் கொள்வதே இந்திய அரசின் உறுதியான கொள்கை என்று இந்திய அரசாங்கம் அறிவித்துவிட வேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார் ஜம்னதாஸ் துவாரகாதாஸ். பஞ்சாபில் அமுலில் உள்ள ராணுவச் சட்டம் இந்தக் கொள்கைக்கு முரணானது என்று அரசாங்கம் வருத்தம் தெரிவிக்க வேண்டும் என்றும், அத்துமீறிச் செயல்பட்ட அதிகாரிகளுக்குக் கடும் தண்டனை விதிப்பதோடு, அத்தகைய அத்து மீறல்களினால் கொல்லப்பட்டவர்கள் மற்றும் காயமடைந்தவர்களின் குடும்பங் களுக்கு அரசாங்கம் நட்ட ஈடு கொடுக்க மேண்டும் என்றும் அந்தத் தீர்மானம் மேலும் கோரியது. அரசியல் உணர்வு உள்ள ஒவ்வொரு இந்தியனின் மனத்தையும் அப்போது மிகுதியாக ஈர்த்து நின்ற விவகாரம் இதுவே என்பதை எல்லோரும் உணர்ந் திருந்தார்கள். ஆதலால், அது பற்றிய விவாதத்தில் அதிகமான வெறுப்புணர்ச்சி வெளிப்பட்டுத் தெரியாவிட்டாலும், விவாதம் உணர்வுக் கொந்தளிப்புகளுக்கு உட்பட்ட முறையிலேயே நடந்தது. அரசாங்கத்தின் நிலையை விளக்கித் தெளிவுபடுத்துவது, உள்துறை உறுப்பினர், சர் வில்லியம் வின்சென்டுக்கு மிகவும் சங்கடமாகப் போய்விட்டது. அவர் அனுதாப உணர்வுடனேயே பிரச்சினையை அணுகினாலும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குக்

கடும் தண்டனை விதிப்பது பற்றித் தீர்மானத்தில் உள்ள கருத்தை அரசாங்கம் ஏற்க இயலாது என்று தெரிவித்தார். அரசாங்கத் தரப்பில் காட்டப்பட்ட பரிவுணர்வை மதித்து, துவாரகாதாஸ், தீர்மானத்தின் அந்தப்பகுதியை மட்டும் திரும்பப் பெற்றுக் கொண்டார். அதன் பேரில், தீர்மானம் ஏகமனதாக நிறை வேற்றப்பட்டது.

கோகலேயின் மரணத்துக்குப்பின் மிதவாதிகளைத் தலைமை தாங்கி நடத்தும் பொறுப்பு சீனிவாச சாஸ்திரியிடம் வந்தது. அவரும் இப்போது சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட் டிருந்தார். 1921 பிப்ரவரி 14ல்தான் அவருக்கு முதல் முதலாகச் சபையில் பேச வாய்ப்புக் கிடைத்தது. அன்றைக்கே அடக்கு முறைச் சட்டங்களைப் பரிசீலனை செய்யவும், அவைகளை முழுமை யாகவோ அவைகளின் சில பகுதியையோ ரத்துச் செய்ய வேண்டுமா, அல்லது அப்படிச் செய்ய முடியாவிட்டால், அவை களைத் திருத்தி அமைக்கலாமா? திருத்தம் செய்வதென்றால் எப்படி எப்படிச் செய்யலாம்? என்பவைகளைப் பற்றி அறிக்கை கொடுக்கவும், உடனடியாக ஒரு குழுவை நியமிக்க வேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார்.

தமது தீர்மானத்தை விளக்கிப் பேசத் தொடங்கியதுமே, தம் முடைய தீர்மானத்தை முதல் நாள் நிகழ்ச்சி நிரலிலேயே சேர்த்த தற்காக அரசாங்கத்துக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார் சாஸ்திரி. அரசாங்கத்தின் நல்லன்பு மற்றும் நட்புணர்வு பற்றித் தமது திருப்தியையும் தெரிவித்தார். "நாட்டிலே பெரும் கொந்தளிப்பு இருக்கிறது என்பது உண்மைதான். ஆனாலும், இந்த (அடக்குமுறை)ச் சட்டங்களும் அந்தக் கொந்தளிப்புக்கு ஒரு காரணமாக இருப்பதாலேயே அவைகளைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கோருகிறேன்". இவ்வாறு பேசிய சாஸ்திரி தொடர்ந்து உரை நிகழ்த்துகையில், நடை முறையிலிருந்த சட்டங்களை அலசிக்காட்டி அவைகளை அகற்று வது அல்லது திருத்துவது எவ்வளவு அவசியம் என்பதையும் புலப்படுத்தினார். தமது உரையை முடிக்கையில், "அகிம்சைநெறி ஒத்துழையாமையைவிட அகிம்சைநெறி ஒத்துழைப்பே நல்லது" என்று அலங்காரமாக எடுத்துரைத்தார் சாஸ்திரி.

ரங்கசாமி அய்யங்கார் பேசுகையில், அடக்குமுறைச் சட்டங்களை அடியோடு நீக்க வேண்டும் என்று பொதுமக்கள் கேட்டுக் கொண்டிருக்கையில் அவைகளைப் பரிசீலனை செய்ய ஒரு குழு அமைப்பது பயன் தராது என்றார். கபார்டே, சில அடக்கு முறைச் சட்டங்களைப் பட்டியல் போட்டுக் காட்டி, அவைகளை எல்லாம் ரத்துச் செய்யவேண்டும் என்ற திருத்தம் ஒன்றைக் கொண்டுவந்தார். ஆனால், அவருடைய திருத்தம் தோற்கடிக்கப் பட்டு சாஸ்திரியின் தீர்மானமே வெற்றி பெற்றது.

1921 மார்ச் 3ஆம் தேதி, கலகங்களையும் சட்டத்துக்குப் புறம்பான கூட்டங்களையும் அடக்கும்போது இன்னின்ன நிபந்தனைகளுக்கு உட்பட்டுத்தான் துப்பாக்கிச் சூடு நடத்தலாம் என்று வரையறுக்கும் விதமாக குற்றவியல் நடைமுறைச் சட்டத்தையும் அதைப் போன்ற மற்ற சட்டங்களையும் திருத்த வேண்டும் என்று கவர்னர் ஜெனரலுக்குச் சிபாரிசு செய்யும் தீர்மானம் ஒன்றை சாஸ்திரி கொண்டுவந்தார். இவைகளைப் பொறுத்தவரை, இந்தியச் சட்டத்தை ஆங்கிலேயச் சட்டத்தின் பாணியில் திருத்தி அமைக்க வேண்டும் என்று தகுந்த காரணத் தோடு வற்புறுத்தினார் அவர். துப்பாக்கிச் சூடு நடத்தும் அதிகாரிகளின் மீது, அரசாங்கத்தின் அனுமதியின்றியே சட்டப்படியான நடவடிக்கை எடுக்க வகை செய்யவேண்டும் என்றும் அவர் கோரினார். ஆனாலும். இவை அரசாங்க நிருவாகத் தின் கொள்கைகளையும் நடைமுறைகளையும் வெகுவாகப் பாதிக்கும் என்பதால், இந்தக் கோரிக்கைகளுக்கு அரசாங்கம் இடம் கொடுக்கவில்லை. மேலும், இந்தக் கோரிக்கைகளை நடை முறைப் படுத்தினால் கலகங்களை அடக்கும் பணியில் அதிகாரிகள் பாடு திண்டாட்டமாகி விடும் என்றும் அரசாங்கத்தின் சார்பில் வாதாடப்பட்டது. எனவே தீர்மானம் வெற்றி பெறவில்லை.

முன்பே குறித்துள்ளது போல, அடக்குமுறைச் சட்டங்களைப் பரிசீலனை செய்ய ஒரு குழு அமைக்க வேண்டும் என்ற சாஸ்திரி யின் தீர்மானத்தை அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. அப்போது தேஜ் பகதூர் ஸப்ரூ இந்திய அரசாங்கத்தின் சட்டத்துறை உறுப்பினராக இருந்ததால், சில அடக்கு முறைச் சட்டங்களை

அகற்றுவது எளிதாக முடிந்தது. (அவ்வாறு ரத்துச் செய்யப் பட்டவைகளுள் 1910ஆம் ஆண்டின் அச்சக சட்டம், 1908ஆம் ஆண்டின் பத்திரிகைகள் மூலம் குற்றத் தூண்டுதல் தடுப்புச் சட்டம், 1908ஆம் ஆண்டின் இந்தியக் குற்றவியல் சட்டத் திருத்தச் சட்டம் முதலியன முக்கியமானவை.)

ஆனாலும், அரசாங்கம் தனது அடக்குமுறைக் கொள்கையை அடியோடு கைவிடவேண்டும் என்பதைப் பற்றிச் சட்டசபை உறுப்பினர்களிடையே பலத்த கருத்து வேறுபாடு நிலவியது. 1922 ஜனவரி 18 ஆம் தேதி முன்ஷி ஈஸ்வர் சரண் சட்டசபையில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். "இந்தியாவில் அரசாங்கம் தொடங்கி வைத்துள்ள அடக்குமுறைக் கொள்கையை உடனடி யாக நிறுத்த வேண்டும்" என்று கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானம் அது. தீர்மானத்தை விளக்கிப் பேசுகையில், ஒத்துழையாமை இயக்கம் நடத்துவதற்கு ஒன்று சேருகின்ற தேசீயத் தொண்டர்கள் கொலைகாரர் கூட்டமல்ல; அங்கங்கு யாரோ சில தொண்டர்கள் நடந்து கொள்வது எப்படி இருந் தாலும், அந்த இயக்கம் அகிம்சை நெறியையே தனது வழிமுறை யாகக் கொண்டிருக்கிறது என்று எடுத்துரைத்தார். அதுவும் தவிர, ஒத்துழையாமை இயக்கம் தோன்றியதற்கு மூலமான காரணங்களைக் கண்டறியாமல் அரசாங்கம் போராடிக் கொண் டிருந்தால், ஒருக்காலும் அது அடக்கப்படப் போவதில்லை என்றும் அவர் உறுதியாகத் தெரிவித்தார்.

"நிலைமை அப்படி ஒன்றும் கட்டுக்கு அடங்காமல் போய் விடவில்லை; அரசாங்கம் அப்படி ஒரு தோற்றத்தை உண்டாக்கிக் காட்டி வருவதோடு, தனது எரிச்சலாலும் பீதியாலும் அரசாங்கம் தான் நிலைமையை மோசமாக்கிக் கொண்டு வருகிறது" என்று எடுத்துரைத்து முன்ஷியின் மேற்படித் தீர்மானத்தை ஆதரித் தார் ராய் பகதூர் பீஷாம்பர்நாத்.

ஆயினும், தீர்மானத்தை இதே விதமான உக்கிரத்தோடு எதிர்த்தவர்களும் பலர் இருந்தார்கள். பம்பாயைச் சேர்ந்த என். எம். சமர்த், ஒத்துழையாமைப் பாசறைகளின் நடைமுறை களைக் கவனிப்போர், அரசாங்க நிருவாகத்தைச் செயலிழக்கச்

செய்ய வேண்டும் என்கிற தனது லட்சியத்தை நோக்கியே காந்தியடிகள் சிறுகச் சிறுக முன்னேறி வருவதை நன்கு உணர்வார்கள் என்றார். அரசாங்கம் இந்தக் கிளர்ச்சியை முளையிலேயே கிள்ளி எறியாமல் இரண்டு ஆண்டுக் காலம் பொறுமையாக வேடிக்கை பார்த்துக்கொண்டு இருந்திருக்கிறது என்றும் அவர் குற்றஞ் சாட்டினார். தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு தோல்வியடைந்தது.

அந்தக் காலத்து மிதவாதிகளில் முக்கியமான ஒருவரான பி. எஸ். சிவசாமி அய்யர் இந்தத் தீர்மானத்தின் மீது உரை நிகழ்த்துகையில், அரசாங்கம் அடக்குமுறையையே கொள்கையாகக் கொண்டிருக்கிறது என்று சொல்லப்பட்ட குற்றச்சாட்டை மறுத்தார். இது பற்றி அமைதியான தீர்வு காண்பதற்காகப் பல வேறு கருத்துக்கள் உடையவர்களையும் கொண்ட மாநாடு ஒன்றைக் கூட்டவேண்டும் என்று எடுத்துரைக்கப்பட்ட கருத்தைக் குறிப்பிட்டு, " அவர் (காந்தியடிகள்) ஒத்துழையாமை இயக்கத்தவர்களின் சர்வாதிகாரியாக இருந்துகொணடு, மின்னல் வேகத்தில் இங்கே சுயராச்சியத்தைக் கொண்டு வந்துவிடப் போவது போலச் செயல்படுவதன் மூலம் தம்மை ஒரு தீர்க்க தரிசியாகக் காட்டிக் கொள்ள முயலும்வரை திருப்திகரமான விளைவுகளை ஏற்படுத்தவே முடியாது " என்றார் அய்யர்,

ஆனாலும், குற்றவியல் சட்டத் திருத்தச் சட்டம் பரவலாகக் கையாளப் படுகிறது என்பதையும் அதன் கீழ் பெரும்பாலர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் அவர் ஒப்புக்கொண்டார். எனவே, முன்ஷி சரண் தீர்மானத்துக்கு ஒரு திருத்தம் கொண்டு வந்து, சுமுகமான நிலைமையை ஏற்படுத்துவதற்குத் தோதான ஆணைகளை மத்திய அரசு மாநில அரசுகளுக்கு விடுக்க வேண்டும் என்று அதிலே கேட்டுக் கொண்டார்.

ராணுவத்தைப் பற்றிய விவகாரத்தில்தான் சிவசாமி அய்யரின் அபாரத் திறமை வெளிப்பட்டது. சிறிது காலத்துக்கு முன்பு, இந்திய ராணுவத்தின் அமைப்பு முறை மற்றும் நிருவாகம் பற்றி ஆராய்ந்து ஆலோசனை கூறுவதற்காக லார்டு ஈஷர் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது பிரிட்டிஷ் அரசாங்கம். குழு தனது

அறிக்கையில் பின்வரும் குறிப்புக்களைக் கொடுத்திருந்தது: "(பிரிட்டிஷ் ராணுவ) நடவடிக்கையின் மையம் மேற்கிலிருந்து கிழக்கிற்கு மாறியுள்ளது. எதிர்காலத்தில், நமது ராணுவத்தில் பெரும் பகுதி இந்தியாவிலும் மற்ருெரு பகுதி நமது (பிரிட்டன்) நாட்டிலும் இருந்துகொண்டு மத்திய கிழக்கில் நடவடிக்கைகளில் ஈடுபடுவது பற்றி நாம் தீவிரமாக யோசிக்க வேண்டும்...இந்திய ராணுவம், உலகின் பல யுத்த அரங்கங்களில், நமது சாம்ராச்சியத்தின் மற்ற நாடுகளைச் சேர்ந்த படைகளுடன் இணைந்து நின்று போரிட்டு வந்திருக்கிறது. இந்தியப் படையின் பொறுப்பு, இந்த விதமாக விரிவுபட்டுக் கொண்டே வந்திருப்பதால், அதை இன்னமும் ஒரு பிரதேசப் படையாகவே மதிப்பிடக் கூடாது... உலகின் எந்தப் பகுதியிலும் பணிபுரியத் தயாராக இருக்கிற நமது சாம்ராச்சிய ராணுவத்தின் ஒரு பகுதியாகவே இந்திய ராணுவம் கருதப்பட வேண்டும்."

ஈஷர் அறிக்கையின் இந்தக் குறிப்புக்களால் இந்தியாவில் பரவலான கலக்கம் ஏற்பட்டது. இந்திய ராணுவம் பிரிட்டிஷ் சாம்ராச்சிய ராணுவத்தின் ஒரு பகுதியாகக் கொள்ளப்பட்டு, அந்த ராச்சியம் முழுவதன் எல்லைப் பாதுகாப்பு இதன் பொறுப்பில் விடப்படும் என்றும் அதனுல் ஏற்படும் பெரிய (ராணுவச்) செலவு இந்தியாவின் தலையிலேயே கட்டப்படும் என்றும் ஒரு சந்தேகம் எழுந்ததே அந்தக் கலக்கத்துக்குக் காரணம்.

1921 மார்ச் 28ஆம் தேதி ஒரு நாளிலேயே, ஈஷர் அறிக்கை தொடர்பாக, சட்டசபையில் 15 தீர்மானங்களைக் கொண்டு வந்தார் சிவசாமி அய்யர். இந்திய ராணுவம் இந்தியாவின் எல்லைக்கு அப்பால் உள்ள பணிகளில் ஈடுபடுத்தப்படுதல் கூடாது என்பதே அவருடைய தீர்மானங்களின் அடிப்படைக் கருத்து. இந்திய ராணுவம், கவர்னர் ஜெனரல் ஒப்புதலின் பேரில் காவல் படையாக வெளி இடங்களுக்கு அனுப்பப்படலாம்; அப்போதும் அதற்காகும் செலவை இந்தியா ஏற்காது என்ற நிபந்தனையின் பேரிலேயே அனுப்பப்பட வேண்டும் என்ருர் அய்யர். கொள்கை மற்றும் அமைப்புகளைப் பொறுத்தவரை இந்திய ராணுவம் (பிரிட்டிஷ்) யுத்த அலுவலகத்தின் கட்டுப்பாட்டுக்கு உட்படாத

தாக இருக்க வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினார். அவருடைய தீர்மானங்களில் ஒன்று, மேன்மை தங்கிய மன்னர் பிரானின் தரைப்படை, கடற்படை, விமானப்படை என்னும் எல்லாப் பிரிவுகளிலும், துணைப்படைப் பகுதிகளிலும் இந்தியர்கள் எந்தவிதத் தடையுமின்றிச் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்று கோரியது. மற்றொரு தீர்மானம், ஒவ்வோர் ஆண்டும் வழங்கப்படும், அரசர் கமிஷன் அந்தஸ்தில் 25 சதவீதமாவது இந்தியர்களுக்கு வழங்கப்பட வேண்டும் என்று சிபாரிசு செய்தது.

அய்யர் கொண்டுவந்த தீர்மானங்கள் பலவும் சட்டசபையில் நிறைவேறின; பின்னர் இந்திய அரசாங்கம் அவைகளை இந்தியா மந்திரிக்கும் அனுப்பி வைத்தது. உண்மையில், அரசாங்கத்தின் ராணுவக் கொள்கையில் இந்தத் தீர்மானங்களின் தாக்கம் மிகுதியாக இருந்தது. டேரா டூனில் ராயல் ராணுவக் கல்லூரி ஒன்று அமைக்க 1923ல் அனுமதி வழங்கப்பட்டது; ராணுவத்தின் எட்டுப் படையணிகள் இந்திய மயமாக்கப்படும் என்றும் அறிவிக்கப்பட்டது.

தொழிலாளர்களின் சார்பாக நியமனம் பெற்றிருந்த என். எம். ஜோஷி, தொழிலாளர் நலச் சட்டங்களில் பெரிதும் ஊக்கங் காட்டி வந்தார். அதிகாரிகள் மக்களைக் கட்டாயப்படுத்தி வேலை வாங்குவது, தங்கள் போக்குவரத்துச் செலவை ஏற்குமாறு மக்களை வற்புறுத்துவது, தங்களுக்குத் தேவையான உணவுப் பண்டங்களைக் கட்டாயப்படுத்திப் பெறுவது போன்ற வழக்கங்களை ஒழிக்க வேண்டும் என்ற தீர்மானத்தைக் கொண்டு வந்தார் ஜோஷி. "அலுவலக வேலையாக வெளியிடங்களுக்குச் செல்லும் அதிகாரி கிராம அதிகாரியை வற்புறுத்துகிறார்; அவர் கிராமத்து மக்களை அதிகாரியிடம் கொண்டு வந்துவிட, அவர்கள் (இலவசமாக) வேலை செய்யுமாறு கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். இதேபோல், அதிகாரிக்குத் தேவையான உணவுப் பண்டங்களை இலவசமாக வழங்குமாறு சிறு வியாபாரிகள் கட்டாயப்படுத்தப் படுகிறார்கள்" என்று எடுத்துரைத்து, "இந்தப் பழக்கம் நிறுத்தப்பட வேண்டும்" என்று வற்புறுத்தினார் ஜோஷி.

தொழிலாளர் நலன் கருதிய பல சட்டங்கள் இயற்றப் பட்டன. அத்தகைய பல சட்டங்கள் திருத்தம் பெற்றன என்றால், ஜோஷியின் முயற்சியே அதற்கெல்லாம் முக்கியமான காரணம். இந்தியத் தொழிற்சாலைச் சட்டத்துக்குக் கொண்டு வரப்பட்ட ஒரு திருத்தத்தின் மூலம், தொழிற்சாலையின் வேலை நேரம் வாரத்துக்கு 60 மணியாக வரையறுக்கப்பட்டது. தொழிலாளர் நட்ட ஈட்டுச் சட்டம் தொழிலாளர்களை விபத்து இழப்புக்களினின்று பாதுகாத்தது. இந்தியச் சுரங்கச் சட்டம், தொழிலாளர்களுக்கும் பிரதிநிதித்துவம் அளித்த சுரங்க போர்டு அமைவதற்கு வகை செய்தது.

**அரசுக்கும் சட்டசபைக்கும் கருத்து வேறுபாடு:**

பொதுவில், நிருவாகத்துக்கும் சட்டசபைக்கும் இடையே சுமுகமான உறவே நிலவியது. ஆனாலும், அவ்வப்போது அதிலே கருத்து வேற்றுமையும் ஏற்பட்டுத்தான் வந்தது. 1922 செப்டம் பரில் அரசாங்கம் ஒரு மசோதாவைக் கொண்டு வந்தபோது இப்படியான ஒரு முரண்பாடு தலைதூக்கியது. இந்திய சுதேச சமஸ்தான மன்னர்களுக்கு எதிராக மக்களைத் தூண்டும் வகை யிலோ, மன்னர்களை அவமதிக்கும் வகையிலோ அல்லது அவர்கள் மேல் வெறுப்பு உண்டாக்கும் விதமாகவோ பத்திரிகை அல்லது புத்தகங்களில் எழுதிப் பரப்புவதைத் தடுக்கும் நோக்கமுடையது அந்த மசோதா. முன்ஷி ஈஸ்வர் சரண், "இது ஆட்சியாளர் களைப் பற்றிய நியாயமான விமர்சன உரிமைக்கே உலைவைத்து விடும்" என்று கூறித் தீர்மானத்தை எதிர்த்தார். அதன்பேரில், சட்டசபையில் இந்த மசோதா கொண்டு வருவதற்கே அனுமதி மறுக்கப்பட்டது. தங்களின் நல்ல நண்பர்களான மன்னர்களுக்கு இப்படி ஒரு அவமானம் ஏற்படுவதைக் கவர்னர் ஜெனரல் பொறுப் பாரா? முதல் முறையாகத் தமது தனி அதிகாரத்தைப் பயன் படுத்தி, ஓர் அறிவிப்புச் சட்டத்தின் மூலம் மசோதாவுக்கு உயிர் கொடுத்துவிட்டார். அது ராச்சிய சபையில் நிறைவேற்றப்பட்டுக் கவர்னர் ஜெனரலின் ஒப்புதல் பெற்றுச் சட்டமாயிற்று.

1923–1924ஆம் ஆண்டுகளுக்குரிய வரவு செலவுத் திட்டம் சபையில் தரப்பட்டபோது இதைவிடப் பெரிய அரசியல் சட்டச்

சிக்கல் ஒன்று ஏற்பட்டது. திட்டத்தில் ஏற்பட்ட பற்றுக் குறையைச் சரிக்கட்டுவதற்காக, அரசாங்கம் உப்பு வரியை இரட்டிப்பாக்க முடிவு செய்தது. சிந்துவைச் சேர்ந்த எஸ். சி. ஷாஹானி, டாக்காவைச் சேர்ந்த மௌல்வி அபுல் காசிம், சேலத்தைச் சேர்ந்த எஸ். முதலியார் ஆகியோரும் மற்றும் பலரும் இதைக் கடுமையாக எதிர்த்தார்கள். ராணுவத்துக்கும் அது தொடர்பான நிருவாகத்துக்கும் வகைதொகை இல்லாமல் செலவழிப்பதற்காக அரசாங்கம் ஏழைகளைக் கசக்கிப் பிழிகிறது என்று அவர்கள் குற்றம் சாட்டினார்கள். ஆக்ராவைச் சேர்ந்த லாலா கிரிதாரிலால், உப்புவரியை இரட்டிப்பதைவிட பெட்ரோல் மீது வரி விதித்து இந்தப் பற்றுக்குறையைச் சரிக்கட்டலாம் என்று ஆலோசனை கூறினார். அங்கிருந்த பலரின் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்துவது போல ஜே. எல். பார்கவா பேசினார். அவர் கூறியதாவது :

"இந்தியாவுக்கு முழுப் பொறுப்பாட்சி வழங்கி அரசாங்க ஊழியத்தை இந்திய மயமாக்காமல் இப்போது உள்ள நிருவாக முறையே தொடர்ந்து நீடிக்கும்வரை, இந்திய நிருவாகத்துக்காக ஏற்படும் அளவு மீறிய செலவைக் குறைக்க முடியாது. நமது வருமானத்தில் கிட்டத்தட்ட சரிபாதியை ராணுவமே விழுங்கி விடுகிறது. இந்தியர் அல்லாதவர்களின் சேவை "இல்லாமல் தீராது" என்று அவர்களில் பலரைச் சிவில் நிருவாகத்தில் அமர்த்தியிருப்பதால் அந்தச் செலவும் அதிகமாகவே இருக்கிறது. அந்நியர்களுக்கு அதிகமான ஊதியம் கொடுக்க வேண்டியிருப்பதோடு, (மேல்நிலை) ஊழியங்களின் மீதான ராயல் கமிஷனும் சட்டசபையின் விருப்பத்துக்கு மாறாக இந்தியாவின் மீது திணிக்கப்பட்டிருக்கிறது".

இந்த எதிர்ப்புகளின் விளைவாக, உப்புவரியை இரட்டிப்பாக்கும் கோரிக்கை படுதோல்வியடைந்தது. கவுன்சிலில் இதே கோரிக்கை கவர்னர் ஜெனரலின் "சிபாரிசு"டன் வந்தபோது, சீனிவாச சாஸ்திரியும் மற்றவர்களும் அதை எதிர்த்துக் கடுமையாக விமர்சனம் செய்தார்கள். இருப்பினும் கவர்னரின் "சிபாரிசை"க் கவுன்சில் ஏற்று நிறைவேற்றிக் கொடுத்தது. ஆனால், மீண்டும்

இம் மசோதா சட்டசபைக்கு வந்தபோது, முன்பு போலவே தோற்கடிக்கப்பட்டது. தமக்குள்ள அறிவிப்புச் செய்து உயிர்ப் பிக்கும் அதிகாரத்தை இரண்டாவது முறையாகப் பயன்படுத்தி அதைச் சட்டமாக்கினார் கவர்னர் ஜெனரல். ஆகவே, சட்ட சபையின் திட்டவட்டமான விருப்பத்துக்கு நேர்மாறாக உப்பு வரித் திணிப்பு சட்டமாக்கப்பட்டது.

சட்டசபையில் கொண்டுவரப்பட்ட மானியக் கோரிக்கைகளில் குறைப்புச் செய்யவும் சபை தயங்கவில்லை. 1921–1923 வரவு செலவுத் திட்டத்தில் மட்டும், செலவினங்களில் 129 கோடி ரூபாய் வரை வெட்டித் தள்ளியது சட்டசபை.

### அதிகமான சீர்திருத்தங்களுக்கான கோரிக்கை :

மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்களை உள்ளடக்கிய 1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டம் பிரிட்டிஷ் பாராளு மன்றத்தில் நிறைவேறி அரசரின் ஒப்புதல் பெற்று வெளியிடப் பட்டது. அப்போது இருந்த மத்திய சட்டசபை இந்தச் சட்டத்தை ஆர்வத்தோடு வரவேற்று ஆதரவு தெரிவித்துக் கொண்டது. மிதவாதிகளெல்லாம் ஆதரவு தெரிவிக்க, சச்சிதானந்த சின்ஹா இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்தார். தீர்மானத்தின் மூலம், அவர்கள், சக்கரவர்த்திக்குக் "கடமை தவறாத பணிவான மரியாதையை"த் தெரிவித்துக் கொண்டதோடு, "இந்தியாவின் அரசியல் மீட்சிக்கு நமது சக்கரவர்த்தியின் நல்லாட்சிதான் ஒரே சாதனம்" என்றும் பவ்வியமாகப் பொறித்து வைத்தார்கள். இந்தச் சமயத்தில், இதற்கு முற்றிலும் மாறுபட்ட தமது கருத்தை வலியுறுத்தி உரையாற்றிய எஸ். என். பானர்ஜி பின்வருமாறு கூறினார் :

"இறுதித் தீர்ப்புநாள் விரைவிலேயே வரும்; (பத்து ஆண்டு களில் நிலைமை மறு பரிசீலனை செய்யப்படும் என்று சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதால்) அந்த நாள் பத்து ஆண்டுகளிலேயே வரலாம். ஆனால், ஒரு நாட்டின் வரலாற்றில் பத்து ஆண்டுகள் அல்லது அதைவிடக் குறைந்த காலம் அப்படி ஒன்றும் பெரிதில்லையே. அந்த நாள் வந்து, இந்திய மக்களின் முன்பாகவும் நாகரிக உலகின் முன்பாகவும் தீர்ப்பு வழங்கப்படும்போது, இந்திய

மக்களாகிய நம்முடைய தகுதி பரிசீலனை செய்யப்பட்டது என்றோ நாம் தகுதியில்லாதவர்களாகக் கணிக்கப்பட்டோம் என்றோ யாரும் சொல்லமாட்டார்கள் என்பது என் திடமான நம்பிக்கை.''

மிதவாதிகளோ, பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ஏற்படப் போகும் ஆட்சியியல் மறு பரிசீலனையை எதிர்பார்த்துப் பொறுமையாகக் காத்திருக்கப் போவதாக வீரமுழக்கமிட்டார்கள். ஆனால், நிலைமை வெகு விரைவிலேயே மாறிவிட்டது; சட்ட சபைக்கு வெளியே சுதந்திரப் போராட்டம் முழு மூச்சாக நடந்து வந்தது. தங்கள் சட்டசபைப் பணிகளின் மூலமே இந்தியச் சுதந்திரப் போராட்டத்துக்கு உதவ முடியும் என்று எண்ணி யிருந்த மிதவாதிகள், தாங்கள் கூண்டில் நிறுத்தப்படும் காலம், எதிர்பார்த்ததை விட விரைவாகவே நெருங்குவதை உணர்ந்து கொண்டார்கள். எனவே, அந்தச் சமயத்தில் தங்கள் மேல் தவறு எதுவும் இல்லை என்று காட்டிக் கொள்வதற்கான தஸ்தாவேஜு களை இப்போதே தயாரிக்கலானார்கள். அதாவது, சீர்திருத்தச் சட்டம் அமுலாகிய முதலாவது ஆண்டிலிருந்தே, ஆட்சி அமைப்பில் மேலும் சீர்திருத்தம் வேண்டும் என்ற கோரிக்கையை எழுப்பத் தொடங்கி விட்டார்கள்.

1921 செப்டம்பர் 23ல் ஜே. என். மஜூம்தார் சட்டசபையில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். ஒரு குறிப்பிட்ட தேதியி லிருந்து, அதாவது நாலாவது சட்டசபை தொடங்கும் நாளிலிருந்து, இந்தியாவுக்கு முழு டொமினியன் சுய ஆட்சி வழங்கப்படும் என்று திட்டவட்டமாக அறிவிப்பதற்கான முன்னேற்பாடுகளை அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும் என்று கோரியது அந்தத் தீர்மானம். இது சம்பந்தமாக பிரிட்டிஷ் அரசாங்கம் உண்மை யான ஆர்வம் கொண்டுதான் இருக்கிறது என்பதை இந்தியப் பொது மக்கள் நம்ப வேண்டுமானால் இத்தகையதொரு திட்ட வட்டமான அறிவிப்பை அரசாங்கம் வெளியிட்டே ஆகவேண்டும் என்று விளக்கினார் அவர். "சகோதரர்களே, சுதந்திரம் என்னும் உரிமையைப் பெற்றே தீருவது என்று நாங்கள் முடிவு செய்து விட்டோம்; இதிலே எங்களுக்கு உதவியாக இருப்பது உங்களுக்குக் கிடைக்கும் நல்வாய்ப்பும் பெருமையும் ஆகும்...

இனிமேலும், நீங்கள், எங்களுக்கும் எங்கள் லட்சியத்துக்கும் இடையே வழிமறித்து நிற்கவேண்டாம் என்று உங்களை அன்போடு கேட்டுக் கொள்ளுகிறேன்.'' ஆங்கில அரசியல் வாதிகளுக்கும் ஆங்கில நாட்டு மக்களுக்கும் மஜும்தார் விடுத்த உருக்கமான வேண்டுகோள் இது.

மத்திய மாகாணத்தைச் சேர்ந்த கே. பி. எல். அக்னிஹோத்திரி தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில், 'பேசத் தெரியாத அப்பாவிகள்' என்று சொல்லப்படும் லட்சோப லட்சம் இந்திய மக்கள் கூட, தாங்கள் விரும்புவது பூரண சுதந்திரமே என்பதை உணர்ந்து தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்கத் தொடங்கி விட்டார்கள் என்பதைச் சபைக்கு நினைவூட்டினார். ஜே. என். பார்கவா, ஒத்துழையாமை இயக்கத்தின் மேம்பாடு அல்லது குறைபாடுகளைப் பற்றி நமது கருத்து எதுவாக இருந்தாலும், நாடு முழுவதும் எழுச்சி கொண்டு நிற்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது என்று குறிப்பிட்டார். மாநிலங்களுக்குச் சுய ஆட்சி வழங்கவும் மத்தியில் பொறுப்பாட்சி ஏற்படுத்தவும் அரசாங்கம் உடனடியாகத்தானே நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்றும் அவர் கேட்டுக்கொண்டார். டி. வி. சேஷகிரி அய்யரும், முன்ஷி ஈஸ்வர் சரணும் இதே கருத்துக்களை எடுத்துப் பேசினார்கள். ஜம்னாதாஸ் துவாரகாதாஸ் இதற்கு மாறான கருத்தைத் தெரிவித்தார். அரசாங்கத்தை ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் கட்டுப்படுத்துவது சரியில்லை என்றும் அதனால், கால எல்லை வரையறுப்பதை ஏற்க முடியாது என்றும் அவர் கூறினார்.

தீர்மானம் சில திருத்தங்களுடன் நிறைவேறியது. ஆனாலும், இந்தியாவில் விரைந்த முன்னேற்றம் ஏற்பட்டு வருவதால் 1929க்கு முன்பே ஆட்சியியல் பற்றிய மறு பரிசீலனையை மேற்கொள்ள வேண்டுமென்று இந்தியா மந்திரிக்குத் தெரிவிக்குமாறு மட்டுமே அத்தீர்மானம் கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொண்டது.

சட்டசபைகளில் தாங்கள் செய்துவரும் பணிகளின் மூலம் இந்தியா முழுமையான சுய ஆட்சிக்குத் தகுதி உடையது என்று ஆங்கிலேயர்களுக்கு, குறிப்பாக லிபரல் கட்சியைச் சேர்ந்த

ஆங்கிலேயர்களுக்கு நிரூபித்து வருவதாக (இங்குள்ள) மித வாதிகள் கருதி வந்தார்கள். இதை உணர்ந்த பிரிட்டிஷ் பிரதமர், இந்தத் "தவறான எண்ணத்தை" உடனடியாகக் களைந்தெறிய முடிவு செய்தார். நிருவாகத்தையும் ராணுவத்தையும் இந்திய மயமாக்க வேண்டும் என்று மிதவாதிகள் மிகுதியாக வலியுறுத்தி வந்தார்கள்; ஆட்சியியல் திட்ட மறுபரிசீலனையை விரைவுபடுத்து வதிலும் அவர்கள் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார்கள். இதற்குப் பதிலளிக்கும் முகமாக, பிரதமர் லாயிட் ஜார்ஜ், ஏளன மாகவும் அதே சமயம் உறுதியாகவும் பின்வருமாறு அறிவித்தார்:

"இந்தியச் சட்டசபையில் இந்தியர்கள் நிகழ்த்தும் உரைகள் பயனற்றவை என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால், நிருவாக அலுவல்களுக்கு இந்தியர்களைத் தேர்ந்தெடுக்க நாங்கள் முனையும் போது, அவர்களின் பேச்சுத் திறமையை நாங்கள் கணக்கில் எடுத்துக்கொள்வதில்லை; சிவில் மற்றும் ஏனைய பணிக்களங்களின் உப்புச்சப்பற்ற வேலைகளை நிறைவேற்றுவதில் அவர்களின் கெட்டிக்காரத்தனம் என்ன என்பதையே கவனிக்கிறோம். இந்தியர்கள் இதை நன்றாக உணர்ந்துகொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்."

இத்துடன் பிரதமர் தமது கிண்டல் உரையை நிறுத்தவில்லை. "நான் முக்கியமாக வலியுறுத்த விரும்புவது என்னவென்றால், பார்லிமெண்டேரியன்களாகவும் நிருவாகிகளாகவும் இந்தியர்கள் எவ்வளவு சிறப்பாகப் பணியாற்றி வெற்றிகளைக் குவித்தாலும், ஒரு சில ஆங்கில சிவில் அதிகாரிகளின் ஒத்துழைப்பும் வழி காட்டுதலும் இல்லாமல் இந்தியர்கள் தங்கள் அரசியலை நடத்திக் கொள்ளும் காலம் என்றைக்குமே வரப்போவதில்லை என்பதே என் கருத்து. இந்தச் சில அதிகாரிகளே இந்திய அரசியல் நிருவாக அமைப்பின் முதுகெலும்பு (அடிச்சட்டம்) போன்ற வர்கள். இது தொடர்பாக வேறொரு சமாச்சாரத்தையும் நான் தெளிவுபடுத்திவிட விரும்புகிறேன்: இந்தியாவை நடத்துவதில் வழிகாட்டித் துணைநிற்கும் பொறுப்பைப் பிரிட்டன் எந்தச் சூழ் நிலையிலும் கைகழுவி விடப் போவதில்லை" என்று அறுதியிட்டுக் கூறினார் பிரதமர்.

பிரதமரின் இந்தப் பேச்சு இந்திய மிதவாதிகளேயும் விடுதலைக் கட்சியாரையும் துள்ளி எழச்செய்தது. ஆகஸ்ட் 2ஆம் தேதி லாயிட் ஜார்ஜ் வெளியிட்ட இந்த அறிக்கையைப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒதுக்கித் தள்ள வேண்டும் என்னும் தீர்மானத்தைக் கொண்டுவந்த அக்கினிஹோத்திரி, சீற்றம் பொங்கப் பேசினர் :

"நாங்கள் முழுமையான சுய ஆட்சி கோருகிறேம் என்றால், நாங்கள் தகுதி உடையவர்கள் என்பதால் மட்டுமே அதைக் கோரவில்லை ; எங்களுக்கு வழங்கப்பட்டுவந்துள்ள உறுதிமொழிகளேயும் வாக்குறுதிகளேயும் காட்டியும் அதைக் கோரவில்லை. சுதந்திரம் எங்கள் பிறப்புரிமை என்பதாலேயே நாங்கள் அதைக் கோருகிறேம். எங்களுக்கு டொமினியன் சுய ஆட்சி வழங்குவதாகச் சொல்லிச் சொல்லி, பிரிட்டிஷ் அரசாங்கம் இனிமேலும் எங்களே ஏமாற்றுது என்று நம்புகிறேம்."

ராவ்பகதூர் டி. ரங்காச்சாரியர் மிகவும் மனம் நொந்து பேசினர் : "முதுகெலும்பு என்னும் சொல்லே நான் என்றைக்கும் மறக்க முடியாது...பிரிட்டிஷ் ராச்சியம் என்னும் சொற்களேயும் நான் என்றைக்கும் மறக்க முடியாது ; இந்தியாவை ஆள்வதற்கு நமக்கு அவர்கள் உதவ வேண்டும் என்று சொல்லாமல் இந்தியாவை அவர்கள் (பிரிட்டானியர்) ஆள்வதற்கு இந்தியர்கள் உதவ வேண்டும் என்று அவர் (லாயிட் ஜார்ஜ்) பேசியதை நான் என்றைக்குமே மறக்க முடியாது !" இவ்வாறு வாட்டத்தோடு பேசிய ரங்காச்சாரியார், "(அவர்கள் நம்மை ஆள நாம் அவர்களுக்கு உதவும்) இதுதான் சீர்திருத்த ஆட்சியியல் சட்டத்தின் நோக்கமா ? அப்படியானல், அதை அவர்கள் தெளிவாகவே சொல்லியிருக்கலாமே !" என்று கேட்டார். "நாம் என்னென்ன நிபந்தனேகளின் பேரில் அவர்களோடு ஒத்துழைக்கிறேம் என்பது நமக்குத் தெளிவுபடுத்தப்பட வேண்டும் ; எங்களே அடக்கி ஆள்வதற்கு நாங்களே உங்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதுதான் உங்கள் நிபந்தனே என்றால், என்னேப் பொறுத்த வரை நிலைமையைத் தெளிவுபடுத்திவிட விரும்புகிறேன்,—நான் ஒத்துழைக்கத் தயாராக இல்லே ; நிச்சயமாக நான் தயாராக இல்லே !" என்று முழங்கினர் அவர்.

துவாரகாதாஸ் கூடப் பிரதமரின் பேச்சை வன்மையாகக் கண்டித்தார். நிருவாகத்தில் அதிகமான இந்தியர்களைச் சேர்த்துக் கொள்ளும் கொள்கை உறுதி செய்யப்பட்டு, கூடியவரை, அரசு ஊழியங்களுக்கு இந்தியர்களையே நியமிக்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தினர். "(நீங்கள் தொடர்ந்து இந்தவிதமாகவே நடந்துகொண்டு வந்தால்) நாங்கள் சிறுபான்மையினர் என்ற நிலைமை மாறுவதுதான் எப்போது? உலகத்தின் கடைசி நாளிலாவது நாங்கள் சிறுபான்மையினர் என்ற நிலைமை மாறுமா?" என்று கிண்டலாகக் கேட்டார், முன்ஷி ஈஸ்வர் சரண்.

இதற்கிடையில், ஆட்சியியல் சட்டத்தை மறு பரிசீலனை செய்ய வேண்டும் என்று கோரி 1921 செப்டம்பரில் சட்டசபை நிறைவேற்றிய தீர்மானம் லண்டனிலுள்ள இந்தியா மந்திரிக்கு அனுப்பப்பட்டிருந்தது. பிரதமர் ஆகஸ்ட் 2ஆம் தேதி மேலே கண்ட விதமாகக் கருத்துத் தெரிவித்துப் பேசியிருந்தபடியால், "1919ல் அமுலுக்கு வந்த ஆட்சிச் சட்டத்தை மறு பரிசீலனை செய்யும் அளவுக்கு அதற்குள்ளாகவே போதிய அனுபவங்கள் ஏற்பட்டு விடவில்லை" என்று 1922 நவம்பர் 2ல் பதில் எழுதி விட்டார் இந்தியா மந்திரி. இது, சட்டசபையிலிருந்த மிதவாதிகளை மேலும் வேதனைக்குள்ளாக்கியது.

1923 பிப்ரவரி 22ஆம் தேதி, "இந்தியா மந்திரியின் பதிலைக் கண்டு இந்தச் சபை மிகுந்த அதிருப்தியடைகிறது" என்னும் தீர்மானம் ஒன்றைச் சபையில் கொண்டுவந்தார் ரங்காச்சாரியார். "சீர்திருத்தங்களைச் செயற்படுத்திப் பார்க்கும் நோக்குடன் இங்கே வந்திருக்கும் எங்கள்மீது நாட்டு மக்கள் கடுமையான ஆத்திரமடைந்திருக்கிறார்கள்; அதிருப்தியாலும் கோபத்தாலும் நாடே கொதிப்பேறி நிற்கிறது. இதை அரசாங்கம் புரிந்து கொள்ள வேண்டும்" என்று அவர் எடுத்துரைத்தார். ரங்காச்சாரியாரின் கருத்துக்களை ஆதரித்துப் பேசிய முன்ஷி ஈஸ்வர் சரண் நிலைமையை மேலும் தெளிவுபடுத்தினர்: "நாட்டு மக்களில் பெரும்பான்மையானவர்கள், இந்த அரசியல் சீர்திருத்தம் போதியதாகாது என்று உறுதியாகக் கருதிக் கொண்டிருக்கும் நிலையில்,—மிகச் சங்கடமான நிலையில்,—நாங்கள் அவைகளைச் செயற்

படுத்திப் பார்க்க இசைந்து இங்கே வந்திருக்கிறோம். தவிர, இப்போது அவர் எழுதியுள்ள பதிலே முடிந்த முடிவு என்று இந்தியா மந்திரி கருதுவாரானால், அதைவிடப் பெரிய தவறு வேறு இருக்க முடியாது" என்றார் அவர். டாக்காவைச் சேர்ந்த மௌல்வி அபுல் காசிம் பேசுகையில், "சபையின் ஒருமுகமான கருத்தை இவ்வளவு சல்லிசாக ஒதுக்கித் தள்ளிவிட்டு, இந்தியா மந்திரி இப்படி ஒரு பதில் அனுப்பியிருப்பது இந்தச் சபையின் மற்ற உறுப்பினர்களையும் என்னையும் அவமதிப்பதாகுமென்றே நான் கருதுகிறேன்" என்று சாடினார்.

இவ்வளவும் நடந்தாலும், இதன்மீது வாக்கெடுப்பு நடத்த வேண்டும் என்று உறுப்பினர்கள் கேட்கவில்லை. அதுதான் அந்தச் சட்டசபையின் கடைசிக் கூட்டத் தொடராக இருக்கும் என்பதையும் அடுத்து விரைவில் தேர்தல் வரும் என்பதையும் அவர்கள் புரிந்துகொண்டார்கள். இதற்கிடையில் ஒத்துழையாமை இயக்கக் (காங்கிரஸ்) காரர்களும் தங்கள் கொள்கையை மறு பரிசீலனை செய்து வந்தார்கள். அடுத்து வரும் தேர்தலில் மிதவாதிகள் இவர்களைச் சந்தித்துச் சமாளிக்க வேண்டியிருக்கும் என்பது தெளிவாகிவிட்டது. "சட்டசபையில் முன்பு எப்போதும் இல்லாத அளவு துணிவான எதிர்ப்புக் காட்டுவதன் மூலம் (தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டு) ஒத்துழையாமைக் காரர்களின் எதிர்ப்பைச் சமாளித்து விடலாம் என்று அவர்கள் நம்பினார்கள். தாங்களும் அரசாங்க எதிர்ப்பாளர்களே என்று சட்டசபையில் காட்டிக் கொள்வதன் மூலம், காங்கிரஸ்காரர்களின் திட்டமிட்ட தீவிரப் பிரசாரத்தை முறியடித்துவிட முடியும் என்றும் அவர்கள் கருதினார்கள்." எனவே, இந்த முயற்சிகளின் முதல் நடவடிக்கையாக மேல்நிலை ஊழியங்களின் மீதான புதிய ராயல் கமிஷனுக்குள்ள மானியத்தை அவர்கள் அப்பட்டமாக நிராகரித்தார்கள். இதே காரணத்தால்தான், 1923ல் உப்பு வரியை உயர்த்துவதற்காகக் கொண்டு வரப்பட்ட தீர்மானத்தையும் அவர்கள் நிராகரித்தார்கள். இந்தச் சட்டசபையின் முதல் மூன்றாண்டுக்காலப் பணிகளை வானளாவப் புகழ்ந்துள்ள இந்தியச் சாஸனக் கமிஷனும் கூட இம்மாதிரியான முடிவுக்கே வந்துள்ளது. குறிப்பாக, "1922ஆம் ஆண்டில், மிகச் சங்கடமான

வேளையில் ஒத்துழையாமை இயக்கத்துக்கு எதிராக அரசாங்கம் எடுத்த நடவடிக்கைகளுக்கெல்லாம்'' சட்டசபையும் கவுன்சிலும் முழு ஒத்துழைப்புத் தந்தன என்பதை இக் கமிஷன் சுட்டிக் காட்டிப் பாராட்டியுள்ளது.

இத்தனைக்கும் இடையில், கிலாஃபத் இயக்கத்தின் தூண்களும் காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்க ஆதரவாளர்களுமான முகம்மது அலியையும் சவுக்கத் அலியையும் விடுதலை செய்யுமாறு கோரி, சட்டசபையில் கொண்டு வரப்பட்ட ஒரு தீர்மானத்தைச் சபை ஏகமனதாக நிராகரித்தது அரசாங்கத்துக்கு ஓரளவு ஆறுதல் தருவதாக இருந்தது.

## அத்தியாயம் 3

# சட்டசபையில் சுயராச்சியக் கட்சியார் (1924—1926)

### ஒத்துழையாமைக் கிளர்ச்சி முடிந்தது :

இந்தியாவில் நடைபெற்று வந்த "பேயரசு"க்கு எதிராக ஒத்துழையாமைப் போராட்டத்தில் ஈடுபட வேண்டும் என்று காந்தியடிகள் விடுத்த அறைகூவலுக்கு நாடெங்கும் உருவாகிய வரவேற்பு அதிகார வட்டாரங்களில் பெரிய பதைபதைப்பை ஏற்படுத்தியது. "ஒத்துழையாமை இயக்கத்தால் நகர்ப்புறத்துக் கீழ்த்தட்டு மக்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்" என்றும் "சில பகுதிகளில் விவசாயிகள் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்" என்றும் 1922 பிப்ரவரி 9ல் இந்தியா மந்திரிக்கு ஒரு தந்தி கொடுத்தார் வைசிராய். இங்குள்ள முஸ்லிம்கள் மிகுந்த "கசப்பும் வெறுப்பும் அடைந்துள்ளார்கள்" என்றும் "எப்போது என்ன நடக்கும் என்று சொல்ல முடியாது" என்றும் அந்தத் தந்தி மேலும் தெரிவித்தது. "இங்கு ஏற்பட்டிருக்கிற சூழ்நிலையால் உண்டாகக் கூடிய விளைவுகளைக் குறைத்து மதிப்பிட முடியாது" என்றாலும், "இதுவரை ஏற்படாத அளவுக்குப் பெருங்குழப்பம் ஏற்பட்டால் கூடச் சமாளிப்பதற்கு நாங்கள் ஆயத்தமாகவே இருக்கிறோம்" என்றும் அதிலே உறுதியளித்திருந்தார் வைசிராய்.

நாலு நாட்களுக்கு முன்புதான் ஒத்துழையாமை இயக்கத்தையே பெரிதும் பாதிக்கக் கூடிய ஒரு நிகழ்ச்சி நடந்துவிட்டது. ஐக்கிய மாகாணத்தில் உள்ள சௌரி சௌரா என்னும் கிராமத்தில், கொதிப்படைந்த மக்கள் கூட்டம் ஒன்று போலீஸ் நிலையத்திற்குத் தீ வைத்ததில் சில போலீஸ்காரர்கள் கொல்லப்பட்டார்கள். வேறு சில இடங்களிலும் இத்தகைய சில நிகழ்ச்சிகள் நடந்து விட்டன. இது காந்தியடிகளின் அகிம்சைக் கொள்கைக்கும்

நடைமுறைக்கும் முற்றிலும் புறம்பானது. எனவே, காந்தியடிகள் அவசரம் அவசரமாக பிப்ரவரி 12ல் காங்கிரஸ் செயற் குழுவைக் கூட்டினார். அதிலே சட்டமறுப்புப் போராட்டத்தை நிறுத்தி வைப்பது என்றும், தடைகளை மீறுவதற்காகவே நடத்தப்படும் ஊர்வலம் கூட்டம் முதலியவைகளையும் கைது செய்யப்படுவதற்காக மேற்கொள்ளப்படும் சத்தியாக்கிரக நடவடிக்கைகளையும் உடனேயே நிறுத்திவிடுவது என்றும் முடிவு செய்யப்பட்டது. அதைத் தொடர்ந்து, சர்க்காவைப் பிரபலப்படுத்துவது, தேசியப் பள்ளிக்கூடங்களை அமைப்பது, மதுவிலக்குப் பிரசாரம் செய்வது போன்றவைகளை உள்ளிட்ட ஆக்கபூர்வமான திட்டம் ஒன்று அறிவிக்கப்பட்டது. பிப்ரவரி 24ல் தில்லியில் கூடிய அ.இ.கா.க. (அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி) இந்தத் தீர்மானங்களை ஏற்றுக் கொண்டாலும், தனிப்பட்டவர்கள் மாநிலக் காங்கிரஸ் கமிட்டிகளின் பொறுப்பில் சட்டமறுப்பில் ஈடுபடலாம் என்றும் அனுமதி அளித்தது.

இதைப் பற்றி காங்கிரசின் அதிகார பூர்வமான வரலாற்றில் சொல்லப்பட்டிருப்பதாவது: "(போராட்டத்தை நிறுத்தி வைத்து) காந்தியடிகள் அதன் உயிரையே போக்கிவிட்டார் என்று பலர் அவருக்கு எதிராகக் கொதித்தார்கள்." சிறையிலிருந்த தலைவர்கள் காந்தியடிகளின் செயல் கண்டு சீறினார்கள். இதனால் காங்கிரஸ் அமைப்பிலேயே பெரிய தளர்ச்சி ஏற்பட்டது. 'பெரிய தேசிய வீழ்ச்சி' ஒன்று ஏற்பட்டு விட்டதாகக்கூடக் கருதப்பட்டது. ஆனாலும், அரசாங்கத்துக்கு இது ஆறுதலைத் தந்தது. இப்போது அவர்கள் தாராளமாகக் காந்தியடிகளைக் கைது செய்யலாமல்லவா? ஆம்; அரசாங்கம் மார்ச் 10ஆம் தேதி அவரைக் கைது செய்தது.

### சுயராச்சியக் கட்சியின் உதயம்:

காங்கிரஸ் இப்போது முற்றிலும் புதியதொரு சூழ்நிலையில் வந்து நின்றது. தொடர்ந்து ஒத்துழையாமைப் போராட்டத்தை நடத்துவதா, வேண்டாமா? நடத்துவது என்றால், எந்த முறையில் அதை நடத்துவது? அடுத்து, 1923ல் நடக்கும் சட்டசபை மற்றும் கவுன்சில்களுக்கான தேர்தல்களில் போட்டியிட்டுச் சட்ட

சபைக்குச் செல்வதா வேண்டாமா? இவைகளே காங்கிரசுக்கு ஏற்பட்ட முக்கியமான புதிய பிரச்சினைகள்.

அ. இ. கா. கமிட்டி ஜூன் மாதத்தில் லக்னேவில் கூடி, ஒரு தனிக்குழுவை நியமித்தது. நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து நாட்டு நிலையை மதிப்பிட்டு, எந்தவிதமான நடவடிக்கை மேற்கொள்ளலாம் என்று சிபாரிசு செய்யுமாறு அந்தக் குழு கேட்டுக் கொள்ளப்பட்டது. சட்டசபைக்குச் செல்வதா வேண்டாமா என்பது பற்றி இந்தக் குழுவிலும் ஆழமான கருத்து வேற்றுமை நிலவியது. ("மாறுதல் விரும்பாதவர்கள்" என்று சொல்லப்பட்ட) சி. ராஜகோபாலாச்சாரி, எம். ஏ. அன்சாரி, எஸ். கஸ்தூரி ரங்க அய்யங்கார் ஆகியோர், சட்டசபையைப் புறக்கணிப்பது என்னும் காங்கிரசின் பழைய திட்டத்தை மாற்ற வேண்டியதில்லை என்றனர்கள். ("மாறுதல் விரும்புவோர்" என்று சொல்லப்பட்ட) மோதிலால் நேரு, ஹக்கீம் அஜ்மல் கான், வித்தல்பாய் படேல் ஆகியோர் தேர்தலில் போட்டியிட்டுச் சட்ட சபைக்குச் சென்று உள்ளே இருந்தே, அரசாங்கத்தையும் அதன் அதிகார எந்திரத்தையும் எதிர்க்க வேண்டும் என்றனர்கள். இதன் விளைவாக மாறுதல் விரும்புவோருக்கும் மாறுதல் விரும்பாதவர் களுக்கும் இடையில் நீண்ட வாக்குவாதங்கள் ஏற்பட்டன. சிலபோது மிகவும் கசப்பான எல்லைக்குக் கூடச் சென்றுவிட்ட இந்தக் கருத்து மோதல், அடுத்து வந்த சிலகால அரசியலின் போக்கையே வெகுவாகப் பாதித்தது.

### தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் :

சௌரி சௌரா நிகழ்ச்சியைத் தொடர்ந்து காந்தியடிகள் சட்ட மறுப்புப் போராட்டத்தை நிறுத்திய போது சிறையில் இருந்த தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் அதைக் கேள்விப்பட்டு நிலைகுலைந்து போனார். "காந்தியடிகள் திரும்பத் திரும்ப எல்லாவற்றையும் குழப்பி வருவதைக் குறித்து அவருக்குக் கடுமையான கோபமும் வேதனையும் உண்டாயிற்று; பர்தோலியில் ஏற்பட்ட தோல்வி அதை மேலும் அதிகமாக்கியது" என்று எழுதியிருக்கிறார் சுபாஷ் சந்திர போஸ். ஆனாலும், சட்டசபைப் பிரவேசம் பற்றிய பிரச்சினையில் தாஸின் போக்கு இப்போது வெகுவாக மாறி

யிருந்தது. அமிர்தசரஸில் நடந்த (1919) காங்கிரசில், சீர்திருத்தச் சட்டத்தைச் செயல்படுத்தக் காங்கிரஸ் ஒத்துழைப்பு நல்க வேண்டும் என்று காந்தியடிகள் கூறியதைக் கடுமையாக எதிர்த்தவர் தாஸ். இப்போது, நிலைமைகள் மாறியிருப்பதால் காங்கிரஸ் சட்டசபைகளில் பங்குகொண்டு உள்ளேயே ஒத்துழை யாமைப் போராட்டத்தை நடத்த வேண்டும் என்று அவர் கருதினார்.

தாஸின் உடல்நிலை மோசமாகிக் கொண்டு வந்ததால், 1922 ஆகஸ்டில் அவர் விடுதலை செய்யப்பட்டார். அதே ஆண்டு டிசம்பரில் கயாவில் நடக்க இருந்த காங்கிரசுக்கு அவர் தலைவராக வும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தக் கூட்டம் சட்டசபைக்குப் போவதா வேண்டாமா என்ற சிக்கலான பிரச்சினையை விவாதிப்ப தாக இருந்ததால், நாடே ஆவலோடு இந்தக் கூட்டத்தை எதிர்நோக்கியது. "மாறுதல் விரும்புவோர்", தாஸ் மற்றும் மோதிலால் நேரு தலைமையில் தங்கள் ஆதரவாளர்களைத் திரட்டி னார்கள்; "மாறுதல் விரும்பாதவர்கள்" ராஜகோபாலாச்சாரி மற்றும் ராஜேந்திரப் பிரசாத் தலைமையில் தங்கள் ஆதரவாளர் களை ஒன்றுதிரட்டி வந்தார்கள். தலைவர் தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் தெளிவான ஆதாரங்களுடன் நீண்டதோர் உரை நிகழ்த்தினார்.

"மாறுதல் விரும்புவோருக்கும் மாறுதல் விரும்பாதவர்களுக்கும் இடையே ஏற்பட்டுள்ள போராட்டமே தவறான அடிப்படையில் எழுந்திருக்கிறது. நமது வேலைத் திட்டத்தை மாற்றப் போகிறோமா என்பது அல்ல கேள்வி; நமது வேலைத் திட்டத்தில், நமது உயிருக்கு உயிரான இயக்கத்தின் வெற்றிக்குத் தேவையான அளவில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்த வேண்டியது அவசியமா இல்லையா என்பதே கேள்வி" என்று தெளிவுபடுத்தினார் தாஸ். இதை விளக்குகையில், "இப்போது உள்ள சூழ்நிலையில், ஒன்று, 'சட்டசபையைத் திருத்துவது, அல்லது, அதை ஒழித்துக் கட்டுவது' என்ற தீர்க்கமான முடிவோடு அங்கே செல்வதே நமது ஒத்துழையாமை இயக்கத்தைச் சரியான முறையில் நடத்து வதாகும் என்று நான் கருதுகிறேன்" என்றார் சித்தரஞ்சன் தாஸ்.

சட்டசபைகளுக்குள் செல்லவேண்டும் என்பதில் தாஸ் இவ்வளவு உறுதியாக இருந்தது போலவே, வேறு சிலர் அங்கே போகக் கூடாது என்பதிலும் அதே அளவு உறுதியுடன் இருந்தார்கள். தலைவரின் ஆதரவோடு வந்த தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டபோது, 1748க்கு 890 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோற்கடிக்கப்பட்டது. உடனேயே தாஸ் தம்முடைய காங்கிரஸ் தலைமைப் பதவியை ராஜிநாமாச் செய்தார்; மோதிலால் நேருவும் காங்கிரஸ் செயலாளர் பதவியிலிருந்து விலகினார். தங்கள் கருத்தே சரி என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்த அவர்கள், 1923 ஜனவரி முதல் தேதி சுயராச்சியக் கட்சி என்ற பெயரில் ஒரு புதிய கட்சியைத் தொடங்கினார்கள்.

புதிய சுயராச்சியக் கட்சி காங்கிரசிலிருந்து பிரிந்து போய்விடவில்லை; உள்ளிருந்தே, தன்னுடைய கொள்கைக்குக் காங்கிரசை இழுக்க முயன்று வந்தது. 1923 செப்டம்பரில் காங்கிரசின் சிறப்புக் கூட்டம் ஒன்று மௌலானா அபுல் கலாம் ஆசாத் தலைமையில் தில்லியில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் இரண்டு குழுவினருக்கும் இடையே சமரசம் ஏற்பட்டது. அதன்படி, சட்டசபைக்குச் செல்வது தங்கள் மதநம்பிக்கைகளுக்கோ மனச்சான்றுக்கோ எதிரானதல்ல என்று கருதும் காங்கிரஸ்காரர்களுக்கு தேர்தலில் போட்டியிடவும் வாக்களிக்கவும் உரிமை வழங்கப்பட்டது. ஆகையால் சட்டசபைக்கு எதிரான காங்கிரஸ் பிரசாரமும் நிறுத்தி வைக்கப்பட்டது. அத்துடன், (ஏற்கனவே அறிவிக்கப்பட்டுள்ள) ஆக்கபூர்வமான திட்டங்களை நடத்திவருமாறும் காங்கிரஸ் தொண்டர்களைக் காங்கிரஸ் கேட்டுக் கொண்டது.

### தேர்தலில் சுயராச்சியக் கட்சியார்:

நவம்பரில் நடைபெற இருந்த தேர்தல் நெருங்கிக் கொண்டிருந்தது. சுயராச்சியக் கட்சி தன்னைத் தீவிரமாகப் போட்டிக்குத் தயாராக்கிக் கொண்டு வந்தது. மோதிலால் நேருவின் பெயரால் தேர்தல் அறிக்கை ஒன்று அக்டோபர் 14ஆம் தேதி வெளியிடப்பட்டது. "சுயராச்சியக் கட்சி என்பது காங்கிரசின் ஒரு பகுதியே; அதன் தலைவர்கள், அவர்களுக்கே உரிய வகையில், (காங்கிரசின்)

அடிப்படைக் கொள்கையான அகிம்சை நெறியை ஏற்றுக் கடைப் பிடித்தே வந்திருக்கிறார்கள். இங்குள்ள ஆங்கிலேய அரசாங்கம் தனது (இங்கிலாந்து) நாட்டின் நலனை நோக்கமாகக் கொண்டே இங்கே ஆட்சி நடத்தி வருகிறது என்பதுதான் சுயராச்சியக் கட்சியின் கருத்து; அவர்கள் (ஆங்கிலேயர்கள்) சீர்திருத்தங்கள் என்று சொல்பவை எல்லாம் உண்மையில் சீர்திருத்தங்கள் அல்ல; இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி கொடுக்கப் போகிறோம் என்று அவர்கள் சொல்வதெல்லாம் வெறும் ஏமாற்றே; அந்த உறுதி மொழியை ஒரு திரையாகப் பயன்படுத்திக் கொண்டு, அதன் மறைவில் அவர்களின் சுரண்டலைத் தொடர்ந்து நடத்துவதே அவர்களின் திட்டம். அதாவது, நமது எல்லையற்ற பெருவளங்களை எல்லாம் சுரண்டிக் கொண்டு, நம்மை என்றென்றும் பிரிட்டனின் அடிமைகளாக வைத்திருப்பதே அவர்களின் திட்டம்". இவ்வாறு அந்த அறிக்கையில் சொல்லப்பட்டிருந்தது.

தேர்தல் அறிக்கை மேலும் கூறியதாவது: "சட்டசபையில் சென்றதும், தங்கள் ஆட்சி எந்திரத்தைக் கட்டுப்படுத்தி அரசியல் திட்டத்தை நடத்திக் கொள்ளும் உரிமை உடனடியாக இந்திய மக்களுக்கு வழங்கப்படவேண்டும் என்று (காங்கிரஸ்) சுயராச்சியக் கட்சி கோரிக்கை விடுக்கும். அந்த உரிமை வழங்கப் பட்டால், அந்த உரிமை எந்தெந்த வகையில் செயலாக்கப்பட வேண்டும் என்பதை இந்திய அரசாங்கமும் தேசியவாதிகளும் கூடிப் பேசி முடிவு செய்வார்கள்." இதை இவ்வளவு திட்ட வட்டமாக அறிவித்து விட்டதால் இதன் மறுபக்கத்தையும் அறிக்கை தெளிவாகவே விளக்கியது:

"ஒருவேளை, மேற்குறித்த கோரிக்கையை அரசாங்கம் ஏற்க வில்லை என்றாலோ, ஏற்றுக்கொண்டு நாம் ஏற்கமுடியாத நிபந் தனைகளை விதிக்குமென்றாலோ,—எங்கள் கட்சிக்குப் பெரும் பான்மை கிடைத்திருந்தால்,—கட்சியின் திட்டப்படியே சட்டசபை நடவடிக்கைகளுக்கு முறையான தொடர்ச்சியான தளராத முட்டுக்கட்டை போடுவோம். அதன் மூலம், சட்டசபை மற்றும் கவுன்சில்களின் மூலம் அரசாங்கம் நடக்கவே முடியாத நிலைமையை உருவாக்குவோம்."

"உள்ளிருந்தே சீர்திருத்தத் திட்டத்தை முறியடிப்போம்" என்று சுயராச்சியக் கட்சியார் எழுப்பின முழக்கம் வீண்போக வில்லை. நாட்டில் ஏற்பட்டிருந்த தளர்ச்சி நீங்கி எங்கும் ஓர் எழுச்சி தலை தூக்கியது. 1920-1922 ஆம் ஆண்டுகளின் புரட்சி கரமான நிலைமையில் "அசல் பிற்போக்குவாதிகளாகவும் அரசாங் கத்தின் பங்காளிகளாகவும்" செயல்பட்ட மிதவாதிகள் இந்தத் தேர்தலில் அடியோடு ஒழித்துக் கட்டப்பட்டார்கள். வங்காளத்து சுரேந்திரநாத் பானர்ஜி, பம்பாய் எஸ். எம். பராஞ்சிபே, சென்னை சேஷகிரி அய்யர், ஐக்கிய மாகாண சி. ஒய். சிந்தாமணி போன்ற மிதவாதப் பெருந்தலைவர்களெல்லாம் தோற்கடிக்கப் பட்டார்கள்.

நூற்று நாற்பத்தைந்து பேர்களைக் கொண்ட சட்டசபையில் தேர்தல் மூலம் நிரப்பப்படவேண்டிய இடங்கள் 104. இந்த 104ல் 45 இடங்களைக் கைப்பற்றிக் குறிப்பிடத்தக்க வெற்றி ஈட்டியது சுயராச்சியக் கட்சி. இந்த இடங்களில் பெரும்பாலான வைகளும் முன்பு மிதவாதக் கட்சியாரிடம் இருந்தவை. மாநிலங் களில் சுயராச்சியக் கட்சியின் வெற்றி பலதரப்பட்டதாக இருந்தது. மத்திய மாகாணத்தில் சுயராச்சியக் கட்சிக்குப் பெரும் பான்மை கிடைத்திருந்தது. வங்காளத்தில் சுயராச்சியக் கட்சியே சட்டசபையின் தனிப்பெருங் கட்சியாக அமைந்தது. பம்பாயிலும் ஐக்கிய மாகாணத்திலும் சுயராச்சியக் கட்சியின் வேட்பாளர்கள் பெருமளவில் வெற்றி பெற்றிருந்தார்கள். சென்னை, பீகார், பஞ்சாப் ஆகிய இடங்களில் மட்டும் சுயராச்சியக் கட்சி மிகக் குறைவான இடங்களையே பிடித்தது. இந்தத் தராதரங்கள் இருந்தாலும், தங்கள் எதிரிகளான மிதவாதிகளை வெளியேற்ற உதவியதால் இந்த வெற்றி சுயராச்சியக் கட்சிக்குப் பெரிய வெற்றி என்பதில் சந்தேகமில்லை.

### தேசீயக் கட்சி: கூட்டணி:

சட்டசபையில் சுயராச்சியக் கட்சியே பெரிய கட்சியாக இருந் தாலும், அங்கே அதற்குப் பெரும்பான்மை இல்லை. ஜின்னாவின் தலைமையில் இயங்கிய சுயேச்சை உறுப்பினர்களை உடன் சேர்த்துக் கொண்டால்தான், திட்டமிட்டபடி, அரசாங்கத்தின்மீது சுயராச்

சியக் கட்சி தனது தாக்குதலை நடத்த முடியும் என்ற நிலையே உருவாகியிருந்தது. சுயேச்சை உறுப்பினர் 24 பேர் இருந்தார்கள். "தேவை ஏற்படும்போது தேசீய நலனில் அக்கறை கொண்ட மற்ற சக்திகளை இணைத்துக் கொள்ளவும் தயங்கமாட்டோம்" என்று சுயராச்சியக் கட்சியார் தங்கள் தேர்தல் அறிக்கையிலேயே சொல்லியிருந்தார்கள். அந்த நோக்கிலேதான், பம்பாயில் ஜின்னுவுக்கு எதிராக நிறுத்தப்பட்ட சுயராச்சியக் கட்சி வேட்பாளரையும் கட்சி விலக்கிக் கொண்டது.

நாகபுரியில் நடந்த காங்கிரசின் (1920) வருடாந்திரக் கூட்டத்துக்குப் பிறகு ஜின்னு காங்கிரசிலிருந்து விலகிவிட்டார். நாகபுரிக் காங்கிரசில்தான் காந்தியடிகள் ஓர் அரசியல் தலைவர் என்ற நிலைக்கு உயர்ந்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு ஒத்துழைக்கக் கூடாது என்ற கொள்கையை அவர் வெளியிட்டதும் அங்கேதான். காந்தியடிகள் காங்கிரஸ் கட்சியின் அமைப்பையும் போக்கையும் பொதுமக்களை ஆதாரமாகக் கொண்டனவாய் மாற்றியமைத்தது ஜின்னுவுக்கு அடியோடு பிடிக்கவில்லை. என்றாலும், ஜின்னு, இன்னமும் "இந்து முஸ்லிம் ஒற்றுமையின் தூதுவர்" என்ற பெருமையை இழந்துவிடவில்லை. காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே ஏற்பட்ட (1916) லக்னோ ஒப்பந்தத்தை உருவாக்கிய முக்கியமானவர்களில் அவரும் ஒருவரே. இவைகளை எல்லாம் நினைவிலே கொண்டுதான், அக்கால இந்தியத் தேசீய இயக்கத்தின் முதன்மையான பிரசாரசாதனமாக விளங்கிய தினசரியான **பாம்பே கிராணிக்கிள்** ஜின்னுவுக்கு வாக்களிக்குமாறு பம்பாய் மக்களைக் கேட்டுக்கொண்டது. தலையங்கமாக அமைந்த அந்த வேண்டுகோளில் **பாம்பே கிராணிக்கிள்** குறிப்பிட்டதாவது:

"ஜின்னுவின் பழைய சாதனைகள் தனித்த சிறப்புக்கு உரியவை. அவருடைய அழுத்தமான தேசப்பற்றும், அச்சுறுத்தல்களால் குன்றாததும் ஆசைகாட்டல்களுக்கு விலை போகாததுமான அவருடைய சுதந்திரப் போக்கும் இணையற்றவை. இவை யாவற்றுக்கும் மேலாக, வளைந்து கொடுக்காத வீரப் போராட்ட உணர்வு உடையவர் ஜின்னு. இவைகளை நினைவில் கொண்டு பார்க்கையில், பம்பாய் நகரின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்படும் தகுதி வேறு

எந்த பம்பாய்க்காரரையும் விட அவருக்கே மிகுதியாக இருக்கிறது''.

ஜின்னு போட்டியின்றிச் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சுயராச்சியக் கட்சியார் சட்டசபையில் அவருடைய ஒத்துழைப்பை நாடினூர்கள்; அவரும் இசைந்தார். பண்டித மதன் மோகன் மாளவியாவும் சுயராச்சியக் கட்சிக்கு ஒத்துழைப்புத் தர முன்வந்தார். எனவே, சுயராச்சியக் கட்சியார், மிதவாதிகள், சுயேச்சையாளர் ஆகியோரின் கூட்டணி ஒன்று உருவாயிற்று. சட்டசபை மூலம் ஆட்சியியல் சீர்திருத்தம் தொடர்பான தேசீயக் கோரிக்கை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட வேண்டும்; அரசாங்கம் அதற்குத் திருப்திகரமான பதில் தரத் தவறுமாஞல் தடுப்பு அல்லது (தேவைப்பொருள்) மறுப்புக் கொள்கை செயல்படுத்தப்பட வேண்டும் என்ற உடன்பாட்டின் மீதே இந்தக் கூட்டணி உருவாக்கப்பட்டது. அதன்படி, கூட்டணிக்கென்றே தனிக்கொள்கைகளும் நடைமுறை விதிகளும் வகுக்கப்பட்டு, அதற்குத் 'தேசீயக் கட்சி' என்ற பெயரும் கொடுக்கப்பட்டது. மோதிலால் நேரு அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சட்டசபை வேலைகளுக்கான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன.

**சட்டசபையில் பணிகள்:**

1919ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்தின்படி அமைந்த முதலாவது சட்டசபை ஒருவகையில் மிதவாதச் சட்டசபையாகவே செயல்பட்டது. சீர்திருத்தங்கள் சிறிதளவே பயன் உள்ளவையாக இருந்தாலும், அவைகளைச் செயற்படுத்திப் பார்க்க வேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டு, மிதவாதிகள் அரசாங்கத்தோடு ஒத்துழைத்து வந்ததால், அந்தச் சட்டசபையில் எழுச்சிகளும் மறை கவர்ச்சிகளும் மிகுதியாக இல்லை. இரண்டாவது சட்டசபையோ வேறொரு விதம்! சுயராச்சியக் கட்சியாரே சட்டசபையின் தனிப்பெரிய கூட்டமாக இருந்தார்கள். சீர்திருத்தத் திட்டங்களை உள்ளிருந்தபடியே உடைத்துத் தள்ளவேண்டும் என்பதே அவர்களின் கொள்கை. இது ஒத்துழையாமைக் கொள்கையின் மற்றொரு வடிவமே என்பதும் தெளிவு. உடைத்

துத் தள்ளும் அரசியலும் சட்டமுறை அரசியலும் எந்த அளவு ஒத்து இயங்க முடியும் என்பது சிறிதும் தெளிவாக இல்லை. இவை இரண்டும் ஒன்றை ஒன்று கடுமையாகப் பாதிக்காமல் இணைந்து செயல்படமுடியாது என்றே நாட்டுமக்கள் கருதினார்கள். தேசீயவாதிகளிலேயே தலைசிறந்தவரான காந்தியடிகளும், இவை ஒத்து இணங்க முடியா என்றே கருத்துத் தெரிவித்தார். எனவே, சட்டசபையின் முதலாவது கூட்டத் தொடர் ஆரம்பமானபோது, என்ன நடக்கப்போகிறது என்பதை நாடே ஆவலோடு எதிர் பார்த்து நின்றது.

பெருமைக்குரிய நபர்கள் என்ற கணக்கிலும், இரண்டாவது சட்டசபை பலவகையானவர்களைக் கொண்டு, கவர்ச்சிகரமான தாகவே காட்சியளித்தது. இந்திய அரசியலிலும் பொது வாழ் விலும் புகழ்பெற்ற பலர், இந்தமுறை உறுப்பினர்களாக அமர்ந் திருந்தார்கள்: பண்டித மோதிலால் நேரு, எம். ஏ. ஜின்னா, பண்டித மதன் மோகன் மாளவியா, விதல்பாய் படேல், (1926ல் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்து சேர்ந்த) லாலா லஜ்பத் ராய், பிபின் சந்திரபால், சர் சிவசாமி அய்யர், சர் புருஷோத்தமதாஸ் தாகுர்தாஸ், சர் சிமன் லால் ஸெதல்வாட், சர் எச். எஸ். கௌர் முதலானோர் அவர்களுள் முக்கியமானவர்கள். இளைய இந்தி யாவின் பிரதிநிதிகளாக டி. சி. கோஸ்வாமி, திவான் சமன் லால், சண்முகம் செட்டி, கே. சி. நியோகி முதலியோர் இடம் பெற்றிருந்தார்கள். அப்பொழுதுதான் இந்தியாவில் துவங்கிவந்த தொழிலாளர் இயக்கத்தின் பிரதிநிதியாக என். எம். ஜோஷி வந்திருந்தார்.

நாட்டின் கவனத்தை ஈர்த்து வந்த பிரச்சினைகளும் மிகப் பெரியவைகளே. முதலாவதாக, சுதந்திரத்துக்கு முன்னீடாக இருந்த ஆட்சியியல் சீர்திருத்தம் உச்ச முக்கியத்துவம் பெற்ற பிரச்சினையாக இருந்தது. அடுத்தபடியாக, இந்தியாவில் எழுச்சி பெற்று வந்த தீவிரத் தேசீய வாதத்தையும் புரட்சி இயக்கத்தை யும் நசுக்குவதற்காக அரசாங்கம் கடைப்பிடித்த அடக்குமுறைக் கொள்கையும் செயல்திட்டங்களும் மக்களின் மனத்தை அலக் கழித்துக் கொண்டிருந்தன. அப்பால், கல்வியும் அரசியல் உணர்வும் உடைய இந்தியர்களும் இந்தியத் தொழிலதிபர்களும்,

உள்நாட்டுத் தொழில்வளர்ச்சி, அரசாங்க ஊழியத்தை இந்திய மயமாக்குவது முதலானவற்றில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார்கள்.

### ஆட்சியியல் முன்னேற்றத்துக்கான நிர்ப்பந்தம் :

அரசியல் சட்டச் சீர்திருத்தத்தை வற்புறுத்தும் தேசீயக் கோரிக்கையின் தோரணை சட்டசபையின் முதலாவது கூட்டத் தொடரிலேயே உருப்பெற்றுவிட்டது. 1924 பிப்ரவரி 5ஆம் தேதி, டி. ரங்காச்சாரியார் இது சம்பந்தமான ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார் : "இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராச்சியத்துக்கு உட்பட்ட டொமினியன் ஆட்சி ஏற்பட வேண்டும். மாநிலங்களுக்கு மாநில சுய ஆட்சி கிட்ட வேண்டும். இவை இரண்டும் ஏற்படுவதற்கு வசதியாக 1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டத்தைத் திருத்துவதற்கான நடவடிக்கைகளை உடனடியாக கவர்னர் ஜெனரல் மேற்கொள்ள வேண்டும்" என்று சிபார்சு செய்தது அந்தத் தீர்மானம். "தேவையென்று கருதப்பட்டால், இதற்காக ராயல் கமிஷன் ஒன்றையும் நியமிக்கலாம்" என்றும் தீர்மானம் ஆலோசனை தெரிவித்தது.

எதிர்க்கட்சித் தலைவரான மோதிலால் நேரு இந்தத் தீர்மானத்துக்குப் பின்கண்ட திருத்தத்தைக் கொணர்ந்தார் : "இந்தியாவில் முழுமையான பொறுப்பாட்சி ஏற்படும் விதமாக இந்தியாச் சட்டத்தைத் திருத்தியமைப்பதற்குத் தேவையான நடவடிக்கைகளை எடுக்கும்படி இந்தச் சபை கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொள்ளுகிறது. அந்த நடவடிக்கைகளுக்குத் துணையாக—

(அ) இந்திய அரசியல் அமைப்பில் எல்லாச் சிறுபான்மையினரின் உரிமைகளுக்கும் உரிய பாதுகாப்பை ஏற்படுத்துவதற்காக, பிரதிநிதித்துவம் வாய்ந்த வட்ட மேசை மாநாடு ஒன்றை விரைவிலேயே கூட்ட வேண்டும் என்றும்

(ஆ) இப்போதுள்ள மத்திய சட்டசபையைக் கலைத்து விட்டு, முறைப்படித் தேர்ந்தெடுக்கப்படும் புதிய

> சட்டசபையில் மேற்குறித்த திட்டத்தைக் கொண்டு வந்து பரிசீலனை செய்து அதன் முடிவுகளைச் சட்டக் கோவையில் இணைக்கக் கோரி பிரிட்டிஷ் பாராளு மன்றத்துக்கு அனுப்பிவைக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் இச்சபை சிபாரிசு செய்கிறது."

ரங்காச்சாரியாரின் தீர்மானத்தின் மீது உரையாற்றிய உள் துறை உறுப்பினர் சர் மால்கம் ஹெய்லி, இந்தத் தீர்மானம் பல முக்கியமான அம்சங்களில், 1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டத்துக்கு முரண்பட்டதாக இருக்கிறது என்று குறிப்பிட்டு அந்த அம்சங்களை விவரித்தார்: "இந்தியர்கள் சிறுகச் சிறுகப் பொறுப்பாட்சிக்குத் தயாராக வேண்டும் என்பதே சட்டத்தின் நோக்கம்; இந்தத் தீர்மானமோ, பிரிட்டிஷ் சாம்ராச்சியத்துக்கு உட்பட்ட முழுச் சுய ஆட்சி டொமினியன் பெறுவதையே நோக்க மாகக் குறிப்பிடுகிறது. சட்டத்தில் குறிப்பிட்டுள்ள நோக்க மாகிய பொறுப்பாட்சியைப் படிப்படியாகவே அடைய வேண்டும் என்று அதில் குறிப்பிட்டிருப்பதையும் நினைவூட்ட விரும்பு கிறேன். இப்படி, தொடர்ந்த பல படிகளாக அமைகின்ற இந்த நடைமுறையில், எதை எப்போது எப்படிச் செயல்படுத்த வேண்டும் என்பதைப் பிரிட்டிஷ் பாராளுமன்றமே முடிவு செய்ய வேண்டும் என்றுதான் சட்டத்தில் குறித்திருக்கிறது என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். தவிர, இந்தியாவுக்கு (எடுத்த எடுப்பிலேயே) டொமினியன் அந்தஸ்து வழங்கி விடுவது சுலப மாக இல்லை: இந்தியா, இன்னமும், மற்றவர்கள் உதவி இல்லாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் தகுதியைப் பெறவில்லை; இந்திய சுதேச மன்னர்கள் (மற்றவர்களோடு சேர்த்துக் கணக்கிட முடியாதபடி) தனி ஆட்சி உரிமை பெற்றவர்களாக இருக்கிறார்கள்; இந்தியச் சமூகத்தில் நிலவுகிற வகுப்பு வேற்றுமையும் மிகவும் பயங்கரமானதாக இருக்கிறது. இந்தக் காரணங்களால் ஆட்சி யியல் மாறுதல்களை மேற்கொள்வதற்கு இந்திய அரசியல்நிலை தோதாக இல்லை. இருந்தபோதிலும், இந்தியாச் சட்டம் எவ் வெவ்வாறு செயற்படுகிறது என்பதைப் பரிசீலனை செய்ய அலுவலக விசாரணை ஒன்று நடத்தலாம் என்றே கருதுகிறேன்" என்றார் ஹெய்லி.



பிரோஷா மேத்தா



கோபால கிருஷ்ண கோகலே



ராஷ்பிகாரி கோஷ்



வித்தல்பாய் பட்டேல்



மோதிலால் நேரு



மதன்மோகன் மாளவியா

உள்துறை உறுப்பினரின் இந்த வாதத்தைத் தாக்கிக் காரசாரமான உரை ஒன்றை நிகழ்த்தினார் மோதிலால் நேரு. எடுத்த எடுப்பிலேயே 1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டம் ஓர் உதவாக்கரைச் சட்டம் என்று குறிப்பிட்ட நேரு, அதன் பாயிரப் பகுதியும் உள்ளடக்கமான விதிகளும் இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி கிடைப்பதற்குத் தடையாக எழுப்பப்பட்ட சாசனங்கள் என்று குற்றம் சாட்டினார். எனவேதான், இந்தியாச் சட்டம் அடியோடு மாற்றப்பட வேண்டுமென்று கோருகிறோம் என்றும் அவர் விளக்கினார். முழுமையான பொறுப்பாட்சியைக் "கட்டிச் சுருட்டி எங்கள் கையில் கொடுத்து விடுங்கள்" என்று நாங்கள் கேட்கவில்லை. முதன்முதலில் (இந்தியாவுக்கு முழுப் பொறுப்பாட்சி வழங்குவது என்னும்) கொள்கையும் அதற்கு எங்களுக்கு உள்ள உரிமையையும் ஏற்கப்பட வேண்டும்; அடுத்து, சகல தொகுதியினரையும் பிரதிநிதித்துவப் படுத்தும் வட்டமேசை மாநாடு ஒன்று கூட்டப்பட வேண்டும். ராயல் கமிஷன் நியமிப்பதில் எந்த உபயோகமும் இல்லை. நாங்கள் குறிப்பிடும் வட்டமேசை மாநாடு எந்தவிதமான நிபந்தனைகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்படாமல் இந்தப் பிரச்சினையைப் பரிசீலனை செய்ய வேண்டும். இதுதான் எங்கள் கோரிக்கை, என்று எடுத்துரைத்தார் நேரு. திருத்தத் தீர்மானத்தின் மூன்றாவது விதியைக் குறிப்பிட்டுச் சொல்லும்போது, "இதிலே எந்த முரண்பாடும் இல்லை; எங்கள் நிலையை நாங்களே நிர்ணயித்துக் கொள்ள எங்களுக்கு உரிமை உண்டு. ஆதலால், இந்த விதி எந்த வகையிலும் (இந்தியாச்) சட்டத்தோடு முரண்படவில்லை என்பதை பிரிட்டிஷ் அரசாங்கமும் பாராளுமன்றமும் புரிந்து கொண்டு ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று வற்புறுத்தினார்.

"நாங்கள் ஒத்துழையாமைக் கொள்கை உடையவர்கள்தாம் என்றாலும், நீங்கள் எங்களோடு ஒத்துழைக்க விரும்பினால் நாங்களும் ஒத்துழைப்பு நல்கலாம் என்றே இங்கே வந்திருக்கிறோம். இதை நீங்கள் ஏற்றுக்கொண்டால் நாங்கள் உங்களுக்கு வேண்டியவர்கள்; நீங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்றால், நாங்கள் எங்கள் உரிமையை விட்டுக்கொடுத்து ஒடுங்கிக் கிடக்க

மாட்டோம்; எங்கள் ஒத்துழையாமை வழியிலேயே செல்வோம்!" என்று அரசாங்கத்தை எச்சரித்தார் அவர்.

மோதிலால் நேருவின் திருத்தத்தை ஆதரித்துப் பேசிய மதன் மோகன் மாளவியா, டொமினியன் அந்தஸ்து கோரும் உரிமை இந்தியாச் சட்டத்தில் இல்லாதது என்று உள்துறை உறுப்பினர் கூறியதை அழுத்தம் திருத்தமாக மறுத்துரைத்தார். அப்பால், இந்தியாச் சட்டம் செயல்பட்டு வந்துள்ள விதத்தை அலசினார்: இந்தச் சட்டத்தின்படி, சட்டம் ஒழுங்குப் பிரச்சினை மாநில அரசுகளுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது; அதுவே மத்திய அரசின் உரிமையாகவும் உள்ளது! இதன் காரணமாக, கடந்த இரண்டு ஆண்டுகளில் இங்கே ஏற்பட்டது போன்ற ஒரு குழப்பம், சட்டம் ஒழுங்குப் பிரச்சினையில் வேறு எப்போதும் ஏற்படவில்லை, அடுத்து, இந்தியத் தொழில் முன்னேற்றம், ராணுவத்தையும் நிருவாகத்தையும் இந்தியமயமாக்குதல் என்னும் பிரச்சினைகளை எடுத்துக் கொண்டால், அங்கும் அதே கதைதான் என்றார் மாளவியா.

"தொழில்களைப் பொறுத்தவரை, இந்தியத் தொழில்களை வளர்ப்பதில் அரசாங்கம் போதிய கவனம் செலுத்தவில்லை. கடந்த மூன்று ஆண்டுகளில் நமக்கு ஏற்பட்டுள்ள அனுபவம் இது. அண்மையில் நடத்தப்பட்ட ஒரு மதிப்பீட்டின்படி, நீண்ட நாளைக்குப் பிறகாவது,—நூறு ஆண்டுகளுக்குப் பிறகாவது— இந்திய ராணுவம் இந்தியமயமாகுமா என்பது பற்றி ஐயமாகவே இருக்கிறது; அவ்வளவு "துரிதமாக" அரசாங்கம் செயல்பட்டு வருகிறது. இதை எல்லாம் கவனிக்கும்போதுதான், முன்னேற்றப் பாதைக்கு நாம் வகுத்துக் கொண்ட நடைமுறை தீவிரமான மாறுதல்களுக்கு உட்பட்டாகவேண்டும் என்று நினைக்க வேண்டியவர்களாகிறோம். ஆங்கிலேய அதிகார வர்க்கம் இந்த நாட்டை ஆளும் வரை, இந்தியர்கள் பொறுப்பாட்சி பெறுவதற்கான நடவடிக்கைகளைக் கூட அரசாங்கம் மேற்கொள்ளாது என்பது மக்களுக்குத் தெளிவாக விளங்கிவிட்டது. ஏன், "அது அப்படித் தான்" என்பது ஒரு சம்பிரதாயம் போலவே ஆகிவிட்டிருக்கிறது. எனவேதான், இந்த நாட்டில் ஆங்கில அதிகாரம் ஒழியவேண்டும் என்கிறோம்" என்றார் மாளவியா.

மோதிலால் நேருவின் திருத்தத்தை ஆதரித்துப் பேசினார் ஜின்னா. "ஒரு வட்டமேசை மாநாடு கூட்டவேண்டுமென்பது மோதிலால் நேருவின் கோரிக்கை; உள்துறை உறுப்பினரோ அலுவலக விசாரணை நடத்தலாம் என்கிறார். ஏன் நீங்கள், மறைவாக நிருவாக அறைக்குள்ளே உட்கார்ந்து கொள்ளப் பார்க்கிறீர்கள்? விவகாரங்களை எங்கள் முதுகுக்குப் பின்னாலேயே முன்னும் பின்னுமாக நகர்த்திக் கொண்டிருப்பதில் உங்களுக்கு ஏன் இத்தனை ஆசை? நீங்களே முடிவு செய்து கொண்டு, நீங்களே திட்டம் தீட்டிக் கொண்டு, நடைமுறைப் படுத்துவது சங்கடமாக இருக்கிறது என்று எங்களுக்கு நொண்டிச் சமாதானங்கள் சொல்வானேன்? உங்கள் திட்டம் வண்டிக்குப் பின்னால் குதிரையைப் பூட்டிய கதையாகவே இருக்கிறது. நீங்கள் (நாட்டு) மக்களோடு இணங்கிச் செல்லவேண்டும் என்பதே எங்கள் கோரிக்கை. அதற்கு ஏற்ற நடவடிக்கைகளை மேற்கொண்டு, நீங்கள் மக்களின் ஆதரவைப் பெறவேண்டும் என்பதே எங்கள் ஆசை" என்று இடித்துரைத்தார் ஜின்னா.

அடுத்துப்பேசிய வித்தல்பாய் படேல், ஆட்சியியல் முன்னேற்றத்துக்கான காங்கிரஸ் கோரிக்கையின் வரலாற்றை விவரித்தார்: சரியோ, தவறோ, இந்தியத் தேசீயக் காங்கிரஸ் இன்னமும் பூரண சுதந்திரம் கேட்கவில்லை. அதற்குள்ளாகவே பிரிட்டிஷ் அரசாங்கமும் அரசியல்வாதிகளும் நடுங்க ஆரம்பித்துவிட்டார்கள். இந்திய மக்கள் "படிப்படியான நடவடிக்கை"களை எதிர்பார்த்துக் காத்திருக்க இனி தயாராக இல்லை; சுயராச்சியத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பெறுவதற்காகவும் நாங்கள் போராடிக் கொண்டிருக்கப் போவதில்லை. "எங்களுக்கு வேண்டியது முழுமையான பொறுப்பாட்சி; அது உடனடியாகக் கிடைத்தாக வேண்டும். இதுதான் எங்கள் அனைவரின் நோக்கம்; இதுதான் இந்தியத் தேசீயக் காங்கிரசின் எண்ணம். இதிலே எந்த ஐயப்பாட்டுக்கும் இடமில்லை; இதைப்பற்றி நாம் வழவழா கொளகொளா என்று பேசிக் கொண்டிருக்கத் தேவையில்லை" என்று அறுதியிட்டுக் கூறினார் படேல்.

அடுத்து எழுந்த ஆர். கே. சண்முகம் செட்டி நிலைமைகளை அப்பட்டமாக விளக்கினார்: அரசியல் அடிமைத்தனத்தில் உழலும்

சமுதாயம் எதுவும் தேக்கமடைந்துதான் கிடக்கும்; அதிலே சமுதாய முன்னேற்றம் ஏற்பட வழியில்லை. இந்தியர்கள் சீரான சமுதாயமாக உருவான பிறகுதான் சுதந்திரம் வழங்கவேண்டும் என்று அரசாங்கம் காத்திருந்தால், உலகத்தின் கடைசி நாள் வரை அவர்கள் காத்திருக்க வேண்டியதுதான். ஏனென்றால், இப்போது உள்ள அரசியல் அமைப்பு முறையில், இந்தியர்கள் என்றைக்குமே குறையில்லாத சமுதாயமாக உருவாகப் போவதில்லை. இந்திய மக்கள் மாறுதலை விரும்புகிறார்கள் என்பது இப்போது தெளிவாக விளங்கி விட்டது. பொதுமக்களின் அபிப்பிராயத்துக்குக் கட்டுப்பட்டு மக்களோடு இணங்கிப் போக அரசாங்கம் தயாராக இல்லை என்றால், — இதையேதான் அரசாங்கம் தன் கொள்கையாகக் கடைப்பிடிக்கப் போகிறது என்றால்,—இந்திய மக்கள் அனைவரின் சார்பிலும் கூறிக்கொள்கிறேன், அரசாங்கத்தின் எந்த அடக்கு முறையும் மக்களை அடக்கி வற்புறுத்தப் போவதில்லை!'' என்று அரசாங்கத்தை எச்சரித்தார் அவர்.

அடுத்துப் பேசிய சமன்லாலும் அதையே அடித்துக் கூறினார்: பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவுக்கு முழு டொமினியன் அந்தஸ்து வழங்க வேண்டிய நேரம் வந்துவிட்டது. இந்திய அரசாங்கத்திடம் அடிப்படைக் கொள்கை எதுவும் இல்லை; அதனிடம் இருப்பதெல்லாம் விமானங்களும் துப்பாக்கிகளும்தாம். ஆகையால், இந்தியாவில் புரட்சி வெடித்துக் கொண்டிருப்பதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. இந்தியாவுக்கு டொமினியன் உரிமை வழங்கினால் இங்கே அராஜகம் ஏற்படும் என்று மதிப்புக்குரிய உள்துறை உறுப்பினர் பயப்படுகிறார். "நான் அவருக்குச் சொல்லிக்கொள்ள விரும்புவதெல்லாம் இதுதான்: இன்றைக்கே இந்த நாட்டில் அராஜகம்தான் தாண்டவமாடுகிறது; கொஞ்சம் கொஞ்சமாக இந்த நாட்டைச் சுரண்டிச் சுரண்டி இதை வறுமை நாடாக்கிக் கொண்டிருப்பவர்களே இந்த அராஜகத்துக்குக் காரணமான பெரிய அராஜகவாதிகள்!'' என்றார் சமன்லால்.

இந்திய வணிகக் கழகத்தின் பிரதிநிதியான புருஷோத்தமதாஸ் தாகுர்தாஸ், மோதிலால் நேருவின் தீர்மானத்தை ஆதரித்துப்

பேசுகையில், இப்போது உள்ள நிலைமைகளால் இந்தியா எங்கும் பரவலான அதிருப்தியே ஏற்பட்டிருக்கிறது என்றார். "நிருவாகத்தை மக்கள் பிரதிநிதிகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கச் செய்யக் கூடிய ஓர் அமைப்பே இப்போது தேவை. அதன் மூலம்தான், நிதி மற்றும் பல விவகாரங்களில் சட்டசபைக்கு உள்ள அதிகாரங்கள் பெருகும்; அதன் மூலம்தான் சட்டசபைக்கே முழுமையான ஆட்சி அதிகாரம் வேண்டும் என்கின்ற நமது இறுதி லட்சியம் தட்டுத் தடங்கலில்லாமல் நிறைவேறும்" என்று விளக்கினார் புருஷோத்தமதாஸ்.

சி. துரைசாமி அய்யங்கார், "இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி கிடைத்து விட்டால் இங்குள்ள ஐரோப்பியர்களின் நலன் பாதிக்கப்படும் என்று அஞ்சத் தேவையில்லை. அது பத்திரமாக, மிகப் பத்திரமாக இருக்கும்; இந்திய அரசாங்கத்தின் தலைநகர் இப்போது எவ்வளவு பாதுகாப்பாக இருக்கிறதோ, அதைவிடப் பத்திரமாக இருக்கும்" என்று உறுதியளித்தார்.

ரங்காச்சாரியாரின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய சிவசாமி அய்யர், அரசாங்கத் தரப்பு விவாதத்திலுள்ள பிழைபாடுகளை எடுத்துக்காட்டினார். "சீர்திருத்தச் சட்ட நடைமுறையின் முதல் கட்டமே இன்னும் பரிசீலிக்கப்படவில்லை என்பது முற்றிலும் தவறு. முதலாவது சட்டசபை கணிசமான வேலை செய்துள்ளது; அந்தச் சபையின் வேலைத்திறம் அதிகார வட்டாரங்களாலேயே பாராட்டப்பட்டுள்ளது. இந்தியர்களில் பெரும்பகுதியினர் சட்டசபைகளோடு தொடர்பு படவில்லை என்றும் சீர்திருத்தச் சட்டத்தைச் செயல்படுத்துவதில் அவர்கள் அக்கறை காட்டவில்லை என்றும் உள்துறை உறுப்பினர் சொன்னார். ஆனால், அவர்கள் விரும்பவில்லை என்பதாலேயே, அதைச் செயல் படுத்த அவர்களுக்குத் தகுதியில்லை என்று ஆகிவிடாது என்று அவருக்கு நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஒதுங்கி நிற்பவர்கள் எடுத்துரைக்கும் காரணங்கள் அடிபடும் விதமாகச் சீர்திருத்தச் சட்டத்தின் அடுத்த நடவடிக்கை மேற்கொள்ளப்படுமானால், ஒத்துழையாமைக்காரர்களாகிய அவர்களே அரசாங்கத்தோடு ஒத்துழைக்க ஓடோடி வருவார்கள் என்பதே என் கருத்து."

அரசுத் தரப்பு வாதத்தை ஏற்காத அய்யர், வட்டமேசை மாநாடு வேண்டும் என்ற (மோதிலால் நேருவின்) கோரிக்கையையும் ஏற்கவில்லை. அதேபோல் அலுவலக விசாரணைத் திட்டமும் அவருக்கு ஏற்கத் தக்கதாக இல்லை. இதுபற்றிப் பரிசீலனை செய்ய ராயல் கமிஷன் அமைப்பதையே அவர் விரும்பினார்.

எச். எஸ். கௌர், பிபின் சந்திர பால் போன்ற சுயேச்சை உறுப்பினர்கள், இதுபற்றி ஆராய ஒரு கூட்டு மாநாடு அல்லது கூட்டுக் கமிட்டி அமைக்கலாம் என்றும் அதற்கு உகந்த வகையில் அரசாங்கமும் தேசியக் கட்சியாரும் ஓர் இணக்கத் திட்டத்தை வகுத்துக் கொள்ளவேண்டும் என்றும் ஆலோசனை கூறினார்கள். அதை யாரும் கேட்கவில்லை.

இறுதியாக மோதிலால் நேருவின் தீர்மானம் ஓட்டுக்கு விடப் பட்டது; தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களில் அநேகமாக எல்லோரும் எதிர்க்கட்சியுடன் சேர்ந்ததால், தீர்மானம் 64க்கு 48 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. அரசாங் கத்துக்கு எதிராகத் தேசியக் கட்சிக்குக் கிடைத்த மாபெரும் வெற்றி இது. பின்னர் "தேசியக் கோரிக்கை" என்று பெயர் சூட்டப்பட்டு ஏற்றுப் போற்றப்பட்ட இந்தத் தீர்மானத்துக்குக் கிடைத்த வெற்றியைச் சாதாரண வெற்றி என்று சொல்ல முடியுமா?

## முடிமன் குழு அறிக்கை:

இந்தியாச் சட்டத்தை மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்று சட்டசபை நிறைவேற்றிய தீர்மானத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற கட்டாயம் எதுவுமில்லை. ஆனாலும், அந்தச் சட்டத்தின் செயல்முறை பற்றி ஆராய்வதற் காக, புதிதாக உள்துறை உறுப்பினராக நியமிக்கப்பட்ட சர் அலெக்ஸாண்டர் முடிமன் தலைமையில் ஒரு குழுவை இந்திய அரசாங்கம் நியமித்தது. இந்தக் குழு எந்த அடிப்படையில் பணிபுரிவது என்பது பற்றி அறிவிக்கப்பட்ட விதிமுறை விசால மற்றது. 1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டம் செயல்படுத்தப் படும்போது சிரமங்கள் ஏற்படுகின்றனவா என்பதை இந்தக்குழு

ஆராய வேண்டும்; அதில் சிரமம் இருப்பதாகத் தெரிந்தால், அது நீக்கப்பட வேண்டுமா, நீக்கப்பட முடியுமா என்பதை ஆராய வேண்டும். அப்படி, ஆராயும் போது, (இந்தியாச்) சட்டத்தின் அமைப்புக்கும் அடிப்படையான நோக்குக்கும் கொள்கைக்கும் புறம்பாகப் போய்விடக் கூடாது. இந்த நிபந்தனைக்கு உட்பட்டே, இது தொடர்பாக மேற்கொள்ள வேண்டிய நிருவாகச் சீர் திருத்தங்களுக்குத் தேவையான சட்டத் திருத்தத்தை இக்குழு சிபாரிசு செய்ய வேண்டும். இதுதான் இக்குழுவினருக்கு விதிக்கப்பட்ட—அவர்களுடைய சுதந்திரத்தை வெகுவாகக் கட்டுப் படுத்திய—விதிமுறையாகும்.

ஏகமனதான முடிவுகளுக்கு வரமுடியாததால், இந்தக் குழு, இரண்டு அறிக்கைகளைத் தயாரித்து வழங்கியது: குழுவின் பெரும்பான்மையினர் கொடுத்த அறிக்கையில் ஐந்துபேர் கை யொப்பமிட்டிருந்தார்கள்; சிறுபான்மையினர் கொடுத்த அறிக்கை யில் (எம். ஏ. ஜின்னு, டி. பி. ஸப்ரூ, சிவசாமி அய்யர், பராஞ்சிபே ஆகிய) நான்குபேர் கையொப்பமிட்டிருந்தார்கள். இரண்டு அறிக்கைகளும் அடிப்படையிலேயே வேறுபட்டன. (இந்தியாச்) சட்டத்திலும் அதைச் செயற்படுத்துவதற்கு வகுக்கப்பட்ட விதி முறைகளிலும் இருந்த சங்கடங்களைக் குறிப்பிட்டு, சட்டத்தின் அடிப்படை அமைப்புக்குக் குந்தகம் விளைக்காத சில திருத்தங்களை மட்டும் பெரும்பான்மையினர் அறிக்கை தெரிவித்தது. இதற்கு மாருக, சிறுபான்மையினர் அறிக்கை, இந்தக் குழுவுக்கு விதிக்கப் பட்ட கட்டுப்பாடுகளுக்கு அப்பால் சென்று, இப்போது உள்ள அரசியல் சட்ட அமைப்பே மாற்றப்பட வேண்டும் என்று தெரிவித்தது. நடைமுறையிலிருக்கும் இரட்டைஆட்சி முறை தோல்வியடைந்து விட்டது என்றும், அதை மாற்றி ஒற்றையாட்சி அடிப்படையில் அமைந்த மாநிலப் பொறுப்பாட்சியை ஏற்படுத்த வேண்டும் என்றும் அந்த அறிக்கை விளக்கியது.

1925 செப்டம்பர் 7ஆம் தேதி, பெரும்பான்மையினர் அறிக்கை யின் அடிப்படை நோக்கை ஏற்றுக்கொண்டு, அறிக்கையில் கண்ட சிபாரிசுகளுக்கேற்ப அரசாங்க எந்திரத்தில் மாறுதல்கள் செய்யுமாறு கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானம்

ஒன்றை உள்துறை உறுப்பினர் கொண்டுவந்தார். இந்தியாவின் அரசியல் அமைப்பிலும் நிருவாகத்திலும் அடிப்படையான பல மாறுதல்கள் செய்யப்பட வேண்டும் என்று கோரும் திருத்தம் ஒன்றைக் கொணர்ந்தார் மோதிலால் நேரு. இதை விளக்கிப் பேசுகையில், சட்டசபை 1924 பிப்ரவரி 18ல் திருத்தத்தோடு நிறை வேற்றிய தீர்மானத்தில் எடுத்துரைக்கப்பட்ட கோரிக்கையை மீண்டும் வலியுறுத்தினார் அவர். அவர் மேலும் பேசுகையில், கவர்னர் ஜெனரல் சட்டசபைக்கே கட்டுப்பட்டவர் என்றும் (லண்டனிலுள்ள) இந்தியா மந்திரியின் நிருவாக சபையைக் கலைத்துவிட வேண்டும் என்றும் எடுத்துரைத்தார். ஒரு குறிப் பிட்ட குறுகிய காலத்துக்குள் இந்திய ராணுவம் தேசிய மயமாக்கப்பட வேண்டும், மத்திய மாநிலச் சட்டசபைகள் முழுமையும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையே கொண் டவைகளாக அமைய வேண்டும், மாநிலங்களில் இரட்டை ஆட்சி ஒழிக்கப்பட்டு சுயாட்சி உரிமையுள்ள பொறுப்பான ஒற்றை யாட்சிகள் ஏற்படுத்தப்பட வேண்டும் என்று கோரிக்கைகளை அடுக்கினார் நேரு.

மோதிலால் நேருவின் திருத்தம் மேலும் கோரியதாவது: கவர்னர் ஜெனரல் சட்டசபையைக் கலந்து "இந்தியர், ஐரோப் பியர், ஆங்கிலோ இந்தியர் முதலான எல்லாத் தரப்பினருக்கும் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கும் பேரவை அல்லது வட்ட மேசை மாநாடு அல்லது உகந்த ஒரு சந்திப்பு ஏற்பாட்டைச்" செய்ய வேண்டும். இந்தக் கூட்டு அவையினர், எல்லாத் தரப் பினரின் நலன்களையும் பாதுகாக்கும் விதத்திலும் மேலே எடுத் துரைத்த அரசியல் அமைப்பின் படியும் விவரமான திட்டம் ஒன்றை வரைய வேண்டும். இந்தத் திட்டம் சட்டசபையில் பரிசீலிக்கப்பட்டு, அரசியல் சட்டக் கோவையில் சேர்க்கும் பொருட்டு பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கு அனுப்பி வைக்கப்பட வேண்டும்.

மேலே சுட்டிக்காட்டியது போல, 1924 பிப்ரவரி 18ல் நிறை வேற்றப்பட்ட தேசீயக் கோரிக்கையின் விரிவான வடிவம்தான் இந்தப் புதிய கோரிக்கை. ஆனாலும், நாட்டுமக்கள் அனைவரின் ஒருமித்த ஆதரவைக் கவர்வதற்காக இதில் சிறிய மாறுதல்

செய்யப்பட்டது. அதாவது, அதிலே வட்டமேசை மாநாடுதான் கூட்ட வேண்டுமென்று வற்புறுத்தப்பட்ட கோரிக்கை சிறிதே தளர்த்தப்பட்டு, வட்டமேசை மாநாடு அல்லது அது போன்ற தொரு பேரவை, என்று இப்போது கேட்கப்பட்டது.

இந்தத் திருத்தத்தைப் பற்றிப் பேசுகையில் நிருவாகம் சட்ட மன்றத்துக்குக் கட்டுப்பட்டுச் செயலாற்ற வேண்டும் என்பதே இதன் மூலக்கோரிக்கை என்ருர் மோதிலால் நேரு. ஒரு குறிப் பிட்ட அளவு வரையிலான ராணுவச் செலவு, அரசியல் மற்றும் வெளி விவகாரச் செலவுகள், கடன்கள் மற்றும் அவை தொடர் பான பொறுப்புக்கள் ஆகிய சிலவற்றில் மட்டுமே நிருவாகத் துக்குத் தனி அதிகாரம் இருக்கலாம் என்றும் அவர் தெரிவித்தார். நேரு விளக்கிய இந்தத் திட்டம் ராணுவத்தைக் கட்டுப்படுத்தும் பொதுவான அதிகாரங்களைக் கூட கவர்னர் ஜெனரலுக்கு வழங்கியது. ஆனால், இப்போது தீர்வு காண்பதற்குரிய ஓர் ஆலோசனை என்ற அளவில் இது தரப்படுவதாலேயே இதில் நிருவாகத்துக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் சில சலுகைகள் தரப் பட்டுள்ளன என்று விளக்கினர் நேரு.

"நாங்கள் வழங்கும் இந்த ஆலோசனைகள் தேசீயவாதிகள் அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டவை. இந்தச் சிக்கலில் ஒரு தீர்வு கண்டாக வேண்டும் என்ற ஆர்வத்தினலேயே, பல வற்றில் (அரசாங்கத்துக்கு) விட்டுக்கொடுக்கும் இந்தத் திட்டம் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது என்பதையும் நான் இங்கே தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த அவையிலும் வெளியிலும் உள்ள மற்ற தேசீயவாதிகளைப் போலவே, சுய ராச்சியக் கட்சியாரும் இந்த ஆலோசனைக்குக் கட்டுப்பட்டுச் செயலாற்ற இசைந்திருக்கிருர்கள் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனல், எந்த நல்ல நோக்கத்தோடு இந்த ஆலோசனை வழங்கப்படுகிறதோ அந்த நோக்கில், தீர்வு காண் பதற்கான ஆர்வமாக இது ஏற்றுக் கொள்ளப்படாவிட்டால் அதன் பிறகு இது யாரையும் கட்டுப்படுத்தாது; மற்றவர்கள் எப்படி இருந்தாலும், அதன் பிறகு சுயராச்சியக் கட்சியார்

இதற்குக் கட்டுப்பட்டோர் ஆகமாட்டார்கள் என்பதையும் இப்போதே தெரிவித்துக் கொள்ளுகிறேன்" என்றார் நேரு.

முந்தின தடவையைப் போலவே, இப்போதும் திருத்தத்தை அலசி ஆராய்ந்து விளக்கி, நேருவின் கட்சியை ஆதரித்தார் ஜின்னா. பிரிட்டிஷ் அதிகாரிகளும் அரசியல்வாதிகளும் பிரமாதப் படுத்திய "சங்கடங்களை"க் குறிப்பிட்டு அவர் பேசிய பேச்சில் ஏளனமும் கிண்டலும் கலந்திருந்தன.

"இந்தியா ஒரு தனித்த மக்கள் இனத்தைக் கொண்ட நாடு அல்ல என்று (இப்போது) சொல்கிறீர்கள். ஆனால், உலகயுத்தம் நடந்து கொண்டிருந்த போது,—எங்கள் பணமும் உயிரும் உங்களுக்குத் தேவைப்பட்டபோது,—இதே இந்தியா தனித்த மக்கள் இனத்தைக் கொண்ட ஒரு நாடு என்று ஒப்புக் கொள்ளப்பட்டது; பிரான்சில் சமாதான ஒப்பந்தம் கையெழுத்தானபோதும் இந்தியா அப்படி ஒரு நாடாக ஒப்புக்கொள்ளப்பட்டது; சர்வதேச சங்கத்தில் நாங்கள் ஓர் உறுப்பினரானபோது,—நாங்கள் கணிசமான உதவியைச் செய்து வருவதாலோ என்னவோ,—மீண்டும், நாங்கள் தனித்த ஓர் மக்கள் இனம் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது; சாம்ராச்சிய மாநாட்டுக்கு எங்கள் பிரதிநிதி அனுப்பப்பட்ட போதும் இதே அந்தஸ்து எங்களுக்கு வழங்கப்பட்டது. இந்தச் சமயங்களிலெல்லாம் நாங்கள் உங்களுக்குத் தேவையாக இருந்தோம்; உங்களோடு சேர்ந்து பொறுப்புக்களைச் சுமந்தோம். அப்போதெல்லாம் எங்களை தனித்த ஒரு மக்கள் இனம், தனித்த ஒரு நாடு என்று சொன்னீர்கள். ஆனால், எங்களுக்குப் பொறுப்பாட்சி கிடைக்கிற விதத்தில் அரசியல் சீர்திருத்தம் வேண்டும் என்று நாங்கள் கேட்க வந்தால், இந்தியா தனித்த மக்கள் இனத்தைக் கொண்ட நாடு அல்ல என்கிறீர்கள்!" என்று சாடினார் ஜின்னா.

ரோகில்கண்டைச் சேர்ந்த மௌல்வி முகம்மது யாகூப் திருத்தத்தை ஆதரித்துப் பேசும்போது பழைய கோரிக்கையை நினைவூட்டினார். "அகில இந்திய முஸ்லிம் லீக் 1924 மே மாதத்தில் சுதந்திரக் கோரிக்கையைப் பற்றியும் அதற்கான திட்டங்களில் முஸ்லிம்களின் நலன்களைப் பாதுகாப்பது பற்றியும் நிறைவேற்றி

யுள்ள தீர்மானத்தை நினைவுபடுத்த விரும்புகிறேன். அதற்கு இசைய முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதி என்ற ஏற்பாட்டுடன் இங்கே சுயராச்சியத்தை, அதாவது பொறுப்பாட்சியை ஏற்படுத்த விரைவாகவே நடவடிக்கை எடுக்க வேண்டும். இந்தக் காரியத்தைச் செய்யவேண்டுமானால், இந்தியாச் சட்டத்திலுள்ள குறைபாடுகளை நீக்குவதற்கான விசாரணைக் குழு அமைத்தால் போதாது; அந்தச் சட்டத்தையே முழுக்க முழுக்க மாற்றி அமைத்தாக வேண்டும்'' என்றார் அவர்.

மத்திய மாகாண நிலச்சுவான்தார்களின் பிரதிநிதியான ஸேத் கோவிந்த தாஸ் மோதிலால் நேருவின் திருத்தத்தை ஆதரித்துப் பேசும்போது, நிலச்சுவான்தார்கள் அரசாங்கத்தை ஆதரிக்கிறார்கள் என்ற குற்றச்சாட்டை மறுத்தார்.

''தங்கள் நலன் நாட்டிலுள்ள மற்றவர்களின் நலனுக்கு அப்பாற்பட்டதல்ல என்பதை நிலச்சுவான்தார்கள் தெளிவாக உணர்ந்துள்ளார்கள். திருப்திகொண்டதொரு குடியாள் வகுப்பும், செல்வச் செழிப்பான விவசாயிகளும், வளர்ச்சியடையும் வியாபாரிகளும் இருந்தால்தான் இந்த நாட்டு நிலச்சுவான்தார்கள் நல்வாழ்வு வாழ முடியும். எனவே, என் சார்பாகவும் என்போன்ற மற்ற நிலச்சுவான்தார்களின் சார்பாகவும் தலைவர் மோதிலால் நேருவின் தீர்மானத்தை நான் முழு மனத்தோடு ஆதரிக்கிறேன்'' என்று உறுதி கூறினார் ஸேத் கோவிந்த தாஸ்.

பீகார், சோட்டாநாக்பூர் பிரிவைச் சேர்ந்த தேவகி பிரசாத் சின்ஹா, இந்தப் பிரச்சினையின் பொருளாதார அம்சங்களை விவரித்து, இந்த நாட்டின் முன்னேற்றத்தைக் கருதியே ஆட்சி செய்கிறோம் என்று பசப்புகிற பிரிட்டிஷ் அரசாங்கத்தை வன்மையாகக் கண்டித்தார்.

''இந்திய முதலாளிகளுக்கும் ஐரோப்பிய முதலாளிகளுக்கும் இடையே சரியான லாபப் பங்கீட்டைச் செய்து அவர்களின் நலனைப் பேணுவதுதான் பொறுப்பாட்சி என்று நீங்கள் கருதுவதாகத் தெரிகிறது. ஆனால், இந்த நாட்டுப் பொதுமக்களைப் பொறுத்தவரை இது அல்ல பொறுப்பாட்சி. பொறுப்பாட்சிக்

கோரிக்கை இந்த நாட்டு மக்களின் லட்சியமாக நின்று அவர்களுக்கு எழுச்சி ஊட்டுகிறது என்றால், தங்களுக்கு அதன் மூலம் பொருளாதார விடுதலை கிட்டுமென்று அவர்கள் நம்பி எதிர் பார்ப்பதே காரணம்; அன்றாட வாழ்வில் அவர்களுக்கு இழைக்கப் பட்டு வரும் இன்னல்களிலிருந்தெல்லாம் விடுதலை கிடைக்கும் என்று அவர்கள் நம்புவதே காரணம்'' என்றார் சின்ஹா.

தாங்களே இந்தியப் பொதுமக்களின் காவலர்கள் என்று உரிமை கொண்டாடும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முகமூடியைக் கிழித்தெறிந்தார் என். எம். ஜோஷி. ''சட்டக்கோவையில் தொழிலாளர் நலச் சட்டங்கள் சிலவும் இடம் பெற்றிருக்கின்றன என்பது உண்மைதான். ஆனால், அவை நிறைவேற்றப்பட்ட வரலாறு என்ன? ஒன்று, லங்காஷயர் முதலாளிகளின் விருப்பப் படி நிறைவேற்றப்பட்டது; அல்லது உலகெங்கும் ஏற்பட்டு வரும் நெருக்கடிகள் மற்றும் தொழிலாளர் நிறுவனங்களின் நிர்ப்பந்தங்களால் நிறைவேற்றப்பட்டது.'' இவ்வாறு விளக்கி, மோதிலாலின் திருத்தத்தை ஆதரித்த ஜோஷி, வாக்குரிமை பற்றி அந்தத் திருத்தத்தில் உள்ள வாசகங்கள் அவ்வளவாகத் திருப்தி யளிக்கவில்லை என்றார். சொத்துடைமையைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல், வயது வந்த ஒவ்வோர் ஆணுக்கும் பெண்ணுக்கும் வாக்குரிமை வழங்கப்பட வேண்டும் என்பது திருத்தத்தில் தெளிவாகச் சொல்லப்பட வேண்டும் என்று அவர் விரும்பினார். வேலை வாய்ப்பு வழங்கும் வகுப்பினர்கள் அவரவர் வகுப்பு நிறுவனங்களின் பேரால் தனியே தேர்ந்தெடுக்கப்பட்டு இங்கே பிரதிநிதித்துவம் பெற்று வருவதுபோல உழைப்பாளர்களும் தங்கள் நிறுவனங்களின் சார்பில் சட்டசபையில் பிரதி நிதித்துவம் பெற உரிமை இருக்கவேண்டும் என்றும் வற்புறுத் தினார் ஜோஷி.

1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டத்தின்படி நடைபெறும் இந்திய அரசாங்கத்தின் நிலையை அலசி ஆராய்ந்தார் ரங்கசாமி அய்யங்கார். ''இந்திய அரசாங்கம் என்பது ஒரு கூட்டுரிமைக் குழுவால் நடத்தப்படுகிறது. இந்த நாட்டைத் தனது உடைமை யாக்கி அதைச் சுரண்டுவதே அதன் நோக்கம். முன்னால் கம்பெனிக்கும் அதன் பங்குதாரர்களின் நலன்களுக்கும் இயங்கிய

அது இப்போது பிரிட்டிஷ் முதலாளிகளுக்கும் நிருவாகத்தில் உள்ள பிரிட்டிஷ்காரர்களுக்குமே இருக்கிறது." இவ்வாறு விவரித்த அய்யங்கார், இத்தகைய உடைமை உரிமை சார்ந்த கொள்கைகள் நிலவும்வரை, உரிமைக் கும்பல்களின் நலன்கள் பேணப்படும் வரை, "இந்தியாவைச் சுய ஆட்சிக்கு வழி நடத்துவதே எங்கள் லட்சியம்" என்று இந்திய அரசாங்கம் சொல்லிக் கொண்டிருப்பது வீண்பேச்சே என்று அரசாங்கத்துக்கு அறிவுறுத்தினர். அதே சமயம், "இப்படி ஒரு கூட்டுரிமைக் குழு இருந்து வருவதை, அதன் சொந்த நலன்கள் பாதுகாக்கப் படுவதை, பிரிட்டிஷ் ஊழியர்களுக்காகவும் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் முதலாளிகளுக்காகவும் இந்த நாடு தொடர்ந்து சுரண்டப்படுவதை, நாங்கள் நீண்டநாள் அனுமதிக்கப் போவதில்லை!" என்றும் கடுமையாக எச்சரித்தார்.

அடுத்துப் பேசிய டி. சி. கோஸ்வாமியின் பேச்சு உணர்ச்சி மயமாகவும் காரசாரமாகவும் இருந்தது:

"இங்கே அமர்ந்திருக்கும் என் நாட்டு நண்பர்களை நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால், இங்கே நிறைவேற்றப்படும் இந்த (நேரு)த் தீர்மானத்தைச் செயல் படுத்திக் காண நாம் ஆயத்தமாக இல்லை என்றால், இந்தத் தீர்மானத்தையே இங்கே நாம் நிறைவேற்ற வேண்டியதில்லை. (உற்சாக ஆரவாரம்). இந்தத் தீர்மானத்துக்கு ஆதரவாக வாக்களிக்கின்ற ஒவ்வொருவரும் அதைச் செயல்படுத்திக் காண்பது என்று திடமாக உறுதி எடுத்துக் கொள்ளவேண்டும்; சாவே எதிர்நோக்கினாலும் அதிலிருந்து பின்வாங்குவதில்லை என்று உறுதி பூணவேண்டும். இதற்கு நீங்கள் தயாராக இல்லை என்றால் இந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டாம், நிறைவேற்றவே வேண்டாம்!" (உற்சாக ஆரவாரம்).

கோஸ்வாமி தொடர்ந்து உரையாற்றுகையில், "இருதரப்பினரின் நலன்களையும் சுமுகமான முறையில் நிலைநாட்டிக்கொள்ள வேண்டும் என்ற கொள்கையைச் சுயராச்சியக்கட்சி ஏற்றுக் கொண்டிருக்கிறது. சுமுகமான தீர்வில் அது மிகுந்த ஈடுபாடும் கொண்டிருக்கிறது. ஆனால், இது போன்ற சாதாரண ஈடுபாட்டை

யும் மீறிய ஈடுபாடு ஒன்று இருக்கிறது. அதுதான், மக்களாகப் பிறந்த எல்லாரும் தங்கள் உரிமையின் மீது கொண்டிருக்கும் ஈடுபாடு. (அந்த ஈடுபாட்டின் விளைவாக, எங்கள் உரிமையைப் பெறும் நோக்குடன்) மிகச் சுலப சாதாரணமான ஒரு திட்டத்தைச் சுயராச்சியக் கட்சி தந்துள்ளது; நமக்குள்ளே இணக்கத்தை ஏற்படுத்த உதவும் நல்ல திட்டம் அது. இந்தத் திட்டம் புறக்கணிக்கப்படுமானால், அதாவது பிரிட்டிஷ் சாம்ராச்சியத்துக்கு உட்பட்ட சுதந்திரம் எங்களுக்கு மறுக்கப்படுமானால், அதை விட்டு வெளியேறி நாங்கள் சுதந்திர இந்தியாவை நிர்மாணிப்போம் என்பதை உறுதியாகவும் சந்தேகத்துக்கு இடமில்லாமலும் தெரிவித்துவிட விரும்புகிறேன்!'' என்று முழங்கினார்.

இணக்கமும் எதிர்ப்புணர்ச்சியும் கலந்த, இந்த விதமான ஒரு தோரணையில்தான், இந்தத் தீர்மானத்தின் மீதான விவாதம் நடைபெற்றது. இறுதியாக, ஓட்டுக்கு விடப்பட்ட போது, நேருவின் தீர்மானம் 72க்கு 45 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது; அரசாங்கம் இந்த முறையும் தோல்வியைத் தழுவியது.

அரசாங்கத்தின் தீர்மானம் ராச்சியக் கவுன்சிலில் கொண்டு வரப்பட்ட போது, ஃபிரோஸ் ஸேத்னா அதற்கு ஒரு திருத்தத்தைக் கொணர்ந்தார். அதுவும் மோதிலால் கொண்டுவந்த திருத்தத்தைப் போன்றதே. ''பெரும்பான்மையினரின் அறிக்கையைப் பெரிதுபடுத்தும் அரசாங்கத்தை நான் ஒன்று கேட்கிறேன்: பெரும்பான்மை அறிக்கையில் கையொப்பமிட்ட ஒரே ஒருவர் சிறுபான்மையினர் அறிக்கையில் கையொப்பமிட்டு, அதையே பெரும்பான்மையினரின் அறிக்கையாக்கியிருந்தால் நீங்கள் என்ன செய்திருப்பீர்கள்? தேசீயக் கட்சியின் கோரிக்கையை நீங்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டால், அதன் விளைவு அனைத்துக்கும் நீங்களே பொறுப்பாவீர்கள்'' என்று அரசாங்கத்தை எச்சரித்தார் ஸேத்னா. ஆனாலும், அவருடைய திருத்தம் 10க்கு 29 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது; அரசாங்கத்தின் தீர்மானம் 28க்கு 7 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

### வரவு செலவுத் திட்டமும் அறிவிப்புச் சட்டமும் மண் கவ்வின :

வரவு செலவுத் திட்டமும் அது தொடர்பான நிதி விவகாரங்களும் விவாதிக்கப்பட்டபோது, அரசாங்கம் தேசீயக் கட்சியிடம் பரிதாபமாகத் தோற்றது. 1924 மார்ச் 10 ஆம் தேதி அரசாங்கம் சுங்க இலாகாச் செலவுகளுக்கான மானியக் கோரிக்கையைச் சட்டசபையில் தாக்கல் செய்தது. மோதிலால் நேரு, இந்தக் கோரிக்கை கைவிடப்பட வேண்டும் என்ற தீர்மானத்தைக் கொண்டுவந்தார்.

தம்முடைய தீர்மானத்தை விளக்கிப் பேசுகையில், சுங்க இலாகாவிலுள்ள ஏதாவது குறைகளுக்காக எதிர்க்கவில்லை என்றும் அரசாங்கத்தின் செலவுக்குப் பணம் கொடுக்கக் கூடாது என்ற பொதுவான கொள்கையின் அடிப்படையிலேயே கோரிக்கையை எதிர்ப்பதாகவும் அவர் தெரிவித்தார். கடந்த மாதம் சட்டசபை மிகுந்த பெரும்பான்மை வாக்குகளால் அரசியல் சீர்திருத்தம் சம்பந்தமான ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது ; அரசாங்கம் அதைப் பற்றித் திருப்திகரமான நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை என்று சொல்லி மோதிலால் நேரு தொடர்ந்து விளக்கினார்.

"இப்போது உரிய நடவடிக்கை எடுக்க வேண்டியது (பொருளை உரியவரிடம் சேர்ப்பிக்க வேண்டியது) தொழிற்கட்சி அரசாங்கத்தின் பொறுப்பு. எங்கள் பொருள் எங்களிடம் ஒப்படைக்கப் படாத வரை அதற்குரிய விலையைக் கொடுக்காமல் இருக்க எங்களுக்கு பூரண உரிமை உண்டு. இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதன் மூலம், நான் ஏற்கனவே குறிப்பிட்டிருப்பது போல, அரசாங்கத்தின் தேவைகள் நிறுத்தப்பட்டுவிடப் போவதில்லை. இந்தப் போலிப் பாராளுமன்றத்தில் நாங்களும் மக்களின் பிரதிநிதிகளுக்கு உள்ள உரிமைகள் உடையவர்கள் போல நடிக்கிறோம். அவ்வளவே. ஆனாலும், இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதன் மூலம், எங்களுக்கு உள்ள உரிமையில் நாங்கள் எவ்வளவு அதிகமாகச் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்துவிட்டோம் என்று அரசாங்கத்துக்கு உணர்த்த முடியும். அது ஒன்றுதான் இந்தத் தீர்மானத்தின் பயன். சுதந்திரமான நாடுகளில் இப்படி ஒரு

தீர்மானத்தை (சட்டசபை) நிறைவேற்றினால் அது அப்படியே செயல்படுத்தப்படும். இங்கேயோ, அது அப்படியே புறக்கணிக்கப் படுகிறது. இது எங்கள் துரதிர்ஷ்டமே தவிர எங்கள் தவறல்ல; மற்றச் சுதந்திரமான நாடுகளில் இத்தகைய ஒரு தீர்மானம் செயல் படுத்தப்படுவது சாத்தியமாயிருக்கிறது; இங்கே அப்படி இல்லை'' என்றார் மோதிலால் நேரு.

ஜின்னா பேசுகையில், ''தேசீயக் கட்சி இதை எதிர்க்கிறது என்றால், அதன் கொள்கை என்று சொல்லப்படுகிற ''முட்டுக் கட்டை போடும் கொள்கை''யால் எதிர்க்கவில்லை. அரசியல் சட்டத்துக்கு உட்பட்ட நியாயமான கொள்கை ஒன்றை நிலை நாட்டவே அது எதிர்ப்புத் தெரிவிக்கிறது'' என்றார்.

''தேசீயக்கட்சி சட்டமறுப்பில் ஈடுபட வேண்டும் என்று நினைத்துக் கொண்டு இருக்கவில்லை; எந்தவிதமான புரட்சியையும் ஏற்படுத்தவும் அது நினைக்கவில்லை...நாங்கள் இந்திய அரசாங்கத் தைக் கண்டிக்கிறோம், இந்தியா மந்திரியைக் கண்டிக்கிறோம் என்றால், அப்படிச் செய்வது நியாயமாக இருப்பதனாலேயே கண்டிக்கிறோம். ஏன்? இங்கேயே சீர்திருத்தம் கோரும் தீர்மானம் ஒன்றை 76 வாக்கு வித்தியாசத்தில் நிறைவேற்றினோமே, அதற்கு நீங்கள் என்ன மதிப்பு அளித்தீர்கள்?'' என்று திருப்பினார் ஜின்னா.

நாகபுரியைச் சேர்ந்த எம். வி. அபயங்கரும் மானியக் கோரிக் கையை எதிர்த்தார். ''இந்தியாச் சட்டத்தை ஆராய்ந்தால், இந்திய அரசாங்கம் ஒரு பண்ணை நிருவாகம் போல இருக்கிறதே தவிர ஒரு நாட்டின் ஆட்சியாகத் தோன்றவில்லை. அதே போல், நமது வரவுசெலவு முறையை ஆராய்ந்தால், இந்திய மக்களின் பேரால் இங்கே அதிகார வர்க்கத்துக்கு முடிசூட்டப்பட்டிருக் கிறது என்ற எண்ணம்தான் முன்வந்து நிற்கிறது!'' என்றார் அபயங்கர்.

பிரிட்டிஷ் அரசாங்கம் 150 ஆண்டுகளாக இந்தியாவைச் சுரண்டி வந்திருக்கிற வரலாற்றை ஆதியோடு அந்தமாக விவரித்தார் வித்தல்பாய் படேல். ''150 ஆண்டுகளாக ஓர் ஆட்சி நடந்த பிறகு இங்கே ஏற்பட்டிருப்பது என்னவென்றால், 5 சதவீதம் மக்கள்

கல்வி அறிவு பெற்றிருக்கிறார்கள்; அனைத்து மக்களும் நிராயுத பாணிகளாக்கப் பட்டிருக்கிறார்கள்!'' என்று சாடிய படேல், அப்பட்டமாகவே உண்மைகளைப் பிட்டுவைத்தார்:

"எங்கள் நிலைமை தெளிவானது. அரசாங்கத்தின் தேவைகளை மறுப்பதன் மூலம் அரசாங்க நிருவாகத்தோடு எங்களுக்கு உள்ள உறவை முறித்துக் கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது என்பது எங்கள் எண்ணம். இதன் விளைவு என்ன என்பதை நாங்கள் அறியாமலில்லை. (நாங்கள் இந்தக் கோரிக்கையைத் தோற்கடித்தாலும்) வைசிராய் அறிவிப்புச் சட்டம் மூலம் அதை உயிர்ப்பிப்பார் என்று இங்கே சொல்லப்பட்டது. ஆம்; அப்படித் தான் செய்வீர்கள். நீங்கள் அப்படியே, ரத்து அதிகாரங்களையும் அறிவிப்புச் சட்டங்களையும் கொண்டே இந்த நாட்டை ஆள வேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கம். இந்தியாச்சட்டம் என்பது ஒரு வெற்றுத்தாள்; அதை நீங்களும் அப்படியே கொள்ள வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம். நீங்கள் எங்கள் கோரிக்கையை ஏற்கப் போகிறீர்களா அல்லது (அதை மறுத்து) எங்களைப் போராட்டப் பாதைக்குத் தள்ளப் போகிறீர்களா என்பதே கேள்வி. இரண்டில் எது நடந்தாலும், அதற்கு நீங்களே பொறுப்பு'' என்றார் படேல்.

இதுபோன்ற காரசாரமான விவாதங்களுக்குப் பிறகு வாக்கெடுப்பு நடந்ததில் நேருவின் தீர்மானம் 63க்கு 56 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. அரசாங்கத்தின் பாடு பெரிய சங்கடமாகப் போய்விட்டது. இதே போல, வேறு மூன்று மானியக் கோரிக்கைகளையும் சட்டசபை நிராகரித்தது. ஆனாலும், இந்தியாச் சட்டத்தின் கீழ் தமக்குள்ள தனி அதிகாரங்களைப் பயன்படுத்தி, அறிவிப்புச் சட்டத்தின் மூலம் அவைகளை மீட்டுக் கொண்டார் கவர்னர் ஜெனரல்.

அடுத்து வந்த நிதி மசோதாவும் இதே முடிவைத்தான் சந்தித்தது. மார்ச் 17ஆம் தேதி, நிதித்துறை உறுப்பினரான சர் பேஸில் பிளாக்கெட், நிதி மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று பிரேரேபித்தார். உடனேயே எதிர்க்குரலோடு எழுந்தார் பண்டித மதன் மோகன் மாளவியா.

"மிகுந்த பொறுப்புணர்ச்சியோடுதான் இதை நான் எதிர்க்கிறேன்" என்ற அவர், "நிதித்துறை உறுப்பினரின் உரையைக் கேட்ட பிறகு என்னுடைய நிலையில் உள்ள யாரும் இந்த மசோதாவின் பரிசீலனையை எதிர்ப்பதைத் தவிர வேறு வழியில்லை" என்று ஆணித்தரமாக மொழிந்தார். இந்தியத் தேசியக் கோரிக்கையின் வரலாற்றை விவரித்து, அதற்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் கொடுத்துள்ள மதிப்பு மிகமிக ஏமாற்றம் தருவதாக இருக்கிறது என்றும் அவர் குறைப்பட்டார். நடைமுறையில் உள்ள அரசியல் அமைப்பில், குறிப்பாக மத்திய அரசாங்கத்தைப் பொறுத்த அளவில், பல ஓட்டைகள் இருக்கின்றன என்றும் மாளவியா சுட்டிக் காட்டினார்:

"இன்றைய மத்திய அரசாங்க அமைப்பு காலத்துக்கு உகந்ததாகவோ போதிய பயன் விளைப்பதாகவோ இல்லை என்றும், அறிவுடையவர்கள் அதைக் கண்டித்து ஒதுக்குகிறார்கள் என்றும் நான் சொன்னால், இந்த மன்றத்திலும், வெளியே, நாட்டிலும் உள்ள பலர் அதை அப்படியே ஏற்பார்கள் என்றே நான் நம்புகிறேன்."

இந்த முன்னுரையோடு ஏளனத் தொனியில் அரசாங்க விமர்சனத்தில் இறங்கினார் மாளவியா: "இங்கே நடைபெறுகிற ஆட்சிமுறை இருக்கிறதே, அதற்கு ஈடும் கிடையாது; இணையும் கிடையாது. தனக்குத் தானே நிகரான இந்த ஆட்சி முறையில் வாக்காளர்கள் பெருகியிருக்கிறார்கள். இங்குள்ள உறுப்பினர்கள் அந்த வாக்காளர்களால் நேர்முகமாகவே தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் பொறுப்பான பணியோ மிகவும் வேடிக்கையானது. வரி விதிப்புக்கு அவர்கள் வாக்களிக்க வேண்டும்; அதற்கு அவர்களுக்கு உரிமை இருக்கிறது. அவ்வாறு விதிக்கப்பட்டு வசூலாகும் தொகையைச் செலவிடுவது பற்றி அவர்கள் கேட்கவே கூடாது; அதற்கு அவர்களுக்கு உரிமை கிடையாது. கடந்த மூன்று ஆண்டுகளில் மட்டும் 41 கோடி ரூபாய் பெறுமான புதிய வரிகளுக்கு இந்தச் சட்டசபை அங்கீகாரம் அளித்திருக்கிறது. ஆனாலும், அந்த வரிகளின் மூலம் கிடைத்த தொகையில் பெரும்பகுதி எப்படிச் செலவு செய்யப்பட வேண்டும் என்று கவனிக்க இந்தச்

சபைக்கு உரிமை இல்லை. இதுபோன்ற பெரிய முரண்பாட்டைக் கொண்ட ஓர் (அரசியல்) அமைப்பை வேறு எங்கே காணமுடியும்? எங்கள் துரதிருஷ்டம், நாங்களும் இதில் பங்குகொண்டவர்களாக இருந்து தொலைக்கவேண்டியுள்ளது'' என்று கசந்தார் மாளவியா.

இவைபோன்ற விவாதங்களின் பிறகு வாக்கெடுப்பு நடந்ததில் நிதி உறுப்பினரின் கோரிக்கை 57க்கு 60 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோற்கடிக்கப்பட்டது. எனவே, சட்டசபையில் நிதி மசோதாவைக் கொண்டுவர அனுமதி மறுக்கப்பட்டது. ஆனால், ராச்சியக் கவுன்சில், வாக்கெடுப்பு இல்லாமலே கோரிக்கையை ஏற்றுக்கொண்டது. கவர்னர் ஜெனரல் திருத்தியமைக்கப்பட்ட நிதி மசோதாவை மீண்டும் சட்டசபைக்கு அனுப்பி வைத்தார்; அப்போதும் சட்டசபை அதை நிராகரித்து விட்டது. அதன் பேரில், இந்த மசோதாவில் உள்ள விவகாரங்கள் பிரிட்டிஷ் இந்திய நலன்களுக்கு மிக முக்கியமானவை என்ற அறிவிப்புச் சட்டத்துடன் அதை ராச்சியக் கவுன்சிலுக்கு அனுப்பினார் கவர்னர் ஜெனரல். எந்தத் திருத்தமும் இல்லாமல் ராச்சிய சபை அதை நிறைவேற்றியது. மசோதா கவர்னர் ஜெனரலின் ஒப்புதலையும் பெற்றது. அதைத் தொடர்ந்து, 1924 மார்ச் 28ல், சட்டசபையின் நடவடிக்கையைப்பற்றி வருத்தம் தெரிவித்து ஓர் அறிக்கையையும் வெளியிட்டார் கவர்னர் ஜெனரல். அரசாங்கம் கோபம் கொண்டதற்கும் காரணம் இல்லாமலில்லை. ''ஒழுங்கீனமான சட்டங்களாலேயே'' நாடு ஆளப்பட்டு வருகிறதென்ற ஒரு இளக்காரமான உணர்வு நாடெங்கிலும் பரவத் தொடங்கியிருந்தது.

## அடக்குமுறைச் சட்டங்களின்மீது தாக்குதல்:

இரண்டாவது சட்டசபையின் (1924-26) காலத்தில் உறுப்பினர்கள் பலமுறை அரசாங்கத்தின் அடக்குமுறைச் சட்டங்களையும் ஒழுங்குமுறை விதிகளையும் கடுமையாகத் தாக்கி அவைகளை ரத்துச் செய்யும் முயற்சிகளையும் மேற்கொண்டார்கள். இதைப் பொறுத்தவரையில், நாட்டிலிருந்த வேறுபட்ட பல கட்சிகளிடையேயும் எந்தவிதமான கருத்து வேற்றுமையும் இருக்கவில்லை.

1924 மார்ச் மாதத்தில், 1818 ஆம் ஆண்டின் மூன்ருவது வங்காள ஒழுங்குமுறைச் சட்டத்தை உடனடியாக ரத்துச் செய்ய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானம் ஒன்றை அமர்நாத் தத் கொண்டு வந்தார். மக்களை அடக்கி ஒடுக்கி வைக்கவும், அஸ்வினி குமார் தத் போன்ற பெரியோர்களையும் கிருஷ்ணகுமார் மித்ரா, சுபோத் சந்திர மல்லிக், மனோரஞ்சன் குஹா போன்ற தேசபக்தர்களை நாடு கடத்தவுமே அரசாங்கம் இந்தச் சட்டத்தைப் பயன்படுத்தி வந்திருக்கிறது. தவிர, இப்படி ஒரு சட்டம் அமுலில் இருப்பது, முறையான சட்டம் மற்றும் சட்ட அறிஞர்களின் மீதெல்லாம் நமது நிருவாகத்துக்கு நம்பிக்கை இல்லாமல் போய்விட்டது என்பதையே காட்டுகிறது என்று எடுத்துக்காட்டி இடித்துரைத்தார் அமர்நாத்.

"அரசாங்கத்தின் முன்னேக்கில்லாத கொள்கையே வங்கத்தில் ஏற்பட்டுள்ள புரட்சி இயக்கத்துக்குக் காரணம்" என்று கூறிய பிபின் சந்திர பால், "வங்காள ஒழுங்குமுறைச் சட்டம் இந்திய மக்களின் தன்மானத்தையே அவமதிக்கும் சட்டமாகும்" என்று சாடினார். அடுத்துப் பேசிய எச். எஸ். கௌர், அடக்குமுறைச் சட்டப் பரிசீலனைக் குழுவின் சிபாரிசுகளை ஏற்றுக்கொண்ட பிறகும், அரசாங்கம் இந்தத் "துருப்பிடித்த ஆயுதங்க"ளையே வைத்துக் கொண்டிருப்பது சரியில்லை என்று சுட்டிக்காட்டினார்.

அரசாங்கத் தரப்பின் கடுமையான எதிர்ப்பையும் மீறித் தீர்மானம் வெற்றி பெற்றது. 1908 ஆம் ஆண்டின் இந்தியக் குற்றவியல் சட்டத் திருத்தச் சட்டத்தின் சில ஷரத்துக்களை ரத்துச் செய்யவேண்டும் என்று 1924 செப்டம்பர் 16ல் எச். எஸ். கௌர் கொண்டு வந்த மற்ருெரு தீர்மானமும், அதே விதமான 71க்கு 39 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

1924 அக்டோபர் 25ல் வங்காளக் குற்றவியல் சட்டத் திருத்த அவசரச் சட்டத்தைக் கவர்னர் ஜெனரல் பிறப்பித்த போதும், சுயராச்சியக் கட்சியாரும் சுயேச்சை உறுப்பினர்களும் சேர்ந்து கொண்டு அரசாங்கத்தின் அடக்குமுறைச் சட்டங்களையும்

நடவடிக்கைகளையும் கடுமையாகத் தாக்கினார்கள். இந்த அவசரச் சட்டத்தின் கீழ் பலர் கைது செய்யப்பட்டனர். பலருடைய வீடுகள் போலீசாரால் சோதனையிடப்பட்டன. கல்கத்தா நகராட்சியின் தலைமை நிருவாகியும் சி. ஆர். தாஸின் தளபதியும் ஆன சுபாஷ் சந்திர போசும் வங்காள மேல்சபையின் சுயராச்சியக் கட்சி உறுப்பினர்கள் (அனில் பருன் ராய், எஸ். சி. மித்ரா) இரண்டு பேரும் கைது செய்யப்பட்டார்கள். இந்த அவசரச் சட்டம் பிறப்பித்தது பற்றியும் அதன் கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் குறித்தும் நாடெங்கும் எதிர்ப்புக் கிளம்பியது.

1925 ஜனவரி 28ஆம் நாளன்று துரைசாமி அய்யங்கார், இந்த அவசரச் சட்டத்தை அடிக்கும் சட்டம் ஒன்றைச் சட்டசபை பிறப்பிக்க வேண்டும் என்று கோரும் ஒரு தீர்மானத்தைச் சட்ட சபையிலே கொண்டுவந்தார். அரசுத் தரப்பில் உள்துறை உறுப்பினர் மிகத் திறமையாக வாதிட்டும் கூட, சுயராச்சியக் கட்சியாரும் சுயேச்சை உறுப்பினர்களும் ஒன்று சேர்ந்து அரசாங் கத்தைக் கடுமையாகக் குற்றஞ்சாட்டித் தோற்கடித்தார்கள்.

நாட்டிலே புரட்சிக்காரர்களின் குழுக்கள் தங்கள் நடவடிக்கை களை அதிகமாக்கிக் கொண்டு வருகின்றன என்றும் இளைஞர் மத்தியிலே "சிவப்புத் துண்டறிக்கைகள்" பரப்பப்படுகின்றன என்றும் (எனவே அவசரச் சட்டம் நியாயமானதே என்றும்) அரசாங்கம் வாதாடியது. வங்காளக் கவர்னரான லிட்டன் பிரபுவின் உயிருக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கிறது என்றும் சொல்லப்பட்டது. இதற்குப் பதிலளித்து, வெட்டு ஒன்று துண்டு இரண்டாக முழங்கினார் டி. சி. கோஸ்வாமி :

"லிட்டன் பிரபுவின் உயிருக்கே ஆபத்து ஏற்பட்டுள்ளது என்று இங்கே சொல்லப்பட்டது. அப்படி ஒரு நிலை ஏற்பட்டால், இங்குள்ள போலீஸ்படை முழுவதையும் கொண்டு அவரைப் பாதுகாக்கவே வேண்டும், அதற்கு அவருக்கு உரிமை உண்டு. ஆனால், நான் அறுதியிட்டுச் சொல்ல விரும்புவது என்னவென்றால், எந்தப் பெரிய அதிகாரியின் உயிரும் மக்களின் உரிமையை விடப் புனிதமானதாகிவிட முடியாது; இதுதான், அந்தப் பிரச்சினைக்கு நான் தரக்கூடிய பதில்" என்றார் கோஸ்வாமி.

எங்கும் அவசரச் சட்டத்துக்கு எதிரான உணர்ச்சியே பொங்கி நின்றது. சட்டசபையின் ஐரோப்பிய உறுப்பினர்களைத் தவிர வேறு யாரும் அதை ஆதரிப்பதாக இல்லை. எனவே, (துரைசாமி அய்யங்காரின்) தீர்மானம் 58க்கு 45 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

வழக்கமான குற்றவியல் சட்டங்களுக்குத் துணையாகப் பிறப்பிக்கப்பட்டிருந்த சில தனிச் சட்டங்களை ரத்துச் செய்யவேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றை வித்தல்பாய் படேல் கொண்டு வந்தார். 1925 பிப்ரவரி 3ல் சட்டசபையில் வந்த அந்தத் தீர்மானம் 1918ஆம் ஆண்டின் வங்காள மாகாண வங்காளக் கைதிகள் ஒழுங்குமுறைச் சட்டம், 1850ஆம் ஆண்டின் ராச்சியக் கைதிகள் ஒழுங்குமுறைச் சட்டம், 1911ஆம் ஆண்டின் அரசாங்க எதிர்ப்புக் கூட்டங்கள் தடைச் சட்டம் முதலியவைகளை ரத்துச் செய்யுமாறு கோரியது. அடக்குமுறைச் சட்டங்களை ரத்துச் செய்ய நடவடிக்கை எடுக்குமாறு கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானம் ஒன்று முந்திய ஆண்டிலேயே சட்டசபையில் நிறைவேற்றப்பட்டது என்றும் அதன் மீது அரசாங்கம் எந்த நடவடிக்கையும் எடுக்காததாலேயே இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவர நேர்ந்தது என்றும் விளக்கினார் படேல்.

சுயேச்சைக் கட்சியைச் சேர்ந்த ஜின்னா போன்ற பல முக்கியமான உறுப்பினர்கள் தீர்மானத்தை ஆதரித்தார்கள். தீர்மானம், சில திருத்தங்களுடன், 71க்கு 40 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

அரசாங்கத்தின் அடக்குமுறைக் கொள்கைகளுக்கும் செயல்களுக்கும் எதிரான கண்டனம் 19-6 ஆம் ஆண்டிலும் சட்டசபையில் தொடர்ந்து நிகழ்ந்து வந்தது. 1926 ஜனவரி 26ல், (பீகார்) டிர்புட் பகுதியைச் சேர்ந்த மௌல்வி முகம்மது ஷஃபி ஒரு தீர்மானம் கொண்டு வந்து சிறை செய்யப்பட்டுள்ள எல்லா அரசியல் கைதிகளும் விடுவிக்கப்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். "அரசியல் கைதிகள் சாதாரணக் குற்றவாளிகளைப் போன்றவர்களல்லர்; அவர்கள் தங்கள் தாயகம், மதம் ஆகியவற்றின் புனிதமான உரிமைகளுக்காகப் போராடியவர்கள்.

அவர்களை இங்கேயோ இந்த நாட்டுக்கு வெளியிலேயோ ஆயுள் முழுதும் சிறையில் தள்ளி வதைப்பதை அனுமதிக்க முடியாது'' என்று வலியுறுத்தினார் ஷஃபி.

தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய சி. எஸ். ரங்க அய்யர் ஆவேசமாக அரசாங்கத்தைச் சாடினார்: "இந்த அரசாங்கத்தாரே மிக மோசமான குற்றவாளிகள்! இவர்களே கொடும் கொலைகாரர்கள்! உரிமைக்கு ஏங்கி நிற்கும் ஓர் இனத்தின் உரிமையையே கொலை செய்து கொண்டிருக்கும் கொடியவர்கள் இவர்கள்!'' என்றார் ரங்க அய்யர்.

பர்துவானைச் சேர்ந்த சையது மஜீத் பக்ஷ் பேசுகையில், அரசாங்கம் புரட்சி இயக்கங்களை அழிக்க விரும்பினால், "சுதந்திர வேட்கையும் அதன் விளைவான நல்ல உள்ளமும் கொண்ட இந்த மக்களோடு ஒத்துழைக்க முன்வரவேண்டும்'' என்று ஆலோசனை கூறினார். உரிமையோடு வாழ விரும்புவது குற்றம் என்று பிரிட்டிஷ் சட்டத்தின் எந்தப் பிரிவு சொல்லுகிறது என்பதை அறிய விரும்புகிறேன், என்று அவர் அரசாங்கத்தைக் கேட்டார். சிட்டகாங்கைச் சேர்ந்த குமார் சங்கர் ரே, தல சுய ஆட்சி நிறுவனங்களுக்கும் மாநில மேலவைகளுக்கும் நடந்த தேர்தல்களில் சுயராச்சியக் கட்சியார் பல இடங்களைக் கைப்பற்றியதைத் தொடர்ந்தே பலர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் என்று சுட்டிக் காட்டினார். ஒரிசாவைச் சேர்ந்த பண்டித நீலகண்ட தாஸ், இக் கைதிகளுக்கு எதிராக அரசாங்கம் எடுக்கும் நடவடிக்கைகள் பழிவாங்கும் நோக்குடன் ஒழுங்கற்ற முறையில் செயல்படுவதைக் குறிப்பிட்டு வன்மையாகக் கண்டித்தார்.

தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய லாலா லஜ்பத் ராய், புரட்சி இயக்கங்கள் உலகெங்கும் எப்போதும் இருந்தே வருகின்றன என்றும், அவை இருக்கின்றன என்பதே நாட்டின் நிருவாகத்தில் ஏதோ கோளாறு இருக்கிறது என்பதைத்தான் காட்டுகிறது என்றும் குறிப்பிட்டார். புரட்சிக்காரர்களை ஆதரித்துப் பேசுகிறவர்கள் அந்தத் தீரர்களுக்கு இரக்கம் காட்டுமாறு அல்லது வசதிகள் செய்து தருமாறு யாரையும் கெஞ்சவில்லை. மக்கள் பிரதிநிதிகள் இதுபற்றி என்ன கருதுகிறார்கள் என்பதை அரசுக்கு

உணர்த்த வேண்டும் என்பது ஒன்றே இந்தத் தீர்மானத்தின் நோக்கம். அதை ஏற்றுக் கௌரவிப்பதா வேண்டாமா என்பதை அரசாங்கமே முடிவு செய்து கொள்ளவேண்டும் என்று வீறுடன் விளக்கினார் லஜ்பத் ராய். இந்தத் தீர்மானமும், திருந்திய வடிவில், சட்டசபையில் நிறைவேற்றப்பட்டது.

1818 ஆம் ஆண்டின் வங்காள ஒழுங்குமுறைச் சட்டத்தை ரத்துச் செய்யும் மசோதா ஒன்றை 1926 பிப்ரவரி 12ல் சபையில் கொண்டுவந்தார் அமர்நாத் தத். 1924 மார்ச் மாதத்தில் இதே போன்ற ஒரு தீர்மானத்தால் மேற்படிச் சட்டத்தை ரத்து செய்யுமாறு அவர் கோரினார். அந்தத் தீர்மானம் சட்டசபையில் நிறைவேற்றவும் பட்டது. இதைச் சுட்டிக்காட்டி, "அரசாங்கமே அந்தத் தீர்மானத்தை அமுல்படுத்தும் மசோதாவைக் கொண்டு வரும் என்று இருந்தேன். அரசாங்கம் அது போன்ற நடவடிக்கை எதையும் மேற்கொள்ளாததாலேயே இந்த மசோதாவைக் கொண்டுவர வேண்டியதாயிற்று" என்று விளக்கினார் தத்.

இதை ஆதரித்து உரையாற்றிய டி. சி. கோஸ்வாமி வங்காளத்தின் புரட்சி இயக்க வரலாற்றை விவரித்து அங்கே அந்த விதமான எழுச்சி மிகுந்திருப்பதற்குரிய காரணத்தையும் விளக்கினார் :

"வங்காளத்தில் இத்தனை புரட்சியும் கொந்தளிப்பும் ஏன்? அங்கேதான் ஓமி சந்தும் மீர் ஜாபரும் நாட்டையே அந்நியருக்கு விற்றார்கள். அந்தப் பழியைத் துடைத்துக் கொள்ள விரும்புகிறது வங்கம்! அங்கேதான் வாரன் ஹேஸ்டிங்ஸின் பெருமைக்குரிய ஆட்சி நடந்தது. வங்க மக்கள் அதை இன்னும் மறக்கவில்லை! அங்கேதான் அரசாங்க அதிகாரிகள் அவுரிச் சாயத் தொழிலாளர்களுக்கு எண்ணிலா இன்னல்கள் விளைவித்தார்கள். வங்க மக்கள் அதை இன்னும் மறக்கவில்லை! அங்கேதான் "வந்தேமாதரம்" கீதத்தைப் பாடுவது சட்டவிரோதம் என்று தடுத்து வைத்த 'ரிஸ்லீ சுற்றறிக்கை' பிறந்தது. எந்த நாகரிக அரசாங்கமும் செய்யத் துணியாத ஒரு காரியத்தை,—மக்கள் தங்கள் தேசிய கீதத்தையே பாடக்கூடாது என்று தொண்டையை நெரிக்கும் ஒரு சட்டத்தை—அங்கே வங்கத்தில் அரசாங்கம் பிரகடனம் செய்தது. கொடுமைகளின் இந்தக் கோர வரலாறு

தான் வங்க மக்களைச் சுதந்திரப் போராட்டத்தின் முன்னணியில் நிறுத்தியிருக்கிறது'' என்று முழக்கமிட்டார் கோஸ்வாமி.

இந்த மசோதாவின் மீது நடந்த விவாதம் எழுச்சி மிக்கதாக இருந்தது. ஆனாலும், மசோதா ஓட்டுக்கு விடப்பட்டபோது, சற்றும் எதிர்பாராத விதமாக, மூன்று வாக்குகள் அதிகமாகப் பெற்று அரசாங்கம் வெற்றி பெற்றது. இந்தச் சமயத்தில் சுயராச்சியக் கட்சிக்குள்ளே கருத்து வேறுபாடு தலை தூக்கியிருந்தது. அதன் காரணமாக, அந்தக் கட்சியின் சில உறுப்பினர்கள், ஓட்டெடுப்பு நடந்தபோது சட்டசபைக்கே வராமல் இருந்து விட்டார்கள். அதனாலேயே அரசாங்கம் வெற்றி பெற்றது.

### மற்றத் துறைகளில் ஆர்வம் :

முதலாவது சட்டசபையைப் போலவே இரண்டாவது சட்டசபையும் அரசு ஊழியத்தை இந்தியமயமாக்குதல், உள்நாட்டுத் தொழில்களை முன்னேற்றுதல், தொழிலாளர் நலன் மற்றும் சமுதாயச் சீர்திருத்தச் சட்டங்களை இயற்றுதல் போன்றவைகளைத் தொடர்ந்து வற்புறுத்தி வந்தது.

லீ கமிஷன் என்று சொல்லப்பட்ட ராயல் கமிஷன் இந்திய உயர்தர சிவில் உத்தியோகங்கள் தொடர்பாகப் பல சிபாரிசுகளைச் செய்திருந்தது. குறிப்பாக, இந்த உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பள உயர்வு, போக்குவரத்துச் செலவு, ஓய்வு ஊதியம் ஆகியவை வழங்க வேண்டும் என்றும் மாநில மருத்துவ ஊழியங்களை ஏற்படுத்த வேண்டும் என்றும் அது எடுத்துரைத்திருந்தது. இந்தச் சிபாரிசுகளைக் கொள்கையளவில் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானம் ஒன்றை 1924 செப்டம்பர் 10ஆம் நாள் உள்துறை உறுப்பினர் சட்டசபையில் கொண்டுவந்தார்.

தேசீயக் கட்சியாரின் சார்பில் இந்தத் தீர்மானத்துக்கு ஒரு திருத்தத்தைக் கொண்டுவந்த மோதிலால் நேரு, லீ கமிஷனின்

நியமனத்தையும் மற்ற அம்சங்களையும் கண்டித்து உரை நிகழ்த்தினார்: "சட்டசபை நிறைவேற்றிய தீர்மானங்களை அடியோடு புறக்கணித்து விட்டு இந்தக் கமிஷன் நியமிக்கப் பட்டிருக்கிறது. சிவில் ஊழியங்களைப் பற்றிய பிரச்சினை இந்தியா வுக்குப் பொறுப்பாட்சி வழங்குவதாகிய பெரிய பிரச்சினையோடு பின்னிப் பிணைந்து கிடக்கிறது. இந்த இரண்டையும் தனித் தனியே பிரித்துப் பார்க்க முடியாது. ஆகையால், 1924 பிப்ரவரி 18ல் இந்தச் சட்டசபை நிறைவேற்றியுள்ள தீர்மானம் ஏற்றுக் கொள்ளப் பட்டாலன்றி இந்தப் பிரச்சினையைப் பற்றிப் பேசவே முடியாது. தவிர லீ கமிஷனின் சிபாரிசுகள் சட்டசபையின் அதிகாரங்களைப் பறிப்பதோடு இந்தியாவின் நிருவாகப் பணிகளில் இனவாதத்தைப் புகுத்துவதாகவும் இருக்கிறது" என்று விளக்கினார் மோதிலால் நேரு.

நடைமுறை நிருவாகத்தைப் பற்றிய (நேருவின்) இந்தத் தீர்மானத்தின் பகுதி பின்வரும் சிபாரிசுகளைச் செய்தது: இந்திய சிவில் ஊழியத்துக்கு இங்கிலாந்தில் ஆள் எடுப்பது நிறுத்தப்பட வேண்டும்; இங்கேயே அரசுப் பணிகளுக்கு ஆள் எடுக்கும் நிறுவனம் (பப்ளிக் சர்வீஸஸ் கமிஷன்) ஒன்றை ஏற்படுத்த வேண்டும்; இந்திய அரசுப் பணிகளுக்கு ஆளெடுப்பது மற்றும் அது தொடர்பான நிருவாகத்தில் இந்தியா மந்திரிக்கு உள்ள அதிகாரங்களை இந்திய அரசிடம் ஒப்படைப்பதற்கான நடவடிக் கைகளை மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு கிடைக்கப்பெறும் அதிகாரத்தை இந்திய அரசாங்கம், மத்திய—மாநிலச் சட்ட சபைகள் நிறைவேற்றும் சட்டங்களுக்கு உட்பட்டு அமுல்படுத்த வேண்டும்."

சுருக்கமாக, இந்தத் தீர்மானம், லீ கமிஷனின் சிபாரிசுகளை அடியோடு நிராகரித்தது; உள்துறை உறுப்பினரின் தீர்மானத்தை மறுதலித்தது.

இதன் மீது விவாதம் தொடங்கியபோது, ஜின்னா, மாளவியா, வி. ஜே. படேல், எச். எஸ். கௌர், ஸேத் கோவிந்த தாஸ், சண்முகம் செட்டி முதலான பல உறுப்பினர்கள், லீ கமிஷன் நியமனம் முதலாவது சட்டசபை நிறைவேற்றிய தீர்மானங் களுக்குப் புறம்பானதென அரசாங்கத்தைக் கடுமையாகத்தாக்கிப்

பேசினார்கள். நிதி நிலைமை மிகவும் மோசமாக இருக்கையில் ஊதிய உயர்வு முதலியவைகளைச் சிபாரிசு செய்து அரசு ஊழிய அதிகாரிகளிடையே ஏற்றத்தாழ்வை நுழைக்கப்பார்ப்பதற்காக லீ கமிஷனையும் அவர்கள் கண்டித்தார்கள். அரசு ஊழியமும் அரசியல் சீர்திருத்தங்களும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்தவையாக இருப்பதால், அரசியல் சீர்திருத்தத்தைப் பற்றிய தீர்வு ஏற்படும் வரையில் அரசு ஊழியப் பிரச்சினையைத் திருப்திகரமாகத் தீர்க்க முடியாது என்பதையும் அவர்கள் வலியுறுத்தினார்கள்.

போக்குவரத்துச் செலவு, கடல்கடப்புக்கான படி என்பவைகளின் பெயரால் ஊழியர்களுக்கு ஊதிய உயர்வு சிபாரிசு செய்யப்பட்டிருப்பதைக் குறிப்பிட்டு ரங்கசாமி அய்யங்கார் பேசினார்: "ஊழியர்களின் அடிப்படைச் சம்பளத்தை உயர்த்துவதற்கு 1919ல் ஒரு விதமான திட்டம் வகுக்கப்பட்டது. அதை அப்போது அனுமதித்ததின் விளைவாகத்தான் இப்போது 'இத்தனை விஷமம்' நடக்க முடிந்தது. சேவைக்கால அடிப்படையில் ஊதியம் என்ற பெயரில் இப்போது கொண்டுவரப்படும் திட்டம் இப்போது உள்ள சம்பளத்தை இரட்டிப்பாக்கிக் கொடுக்கக்கூட வசதியளிக்கிறது" என்றார் அவர்.

"அரசு ஊழியத்தில் உள்ள இந்தியர்களையும் ஐரோப்பியர்களையும் எந்தெந்த நிபந்தனைகளின்படி வேலைவாங்க வேண்டும் என்பதை இந்திய மக்களே நிர்ணயிக்கவேண்டும். அதை அவர்களின் (மக்களின்) சார்பில் சட்டசபையும் இந்திய அரசாங்கமுமே மேற்கொள்ள வேண்டும். ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள யாரோ ஒருவர் இதைச் செய்யக் கூடாது" என்றார் சிமன்லால் செதல்வாட். மேலும் ஊழியர்கள் உண்மையான பணியாளர்களாக இருக்கவேண்டுமே தவிர, அவர்களே கொள்கைகளின் காவலர்களாகவும் அவைகளைப் பற்றித் தீர்ப்பு வழங்குவோராகவும் மாறிவிடக் கூடாது" என்றும் அவர் எச்சரித்தார்.

சிவசாமி அய்யர் லீ கமிஷனின் சிபாரிசுகளை முழுமையாக நிராகரிப்பதை ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால், அவரும் ஊழிய

அமைப்புப் பற்றிய பிரச்சினை அரசியல் சீர்திருத்தப் பிரச்சினையிலிருந்து தனியே பிரிக்க முடியாதது என்பதையே வலியுறுத்தினர்.

நீண்ட விவாதங்களுக்குப்பின் மோதிலால் நேருவின் தீர்மானம் 68க்கு 46 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

இதன் பிறகும் அரசு ஊழியத்தை இந்திய மயமாக்கும் பிரச்சினை சட்டசபையில் எழுப்பப்பட்டே வந்தது. ஒரிசாவைச் சேர்ந்த பி. தாஸ், வனத்துறைப் பணிகளை இந்திய மயமாக்க வேண்டும் என்று (1925 மார்ச் 13ல்) கொண்டுவந்த தீர்மானமும், பம்பாயைச் சேர்ந்த கே. ஜி. லொஹோகரே, இந்திய மருத்துவ ஊழியத்துக்கு ஆளெடுப்பது சம்பந்தமாக (1925 செப்டம்பர் 2ல்) கொண்டுவந்த தீர்மானமும் இந்த நோக்கத்தோடு வந்தவைகளே. 1926 பிப்ரவரி 3ல் அரசாங்கத் தீர்மானம் ஒன்றிற்குக் கொண்டு வந்த ஒரு திருத்தத்தில், மன்னர்பிரானின் பிரிவிக் கவுன்சில் செய்துவரும் நீதி பரிபாலனம் இந்தியாவிலேயே நடக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று எச். எஸ். கௌர் கேட்டுக் கொண்டார். இதன் மீது எழுந்த சுவையான விவாதத்திலும் அரசு ஊழியத்தை இந்திய மயமாக்கும் பிரச்சினை மிகுதியாக அடிபட்டது.

இந்தியத் தொழில் வளர்ச்சியும் சட்டசபை உறுப்பினர்களின் கவனத்தைத் தொடர்ச்சியாக ஈர்த்து வந்த பிரச்சினைகளிலே ஒன்று. இந்தப் பிரச்சினையில் இந்திய உறுப்பினர்கள், இரண்டு வெவ்வேறு கருத்துக்களுக்குத் தனித்தனியே முக்கியத்துவம் கொடுத்து வற்புறுத்தி வந்தார்கள். ஒருசாரார், இந்தியத் தொழில்கள் மற்றும் இந்திய முதலீட்டின் வளர்ச்சியையே அடிப்படைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள். ஆகையால், உள்நாட்டுத் தொழில் பாதுகாப்பு சம்பந்தமாக அரசாங்கம் மேற்கொண்ட எல்லா நடவடிக்கைகளையும் அவர்கள் மொத்தமாக ஆதரித்தார்கள். மற்றொரு சாரார், இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பும் ஊக்கமும் கொடுக்கும்போதே பொதுமக்கள் மற்றும் தொழிலாளர் நலன்களுக்கு முதன்மை கொடுக்க வேண்டும் என்பதை அடிப்படைக் குறிக்கோளாகக் கொண்டு வற்புறுத்தி வந்தார்கள். 1924 மே 27ல் உருக்குப் பாதுகாப்பு மசோதாவை

யும் 1925 செப்டம்பர் 10ல் காகிதத் தொழில் பாதுகாப்புத் தீர்மானத்தையும் அரசாங்கம் கொண்டு வந்தது. இவைகளின் மீதான சட்டசபை விவாதங்களில், மேற்கண்ட இருவேறு கருத் தோட்டங்களையும் தெளிவாகக் காணமுடிந்தது.

வாணிகத்துறை உறுப்பினர் உருக்குப் பாதுகாப்பு மசோதாவை முன்மொழிந்ததும், இந்திய வணிகர்களின் பிரதிநிதியான புருஷோத்தமதாஸ் தாகுர்தாஸ், அதை, பிரிட்டிஷ் அரசாங்கத் தின் இந்தியக் கொள்கையில் ஏற்பட்டுள்ள பெரிய மாறுதலாக வரவேற்றுப் பாராட்டினுர். தொடக்க நிலையிலுள்ள இந்திய உருக்குத் தொழிலை அந்நியத் தொழில்களின் பாதிப்பிலிருந்து காப்பாற்றுவதற்கு இந்த நடவடிக்கை மிகமிகத் தேவை என்று அவர் வாதிட்டார். எச். எஸ். கௌர், "அரசாங்கம் இதே கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும், மற்றத் தொழில்கள் சம்பந்தமாகவும் இதே விதமான நடவடிக்கையை அரசு மேற்கொள்ள வேண்டும்" என்று மிகுந்த உற்சாகமாக வேண்டிக்கொண்டார். ஜின்னுவும் மாளவியாவும் கூட, இதன் கீழ் இந்தியத் தொழில்களுக்கு வழங்கப்பட்ட பாதுகாப்பை வரவேற்ருர்கள்.

ஆனுல், சமன் லாலின் கருத்து வேறுவிதமாக இருந்தது. இந்திய உருக்கின் மீது பாதுகாப்பு வரி விதிப்பதன் மூலம், இந்திய அரசாங்கம் இந்திய முதலாளிகளை உற்சாகப்படுத்துகின்ற அதே நேரத்தில் இந்தியப் பொதுமக்களின் மீது புதிய சுமையை ஏற்று கிறது என்று அவர் வாதித்தார். இதன் மூலம், "நீங்கள் பணக் காரர்களைக் காப்பாற்றுகிறவர்கள் என்றும் ஏழைகளை நசுக்குகிற வர்கள் என்றுமே சரித்திரத்தில் இடம் பெறப் போகிறீர்கள்!" என்று அரசாங்கத்தை எச்சரித்தார் அவர்.

என். எம். ஜோஷியும் இதே விதமாகவே பேசி, தொழில்களைத் தேசிய மயமாக்க வேண்டும் என்று கோரினுர். "டாட்டாக்களைப் பாதுகாக்கவே இந்த மசோதா கொண்டுவரப்படுகிறது; ஆனுல் அவர்கள் தொழிலாளர்களுக்குச் சரியான நியாயம் வழங்கவில்லை" என்று கண்டித்தார் ஜோஷி. உருக்குத் தொழிலுக்கு அளிக்கப் பட்டு வரும் ஊக்கத் தொகையை உயர்த்தும் விதமாக 1924ஆம்

ஆண்டின் உருக்குப் பாதுகாப்புச் சட்டத்தைத் திருத்தி அமைக்கக் கோரும் தீர்மானம் ஒன்று 1926 பிப்ரவரி 17ல் சட்டசபையில் வந்தது. இதன் மீது உரையாற்றுகையில், தொழிலாளருக்குச் சரியான நியாயம் வழங்கப்படவேண்டும் என்பது இந்த ஊக்கத் தொகை அளிப்பதற்குரிய ஒரு நிபந்தனையாக இருக்கவேண்டும் என்றும் அரசாங்க நிறுவனம் ஒன்றிடம் இதற்குரிய சான்று (சர்டிபிகேட்) பெற்றால்தான் ஊக்கத்தொகை கொடுக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார் ஜோஷி. பீகாரைச் சேர்ந்த தேவகி பிரசாத் சின்ஹாவும், "வரி கொடுக்கும் ஏழை மக்களை மேலும் மேலும் ஏழைகளாக்கும் இந்த நசிவுத் திட்டத்தை" எதிர்த்துக் குரல் எழுப்பினார்.

ஏற்கனவே 1925 செப்டம்பரில், காகிதத் தொழிலுக்கு உதவித் தொகை வழங்குவது சம்பந்தமான தீர்மானம் வந்தபோதே தேவகி பிரசாத் தமது கருத்தை வலியுறுத்திப் பேசியிருந்தார் :

"இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பு வழங்கவேண்டும் என்ற கொள்கையை, நமது நாட்டில் படித்தவர்களில் தேசிய உணர்ச்சி உள்ள பலபேர் ஆதரிக்கிறார்கள் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால், வசதி படைத்தவர்களும் (தங்கள் நலனுக்காக) எதையும் செய்யத் தயங்காதவர்களுமான இந்திய முதலாளிகள் செய்துவரும் விரிவான பிரச்சாரத்தினாலேயே நம்மிடையே படித்தவர்களில் பெரும்பாலோர் இந்தக் கொள்கையை ஆதரித்து வருகிறார்கள். (இந்த மாயத் திரை கிழிந்ததும்), இந்திய முதலாளிகளும் பிரிட்டிஷ் அரசாங்கத்தைப் போலவே ஆபத்தானவர்கள் தாம் என்பதை நாம் உணரத்தான் போகிறோம்" என்றார் தேவகி பிரசாத்.

இந்திய உறுப்பினர்களில் சில பேராவது சட்டசபையில் தொழிலாளர் நலச் சட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டுமென்பதில் அக்கறை கொண்டிருந்தார்கள். தொழிலாளர்கள், வீட்டு வேலைக்காரர்கள் மற்றும் உழைப்பாளிகளுக்கு வாராவாரம் சம்பளம் கொடுக்கும் முறையை ஏற்படுத்தக் கோரும் தீர்மானம் ஒன்றை, 1924 செப்டம்பர் 23ல் சட்டசபையில் கொண்டு வந்தார் சமன் லால். வாராவாரம் சம்பளம் கிடைக்காவிட்டால், மாதம்

முழுவதுக்குமான தேவைகளுக்குத் தொழிலாளர்கள் வட்டிக் கடைக்காரர்களையே நாடவேண்டியிருக்கிறது. அண்மையில் பம்பாயில் நடந்தது போல, மில்தொழிலாளர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டு அவர்களின் ஊதியம் நீண்டநாளாக நிறுத்தி வைக்கப் படும் போதும் அவர்கள் இதே நிலைமைக்கு ஆளாகிறார்கள். எனவே, தொழிலாளர்களின் ஊதியத்தை நிறுத்தி வைப்பதைத் தண்டனைக்குரிய குற்றமாக்க வேண்டும் என்று அந்தத் தீர்மானத்தில் கோரியிருந்தார் சமன் லால். அதே தேதியில், மகப்பேறு காலச் சலுகை மசோதா என்னும் ஒரு மசோதாவை என். எம். ஜோஷி கொணர்ந்தார். அதிலே, பிரசவம் ஏற்பட்டுச் சில காலத்துக்குப் பெண்களை வேலைக்கு வரச் சொல்லக் கூடாது என்றும் அவ்வாறு அவர்கள் வராத காலத்துக்குச் சலுகைச் சம்பளம் வழங்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

1926 ஜனவரி 25ல் அரசாங்கம் தொழிற்சங்க மசோதாவைச் சட்டசபையில் கொண்டு வந்தது. இந்த மசோதா, தொழிற் சங்கங்கள் தங்களைப் பதிவு செய்துகொள்ளும் உரிமையை வழங்கியது. இந்த மசோதாவிலேயே, தொழிற்சங்கங்கள் தங்கள் ஊழியர்களின் ஊதிய விகிதத்தைத் திட்டவட்டமாக அறிவிக்க வேண்டும் என்று வற்புறுத்தும் விதி ஒன்றும் இருந்தது. இந்த விதியைக் கடுமையாக எதிர்த்தார் ஜோஷி. சமன் லால் இந்த விதியை மசோதாவிலிருந்து நீக்கிவிட வேண்டும் என்ற தீர்மானத் தைக் கொண்டு வந்தார். ஜின்னா, சண்முகம் செட்டி, லஜ்பத் ராய் முதலான பல உறுப்பினர்கள் ஜோஷியும் சமன் லாலும் விடுத்த கோரிக்கையை ஆதரித்தார்கள். நாட்டிலே தொழிற்சங்கங்கள் செயல்பட வேண்டியதும் செல்வாக்குப் பெற வேண்டியதும் மிகவும் அவசியமாகையால், அவைகள் தங்கள் நிதியைச் செல விடுவது பற்றி எந்தக் கட்டுப்பாடும் விதிக்கக் கூடாது என்று விளக்கினார் லஜ்பத் ராய். தொல்லைகளில் மாட்டிக் கொண்டுள்ள ஒரு தொழிற்சங்கத்துக்கு மற்றொரு தொழிற்சங்கம் உதவுவதை அனுமதிக்காவிட்டால் தொழிற்சங்க இயக்கத்தின் அடிப்படை நோக்கமே பறிக்கப்படுகிறது என்பதுதான் பொருள் என்றார் சண்முகம் செட்டி.

## சுயராச்சியக் கட்சியாரின் சங்கடங்கள்

### கூட்டணியில் வெடிப்பு:

"உள்ளிருந்தவாறே சீர்திருத்தங்களை முடக்கிப் போடுவது" என்னும் வீர முழக்கத்தோடேயே சுயராச்சியக் கட்சியார் சட்ட சபைகளில் நுழைந்திருந்தார்கள். மாளவியா போன்ற மிதவாதிகளோடும் ஜின்னா போன்ற சுயேச்சையாளரோடும் இணைந்து சுயராச்சியக் கட்சியார் கூட்டணி அமைத்துக்கொள்ள வாய்ப்புக் கிடைத்தபோது அவர்களுக்குத் தங்கள் தீர்மானத்தில் மேலும் பலமான உறுதி ஏற்பட்டது. எல்லாரும் ஒன்றிணைந்து செயல் பட்டதால், சட்டசபையின் 1924ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டக் கூட்டத் தொடரில் அவர்களால் பலமுறை அரசாங் கத்தைத் தோற்கடிக்க முடிந்தது. அரசாங்கம், ஆதரவளிப்பா ரின்றி முழுக்க முழுக்கத் தனிமைப் படுத்தப்பட்டது.

இவ்விதமாக, "சீர்திருத்தங்களை முடக்கிப் போடுவது" என்னும் சுயராச்சியக் கட்சியாரின் அறைகூவல் ஒரு பக்கம் வெற்றிகரமாக நிறைவேறிக் கொண்டிருந்தபோதே, அவர்கள் ஏதாவது ஒரு வகையில் அரசாங்கத்தோடு ஒத்துழைக்க வேண்டிய நிர்ப்பந்தமும் ஒரு பக்கம் உருவாகியே வந்தது. அவர்கள் மித வாதிகளோடும் சுயேச்சையாளரோடும் கூட்டணி அமைத்தார்கள் என்பதே இந்த நிலையை உணர்த்துவதாகத்தான் இருந்தது. இது மோதிலால் நேருவுக்கும் நன்கு தெரிந்துதான் இருந்தது. அதனாலேதான், ரங்காச்சாரியாரின் தீர்மானத்துக்குத் திருத்தம் கொண்டு வந்து சபையில் (1924 பிப்ரவரி 8ல்) நிகழ்த்திய முதல் பேச்சிலேயே, "இங்குள்ள சுயராச்சியக் கட்சியைச் சாராத உறுப்பினர்களாகிய நண்பர்களின் விருப்பத்திற்கு இணங்க என்னுடைய திருத்தத்தின் கூர்மை வெகுவாக மழுக்கப்பட்டிருக் கிறது" என்று ஒப்புக்கொண்டார் அவர்.

தவிர, சுங்கத்துறை மானியக் கோரிக்கையை நிராகரிக்கக் கோரி மோதிலால் நேரு மார்ச் 10ஆம் தேதி கொண்டுவந்த திருத்தத்தை ஆதரித்துப் பேசுகையில் சுயேச்சை உறுப்பினர்கள் "முட்டுக் கட்டை"க் கொள்கையையே முதன்மைக் கொள்கையாகக்

கொள்ளப் போவதில்லை என்பதை விளக்கித் தெளிவுபடுத்தி விட்டார் ஜின்னு. அகில இந்திய முஸ்லிம் லீகின் 15ஆவது (தள்ளி வைக்கப்பட்ட) வருடாந்திரக் கூட்டத்துக்குத் தலைமை ஏற்று நிகழ்த்திய உரையிலும் ஜின்னு இதைத் தெளிவாக விளக்கி வைத்தார்.

"இப்போது உள்ள திட்டத்திலும் இதன் திருத்தமாகப் புகுத்தப்படும் புதிய சீர்திருத்தங்களிலும் உள்ள சிறுபான்மை யினரின் உரிமைகளையும் நலன்களையும் பாதுகாக்கக் கூடிய எந்தச் சீர்திருத்தக் கோரிக்கையையும் நாங்கள் எங்கள் முழு ஆற்றலைக் கொண்டு ஆதரிப்போம். ஆனுல், அரசாங்கக் கொள்கை எதையும், எல்லாவற்றையும் எதிர்த்து அழிப்பதையே திட்டமாகக்கொண்ட ஒரு போக்கிற்கு நாங்கள் உடந்தையாக இருக்க முடியாது" என்று அறிவித்தார் ஜின்னு.

இந்தப் போக்கின் உச்சக் கட்டமாகத்தான் சட்டசபையின் 1924 செப்டம்பர் கூட்டத் தொடரின்போது, ஜின்னுவின் தலைமை யில் சுயேச்சைகளின் கட்சி உருவாயிற்று. அதற்குக் கொறடா நியமிக்கப்பட்டதோடு தனிவிதிகளும் வகுக்கப்பட்டன. அது முதல், சீர்திருத்தங்கள் மற்றும் அடக்கு முறைகள் தொடர்பான சுயராச்சியக் கட்சியாரின் நடவடிக்கைகளை ஆதரித்துக்கொண்டே, சுயேச்சையாளர்கள் மற்ற விவகாரங்களில் அரசாங்கத்துக்கு ஒத்துழைப்பு நல்கி வரவும் தொடங்கினுர்கள். "ஆதரவைப் பொறுத்த இந்த மாறுதலின் விளைவு முதலில் வெளிப்படையாகத் தெரியவில்லை. ஆனுல், நாளடைவில், சட்டசபையில் முட்டுக் கட்டை போடுதல் என்னும் கொள்கையையே அது சிதைத்து விட்டது" என்று அரசாங்க வரலாற்றுக்காரர் உற்சாகத்தோடு குறிப்பிட்டுள்ளது கவனிக்கத் தக்கது.

1925 பிப்ரவரியில் அரசாங்கம் ரெயில்வே வரவு செலவுத் திட்டத்தைச் சட்டசபையில் கொணர்ந்தபோது இந்தத் திட்டத்தையே முறியடிக்க வேண்டும் அல்லது ரெயில்வே போர்டுக்கான மானியத்தையாவது நிராகரிக்க வேண்டும் என்று சுயராச்சியக் கட்சி சுயேச்சையாளரைக் கேட்டுக்கொண்டது. ஆனுலும், அவர்கள் (இதைப் புறக்கணித்துவிட்டு) அரசாங்கத்

தோடு சேர்ந்துகொண்டு மோதிலால் நேருவின் தீர்மானத்தைத் தோற்கடித்து விட்டார்கள்.

**இந்து முஸ்லிம் மோதல் :**

1926 பிப்ரவரியில் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைப் பற்றிய சட்டசபை விவாதத்திலும், சுயராச்சியக் கட்சியாருக்கும் சுயேச்சையாளருக்கும் இடையே ஏற்பட்ட பிளவு தெளிவாகப் புலப்பட்டது.

1926 பிப்ரவரி 16ஆம் நாளன்று தென்சென்னையைச் சேர்ந்த மௌல்வி சையது முர்த்துஸா சாகிப் பகதூர் வடமேற்கு எல்லைப்புற மாகாணம் தொடர்பான தீர்மானம் ஒன்றைக் கொணர்ந்தார். சட்டசபை மற்றும் அமைச்சர்கள் நியமனம் பற்றிய இந்தியாச் சட்டத்தின் விதிகளை வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும் அமுல்படுத்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கவர்னர் ஜெனரலைக் கோரும் தீர்மானம் அது.

தீர்மானத்தை முன்மொழிந்து பேசுகையில், "நான் சுயராச்சியக் கட்சியைச் சேர்ந்தவனானாலும் அகில இந்திய முஸ்லிம் லீக்கிலும் அதன் கவுன்சிலிலும் கூட நான் ஓர் உறுப்பினன்" என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார் முர்த்துஸா சாகிப். இந்தியாச் சட்ட விதிகளை வடமேற்கு எல்லைப்புற மாகாணத்துக்கும் அமுல்படுத்துவதைப் பற்றி முஸ்லிம் லீக் தீர்மானம் நிறைவேற்றி இருப்பதாலும் இதை வற்புறுத்தும் கடமை தனக்கு உண்டு என்றும் அவர் தெரிவித்துக் கொண்டார். மேலும், சட்டசபை 1922ல் நிறைவேற்றிய ஒரு தீர்மானத்தின்படி நியமிக்கப் பட்ட எல்லைப்புற விசாரணைக் குழுவின் பெரும்பான்மை அறிக்கையும் இதற்கு ஆதாரமாக உள்ளது என்று அவர் கூறினார். இந்தச் சீர்திருத்தங்களின் பயன்களை அனுபவிக்க எல்லைப்புற மக்கள் எல்லா வகையிலும் தகுதி உடையவர்களே என்று வற்புறுத்திய முர்த்துஸா, "எல்லைப்புறம் சீர்திருத்தங்களைப் பெறாவிட்டால் சீர்திருத்தத்தின் அடுத்த கட்டத்தை நாம் எப்போதுதான் எதிர்பார்க்க முடியும்" என்று வினவினார்.

ஜின்னா, அசாமைச் சேர்ந்த அகமது அலி கான், ஆக்ராவைச் சேர்ந்த எல். கே. ஹைதர், ரோஹில்கண்டைச் சேர்ந்த மௌல்வி

முகம்மது யாகூப் மற்றும் பல முஸ்லிம் உறுப்பினர்கள் மூர்த்துஸா சாகிபின் தீர்மானத்தை அப்படியே ஆதரித்தார்கள்.

விவாதம் தொடர்ந்தபோது, உறுப்பினர்கள் அனைவரும் மதன் மோகன் மாளவியா என்ன சொல்லப் போகிறார் என்பதையே ஆவலோடு எதிர்பார்த்தார்கள். அவரும், பேச எழுந்த உடனேயே, "இப்போது உள்ள வடிவத்தில் நான் இந்தத் தீர்மானத்தை ஆதரிக்க இயலாது" என்று திட்டவட்டமாக அறிவித்து விட்டார். பொதுவாகச் சீர்திருத்தங்கள் எல்லைப்புறத்துக்கு விஸ்தரிக்கப்படுவதைத் தாம் எதிர்க்கவில்லை என்றும் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் அரசியல் சீர்திருத்தங்கள் அமுலாக வேண்டும் என்பதே தமது விருப்பம் என்றும் கூறிய மாளவியா, இந்தத் தீர்மானத்தை எதிர்க்க நேர்ந்ததற்கான காரணங்களையும் விவாதித்தார். எல்லைப்புற மாகாணத்து மக்கள் அனைவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்களல்லர்; அந்த மாநிலத்தின் இரண்டு முக்கிய வகுப்பினர்களான இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே இணக்கமான உறவு நிலவவில்லை. கடந்த சில ஆண்டுகளில் தீ வைப்பு, கொள்ளையடிப்பு சம்பவங்கள் பல நிகழ்ந்து, சிறுபான்மை வகுப்பினர் பெரும்பாதிப்புக்கு உள்ளாகியிருக்கின்றனர். நாட்டின் பாதுகாப்பு என்ற நோக்கிலும் எல்லைப்புற நிருவாகம் அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்தது. இந்த விவகாரங்களை நுட்பமாகக் கவனிக்கையில், அரசியல் சீர்திருத்தங்களை எல்லைப்புற மாகாணத்துக்கு விஸ்தரிப்பதற்கு உரிய தருணம் இன்னும் வரவில்லை என்றே கருத வேண்டியுள்ளது." இந்தக் காரணங்களாலேயே மூர்த்துஸா சாகிபின் தீர்மானத்தை முழுவதுமாக ஆதரிக்க முடியவில்லை என்று கூறிய மாளவியா, மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதையும் விளக்கினார்: "மேலே நான் குறிப்பிட்ட உரிய தருணம் விரைவில் வரும் என்பதே என் நம்பிக்கை. அந்தத் தருணம், அதாவது, இந்திய அரசமைப்பில் மேலும் சீர்திருத்தம் செய்யப்படும் தருணம் வரும்போது, தொடர்புடைய பிரச்சினைகளை ஆராய்ந்து எல்லைப்புற மாகாணத்தில் எந்த விதமான சுய ஆட்சியை நிறுவலாம் என்பதைச் சிபாரிசு செய்யும்படி விசாரணைக்

சுயராச்சியப் போராட்டத்தை வன்முறையில் நடத்துவதை நிராகரித்ததோடு, அதை "ஒழுக்கமற்றது, முட்டாள்தனமானது" என்றும் கண்டித்தார். அரசியல் சீர்திருத்தங்களைப்பற்றி அவர் கூறியதாவது: "இந்தப் புதிய சட்டம் உண்மையான அதிகாரப் பொறுப்பில் ஒரு பகுதியையாவது மக்களுக்கு மாற்றித் தந்திருக்குமேயானால்,—மக்களின் தன்னுணர்வுக்கும் சுய வளர்ச்சிக்கும் மனநிறைவுக்கும் இந்தச் சட்டம் வாய்ப்பளிக்குமே யானால்,—அரசாங்கத்தோடு ஒத்துழைக்க நான் தயங்கமாட்டேன்; ஏன், கவுன்சில் அறையிலேயே நான் ஆக்கப்பணியைத் தொடங்கி விடுவேன்!"

இணக்கத் தொனியோடு கூடிய இந்தப் பேச்சைத் தொடர்ந்து லண்டனிலுள்ள உயர் அதிகாரிகள் தங்களுக்குள்ளே கலந்து ஆலோசித்தார்கள். அதன் விளைவாகவே, தாஸுக்கும் அரசாங் கத்துக்கும் இடையே பேச்சு வார்த்தைகள் தொடங்கின. ஆனால், 1925 ஜூன் 16ல் தாஸ் காலமானார். சீர்திருத்தங்கள் சம்பந்தப் பட்ட தமது போக்கை அவர் தளர்த்திக் கொள்வார் என்பதற் கான அறிகுறி எதுவும் பர்க்கன்ஹெட் அதன் பிறகு நிகழ்த்திய உரையில் காணப்படவில்லை.

ஆற்றல் வாய்ந்த தலைவரை இழந்த சுயராச்சிக் கட்சி கலகலத்துப் போய்விட்டது. 1925 அக்டோபரிலேயே கட்சியின் அங்கத்தினரிடையே பலத்த கருத்து வேற்றுமைகள் ஏற்படத் தொடங்கிவிட்டன. சுயராச்சியக் கட்சி முழுப் பெரும்பான்மை பெற்றிருந்த மத்திய மாகாணத்திலேயே சுயராச்சியக் கட்சித் தலைவரான எஸ். பி. தம்பே கட்சி மாறி, கவர்னரின் நிருவாக சபை உறுப்பினர் பதவியை ஏற்றுக்கொண்டார். மோதிலால் நேரு அவரைக் கட்சியிலிருந்து வெளியேற்றினாரென்றாலும், அதுவும், கட்சியில் ஏற்பட்ட பிளவையே விரிவடையச் செய்தது. மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த என். சி. கேல்கரும், எம். ஆர். ஜயகரும், "முட்டுக்கட்டை போடும் கொள்கையைக் கைவிட்டு அரசாங்கத் தோடு பொறுப்பான முறையில் ஒத்துழைக்கும் கொள்கையைச் சுயராச்சியக் கட்சியார் கடைப்பிடிக்க வேண்டும்" என்று வெளிப் படையாகவே பேசத் தொடங்கிவிட்டார்கள். லாலா லஜ்பத் ராய், மாளவியா போன்ற பெருந் தலைவர்களும் இதற்கு ஆதரவு

தெரிவித்தார்கள். பிளவைச் சரிக்கட்டுவதற்குப் பல முயற்சிகள் நடந்தாலும், ஒன்றும் பயனளிக்கவில்லை.

**காந்தியடிகளின் நோக்கு :**

இந்த விவகாரங்களில் காந்தியடிகளின் நிலை என்ன என்பதைக் கவனிப்போம். 1924 பிப்ரவரி 5ல் காந்தியடிகள் விடுதலையானதும் தாஸும் மோதிலால் நேருவும் அவரைச் சந்தித்து ஆலோசனை கலந்தார்கள். சட்டசபைப் பிரவேசம் ஒத்துழையாமை இயக்கத்தையே அழித்துப் போட்டது என்பது காந்தியடிகளின் எண்ணம். அடிப்படையான பிரச்சினைகளை அணுகும் முறையில் உள்ள இருவேறு நிலைகளே சட்டசபைப் பிரவேசம், ஒத்துழையாமை என்னும் இரண்டு கொள்கைகளாக உருவாகியுள்ளன என்றும், நாம் சட்டசபைக்குப் போகாமலிருப்பதே நாட்டுக்கு நல்லது என்றும் காந்தியடிகள் தெரிவித்தார். ஆக்கப் பணிகளின் மூலம் பொதுமக்களோடு தொடர்பு கொண்டு அவர்களை மற்றுமோர் ஒத்துழையாமைப் போராட்டத்துக்குத் தயார் செய்யவேண்டும் என்றே அவர் கருதினார். ஆனாலும், சுயராச்சியக் கட்சியாரின் போக்குக்கு அவர் குறுக்கே நிற்க விரும்பவில்லை. பின்னர், சுயராச்சியத் தலைவர்களின் கருத்துக்கு விட்டுக் கொடுத்து, ஒத்துழையாமைப் போராட்டத்தைக் கைவிடவும் சுயராச்சியக் கட்சி காங்கிரசின் ஓர் அங்கமாக இயங்கவும் அவர் ஒப்புக்கொண்டார். காந்தியடிகளுக்கும் தாஸுக்கும் இடையே ஏற்பட்ட இந்த ஒப்பந்தங்களை பெல்காம் காங்கிரஸ் (டிசம்பர் 1924) அங்கீகரித்து ஏற்றுக்கொண்டது.

1925ல் சுயராச்சியக் கட்சியார் தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுக் கொண்டு இருந்தபோது, அதில் தலையிட்டுச் சமாதானம் செய்துவைக்குமாறு காந்தியடிகளுக்கு வேண்டுகோள் விடப்பட்டது. ஆனால், அவர் அந்த விவகாரத்தில் நடுநிலைமை வகிக்கவே விரும்பினார். 1926 ஏப்ரல் 27ல் சீனிவாச அய்யங்காருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார் காந்தியடிகள் :

"சட்டசபைப் பிரவேசத்தின் மூலம் பொது வாழ்வில் ஏற்பட்டுள்ள விளைவுகளையும் இந்து முஸ்லிம் பிரச்சினையில் ஏற்பட்

டுள்ள பாதிப்புக்களையும் பார்க்கப் பார்க்க, அப்பிரவேசம் பயனற்றது என்பதோடு அது தேவையற்றது என்றே தெளிவாக உணர்கிறேன். எனவே 1920ஆம் ஆண்டில் சட்டசபைப் பிரவேசத்தை ஆதரித்த சில தோழர்களாவது கவுன்சில்களைவிட்டு வெளியேறுவதையே நான் மிகமிக விரும்புகிறேன்.''

**மீண்டும் போராட்ட முறை :**

மோதிலால் நேருவை உள்ளிட்ட பல காங்கிரஸ் தலைவர் களுக்கும் இப்போது நிலைமை தெளிவாகி விட்டது. நடை முறையில் உள்ள போக்கை மாற்றித் தீவிரமான ஒரு போக்கை மேற்கொள்ளாவிட்டால் குறைந்துகொண்டு வரும் காங்கிரஸ் செல்வாக்கைக் காப்பாற்ற முடியாது என்பதை அவர்கள் நன்கு உணர்ந்து கொண்டார்கள். 1924ஆம் ஆண்டு நடந்த கான்பூர் சதிவழக்கில் பல பிரபல தொழிற்சங்கத் தலைவர்கள் விசாரணைக்கு உட்படுத்தப்பட்டார்கள். வங்காள அவசரச் சட்டத்தின் கீழ் பலர் கைது செய்யப்பட்டார்கள். பஞ்சாபில் நடந்த அகாலி சீக்கியர் கிளர்ச்சியாலும் எங்கும் ஒருவிதமான கசப்புணர்ச்சி பரவியிருந்தது. காங்கிரஸ் 1925 டிசம்பரில் கான்பூரில் கூடிய போது, அதை எதிர்த்துத் தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தி ஞர்கள். ஜவஹர்லால் நேருவின் தலையீட்டின் பேரிலேயே அந்த ஆர்ப்பாட்டம் நின்றது.

இவைகளின் பிரதிபலிப்பு காங்கிரசின் விவகாரங்களில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியது. சட்டமறுப்பு இயக்கத்தில் தனது நம்பிக்கையை மீண்டும் உறுதி செய்த காங்கிரஸ், அரசியல் நடவடிக்கைகளுக்கான தெளிவான திட்டங்களையும் வகுத்தது. சுயராச்சியக் கட்சிக்குக் காங்கிரஸ் வழங்கிய உரிமையே இந்தத் திட்டங்களில் முக்கியமானது. 1924 பிப்ரவரி 18ல் சட்டசபை நிறைவேற்றிய தேசியத் தீர்மானத்தைப் பற்றிய தனது முடிவை அரசாங்கம் விரைவிலேயே அறிவிக்குமாறு சுயராச்சியக் கட்சி வற்புறுத்த வேண்டும். 1925 பிப்ரவரி கடைசிக்குள் அரசாங்கம் தனது முடிவை அறிவிக்கத் தவறினால் அல்லது அது அறிவிக்கும் முடிவு திருப்திகரமாக இல்லாவிட்டால், சுயராச்சியக் கட்சி சட்ட சபைப் பணிகளில் தொடர்ந்து ஈடுபடாது என்று அறிவித்துவிட

வேண்டும்; நிதி மசோதாவை எதிர்த்து வாக்களித்துவிட்டு சுய ராச்சியக் கட்சியார் சபையை விட்டு வெளியேற வேண்டும் என்று காங்கிரஸ் கேட்டுக் கொண்டது. அவ்வாறு வெளியேறிய பின், அவர்களின் இடம் (சட்டசபையில்) காலியாக இருக்கிறது என்று அறிவிக்கப்படுவதைத் தடுப்பதற்குத் தவிர வேறு எதற்காகவும் அவர்கள் சட்டசபைக்குள் போகக் கூடாது என்றும் காங்கிரஸ் அவர்களைக் கேட்டுக் கொண்டது.

## சட்டசபையில் வெளிநடப்பு:

காங்கிரசின் இந்த ஆணையுடன் 1926 மார்ச் 8ல் சுயராச்சியக் கட்சி உறுப்பினர்கள் சட்டசபைக்கு வந்து சேர்ந்தார்கள். சுங்க இலாகாவுக்கான கோரிக்கை ஒன்று சபையில் கொண்டுவரப் பட்டிருந்தது. அந்தக் கோரிக்கையைக் குறித்த தமது கட்சியின் பொதுவான நிலையை விளக்குவதற்காக எழுந்தார் மோதிலால் நேரு. அதாவது, சுயராச்சியக் கட்சியின் தலைவர் என்ற முறையில், அந்தச் சட்டசபையைப் பொறுத்த அளவில் தங்கள் நிலை என்ன என்பதையே அவர் விளக்க விழைந்தார். கண்டிப்பும் உறுதியும் தோய்ந்த முகத் தோற்றத்துடன் மோதிலால் நேரு கூறினார்: "1924 பிப்ரவரி 18ல் இந்தச் சபை நிறைவேற்றிய தீர்மானம் எல்லோருக்கும் நினைவில் இருக்கும் என்றே நம்புகிறேன். அந்தச் சமயத்தில் நான் சொன்ன ஒரு செய்தி இப்போது என் நினைவில் எழுகிறது: 'இதுவரை நாங்கள் செய்யாமலிருந்த ஒரு காரியத்தைச் செய்வதற்காக இங்கு வந்திருக்கிறோம். ஒத்துழை யாமையே எங்கள் கொள்கை. ஆனாலும், நீங்கள் எங்களுடன் ஒத்துழைப்பதாக இருந்தால், நாங்களும் உங்களுக்கு ஒத்துழைப்பு நல்குவது என்றே இங்கே வந்திருக்கிறோம்' என்று அப்போது சொன்னேன். உண்மையில், எங்களைப் பொறுத்தவரை, அது எங்களையே தாழ்த்திக் கொள்ளும் 'கழிவிரக்கக் குரல்'தான். ஆனாலும், தெளிவாகச் சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்துத்தான் அந்த வார்த்தைகளைச் சொன்னேன். எங்களை நாங்களே அவ் விதம் தாழ்த்திக் கொண்டு பணிந்து வந்தும் கூட, இரக்கமற்ற அதிகார வர்க்கத்தின் கல் நெஞ்சம் கொஞ்சமும் இளகவில்லை; மாறாக, அது எங்கள் பலவீனத்தின் அடையாளம் என்றே கருதி

விட்டது. எங்களை மேன்மேலும் அவமதித்துப் புறக்கணிப்பதி லேயும் அதிகார வர்க்கம் ஆனந்தம் கொண்டது.''

மிகுந்த வாட்டத்தோடு இவ்வாறு பேசிய மோதிலால், சுய ராச்சியக் கட்சியார் வழங்க முன்வந்த ஒத்துழைப்பை ஏளனப் படுத்தி அரசாங்கம் தனது அடக்குமுறைக் கொள்கையையே வலுப்படுத்தி வந்த வரலாற்றையும் எடுத்துரைத்தார்: "இங்கி லாந்தில் ஆட்சிக்கு வந்த தொழிற்கட்சி இந்தியாவுக்கு முதன் முதலாக வழங்கிய பரிசு வங்காள அவசரச் சட்டம். கன்ஸர் வேட்டிவ் கட்சி ஆட்சியைக் கைப்பற்றிய பொழுதோ, அதன் புதிய இந்தியா மந்திரி பர்க்கன்ஹெட் பிரபு, கொஞ்சநஞ்சம் இருந்த நம்பிக்கையையும் சிதறடித்து விட்டார். இந்த விதமான ஒரு பின்னணியில் (ஒத்துழைப்பு நல்க வந்த) நாங்கள் என்ன தான் செய்வது?'' என்று வினவிய மோதிலால் நேரு, தமது புண்பட்ட நெஞ்சை வார்த்தைகளில் வடித்தார்:

"இந்த அரசாங்கத்தின் கையில் ஏகப்பட்ட அதிகாரம் இருக் கிறது. எங்கள் பலவீனம் என்ன என்பதையும் நாங்கள் அறிந்து தான் இருக்கிறோம். கருத்து வேற்றுமைகளாலும் வகுப்பு வேற்றுமைகளாலும் பாதிக்கப்பட்டிருக்கிற இந்த நாட்டில் எங்களின் ஒரே நல்லாயுதமாகிய சட்டமறுப்பு இயக்கத்தை நாங்கள் இப்போது நடத்த முடியாது என்பதையும் நாங்கள் அறியாமலில்லை. ஆனால், அதே சமயம், பயனுள்ள காரியம் எதுவும் செய்ய முடியாமல், இங்கேயும் நாட்டின் மற்ற சட்டசபை களிலும் நாங்கள் சும்மா உட்கார்ந்திருப்பது என்பதும் இனிமேல் இயலாத காரியம். எனவே, நாங்கள் இன்றே இந்தச் சபையை விட்டு வெளியேறுகிறோம். வெளியே போய் இந்த அரசாங்கத் தையே கவிழ்த்துவிட வேண்டும் என்று செல்லவில்லை. அப்படிச் செய்ய எங்களால் இயலாது என்பதை நாங்கள் அறிவோம். ஆகவே, இங்கே வந்து நிறைவேற்ற விரும்பிய கடமையை நிறைவேற்ற முடியவில்லை என்ற ஏக்க முணுமுணுப்பை இதழில் தாங்கியவர்களாகவே வெளியேறுகிறோம். இதை நாங்கள் எப்போதோ செய்திருக்க வேண்டும். ஆனாலும், எங்களைவிட அரசியல் சூழ்ச்சியில் கெட்டிக்காரர்களாகிய அரசாங்கத்தார், தங்கள் ராஜதந்திரத்தால் எங்களை இதுவரை இங்கே கட்டிப்

போட்டு விட்டார்கள். அவர்களின் பகிரங்க அறிக்கைகளை நாங்கள் என்றைக்குமே நம்பியதில்லை. என்றாலும், எங்கள்மேல் யாரும் குற்றம் சாட்ட வழியிருக்கக்கூடாது என்று கருதியே, எங்கள் கோரிக்கைகளுக்கு அவர்களின் திட்டவட்டமான பதிலை எதிர்நோக்கிக் காத்திருந்தோம். நாளை, யாரேனும், நாங்கள் அவசரப்பட்டு விட்டோம் என்று குற்றஞ்சாட்ட இடம் இருக்கக் கூடாதல்லவா? இப்போது நிலைமை தெளிவாகிவிட்டது. என் மதிப்புக்குரிய நண்பரான உள்துறை உறுப்பினர் தெள்ளத் தெளிவாகவே சொல்லி விட்டார். இனிமேல் நாங்கள் இங்கே உட்கார்ந்திருப்பதால் எந்தப் பயனும் ஏற்படப் போவதில்லை. ஆகவே, இந்த இடத்தை விட்டு விலகி, நாட்டு மக்களிடம் செல்கிறோம்; மீண்டும் ஒரு முறை அவர்களின் ஆதரவைத் தேடிப் புறப்படுகிறோம். ஆமாம்; எங்கள் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தவே புறப்பட்டுப் போகிறோம்.''

இவ்வாறு சொல்லி விட்டு பண்டித மோதிலால் நேரு சபையை விட்டு வெளியேறினார்; சுயராச்சியக் கட்சியின் மற்ற உறுப்பினர்களும் அவரைத் தொடர்ந்தார்கள். அந்த வெளியேற்றம், அடுத்த போராட்டத்துக்கு நாட்டைத் தயார் செய்யும் பாதையில் (காங்கிரஸ்) சுயராச்சியக் கட்சியினர் மற்றோர் அடியை எடுத்து வைத்தது போல இருந்தது.

### சட்டசபையில் உணர்ச்சிமயம்:

அவர்களின் வெளிநடப்பைத் தொடர்ந்து உள்துறை உறுப்பினர் ஒரு சிறிய அறிக்கை வெளியிட்டார். அதில், சுயராச்சியக் கட்சியாரின் வெளிநடப்பை வன்மையாகக் கண்டித்தார். ஆனாலும், சட்டசபை அநேகமாக முடிவடையப்போகும் தருணம் வரை "ஒத்துழையாமைக்காரர்கள்" சபையில் இருந்தார்களே என்பதில் அவருக்கு ஒரு திருப்தி.

பழைய சுயராச்சியக் கட்சித் தலைவரும் சட்டசபையின் தலைவருமான வி. ஜே. படேல் எழுந்து பின்வருமாறு அறிவித்தார்: "சட்டசபையிலிருந்த பெரிய கட்சி வெளியேறி விட்டது; எனவே, இந்தச் சபைக்கு இருந்துவந்த பிரதிநிதித்துவ அமைப்பு என்ற உரிமையும் போய்விட்டது. இந்த நிலையில், இந்தச் சபை

மேலும் தொடர்ந்து இயங்கலாமா என்பதைப்பற்றி அரசாங்கம் சிந்திக்க வேண்டும்.'' இப்படிக் கூறியவாறே சபையை ஒத்தி வைப்பதாக அறிவித்தார் படேல். அதைக் கேட்டதும் அரசாங்க அதிகாரிகளும் மற்ற உறுப்பினர்களும் அப்படியே அயர்ந்துபோய் நின்று விட்டார்கள். பின்னர், அரசாங்கச் சார்பில்லாத சில உறுப்பினர்கள் படேலை அணுகிக் கேட்டுக்கொண்டதன் பேரில், அடுத்த நாளே அதுபற்றி ஓர் அறிக்கை வெளியிடுவதாக உறுதியளித்தார் அவர்.

அதன்படியே, 1926 மார்ச் 9 ஆம் நாளன்று படேல் ஓர் அறிக்கை வெளியிட்டார். அதிலே, ''இப்போது உள்ள நிலைமையில் கருத்து வேற்றுமைக்கு இடமான விவகாரங்களை அரசாங்கம் சட்டசபையில் கொண்டுவரக் கூடாது என்பதையே வற்புறுத்திக் கூற விரும்பினேன்; அரசாங்கத்தையோ மற்ற உறுப்பினர்களையோ பழிப்பது என் நோக்கமல்ல'' என்று விளக்கியிருந்தார். எனினும், அதிலேயே, ''சபையின் தலைவர் என்ற முறையில் அரசாங்கத்தை அச்சுறுத்துவது போலப் பொருள் தொனிக்கும் விதமாக நான் பேசியிருக்கக்கூடாது'' என்பதையும் ஒப்புக்கொண்டிருந்தார் படேல்.

ஒருவிதமான திக்குமுக்காடலில் சிக்கித் திணறிக் கொண்டிருந்த உள்துறை உறுப்பினருக்கு இந்த அறிக்கையைப் பார்த்த பிறகுதான் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது. அடுத்து, கவர்னர் ஜெனரலின் நிருவாக சபை மானியக் கோரிக்கை சம்பந்தமாக ஜின்னு கொணர்ந்த ஒரு தீர்மானத்தைச் சட்டசபை விவாதித்தது. ஜின்னு பேச எழுந்ததும், சுயேச்சைக் கட்சியினர் உற்சாக ஆரவாரம் செய்தார்கள். சீர்திருத்தச் சட்டத்தைப் பரிசீலனை செய்வதற்கான சட்டபூர்வமான கமிஷன் ஒன்றை 1929ஆம் ஆண்டுக்கு முன்னதாகவே நியமிக்க வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொண்டார் ஜின்னு. நியமன உறுப்பினர் இந்தத் தீர்மானத்தை ஆதரிக்க வேண்டும் என்றும் அவர் உருக்கமாக வேண்டிக் கொண்டார். விவாதம் இரண்டு நாள் உப்புச்சப்பில்லாமல் தொடர்ந்து நடந்தது. கடைசியில், எதிர் பார்த்தபடியே, ஜின்னுவின் தீர்மானம் 31க்கு 47 என்ற வித்தியாசத்தில் தோற்கடிக்கப்பட்டது.

## அத்தியாயம் 4

# எதிர்ப்புக் கனல் எரிந்துகொண்டு இருக்கிறது (1927-1929)

### ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தாறு : இருண்ட ஆண்டு

சுயராச்சியக் கட்சியின் தலைவரான மோதிலால் நேரு 1926 மார்ச் 8 ஆம் தேதி "நாங்கள் போராட்டத்தைக் கைவிடவில்லை" என்று சொல்லிக்கொண்டேதான் சட்டசபையிலிருந்து வெளியேறினர். ஆனாலும், இந்த வார்த்தைகளை அவர் சொல்லும் போதே, தேசியத் தலைமையில் ஏற்பட்டிருந்த பலவீனம் அவருக்கு நன்றாகத் தெரிந்துதான் இருந்தது.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தாறும் ஆண்டு இந்தியத் தேசீய வரலாற்றிலேயே ஓர் இருண்ட ஆண்டுதான். இந்த ஆண்டு தொடங்கு முன்பே சி. ஆர். தாஸ் காலமாகி விட்டார். காந்தியடிகள் இன்னமும் அரசியலிலிருந்து விலகியே இருந்தார். காங்கிரசின் முக்கியமான செயல் உறுப்பாக இருந்துவந்த சுயராச்சியக் கட்சியும் குலைந்து கொண்டிருந்தது. ஜயகர் தலைமையில் செயல்பட்ட பொறுப்பான ஒத்துழைப்புக்காரர்கள், 1926 பிப்ரவரியில் பொறுப்பான ஒத்துழைப்பாளர் கட்சி என்னும் புதிய கட்சி ஒன்றை அமைத்துக் கொண்டார்கள். தனிக் கட்சி அமைத்துக் கொண்ட அவர்கள், சட்டசபைப் பணிகள் பற்றிக் கான்பூர் காங்கிரஸ் மேற்கொண்ட கொள்கை சரியில்லை என்றும் அறிவித்து விட்டார்கள். சட்டசபைகளுக்குச் செல்லத் தயாராக இருந்ததோடு, அரசாங்கம் தருகிற எந்தப் பதவியையும் ஏற்றுக் கொள்ளவும் அவர்கள் ஆயத்தமாக இருந்தார்கள். இருக்கின்ற அரசியல் நிலைமைகளை அனுசரித்துத் தங்களுக்குக் கிடைக்கின்ற வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதே அவர்களின் கருத்து.

இவர்களுக்கும் மோதிலால் தலைமையில் இயங்கிய குழுவினருக்கும் இடையே ஒன்றிணைவை ஏற்படுத்தும் முயற்சி ஒன்று மேற்கொள்ளப்பட்டு, சபர்மதி உடன்பாடு என்ற பெயரில் ஒப்பந்தம் ஒன்றும் ஏப்ரலில் ஏற்பட்டது. ஆனாலும், ஒப்பந்தம் கையெழுத்தான உடனேயே, அதைப்பற்றிப் பலரும் பலவிதமாக விமர்சிக்கத் தொடங்கிவிட்டார்கள் ; ஒப்பந்தமும் முறிந்தது.

இதற்கிடையில் பண்டித மதன் மோகன் மாளவியா சுயேச்சைக் கட்சி என்னும் பெயரில் ஒரு கட்சியை ஆரம்பித்தார். மிதவாதிகள், சுயேச்சையாளர்கள், பொறுப்பான ஒத்துழைப்பாளர்கள், இந்து மகாசபைக்காரர்கள் ஆகியோரைக் கொண்டது இந்தப் புதிய கட்சி. அதாவது, சட்ட மறுப்பு மற்றும் ஒத்துழையாமைக் கொள்கைகளை ஏற்காமல், டொமினியன் அந்தஸ்தையே நோக்கமாகவும் பொறுப்பான ஒத்துழைப்பையே அதற்குரிய செயல் முறையாகவும் ஏற்றுக்கொண்டிருந்தவர்கள் எல்லாம் இந்தக் கட்சியில் சேர்ந்தார்கள். சுபாஷ் சந்திர போஸின் கருத்துப்படி, மத்திய இந்தியாவிலும் மேற்கு இந்தியாவிலும் பொறுப்பானவர்கள் கட்சி பின்பற்றிய நடைமுறையையே இந்தக் கட்சி வட இந்தியாவில் பின்பற்றியது. வங்காளத்திலும் சுயராச்சியக் கட்சி பல பிரிவுகளாகப் பிரிந்தது. சுருக்கமாக, இந்த ஆண்டில் சுயராச்சியக் காட்சியே முழுக்க முழுக்க உருக்குலைந்து போயிற்று.

அரசியல் எல்லைக்கு உட்பட்டிருந்த இந்து—முஸ்லிம் பிரச்சினை அந்த எல்லையைத் தாண்டிப் படர்ந்ததன் மூலம், இந்த ஆண்டு மேலும் இருண்டகோலம் காட்டுவதாயிற்று. துருக்கியில் கமால் பாட்சாவின் செல்வாக்கு ஓங்கியதால், இந்தியக் கிலாஃபத் இயக்கம் வீழ்ச்சியடைந்து அதன் சின்னமான கிலாஃபத் கமிட்டி மட்டுமே இயங்கி வந்தது. ஜின்னா 1924ல் அகில இந்திய முஸ்லிம் லீகைப் புதுப்பித்தார். எந்த அரசியல் ஏற்பாடும் "முஸ்லிம்களின் நலன்களையும் உரிமைகளையும்" பாதுகாக்கும் உத்தரவாதம் உடையதாகவே இருக்க வேண்டும் என்று, அசல் முஸ்லிம் வகுப்புவாதத் தோரணையில், வலியுறுத்திக் கொண்டே 1916ல் லக்னோவில் (ஒப்பந்தத்தின் மூலம்) தீர்க்கப்பட்ட விதமாகவே இந்து முஸ்லிம் பிரச்சினையைத் தீர்த்துவிடலாம்

என்று நம்பிக்கை தெரிவித்தார் ஜின்னு. ஆனால், முஸ்லிம்கள் அனைவரும் ஒரே அணியின் கீழ் இருக்கவில்லை என்பதுடன் முஸ்லிம் லீகில் உள்ள எல்லோரும்கூட ஜின்னுவைத் தங்கள் ஒரே தலைவராக ஏற்கவில்லை. 1925ல் நடந்த முஸ்லிம் லீக் மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய சர் அப்துர் ரஹீம், அப்பட்டமான வகுப்புவாதத் தொனியில், முஸ்லிம்கள் தங்கள் தலைவிதியை நிர்ணயிக்கும் பொறுப்பை இந்துக்களிடம் ஒப்படைக்க முடியாது என்றும் இந்தியாவின் முன்னேற்றத்துக்கு ஆங்கிலேயர்களின் சேவை கட்டாயம் தேவை என்றும் முழங்கினுர் !

இதற்கிடையில், இந்து மகாசபையும் முன்பைவிடச் சுறுசுறுப்படைந்து, 1925 முதல் நாடெங்கும் கிளைகளை அமைத்துவரத் தொடங்கியது. 1925ல் கல்கத்தாவில் நடந்த அதன் கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய லஜ்பத் ராய், இந்து மகாசபை எல்லா அரசியல் விவகாரங்களிலும் இந்துக்களின் வகுப்புரிமை நலன்களைப் பாதுகாக்கும் என்று அறிவித்தார். அது மட்டுமல்ல, வலுக்கட்டாயமாக முஸ்லிம்களாக்கப்பட்ட இந்துக்களை மறுபடியும் இந்து மதத்துக்குத் திருப்புவது இந்து மகாசபையின் நோக்கங்களுள் ஒன்ருக இருக்கும் என்றும் அவர் பேசினுர். இதற்காக ஏற்பட்ட " சுத்திகரிப்பு " (தூய்மை) இயக்கம் இந்து முஸ்லிம் வகுப்புவெறியை மேலும் தூண்டுவதாயிற்று.

காந்தியடிகள் 1922ல் ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்தி விட்ட பிறகு நாட்டிலே பொதுமக்களின் இயக்கம் எதுவும் நடைபெறவில்லை. இந்துக்களிலும் முஸ்லிம்களிலும் உள்ள வகுப்பு வெறியர்களுக்கு இது நல்ல வாய்ப்பாயிற்று. அவர்கள் எதை எதையோ சொல்லி மக்களை வகுப்புக் கலகங்களுக்குத் தூண்டி வந்தார்கள். எனவே, சிறியவையும் பெரியவையுமான வகுப்புக் கலவரங்கள் வெடிப்பது நாட்டின் அன்றுட நிகழ்ச்சியாகி விட்டது. 1926ல் நாட்டின் பல பகுதிகளில் சட்ட மீறிய செயல்கள், கலக நிகழ்ச்சிகள் ஏற்பட்டன ; மே, ஜூன், ஜூலை மாதங்களில் கல்கத்தாவில் ஏற்பட்ட கலகம் இவற்றுள் மிகப் பயங்கரமானது.

சி. ஆர். தாஸ் உயிரோடிருந்த வரையில் (வங்காளத்தில்) பல முஸ்லிம்கள் சுயராச்சியக் கட்சியில் சேர்ந்திருந்தார்கள்; அவர்களிலே பலர் அந்தக் கட்சியின் வேட்பாளர்களாக வங்காளச் சட்டசபைக்கும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர் மறைவுக்குப் பிறகு, அந்த ஒற்றுமைச் சக்தியும் மறைந்துவிட்டது. தவிர, வங்காள ஒப்பந்தத்தின் தோல்வியால் ஏற்பட்ட கசப்புணர்ச்சியும் இன்னமும் முஸ்லிம்களின் உள்ளத்தில் (குறிப்பாக, வங்காள முஸ்லிம்களிடையில்) உருக்குலையாமல் இருந்து வந்தது. இவைகளின் விளைவாகப் பல முஸ்லிம் தலைவர்கள் சுயராச்சியக் கட்சியிலிருந்து விலகிக்கொண்டார்கள். இதனால், இந்தியத் தேசீய வாழ்வில் தலை தூக்கிய பிரிவினை வாதம் மேலும் வலுப்பெறலாயிற்று.

**மூன்றாவது சட்டசபைத் தேர்தல் :**

வெறுப்பும் ஏமாற்றமும் பிளவுகளும் மலிந்த இந்தச் சூழ்நிலையிலேதான், 1926 நவம்பரில், மத்திய சட்டசபைக்கும் மாநிலச் சட்டசபைகளுக்கும் தேர்தல் நடந்தது. பின்னர் ஒரு சமயம் மோதிலால் நேரு குறிப்பிட்டது போல, பணபலம், லஞ்சம், அச்சுறுத்தல், பொய்கள் ஆகியவற்றின் துணையோடு எழுந்து நின்ற மட்டரகமான வகுப்பு வாதத்துக்கும் தேசீய உணர்ச்சிக்கும் இடையே நடந்த போராட்டமாகவே இந்தத் தேர்தல் நடைபெற்றது.

ஆனாலும், இந்தத் தேர்தல் காலத்தில் சுயராச்சியக் கட்சிக்குச் சாதகமான நிலைமை ஒன்றும் இருந்தது. 1923 தேர்தலில் சுயராச்சியக் கட்சி தன் சொந்தப் பலத்திலேயே நின்றது. இப்போதோ, 1924ல் காந்தியடிகள் தலைமையில் நடந்த பெல்காம் காங்கிரஸ், சுயராச்சியக் கட்சி காங்கிரசின் ஒரு முழுமையான பாகமென்றும், அது காங்கிரசின் சார்பிலேயே சட்டசபைகளில் பங்குகொள்ளும் என்றும் தீர்மானித்திருந்ததால், சுயராச்சியக் கட்சியின் கை வலுவடைந்தது. 1927 தேர்தலில், இக்கட்சி காங்கிரசின் பேரால் போட்டியிட்டதால், பழைய "மாறுதல் விரும்பாதவர்களி"ன் ஆதரவைக்கூட அது பெற்றுக்கொள்ள முடிந்தது. இதன் விளைவாக, சுயராச்சியக் கட்சி பல இடையூறு

களையும் சமாளித்துப் பெரு வெற்றிபெற்றது. அதாவது, தேர்ந்தெடுக்கப்பட்ட 104 உறுப்பினர்களைக்கொண்ட சட்டசபையில் 40 இடங்களைக் கைப்பற்றி, சட்டசபையில் தனிப் பெரிய கட்சி என்ற நிலையை அடைந்தது.

ஆனால், எல்லா இடங்களிலும் ஏற்பட்ட வெற்றி தோல்விகளைக் கணக்கிட்டால் சட்டசபைகளில் சுயராச்சியக் கட்சியின் பலம் வெகுவாகக் குறைந்திருந்தது என்றே கொள்ளவேண்டும். சென்னையில் சுயராச்சியக் கட்சி கிட்டத்தட்டப் பாதி இடங்களைக் கைப்பற்றியது; பீகாரிலும் ஒரிசாவிலும் கட்சி உறுதியாகவே இருந்தாலும், வங்காளத்திலும் பம்பாயிலும் முன்னை விட பலங் குன்றிப் போயிற்று; மத்திய மாகாணம், ஐக்கிய மாகாணம், பஞ்சாப் ஆகிய இடங்களிலோ அடியோடு சாய்க்கப்பட்டு விட்டது. பொதுவாகப் பார்க்கையில், இந்தத் தேர்தலில் ஏற்பட்ட பெரிய கேடு என்னவென்றால், சட்டசபைகளில் முன்பு சுயராச்சியக் கட்சியார் பெற்றிருந்த இடத்தை இப்போது வகுப்புவாத முஸ்லிம்கள் பெற்றுவிட்டார்கள்.

இந்திய அரசியலில் ஏற்பட்டுவிட்ட பெரிய பிளவு சட்டசபையில் தெளிவாகவே தெரிந்தது. மோதிலால் நேரு, சீனிவாச அய்யங்கார் ஆகியவர்களின் தலைமையில் இயங்கிய சுயராச்சியக் கட்சியார் தவிர, மாளவியா, லாலா லஜ்பத் ராய் ஆகியோர் தலைமையில் இயங்கிய சிலர் "தேசீயக் கட்சியார்" என்ற பெயரில் இணைந்தார்கள். பொறுப்பான ஒத்துழைப்பாளர்களும் இந்து மகாசபையினருமாகிய இந்தத் தேசீயக் கட்சியார் 20 பேர் இருந்தார்கள். முஸ்லிம் உறுப்பினர்களில் பெரும்பாலோர், சர் சுல்பிகர் அலி கான் தலைமையில், பொதுவான சில அடிப்படைகளில் மத்திய முஸ்லிம் கட்சி என்ற ஒன்றை அமைத்தார்கள். இவர்களும் கட்சிச் சார்பில்லாத முஸ்லிம்களுமாகச் சட்டசபையில் 17 பேர் இருந்தார்கள். ஒரு சில முஸ்லிம்களும் இந்துக்களும் சேர்ந்த குழு ஒன்று சுயேச்சைக்கட்சி என்னும் பழைய பெயரில் ஜின்னாவின் தலைமையில் செயல்பட்டது. இவைகள் தவிர, ஐரோப்பிய நலன்களிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்த ஐரோப்பியர்களின் கட்சி ஒன்றும் இருந்தது.

இதன் உறுப்பினர் எண்ணிக்கை குறைவாக இருந்தாலும், இது, ஒரு கட்டுக்கோப்பான குழுவாக இருந்தது.

இந்தப் பல கட்சிகளின் நடைமுறைகளையும் ஒன்றிணைத்துச் செல்வதில் காங்கிரஸ் கட்சியின் தலைமைக் கொறடாவாக இருந்த ரஃபி அகமது கித்வாயின் பாடு மிகவும் திண்டாட்டமாகப் போய் விட்டது. ஆனாலும், இத்தனை பிளவுகளுக்கு மத்தியிலும், சட்ட சபையில் அரசாங்கம் பலதடவை தோற்கடிக்கப்பட்டது என்றால், அதற்குக் கித்வாயின் சிறந்த நிருவாகத் திறமையே காரணம்.

**காங்கிரசின் கட்டளை :**

தேர்தல் முடிந்ததும் காங்கிரசின் வருடாந்திரக் கூட்டம் கௌஹாத்தியில் நடைபெற்றது. அரசாங்கத்துக்குப் பொறுப்பான ஒத்துழைப்பு வழங்குவது என்னும் கொள்கையை மாளவியா விளக்கி வலியுறுத்தினார். மோதிலால் நேரு, சுய ராச்சியக் கட்சியாராகிய காங்கிரஸ்காரர்களுக்கும் மாளவியா போன்றவர்களுக்கும் இடையிலுள்ள கொள்கை வேறுபாட்டை விளக்கினார். அரசாங்கம் நமது தேசீயக் கோரிக்கையை ஏற்பதோடு, அதற்கு முதல் அடையாளமாக வங்காளத்துக் காவல் கைதிகளை விடுதலை செய்ய ஒப்புக்கொள்ள வேண்டும். இதற்கு அரசாங்கம் தயாராக இல்லாத வரையில் அவர்கள் (அரசாங்கத்தார்) வழங்கும் பதவிகளை ஏற்பதைப் பற்றிச் சுயராச்சியக் கட்சி நினைத்துக்கூடப் பார்க்காது என்றார் அவர். கூட்டம் மோதிலால் நேருவின் கருத்துக்களையே ஏற்றது. அதற்கு ஏற்றபடியே, காங்கிரஸ்காரர்கள் சட்டசபையில் ஆற்ற வேண்டிய பணிகளையும் பின்வருமாறு வரையறுத்தது: "நமது தேசீயக் கோரிக்கைக்கு இணங்கும் விதமாக அரசாங்கம் தனது போக்கை மாற்றிக் கொண்டிருக்கிறது என்று காங்கிரஸ் அல்லது அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி நம்பி ஏற்கும் வரை, அரசாங்கம் தரும் மந்திரி பதவிகளையோ மற்ற பதவிகளையோ காங்கிரஸ் உறுப்பினர்கள் ஏற்கக்கூடாது; அத்துடன், மற்றக் கட்சிகள் மந்திரி சபை அமைப்பதையும் நமது உறுப்பினர்கள் எதிர்த்து வரவேண்டும்." இந்தக் கொள்கையின் அடிப்படையில் அரசாங்கம் தரும் தாற்காலிகப் பொறுப்புக்களையும் அதன் வரவு செலவுத்

திட்டத்தையும் காங்கிரஸ் உறுப்பினர்கள் நிராகரிக்க வேண்டும் என்றும் அதிகார வர்க்கம் தன்னைப் பலப்படுத்திக் கொள்வதற்காக எடுக்கும் எல்லா நடவடிக்கைகளையும் தோற்கடிக்க வேண்டும் என்றும் காங்கிரஸ் விதித்தது. அதே சமயம், மாளவியாவையும் அவரைச் சேர்ந்தவர்களையும் திருப்திப்படுத்தும் விதமாக, தேசீய வாழ்வின் சரியான வளர்ச்சிக்கு ஏற்ற தீர்மானங்களையும் மசோதாக்களையும் காங்கிரஸ் உறுப்பினர்கள் கொண்டுவரலாம் அல்லது அத்தகைய நடவடிக்கைகளுக்கு அவர்கள் ஆதரவு அளிக்கலாம் என்றும் தெரிவித்தது.

காங்கிரசின் இந்தக் கட்டளைக்கு ஏற்ப காங்கிரஸ்காரர்கள், மூன்றாவது சட்டசபையின் முதலாவது கூட்டத் தொடருக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள்.

### ஒத்திவைப்புத் தீர்மானங்கள் :

1926 ஏப்ரலில் இந்திய வைசிராயாகப் பதவி ஏற்ற இர்வின் பிரபு, 1927 ஜனவரி 18ல் இந்தியச் சட்டசபைக் கட்டிடத்தைத் திறந்து வைத்தார். அந்தக் கட்டிடத்தில்தான், தெளிவில்லாத பல எதிர்பார்ப்புகளுக்கு மத்தியில், மூன்றாவது சட்டசபையின் முதலாவது கூட்டத் தொடர் ஜனவரி 19 ஆம் தேதி ஆரம்பமாயிற்று. காங்கிரஸ் (சுயராச்சியக்) கட்சியின் தலைவரான பண்டித மோதிலால் நேரு, ஜனவரி 21ல் ஓர் ஒத்திவைப்புத் தீர்மானத்தின் மூலம் அரசாங்கத்தின் மீது தமது முதலாவது தாக்குதலைத் தொடுத்தார். வங்காளத்திலிருந்து சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள எஸ். சி. மித்ரா சபைக்கு வரவில்லை; அவர் வந்து கலந்துகொள்ள முடியாதபடி அரசாங்கம் அவரைக் காவல் கைதியாக அடைத்து வைத்திருக்கிறது; இதுபற்றி விவாதிப்பதற்காகச் சபையின் நடவடிக்கைகளைத் தள்ளிவைக்க வேண்டும் என்பதே அந்தத் தீர்மானம். சட்டசபையின் உரிமைகள் மற்றும் சலுகைகள் பற்றிய பிரச்சினையை எழுப்பிய மோதிலால் நேரு, மித்ரா அடைத்து வைக்கப்பட்டதன் மூலம் இந்தச் சபையின் உரிமையும் அவரைச் சட்டசபைக்குத் தேர்ந்தெடுத்த (தொகுதி) மக்களின் உரிமையும் மீறப்பட்டிருக்கிறது என்று குற்றஞ்சாட்டினார். அவர் மேலும் பேசுகையில் கூறியதாவது :

"இங்கிலாந்தின் மக்கள் சபைக்கு உள்ள உரிமை இந்தச் சட்ட சபைக்கு வழங்கப்படவில்லை என்பதை நான் அறிவேன்; ஆனாலும், மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட சபை என்ற உரிமை இந்தச் சபைக்குச் சிறிதளவாவது இருக்கும் வரையில், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு பிரதிநிதிக்கு, அவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் முறையில் இங்கே வந்து அமர, முழு உரிமை இருக்கவேண்டும். வாக்காளர்கள் தங்கள் தீர்ப்பை வழங்கியிருக்கிறார்கள்; அந்தத் தீர்ப்பை இந்தச் சபை அலட்சியப் படுத்தாது என்று நம்புகிறேன். ஏனென்றால், அந்த தீர்ப்புத்தான் நாம் அனைவரும் இங்கே வந்து இருக்க உரிமையளித்திருக்கிறது."

உள்துறை உறுப்பினர் அரசாங்கத்தின் சார்பில் அரசாங்கக் கட்சியை எடுத்துரைத்தார். அதைத் தொடர்ந்து, பல உறுப்பினர்கள் மோதிலால் தொடங்கிய தாக்குதலைத் தொடர்ந்தார்கள். சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் துணைத் தலைவரான எஸ். சீனிவாச அய்யங்கார் உள்துறை உறுப்பினரின் விவாதங்களை மறுத்துரைத்தார். வங்காளக் குற்றச் சட்டத்திருத்தச் சட்டத்தின் கீழ் மித்ரா கைது செய்யப்பட்டுள்ளார். ஆனால், ஒரு சட்ட சபை உறுப்பினரின் உரிமையில் இது தலையிடுகிறது என்பதால், இது பாராளுமன்றச் சட்டத்தை மீறும் செய்கையாகும் என்று விளக்கினார் அவர்.

மோதிலாலின் தீர்மானத்தை முழுமையாக ஆதரித்த மிதவாதிகளின் தலைவர் பண்டித இருதய நாத் குன்ஸ்ரு மிகுந்த ஏளனத் தொனியில் பின்வருமாறு குறிப்பிட்டார்: "தேர்தலில் வேட்பாளராகப் போட்டியிட மித்ராவுக்கு எந்தத் தடையும் இருக்கவில்லை. வேட்பாளராக நிற்பதற்கு ஒருவருக்கு எந்தத் தடையும் விதிக்கப்படாத போது, தேர்ந்தெடுக்கப்பட்ட அவர் சட்டசபைக்கு வருவது மட்டும் ஏன் தடுக்கப்பட வேண்டும்?"

லஜ்பத் ராய், மாளவியா, ஜின்னா, டி. சி. கோஸ்வாமி, சி. எஸ். ரங்க அய்யர் மற்றும் பல உறுப்பினர்கள் தீர்மானத்தை ஆதரித்தார்கள். தீர்மானம் 18 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றது. இதுதான் (இந்தச் சபையில்) அரசாங்கத்துக்குக் கிடைத்த முதல் கண்டனம்.

சில நாட்களுக்குப் பிறகு சபையில் மற்றொரு ஒத்திவைப்புத் தீர்மானம் வந்தது. சீனுவின் தேசிய எழுச்சியை ஒடுக்குவதற்காக இந்தியப் படைவீரர்கள் அனுப்பப்படுகிறார்கள் என்று ஒரு வதந்தி பரவலாக உலவியது. வைசிராய், தமது ஜனவரி 24ஆம் தேதி சட்டசபை உரையில், இது உண்மையே என்று தெரிவித்தார். சீனுவின் தேசிய எழுச்சிக்கு இந்திய மக்களிடையே பெரிய ஆதரவு இருந்து வந்தது. ஆதலால் (அரசாங்கத்தின்) இந்த நடவடிக்கை மக்களிடையே மிகுந்த மனக்கொதிப்பை ஏற்படுத்தியது. ஜனவரி 25ல் சீனிவாச அய்யங்கார் ஒத்திவைப்புத் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார். சீனுவில் இராணுவ நடவடிக்கைக்காக இந்தியப் படைவீரர்களை உள்ளிட்ட ஒரு படையணியை அனுப்ப இந்திய அரசு சம்மதித்திருக்கிறது; அரசாங்கத்தின் இந்த நடவடிக்கையைப் பற்றி விவாதிக்கச் சபை நடவடிக்கைகளை ஒத்தி வைக்க வேண்டும் என்று அந்தத் தீர்மானம் கோரியது.

தீர்மானத்தை எதிர்த்த உள்துறை உறுப்பினர், "இது பற்றி இச்சபை விவாதித்தால் இந்தியாவும் பிரிட்டனும் பல வெளிநாடு களோடு கொண்டுள்ள உறவு பாதிக்கப்படும்" என்று தெரிவித்தார். ஆனால், மோதிலால் நேரு, மாளவியா, சண்முகம் செட்டி, ஜின்னா ஆகியோர், "சட்டசபையைக் கலந்து ஆலோசிக்காமல் இந்திய அரசாங்கம் இந்த நடவடிக்கையில் ஈடுபட்டதைப் பற்றி மட்டும் விவாதிப்பதில் தவறில்லை" என்று கூறினார்கள். அப்படிச் செய்வது சட்டசபையின் எல்லைக்கு உட்பட்டதுதான் என்றும் அதை விவாதிக்கும் உரிமையைச் சபைக்கு வழங்க வேண்டும் என்றும் அவர்கள் வற்புறுத்தினார்கள். இருதரப்பினரின் விவாதங்களையும் கேட்ட சபைத் தலைவர், தீர்மானம் முறையானதுதான் என்றும், அதே நாளில் பின்னால் அது விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் என்றும் அறிவித்தார். ஆனாலும், வைசிராய் தமக்குள்ள தனி அதிகாரத் தைக்கொண்டு தீர்மானத்துக்கு அனுமதி மறுத்துவிட்டார்.

சட்டசபை நடவடிக்கைகளைச் சுறுசுறுப்படையச் செய்த வேறு சில ஒத்திவைப்புத் தீர்மானங்களும் இந்தக் கூட்டத் தொடரில் கொண்டுவரப்பட்டன. அதே விதமாக அமைந்த சில தீர்மானங்

களைச் சுயராச்சியக் கட்சியார் அல்லது தேசீயக் கட்சியார் கொண்டு வந்தார்கள். இந்தத் தீர்மானங்களில் கஞ்சம் பகுதி உறுப்பினர் வி. வி. ஜோகையா கொண்டுவந்த தீர்மானமும் ஒன்று. அந்தத் தீர்மானத்தில், 1818ஆம் ஆண்டின் மூன்றாவது ஒழுங்குமுறைச் சட்டத்தை ரத்துச் செய்ய வேண்டும் என்றும், அரசியல் காவல் கைதிகளை எல்லாம் விடுதலை செய்ய வேண்டும் அல்லது அவர்கள் தங்கள் குற்றமற்ற தன்மையை (நீதிமன்றத்தில்) நிரூபிக்க வாய்ப்பளிக்கும் விதமாக அவர்களை விடுவிக்க வேண்டும் என்றும் கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொண்டார் ஜோகையா. தீர்மானத்தைக் கொண்டுவந்து பேசுகையில், வங்காள ஒழுங்குமுறைச் சட்டம் காலத்துக்கு ஒவ்வாதது என்றும் லாலா லஜ்பத் ராய் போன்ற தேசபக்தர்களை நாடு கடத்தவே அந்தச் சட்டம் பயன்படுத்தப் பட்டிருக்கிறது என்றும் விளக்கிக் கண்டனம் தெரிவித்தார் அவர்.

மோதிலால் நேரு இந்தத் தீர்மானத்துக்கு ஒரு திருத்தம் கொண்டுவந்தார். அதிலே, அரசியல் கைதிகள் அனைவரையும் விடுதலை செய்ய வேண்டும் அல்லது பழைய ஒழுங்குமுறை மற்றும் 1925 ஆம் ஆண்டின் வங்காளக் குற்றச் சட்டத் திருத்தச் சட்டத்தின் கீழ் அவர்களை விசாரிக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார். அவர் தொடர்ந்து பேசும்போது, அரசியல் கைதிகள் அனைவரும் விடுதலை செய்யப்படாவிட்டால் தாங்கள் அரசாங்கத்தோடு ஒத்துழைப்பது பற்றிய பேச்சுக்கே இடமில்லை என்று திட்டவட்டமாக அறிவித்தார். லஜ்பத் ராய், மாளவியா ஆகியோரும், இந்த வேண்டுகோள் ஏற்கப்படாத வரையில், அரசாங்கத்துக்கும் மக்களுக்கும் இடையே இணக்கம் ஏற்படுவதற்கு வாய்ப்பே இல்லை என்று வற்புறுத்திக் கூறினார்கள்.

தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய குன்ஸ்ரு, சட்டத்தையும் ஒழுங்கையும் பாதுகாப்பது பெரும்பாலும் மக்களின் ஒத்துழைப்பைப் பொறுத்தே இருக்கிறது என்றும், இந்திய மக்களைப் பொறுத்தவரையில் அவர்கள் அரசியல் கைதிகளுக்கு நீதி வழங்கப் படவேண்டும் என்பதையே முக்கியமானதாகக் கருதுகிறார்கள்

என்றும் கூறினார். இந்தியப் பாதுகாப்புச் சட்டம் அமுல்படுத்தப் பட்டது பற்றி எழுந்த புகார்களை நினைவுபடுத்திய குன்ஸ்ரு, "அந்தச் சட்டம் அமுல் நடத்தப்பட்ட விதத்தைப் பார்க்கையில், நிருவாகச் சவுகரியங்களைக் கருதி நாட்டிலே ஒரு பாலைவன நிலையை உருவாக்கி விட்டு அதையே அமைதி என்றும் சொல்லிக்கொள்ள முடியுமென்று தெரிகிறது" என்றார்.

அசாமைச் சேர்ந்த மௌல்வி அப்துல் மதீன் சௌதுரி பேசுகையில், அரசாங்கத்தால் கைது செய்யப்பட்டிருப்பவர்கள் லட்சோபலட்சம் மக்களின் அன்புக்குப் பாத்திரமானவர்கள்; ஒரு களங்கமும் இல்லாதவர்களாக மக்களால் கருதப்படுகிற வர்கள். அவர்களைத் தொடர்ந்து சிறைவைத்திருப்பதன் மூலம் அரசாங்கமே நாட்டில் புரட்சிகரமான நடவடிக்கைகளுக்கான சூழ்நிலையை உண்டாக்கிக் கொண்டிருக்கிறது என்று குற்றம் சாட்டினார். வங்க மக்களைக் கடுமையான திகைமுட்டலுக்கு ஆளாக்கி அவர்களை மேலும் கடுமையான நடவடிக்கைகளில் இறங்குமாறு தூண்டவேண்டாம் என்று அவர் அரசாங்கத்துக்கு எடுத்துச் சொன்னார்.

பீகாரைச் சேர்ந்த ராம் நாராயண் சிங், அதிகாரவர்க்கம் மக்கள் பிரதிநிதிகளின் குரலுக்குச் செவிசாய்த்து இந்த தேசியவாதிகளை விடுதலை செய்யாவிட்டால் பயங்கரமான விளைவுகள் ஏற்படும் என்று அரசாங்கத்தை எச்சரித்தார். "இன்று இல்லாவிட்டாலும் வெகு சீக்கிரத்திலேயே நாங்கள் எங்களுடைய (சுதந்திர) அரசை அமைப்போம். அப்போது, அதிகார வர்க்கத்தினராகிய உங்களைக் கைது செய்வோம். விசாரணை எதுவும் இல்லாமல் இந்த நாட்டிலே உங்களைச் சிறையில் அடைத்து வைப்போம்; அல்லது இங்கிலாந்துக்கு நாடு கடத்துவோம்!" என்று பொரிந்து தள்ளினார் ராம் நாராயண்.

கடுமையான விவாதத்துக்குப் பின் ஓட்டுக்கு விடப்பட்ட மோதிலால் நேருவின் திருத்தத் தீர்மானம் 13 வாக்குகள் அதிக மாகப் பெற்று வெற்றி பெற்றது.

**முதல் மோதல் :**

**உருக்குப் பாதுகாப்பு மசோதா :**

மேலே குறித்த தீர்மானங்களும் ஒத்திவைப்பு பிரேரணைகளும் ஆகிய சிறு சண்டைகளே பின்னால் ஏற்பட்ட பெரிய மோதல் களுக்குப் பாதை வகுத்தன.

"உருக்குத்தொழில் பாதுகாப்பு மசோதா விவாதத்தின் போது அரசாங்கத்துக்கும் சுயராச்சியக் கட்சி, காங்கிரஸ் மற்றும் தேசியக் கட்சியாரின் உறுதியான எதிர்முகாமுக்கும் இடையில் பெரிய மோதல் ஏற்பட்டது." இது அரசாங்க அறிக்கையிலேயே "முதலாவது பெரிய மோதல்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முதலாவது உலக யுத்தம் முடிந்த பிறகு, 1924ல் இந்திய உருக்குத் தொழிலுக்கு ஓரளவு பாதுகாப்பு அளிக்கப்பட்டது; அதாவது, டாட்டாவின் உருக்குத் தொழிலுக்கு இது பாதுகாப்பளித்தது. சட்டசபையின் இந்திய உறுப்பினர்கள் பொதுவாக இந்த நடவடிக்கையை வரவேற்றார்கள். ஏற்றுமதி இறக்குமதி வரி விதிப்பு போர்டு இதுபற்றி மேலும் பரிசீலித்து, இந்திய உருக்குத் தொழிலுக்கு மேலும் பாதுகாப்பு வழங்கவேண்டும் என்று சிபாரிசு செய்தது.

இதன் அடிப்படையில் ஏழாண்டு (உருக்குத்தொழில்) பாது காப்புத்திட்டம் ஒன்றை இந்திய அரசாங்கம் வகுத்தது. ஆனால், இந்தப் பாதுகாப்புத் திட்டம், வெளிநாட்டு இறக்குமதிகளுக்கு அதிகமான வரிவிதிப்பதாக இருந்ததே தவிர, இந்திய உருக்குத் தொழிலுக்கு நேரடியான உதவி எதையும் செய்வதாக இல்லை. இறக்குமதிகளின் மீதான வரிவிதிப்பும் ஒரே சீரானதாக இல்லை. பிரிட்டிஷ் உருக்கு இறக்குமதிக்குச் சிறிய அடிப்படை வரி மட்டுமே விதிக்கப்பட்டது. ஐரோப்பிய உருக்கு என்று சொல்லப் பட்ட மற்ற நாட்டு உருக்குக்கு இத்துடன் கூடுதல் வரி ஒன்றும் விதிக்கப்பட்டது, சாம்ராச்சிய முன்னுரிமை என்று சொல்லப் பட்ட இந்த ஏற்றத்தாழ்வான வரிவிதிப்புமுறை இந்தியாவில் பரவலான எதிர்ப்புக்கு உள்ளாயிற்று. இது, இந்தியத் தொழில் களுக்குப் பாதுகாப்பு என்ற பெயரில் பிரிட்டிஷ் நலன்களைப் பேணிக்கொள்ளும் தந்திர உபாயமாகவே கருதிக் கண்டிக்கப் பட்டது.

1927 ஜனவரி 26ல் வாணிகத்துறை உறுப்பினர் சர் சார்லஸ் இன்னிஸ் உருக்குத்தொழில் (பாதுகாப்பு) மசோதாவைப் பொறுக்குக் குழுவுக்கு விடவேண்டும் என்று ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். அவரை அடுத்துப் பேசிய ஒரிசாவைச் சேர்ந்த பி. தாஸின் உரையிலேயே விவாதத்தின் தோரணை உருக்கொண்டு விட்டது. இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பு வழங்க வேண்டும் என்ற இந்திய அரசாங்கத்தின் நோக்கம் வரவேற்கத் தக்கதே என்று கூறிய தாஸ், ஏற்கனவே இதுபோன்ற ஏற்பாடுகள் செய்யப்பட்டன என்றாலும் அரசாங்கம், தந்திரமான நாணயச் செலாவணி முறை ஒன்றை நுழைத்து அந்த ஏற்பாடுகளைப் பாழடித்து விட்டது என்று குற்றஞ்சாட்டினர். அவர் தொடர்ந்து பேசுகையில் குறிப்பிட்டதாவது:

"சாம்ராச்சிய முன்னுரிமை முறையை நான் ஏற்கவில்லை. காரணம், எனக்குச் சுதந்திரம் கிடைத்து நானும் (பிரிட்டனுடன்) சமஉரிமையுடையவனாக இருக்கும் போதுதான் இதுபோன்ற முன்னுரிமைகளைப் பற்றிச் சிந்திக்க முடியும்; அப்படி இல்லாத வரை நான் இதுபற்றிச் சிந்திக்கவே தயாராக இல்லை. இப்படி ஒரு முன்னுரிமைத் திட்டத்தை ஏற்று, என்னுடைய நாட்டின் தன்மானத்தை இழந்து எங்கள் தொழில்களைப் பாதுகாப்பதைவிட அவை அழிந்து போவதையே நான் விரும்புவேன்!"

மோதிலால் நேரு, மாளவியா, சீனிவாச அய்யங்கார், டி. பிரகாசம், கயா பிரசாத் சிங் ஆகியோரும் ஏற்றத்தாழ்வான வரிவிதிப்பு முறையை எதிர்த்தார்கள். பொறுப்பான ஒத்துழைப்பாளர் குழுவைச் சேர்ந்த எம். ஆர். ஜயகர், இந்திய உற்பத்திப் பொருள்களுக்கு விலைவாசிப் பாதுகாப்பு வழங்கப்படுமானால் பிரிட்டிஷ் பொருள்களுக்கு சுங்கவரிச் சலுகை வழங்குவதை எதிர்க்கவில்லை என்று குறிப்பிட்டார். இந்தப் பாதுகாப்பைப் பெறப் போகிற டாட்டா நிறுவனத்தின் நிருவாகப் பொறுப்பு இந்தியாவில் பயிற்சி பெற்றவர்களிடமே ஒப்படைக்கப்பட வேண்டும் என்று குன்ஸ்ரூ கேட்டுக் கொண்டார். என். எம். ஜோஷி முற்றிலும் மாறுபட்ட ஒரு குரலை எழுப்பினர். வரி விதிப்பு மூலம் பாதுகாப்பு வழங்க முற்படும்போது அந்த வரிப்

பளுவைப் பொதுமக்களே ஏற்க நேரும்; இப்படிச் செய்வதை விட, (இந்தியத் தொழில்களுக்கு) நேரடியான பொருள் உதவி வழங்குவதே நல்லது என்று கூறினூர் அவர்.

இந்தக் கட்டத்தில் இந்தியத் தரப்பினர் கடுமையான எதிர்ப்பைக் காட்டவில்லை. காரணம், (அப்படி நடவடிக்கைகளில் ஈடுபடுமுன்) பொறுக்குக் குழு இந்த மசோதாவின் மீது எப்படி அறிக்கை கொடுக்கிறது என்பதை அவர்கள் அறிந்துகொள்ள விரும்பினூர்கள். ஆனூலும், இந்தியத் தொழில்களுக்குப் பாதுகாப்பு என்பதன் பேரால் பிரிட்டிஷார் தங்கள் நலனைப் பேணிக் கொள்வதில் முழுமூச்சாக இருக்கிறூர்கள் என்னும் உணர்ச்சியே பரவலாக ஏற்பட்டிருந்தது.

பொறுக்குக் குழுவின் சிபாரிசுகளுடன் இந்த மசோதா பிப்ரவரி 14ஆம் தேதி சபையில் கொண்டுவரப்பட்ட போது, விவாதத்தில், ஒரு புதிய கூர்மையும் அரசியல் தோரணையும் ஏற்பட்டு விட்டன. மசோதா முன்மொழியப் பட்டதுமே, பம்பாயைச் சேர்ந்த ஜம்னு தாஸ் எம். மேத்தா, மசோதாவை மீண்டும் பொறுக்குக் குழுவுக்கு அனுப்பவேண்டும் என்ற தீர்மானத்தைக் கொண்டுவந்தார். தமது கோரிக்கையை விளக்கி அவர் பேசியதாவது: ''சாம்ராச்சிய முன்னுரிமை என்பது ஏற்கெனவே இருந்து வருகிறது. இந்திய உருக்குத் தொழிலுக்குப் பாதுகாப்பளிக்கும் இந்த முக்கியமான நடவடிக்கையையும் (ஏற்கெனவே உள்ள) விவாதத்துக்கிடமான முன்னுரிமை முறையையும் ஏன் ஒன்ருக முடிச்சுப் போட வேண்டும்? இப்படிச் செய்ய முனைந்துள்ள அரசாங்கத்தின் உள்நோக்கம் தெளிவாகவே தெரிகிறது. முன்னுரிமை முறை என்ற பிரிட்டிஷ் நலன்களைப் பேணுவதற்காக உருவாக்கப் பட்டுள்ள சுங்கவரித் திட்டத்துக்கு, இந்திய மக்கள் பிரதிநிதி களின் ஒப்புதலைப் பெறுவதுதான் அந்த நோக்கம்.'' இவ்வாறு தெளிவுபடுத்திய மேத்தா, ''இந்த விவகாரத்தில் நாங்கள் அரசாங்கத்துக்கு ஒத்தூதப் போவதில்லை'' என்று உறுதியாக அறிவித்தார். சாம்ராச்சிய முன்னுரிமை முறையோடு சுய ஆட்சி இயக்கத்தைத் தொடர்பு படுத்தி மேத்தா பின்வருமாறு பேசினூர்:

"இந்த நாட்டின் பிறப்புரிமையாகிய சுதந்திரம் அதற்கு மறுக்கப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் மற்றும் முதலாளிகளின் சார்பில் இந்த நாடு சுரண்டப்படுவதோடு, மற்ற நாடுகளை அடிமைப் படுத்தவும் இந்தியா பயன்படுத்தப்பட்டு வருகிறது. இது எங்கள் விருப்பத்தின் பேரில் நடைபெறவில்லை என்றாலுங்கூட, சீன மக்களின் சுதந்திரத்தை நசுக்குவதற்கு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கைக்கருவியாகப் பயன்படுத்தப் படுகிற எங்கள் இந்தியாவின் மீது (பாதிக்கப்பட்ட) உலகிலுள்ள மற்ற நாடுகள் கடுமையான அருவருப்பு அடைந்துள்ளன. இதெல்லாம் எங்கள் ஒப்புதலைப் பெறாமலும் எங்கள் விருப் பத்துக்கு மாறாகவும் நடைபெறுகிறது. இந்த நிலையில், சாம் ராச்சிய முன்னுரிமை முறையை இந்த நாட்டு மக்கள் ஏற்றுக் கொள்ளுமாறு செய்ய முடியுமானால் அதை விடப் பெரிய அற்புதம் வேறு இருக்க முடியாது."

இந்தியாவின் பிரபல தொழிலதிபர்களுள் ஒருவரான கனஷியாம் தாஸ் பிர்லா, மேத்தாவின் தீர்மானத்தை ஆதரித்தார். 'வரிச் சலுகை என்பது பொருளை ஏற்றுமதி செய்த நாட்டை அடிப் படையாகக் கொண்டதல்ல, பொருளின் தரத்தைப் பொறுத்தது' என்று வர்த்தகத்துறை உறுப்பினர் சொல்லியிருந்ததைத் தகுந்த ஆதாரங்களுடன் மறுத்துரைத்தார் பிர்லா. இந்த வரிவிதிப்புத் திட்டத்தின்படி, இங்கிலாந்திலிருந்து வருகின்ற பொருள் தரமானதாக இருந்தாலும் தரம் குறைந்ததாக இருந்தாலும், அதற்குக் குறைந்த வரியே விதிக்கப்படுகிறது; வேறு நாடுகளி லிருந்து வருகின்ற உயர்ந்த தரம் உடைய பொருளுக்கும் அதிகமான வரியே விதிக்கப்படுகிறது. இது சாம்ராச்சிய முன்னுரிமை என்பதைத் தவிர வேறில்லை. எனவேதான், "சபை இதை முழு மூச்சாக எதிர்க்க வேண்டியது அவசியமாகிறது." பிர்லா தொடர்ந்து பேசுகையில் கூறியதாவது: "இது இந்தியா வுக்கும் பிரிட்டனுக்கும் இடையிலான பரஸ்பர வரிச் சலுகைத் திட்டமாக இருக்குமானால், அல்லது இதன் விளைவாக நுகர்வாளி களான பொதுமக்கள் பாதிக்கப்பட மாட்டார்கள் என்று இருக்கு மானால், இந்தத் திட்டத்தை ஆதரிக்கத் தடையில்லை. ஆனால், பிரிட்டிஷ் பொருள்கள் மற்றும் வேறு நாட்டுப் பொருள்களின்

விலைகளை ஒப்பிட்டுப் பார்க்கையில் இந்திய மக்கள் பிரிட்டிஷ் பொருள்களையே வாங்க வேண்டிய கட்டாயநிலை உண்டாக்கப் பட்டிருப்பது தெளிவாகவே புலப்படுகிறது. அதாவது, பிரிட்டிஷ் உற்பத்தியாளர்களைப் பாதுகாப்பதற்காக இந்திய நுகர்வாளி களான பொதுமக்கள் இம்சிக்கப்படுகிறார்கள் என்பது தெளி வாகிறது.'' இவ்வாறு விளக்கி, மசோதாவை எதிர்ப்பதாகக் கூறிய பிர்லா, "ஆனாலும் சுயேச்சைக் கட்சியின் தலைவரை (ஜின்னாவை) வசப்படுத்திக் கொண்ட வர்த்தகத்துறை உறுப் பினரை பாராட்டுகிறேன்'' என்றார். "நல்ல வேளை, சபையில் செல்வாக்குள்ள (காங்கிரஸ் மற்றும் மாளவியாவின் தேசீயக் கட்சி ஆகிய) இரண்டு கட்சிகளையும் உறுப்பினரால் பிடிக்க முடியவில்லை'' என்றும் அவர் கூறினார்.

பிர்லாவும் மற்றவர்களும் சாம்ராச்சிய முன்னுரிமை பற்றிக் கூறியதைக் கடுமையாக எதிர்த்தார் ஜின்னா. "மற்ற நாட்டுப் பொருள்கள் இங்கே விலையாக முடியாத நிலையை உண்டாக்கும் அளவுக்கு பிரிட்டிஷ் பொருள்களுக்கு மிகமிகக் குறைவான வரியே விதிக்கப்படுமானால் மட்டுமே அதை சாம்ராச்சிய முன்னுரிமை என்று சொல்லலாம். இப்போது நம் முன் உள்ள திட்டம் அத்தகைய நிலைமையை உண்டாக்கவில்லை என்பதே என் எண்ணம். குறிப்பாக, இது பற்றி மேத்தா கூறியது சரியில்லை'' என்று மறுத்துரைத்தார் ஜின்னா. எனவே, அந்த மசோதாவின் கீழ் ஏற்படுத்தப்பட்ட வரிவிதிப்புத் திட்டத்தை அவர் ஆதரித்தார். தமது பேச்சின் முடிவில், ஜின்னா, பின்கண்ட எச்சரிக்கையையும் விடுத்தார்: எதிர்க் கட்சிகள் இதை எதிர்ப்பதால் தீங்குகளே ஏற்பட இருக்கின்றன. இந்தப் பிரச்சினையை இங்கே தீர்க்க முடியாதபடி முட்டுக்கட்டை போடுவதால், இதைப் பற்றி முடிவு செய்யும் உரிமை இந்தியா மந்திரிக்கு வலியச் சென்று கிடைக்கிறது என்பதை நாம் மறந்து விடக் கூடாது. "நீங்கள் நமது சொந்தத் தொழில் என்று கொண்டு முழு மனத்தோடு காப்பாற்ற முனைந்திருக்கிற தொழிலுக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கிறது என்பதை மறந்து விடாதீர்கள்!''

இதற்குச் சுடச்சுடப் பதிலளித்தார் மோதிலால் நேரு: "இந்த விவகாரத்தில் எனது கட்சியின் நிலைமையை நான் தெளிவுபடுத்தி விட விரும்புகிறேன். இந்திய நிதிக் கமிஷன் வகுத்துள்ள கணிப்பின்படி இப்போது கொண்டுவரப்படும் திட்டத்தை சாம்ராச்சிய முன்னுரிமை என்று சொல்ல முடியாமல் இருக்கலாம். ஐரோப்பிய உருக்குக்கு இல்லாத சலுகை (இங்கே) பிரிட்டிஷ் உருக்குக்குத் தரப் படுவதாகிய ஆபத்தான கோட்பாடும் இதில் இணைக்கப்படாமல் இருக்கலாம். ஆனால், இந்தத் திட்டத்தை நாம் ஏற்றுக்கொண்டால், அது, அந்த ஆபத்திலேதான் கொண்டு இறக்கிவிடப் போகிறது. உதாரணமாக, டாட்டாவின் உருக்கு சென்று சேர முடியாத இந்தியப் பகுதிகளில் பிரிட்டிஷ் பொருள்களே விற்கப்படும். அதாவது, மிக அதிகமான விலைகொடுத்து பிரிட்டிஷ் பொருள்களையே மக்கள் வாங்க நேரும். அது, பிரிட்டிஷ் தொழிலுக்குப் பாதுகாப்பாகுமே தவிர, எந்த விதத்திலும் டாட்டாவுக்குப் பாதுகாப்பு ஆகாது." இதைத் தொடர்ந்து மிக ஆவேசமாகப் பின்வருமாறு அறைகூவினார் மோதிலால்:

"மற்ற நாடுகளை விட பிரிட்டனுக்கு வரிச்சலுகை உரிமை என்ற கொள்கை இந்தத் திட்டத்தின் உள்ளடக்கமாக இருக்குமானால், இந்தத் திட்டத்தையே நான் ஏற்க முடியாது. இந்த மசோதா எத்தனை நலன்களைத் தருவதாக இருந்தாலும் சரி,—இப்போது இருக்கிற அல்லது எதிர்காலத்தில் வரப்போகிற டாட்டா அல்லது இந்திய உருக்குத் தொழிலுக்கு அது பொன் கொழிப்பதாகவே இருந்தாலும் சரி,—நான் இந்த மசோதாவை ஆதரிக்க முடியாது. சாம்ராச்சிய முன்னுரிமை அல்லது பிரிட்டிஷ் காரருக்கு (வரிச்சலுகை) உரிமை என்னும் கோட்பாட்டை நமது நாட்டு வரி விதிப்புத் திட்டத்தில் நுழைக்கும் மசோதாவை ஆதரிப்பதைவிட என் கண் முன்னேயே இருபது டாட்டாக்கள் சலுகை பெறுமல் போவதையே நான் விரும்புவேன்!"

இப்போது கொண்டுவரப்பட்டுள்ள திட்டம் சாம்ராச்சிய முன்னுரிமையல்லாமலிருக்கலாம், அது அப்படி இல்லை என்றும் தான் தோன்றுகிறது என்றும் கூறிய லஜபத் ராய், "ஆனால், இதிலே ஏற்றத்தாழ்வு இருக்கவே செய்கிறது,—இந்த ஏற்றத்

தாழ்வு மேலும் பெரிய ஏற்றத்தாழ்வுக்கே வழி வகுக்கக் கூடியது" என்றும் அடித்துப் பேசினார். இந்தத் திட்டத்தை நுனி சிறுத்தும் அடி பருத்தும் உள்ள ஒரு ஆப்புக்கு இணையானதாக அவர் குறிப்பிட்டு, நுனிப்பாகத்தை நுழைய விட்டால் பிறகு அடிப் பாகத்தையும் நுழைய விடவேண்டியதாயிருக்கும் என்றார். "இன்று, சாம்ராச்சிய முன்னுரிமை வழங்கவேண்டும் என்பது அரசாங்கத்தின் நோக்கமாக இல்லாதிருக்கலாம். ஆனால், நமக்கு ஏற்பட்டுள்ள பழைய அனுபவங்கள் என்ன?" என்று அவர் கேட்டார்.

"இந்தியாவில் ஆங்கில ஆட்சியின் வரலாறும் இங்கே ஆங்கில நடவடிக்கைகளின் வரலாறும், நல்லெண்ணங்களையும் நல்ல நோக்கங்களையும் வரிசையாகக் கொன்று புதைத்த வரலாறே என்பதை நான் இங்கே தெளிவாக அறிவிக்க விழைகிறேன். நாம் எவ்வளவுதான் நல்லெண்ணத்தோடு செயல்புரிந்து வந்திருந்தாலும், இந்த நாட்டு மக்களாகிய நாம், ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாக பல இன்னல்களுக்கும் அழிவுகளுக்குமே ஆளாக்கப்பட்டு வந்திருக்கிறோம். நாம் முழுக்க முழுக்க மற்றவர்களைச் சார்ந்தே நிற்கும் விதமாக நமது தொழில்களும் பொருளாதாரமும் சீரழிக்கப்பட்டு வந்திருக்கின்றன. ஒரு நாட்டுக்கும் மற்ற நாட்டுக்கும் இடையே உள்ள உறவு ஆள்வோர்—ஆளப்படுவோர் உறவாகவோ ஆண்டான்—அடிமை உறவாகவோ இருக்கின்ற போது அரசியலுக்கும் பொருளாதாரத்துக்கும் இடையே வேறுபாடு காண நினைப்பது வீண் முயற்சியே" என்றார் லஜ்பத் ராய்.

இந்திய உருக்குத் தொழிலுக்குப் போதுமான பாதுகாப்பு அளிக்கவேண்டும் என்னும் நோக்கத்தைப் பொறுத்த அளவில் இந்தச் சபையில் யாருக்கும் கருத்து வேற்றுமை இல்லை என்று தெரிவித்த சண்முகம் செட்டி, இந்திய உருக்குத் தொழிலுக்குப் பாதுகாப்புத் தேடும்போதே ஐரோப்பாக் கண்டத்தினருக்கு எதிராக நாம் பிரிட்டிஷ் உற்பத்தியாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியது அவசியமா? என்று கேட்டார். அந்த விதமான ஒரு வேலையைச் செய்யுமாறு இந்தச் சபையை வற்புறுத்த முடியாது என்றும் அவர் கூறினார். இந்தியச்

சந்தையில் ஐரோப்பாக் கண்டத்தினரோடு பிரிட்டிஷ் உற்பத்தியாளர்களால் போட்டி போட முடியவில்லை என்றால், பொருள் உதவியோ மற்ற உதவிகளோ அளித்து அவர்களை ஊக்குவிக்க வேண்டிய கடமை பிரிட்டிஷ் அரசாங்கத்தைச் சார்ந்தது; இந்திய அரசாங்கமோ இந்தச் சபையோ அந்த வேலையில் இறங்கவேண்டியதில்லை என்றும் அவர் விளக்கினார்.

மத்திய மாகாணத்தைச் சேர்ந்த பண்டித துவாரக பிரசாத் மிஸ்ரா மசோதாவைக் கடுமையாக எதிர்த்தார். அவர் பேசுகையில் கூறியதாவது: "எங்கள் (இந்தியரது) அரசியல் கசப்பு, நாட்டின் பொருளாதாரத்தால் எமக்கு ஏற்பட்டுள்ள கசப்பின் விளைவு; இந்திய உருக்குத் தொழிலுக்குப் பாதுகாப்பு அளிக்கப் படும்போது வரிகொடுக்கும் பொதுமக்கள் எப்படியும் பாதிக்கப் படவே செய்வார்கள் என்பது நமக்குத் தெரிந்ததே. ஆனால், இந்த மசோதா, வரிகொடுப்போர், இந்தியத் தொழில் ஆகிய இருவரையுமே பாதிப்பதாக உள்ளது. தரம், திறமை என்பவைகளின் பெயரால் பிரிட்டிஷ் உருக்கை இறக்குமதி செய்வதற்காக வகுக்கப் பட்டுள்ள தந்திரமான திட்டம் இது. ஆம், "லாயிட் ஜார்ஜின் (அரசியல்) உருக்குச் சட்டத்தை" இறக்குமதி செய்ததோடு திருப்தியடையாமல் ஆங்கில உருக்கையும் இந்தியாவில் திணிக்கும் முயற்சி இது."

"எதற்கெடுத்தாலும் இஸ்லாமியர் நலன், இஸ்லாமியர் நலன் என்றே பேசிக்கொண்டிருக்கும்" முகம்மதிய உறுப்பினர்களை மத்திய மாகாணத்தைச் சேர்ந்த டி. ஏ. கே. ஷெர்வானி கடுமையாக எச்சரித்தார். இந்த மசோதாவை நிறைவேற்றுவதன் மூலம், மத்திய மாகாணத்தில் தகரப்பெட்டி பூட்டு முதலியன செய்யும் தொழிலில் ஈடுபட்டுள்ள சுமார் 10,000 தொழிலாளர்கள் வேலையிழந்து போவார்கள் என்று அவர்களுக்கு நினைவூட்டினார் அவர்.

சமன் லாலும் என். எம். ஜோஷியும், பொதுமக்கள் மற்றும் தொழிலாளர்களின் நலன் பாதுகாக்கப்படவேண்டும் என்று வற்புறுத்திப் பேசினார்கள். பிரஸ்தாபத் திட்டத்தால் அரசாங் கத்துக்கு அதிக வரி வருமானம் கிடைக்கும். முதலாளிகள் அதிக விலை காரணமாக லாபம் சம்பாதிப்பார்கள். இந்த இரண்டு

பெரிய சக்திகளும் ஒன்று சேர்ந்தால் இந்த நாட்டிலுள்ள ஏழை மக்களின் நலன் பாதுகாக்கப்பட முடியுமா? என்று கேட்டார் ஜோஷி. இதன் காரணமாகவே அந்த மசோதாவை எதிர்ப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

ஐந்து நாள் இந்த மசோதாவின் மீது விவாதம் நடந்தது. கடைசியாக, பிப்ரவரி 21ல் 12 வாக்குகள் கூடுதலாகப் பெற்று மசோதா நிறைவேறியபோது காங்கிரஸ் மற்றும் தேசீயக் கட்சியினர், "வெட்கம்! வெட்கம்!" என்று குரல் எழுப்பினார்கள்.

**நாணய மசோதா மீது கடுமையான மோதல்:**

நிதித்துறை உறுப்பினர் 1927 மார்ச் மாதத்தில் நாணய மசோதாவைக் கொண்டுவந்தபோது அரசாங்கத்துக்கும் எதிர்த்தரப்பினருக்குமிடையே மற்றொரு கடுமையான மோதல் ஏற்பட்டது. 1926 ஆகஸ்ட் 23ல் முதன் முதலாக இந்த நாணய மசோதாவை விவாதிக்க வேண்டுமென்று அரசாங்கம் சபையில் தெரிவித்ததிலிருந்தே இதுபற்றி நாடெங்கிலும் பரவலான வாக்குவாதம் தொடங்கி விட்டது. அப்போது, டி. ரங்காச்சாரியார், பொதுமக்களின் கருத்தை அறியும் பொருட்டு மசோதா பிரசுரிக்கப்பட வேண்டும் என்ற திருத்தத் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார். சுருக்கமான, ஆனால் காரசாரமான, விவாதத்துக்குப் பின் அந்தத் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

1906 ஆம் ஆண்டின் இந்திய நாணயச் சட்டத்தையும் நாணய மசோதா என்னும் 1923 ஆம் ஆண்டின் இந்தியத் தாள் நாணயச் சட்டத்தையும் திருத்துவதற்கான மசோதா ஒன்றை நிதித்துறை உறுப்பினர் 1927 மார்ச் 7ஆம் தேதி கொண்டு வந்தார். மசோதாவின் நோக்கத்தை விளக்குகையில், (இந்திய) ரூபாயின் மதிப்பைத் தங்க மதிப்பீட்டில் வரையறுக்க வேண்டியது அவசியமாகி விட்டது என்றும் ஓர் இந்திய ரூபாயை ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் மதிப்புடையதாக வரையறுக்கலாம் என்றும் அவர் தெரிவித்தார். விலைவாசி நிலவரம் ஏற்கனவே ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் சமம் என்ற வரையறையைப் பெரும்பாலும் உண்டாக்கிவிட்டதால், அதைச் சட்டப்படி உறுதி செய்து விடலாம் என்பது அரசாங்கத்தின் கருத்து.

நிதித்துறை உறுப்பினரின் உரையைத் தொடர்ந்து, முந்திய நூற்றாண்டின் கடைசிக்கட்டத்தில் அமெரிக்காவில் நடைபெற்ற தங்கம் வெள்ளி சமமதிப்பு (மசோதா) விவாதத்தை நினைவூட்டக் கூடிய உணர்ச்சிமயமான காரசாரமான விவாதம் ஒன்று மார்ச் 7, 8 தேதிகளில் நிகழ்ந்தது. இந்திய நாணயச் செலாவணியைப் பற்றிய பிரிட்டிஷ் கொள்கையின் வரலாற்றை விவரித்து நீண்டதோர் உரையாற்றி விவாதத்தைத் தொடங்கி வைத்தார் பண்டித மதன் மோகன் மாளவியா. "ராயல் நாணயக் கமிஷனின் அமைப்பு முறையே, அக்கமிஷன் ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்ற மதிப்பீட்டைத்தான் செய்யும் என்பதை உறுதி செய்வதாகத்தான் இருந்தது. இந்தச் சபையின் மதிப்புக்கு உரியவரான ஒரே ஒரு உறுப்பினரையாவது அந்தக் கமிஷனில் நியமிக்க வேண்டும் என்று (நாம்) எவ்வளவோ கேட்டும், அரசாங்கம் சம்மதிக்கவில்லை. இந்த மசோதாவில் சொல்லப்பட்டுள்ள விதமாக ஒரு ரூபாய் ஒரு ஷில்லிங் 6 பென்ஸுக்குச் சமம் என்று சட்டம் செய்து விட்டால், ஏற்கனவே பாதிப்புக்கு உட்பட்டுள்ள இந்தியத் தொழில்கள் தொடர்ந்து பாதிக்கப்படுவது திண்ணம்" என்று எச்சரித்தார் மாளவியா.

பம்பாயைச் சேர்ந்தவரும் இந்திய வர்த்தகர்களின் பிரதிநிதியுமான புருஷோத்தமதாஸ் தாகுர்தாஸ், முந்திய நூற்றாண்டின் கடைசியில் அமெரிக்க நாணயச்சட்ட விவாதத்தின் போது அரசாங்கத்தை எதிர்த்து நின்ற 'டெமாக்ரெட்' வில்லியம் ஜென்னிங்ஸ் ப்ரையான் போலவே, அரசாங்கத்தின் நாணயக் கொள்கையைக் கடுமையாக எதிர்த்தார். ஒரு ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்ற விகிதத்தை, இங்கே விலைவாசிகள் இன்னமும் உறுதிப் படுத்தவில்லை; ஒரு ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 4 பென்ஸ் என்று முடிவு செய்யக்கூடிய நிலவரமே உள்ளது என்றார் அவர். தாகுர்தாஸ் தொடர்ந்து குறிப்பிட்டதாவது: "இந்திய ஆலைகள் முழுவதுமாக இந்திய விவசாயிகளை நம்பியே இயங்கி வருகின்றன. இந்த மசோதாவில் உள்ளபடி (ஒரு ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்று) உயர்த்தி விதித்தால் இந்தியக் கச்சாப்பொருள் ஏற்றுமதி பாதிக்கப்படும்; அதன் காரணமாக இந்திய விவசாயியின் வாங்கும் சக்தி குறையும். அது, அவனையே நம்பியிருக்கும் இந்திய

ஆலைகளை வெகுவாகப் பாதிக்கும். எனவே, இந்திய ஆலை உரிமையாளர்கள் இந்த மசோதாவை எதிர்க்க வேண்டியது அவசியமேயாகும்''.

ஜம்னுதாஸ் எம். மேத்தா, ஒரு ஷில்லிங் 4 பென்ஸ் ஒரு ரூபாய்க்குச் சமம் என்ற விகிதத்தையே உறுதிப்படுத்தலாம் என்னும் திருத்தத்தைக் கொண்டுவந்து, தாகுர்தாஸ் விவாதித்த முறையிலேயே விவாதித்தார். கல்கத்தா இந்திய வர்த்தகக் கழகத்தின் சார்பிலும் பெரும்பாலும் விவசாயிகளையே கொண்ட தமது தொகுதி மக்களின் சார்பிலும் பேசிய ஜி. டி. பிர்லா இவர்கள் இருவரையும் முழுமையாக ஆதரித்தார். ''உள்நாட்டு உற்பத்திப் பொருள்களின் விலை நிலவரம் ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்ற விகிதத்துக்குச் சரிக்கட்டிப் போய்விட்டது என்பதை நிதித்துறை உறுப்பினர் நிரூபிக்க முடியுமா?'' என்று அறைகூவினார் அவர்.

ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்ற விகிதத்தை எதிர்த்து ஒரு ஷில்லிங் 4 பென்ஸ் என்பதே சரி என்று எடுத்துரைத்தவர்களின் கருத்தை அப்படியே ஏற்றுக்கொண்டு பேசிய சீனிவாச அய்யங்கார், ஒரு ஷில்லிங் 4 பென்ஸ் என்ற விகிதமே இந்திய நலன்களுக்கு உகந்தது என்றும் மற்றது பிரிட்டிஷ் நலன்களுக்கே சாதகமாகும் என்றும் தெரிவித்தார்.

ஜின்னு இப்பொழுது தம்முடைய முந்தைய போக்குக்கு மாருக, அரசாங்கத்தைக் கடுமையாக எதிர்த்தார். குறைந்த விகிதத்தையே ஆதரித்த அவர், ஏற்கெனவே ஒரு குறிப்பிட்ட விகிதத்திற்கு ஆதரவாக முடிவுசெய்து கொண்டவர்களைக் கொண்டே அரசாங்கம் நாணயக் கமிஷனை நிரப்பிவிட்டது என்றும் குற்றஞ் சாட்டினுர். ஆனுலும், பஞ்சாபைச் சேர்ந்த நியமன உறுப்பினர் கான் பகதூர் மியான் அப்துல் அஸீஸ் ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்ற விகிதமே ஏழை மக்களுக்குச் சாதகமானது என்று சொல்லி அரசாங்க மசோதாவை ஆதரித்தார்.

இவ்வளவு தெளிவான விவாதத்துக்குப் பின் ஓட்டுக்கு விடப்பட்ட மேத்தாவின் திருத்தத் தீர்மானம் 65க்கு 68 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது. அது வரையில் உள்ள

சட்டசபை வரலாற்றிலேயே இதுதான் மிகப் பெரும்பாலோர் கலந்து கொண்ட பெரிய வாக்கெடுப்பு.

**அரசியல் முனையில் :**

பொருளாதார முனையில் காரசாரமான விவாதங்கள் நடந்து கொண்டிருந்தாலும் அரசியல் களத்தில் ஏற்பட்டிருந்த மந்தப் போக்கு சிறிதும் குலையவே இல்லை. தேசீயக் கட்சியின் துணைத் தலைவர் எம். ஆர். ஜயகர், 1927 மார்ச் 9ஆம் தேதி, நிருவாகக் கவுன்சில் அமைக்க வேண்டும் என்ற கோரிக்கை கைவிடப்பட வேண்டும் என்று கொண்டுவந்த தீர்மானத்தின் மீது அரசியல் விவாதம் நடந்தது. சி. ஆர். தாஸ் போன்ற ஒரு பெருந்தலைவரால் எடுத்துச் சொல்லப்பட்டு, பிறகு சுயராச்சியக்கட்சித் தலைவர்களால் சட்டசபையிலும் பிரஸ்தாபிக்கப்பட்ட விவகாரங்களை அரசாங்கம் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை என்று அவர் குற்றஞ்சாட்டினார். ஜயகரின் தீர்மானம் 9 வாக்கு அதிகமாகப் பெற்று எதிர்க்கட்சிகளுக்கு வெற்றியாக முடிந்தது. வேறு சில வெட்டுப் பிரேரணைகளின் மீதும் அரசாங்கம் தோற்கடிக்கப் பட்டது. இந்திய ரெயில்வேக்களுக்குத் தளவாடங்கள் வாங்குவதில் இந்தியப் பண்டகசாலைத் துறையைப் புறக்கணித்து விட்டு ரெயில்வே போர்டு செயலாற்றியதைக் கண்டித்துப் பண்டித இருதய நாத் குன்ஸ்ரு கொண்டுவந்த வெட்டுப் பிரேரணையும் அவைகளிலே ஒன்று. ஆயினும் இவைகளெல்லாம், அமைதியான நீர்நிலையில் அவ்வப்போது எழுந்த சிறுசிறு அலைகள் என்றே சொல்ல வேண்டும்.

1927 ஆம் ஆண்டின் இடைப்பகுதியில் அரசியல் களத்தில் சூடு ஏறத் தொடங்கி விட்டது. போஸ் குறிப்பிட்டிருப்பது போல, இந்தப் புதிய எழுச்சியில் இளந்தலைமுறையின் பங்கே மிக அதிகம். உழைப்பாளர் மற்றும் விவசாயிகள் கட்சியின் தலைமையில் உழைப்பாளர்களும் உழவர்களும் நடத்திய விறுவிறுப்பான இயக்கத்திற்கு இந்த எழுச்சியோடு நெருங்கிய தொடர்பு இருந்தது. கரக்பூரிலுள்ள பெங்கால் நாக்பூர் ரெயில்வேயின் மிகப் பெரிய தொழிற்சாலையில் ஏற்பட்ட வேலை நிறுத்தம், தொழிலாளர்

சீக்கிரமே துவக்கப்போகும் கடுமையான போராட்டத்திற்குத் தெளிவான முன்னறிகுறியாக அமைந்தது.

ஆனாலும், உண்மையில், அரசியல் களத்தில் நிலவிய அமைதியைக் கலைத்தவர்கள் அரசாங்கத்தினரே. 1919 ஆம் ஆண்டின் (இந்தியாச்) சட்டத்தின்படி, அச்சட்டத்தின் சீரான செயற்பாட்டைப் பற்றி ஆராய்ந்து புதிய அரசியல் சீர்திருத் தங்களைச் சிபாரிசு செய்யும் குழு ஒன்று 1929ல் நியமிக்கப்பட வேண்டியிருந்தது. ஆனால், இங்கிலாந்தில் ஆட்சியிலிருந்த கன்சர்வேட்டிவ் கட்சி, அங்கே 1929ல் நடக்க இருந்த பொதுத் தேர்தலில் தொழிலாளர் கட்சியினர் ஆட்சியைப் பிடித்து விடுவார்கள் என்று பயந்தது. தொழிலாளர் கட்சியின் தலைவர்கள் இந்தியத் தேசிய சக்திகளுக்கு ஆதரவுகாட்டி வந்திருப்பவர்கள். எனவே, தொழிற்கட்சியின் அரசாங்கம் அந்தக் குழுவை நியமிப்பதைத் தடுத்துவிடும் பொருட்டு, 1929ல் நியமிக்க வேண்டிய பரிசீலனைக்குழுவை கன்சர்வேட்டிவ் அரசாங்கம் 1927லேயே நியமிக்க முடிவு செய்தது.

**சைமன் குழு நியமனம் :**

காந்தியடிகள் அரசியலிலிருந்து விலகியே இருந்து வந்தாலும், அவருடைய தகுதிப்பாட்டையும் முக்கியத்துவத்தையும் அரசாங்கம் உணர்ந்தே இருந்தது. எனவே, நவம்பர் 5 ஆம் தேதி வைசிராயைச் சந்திக்குமாறு அவருக்கு அழைப்பு விடுத்தது. அடிகள் வைசிராயைச் சந்தித்தபோது, (மேற்படி) குழு நியமிப்பது பற்றி நவம்பர் 8 ஆம் தேதி இந்தியா மந்திரி வெளியிட இருந்த அறிவிப்பின் பிரதி ஒன்றை அவரிடம் கொடுத்தார்கள். இந்த விவகாரம் காந்தியடிகளுக்கு அவ்வளவாக மகிழ்ச்சி தர வில்லை. ஆனால், தொடர்ந்து ஏற்பட்டவைகளோ அதை விடப் பெரிய விவகாரங்கள் !

விதிமுறைப்படியான இந்தியக் குழுவின் நியமனம் பற்றிய அறிவிப்பு நவம்பர் 8 ஆம் தேதி லண்டனிலும் தில்லியிலும் முறையாக வெளியிடப்பட்டது. சர் ஜான் சைமன் தலைமையில் அமைந்த அந்தக் குழுவில் ஏழு உறுப்பினர்கள் இருந்தார்கள்.

நடைமுறையில் உள்ள அரசியல் அமைப்பின் செயற்பாடு, இந்தியாவில் கல்வி வளர்ச்சி, பிரதிநிதித்துவ அமைப்புகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் மற்றும் இவை தொடர்பான விவகாரங்களை ஆராய்ந்து அறிக்கை கொடுக்குமாறு இந்தக் குழு கேட்டுக் கொள்ளப் பட்டது. அவ்வாறு செய்யும்போது, இந்தியாவில் பொறுப்பாட்சியை நிறுவுவது எந்த அளவு விரும்பத்தக்கது? அல்லது அப்போது பிரிட்டிஷ் இந்தியாவில் இருந்து வந்த பொறுப் பாட்சியில் எந்த அளவில் விரிவு அல்லது திருத்தம் அல்லது கட்டுப்பாடுகள் ஏற்படுத்தலாம்? என்பவைகளில் குழு கவனம் செலுத்த வேண்டும். மாநிலச் சட்டசபைகளுக்கு இணைச்சபைகளை அமைப்பது எந்த அளவுக்கு விரும்பத்தக்கது என்பது பற்றியும் ஆராயுமாறு குழு கேட்டுக் கொள்ளப்பட்டது.

## இந்தியாவில் எதிர்ப்பு :

இந்த அறிவிப்புக்கு உடனடியாக இந்தியாவெங்கிலும் எதிர்ப்பு எழுந்தது. அதனுடேயே, சில ஆண்டுகளாக இந்தியாவை வளைத்து மூடிக்கிடந்த மந்த நிலையும் விடைபெற்றுக் கொண்டது.

அப்போது லண்டனில் இருந்த மோதிலால் நேரு அதை ஒரு கண்துடைப்பு என்று வருணித்தார். குழுவில் இந்தியர் யாரும் இல்லாதது குறித்து வருந்திய மிதவாதத் தலைவர் சர் டி. பி. ஸப்ரு, இது ஆங்கில அரசாங்கத்துக்கு இந்தியா மீது நம்பிக்கை இல்லை என்பதையே காட்டுகிறது என்றார். " இந்த நடவடிக்கை இந்திய மிதவாதிகளுக்கு ஏற்பட்ட பெரிய அவமானமாகவே " கருதப் பட்டது. 1886ல் நியமிக்கப்பட்ட அரசு ஊழியர் தேர்வுக்குழு தொடங்கி, ஒவ்வொரு கமிஷனிலும் கமிட்டியிலும் மிதவாதிகள் அங்கம் வகித்தே வந்தார்கள் ; மற்றத் தேசீயவாதிகளின் கடுமையான எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், அரசாங்கத்துக்கு ஒத்துழைப்பு நல்கியும் வந்தார்கள். இருப்பினும், இந்த முக்கிய மான கட்டத்தில் அவர்கள் புறக்கணிக்கப்பட்டு விட்டார்கள். பம்பாயில் நடைபெற்ற தேசீய மிதவாதப் பேரவையின் பத்தாவது கூட்டத்தில் இதை வன்மையாகச் சாடினார் ஸப்ரு. குழுவோடு எந்தநிலையிலும் எந்த வகையிலும் தொடர்பு வைத்துக்கொள்ளப்

போவதில்லை என்று மிதவாதப் பேரவை முடிவு செய்தது. இந்து மகாசபையும் இதே விதமான கருத்தையே வெளியிட்டது. காங்கிரஸ் நீங்கலாக உள்ள மற்ற எல்லாக் கட்சிகளின் சார்பிலும் குழுவைக் கண்டித்து அறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது.

காங்கிரசின் வருடாந்திரக் கூட்டம் டிசம்பர் மாதத்தில் சென்னையில் டாக்டர் அன்சாரி தலைமையில் கூடியது. இதற்குள், பிரஸ்ஸல்ஸில் நடந்த ஒடுக்கப்பட்ட தேசீய இனங்களின் மாநாட்டில் கலந்துகொண்டு ஐரோப்பியச் சுற்றுப்பயணம் மேற்கொண்டிருந்த ஜவஹர்லால் நேருவும் இந்தியா திரும்பி விட்டார். சுற்றுப்பயணத்தின்போது சோவியத் ஒன்றியத்திற்குச் சென்றிருந்த நேருவுக்கு ரஷ்ய அரசாங்கம் பல துறைகளில் நிகழ்த்தியிருந்த சாதனைகளில் பெரிதும் கவர்ச்சி ஏற்பட்டிருந்தது. இந்தியாவிலும் இளைஞர், தொழிலாளர் மற்றும் விவசாயிகளின் இயக்கமும் நிறுவனமும் முன்னேற்றம் கண்டிருந்தது. சென்னைக் காங்கிரசின் நடவடிக்கைகளில் இவை அனைத்தின் பாதிப்பும் நன்கு தெரிந்தது. இந்தக் கூட்டத்துக்குக் காந்தியடிகள் வர வில்லை.

காங்கிரசின் வரலாற்றிலேயே, இந்தக் கூட்டத்திலேதான், "பூரண சுதந்திரமே இந்திய மக்களின் லட்சியம்" என்னும் கொள்கை முதல் முதலாகத் தீர்மான வடிவில் அறிவிக்கப் பட்டது. இதுவரை "டொமினியன் அந்தஸ்து" என்றும், "பொறுப்பாட்சி" என்றும், தெளிவில்லாத முறையில் "சுய ராச்சியமே லட்சியம்" என்றும் பலவிதமாக நிறைவேற்றப்பட்டு வந்த தீர்மானங்களின் வரிசையில் ஒரு திட்டவட்டமான திருப்பம் இந்தத் தீர்மானம்.

விதிமுறைப்படியான (சைமன்) குழுவைப் பொறுத்த அளவில், இந்தியாவின் சுயநிர்ணய உரிமையை முழுக்க முழுக்கப் புறக் கணித்து இந்தக் குழு அமைக்கப்பட்டிருக்கிறது என்று அறிவித்தது காங்கிரஸ். எல்லா நிலைகளிலும் எல்லா முறை களிலும் இந்தக் கமிஷனைப் பகிஷ்கரிப்பதே இந்தியாவின் தன்மானத்துக்கு உகந்த நடவடிக்கை என்று ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. சைமன் குழு இந்தியா வந்து சேருகின்ற நாளில் பெரும் ஆர்ப்பாட்டங்களை நடத்தி எதிர்ப்பைத்

தெரிவிக்குமாறு இந்திய மக்கள் அனைவரையும் காங்கிரஸ் கேட்டுக்கொண்டது.

முஸ்லிம்களைப் பொறுத்த அளவில், இந்தக் குழுவைப்பற்றி அவர்களிடையே ஒன்றுபட்ட கருத்து நிலவவில்லை. 1927 டிசம்பர் கடைசி வாக்கில், அகில இந்திய முஸ்லிம் லீக் இரண்டாக உடைந்தது. ஒரு பகுதி, வைஸிராயின் நிருவாகக் கவுன்சில் உறுப்பினராக இருந்த சர் முகம்மது ஷஃபியின் தலைமையில் இயங்கியது; மற்றது ஜின்னாவின் தலைமையை ஏற்றது. ஷஃபி குழு முஸ்லிம் லீகின் வருடாந்திரக் கூட்டம் லாகூரில் நடந்தது; ஜின்னா குழு, தன் கூட்டத்தைக் கல்கத்தாவில் நடத்தியது. லாகூர் கூட்டம் சைமன் குழுவுடன் ஒத்துழைப்பது என்று தீர்மானித்து, மற்ற அரசியல் கட்சிகளோடு கூடி ஆலோசிப்பதற்கு அடிப் படையாக அமையத்தக்க இந்திய அரசியல் சட்டம் ஒன்றை வகுத்துத் தருவதற்கான குழு ஒன்றையும் நியமித்தது. இந்தச் சட்டமே இறுதியான வடிவில் சைமன் குழுவிடம் கொடுக்கப் படுவதாகவும் இருந்தது.

ஜின்னாவின் தலைமையில் கல்கத்தாவில் கூடிய கூட்டம் வேறு விதமாக முடிவு செய்தது. "ஜாலியன்வாலாபாக் நமது உடலை வெட்டிச் சிதைத்தது; சைமன் குழுவோ நமது ஆன்மாவை வெட்டிச் சிதைக்க வந்திருக்கிறது!" என்று தமது தலைமை உரையில் முழங்கினார் ஜின்னா. சைமன் குழுவைப் பகிஷ்கரிப்பது என்று இக்கூட்டம் தீர்மானித்தது.

இவ்விதமாக, இந்தியாவின் பெரும்பாலான தலைவர்கள் சைமன் குழுவைப் பகிஷ்கரிப்பதையே ஆதரித்தார்கள். எனவே, இந்தியா முழுவதும் ஓர் எதிர்ப்பு அலை எழுந்து பரவியது.

### பழைய குருடி கதவைத் திறடி...

மார்லி–மிண்டோ சீர்திருத்தம் வந்தபோதும் மாண்டேகு–செம்ஸ்போர்டு சீர்திருத்தம் வந்தபோதும், சில இந்தியர்களைத் தங்கள் பக்கம் இழுக்கவும் அதன் மூலம் பிரிட்டிஷாருக்கு எதிரான இந்திய இயக்கத்தின் ஒருமையைச் சிதைக்கவும் பல விதமான முயற்சிகள் நடந்ததை நாம் அறிவோம். பிரித்தாளும்

சூழ்ச்சியை மேடையேற்றும் அந்தப் பழைய நாடகமே, இப்போது மீண்டும் நடந்தது. இந்தியா மந்திரியாக இருந்த பர்க்கன்ஹெட் பிரபு 1925 ஆம் ஆண்டு முதலே, இதே விதமாகத்தான் திட்டங்கள் தீட்டிக்கொண்டிருந்தார். தொழிற்கட்சி அரசாங்கம் ராயல் கமிஷன் அமைத்தால் என்ன ஆகுமோ என்று அஞ்சிய அவர் 1927 கோடை காலத்துக்கு முன்பே (தாங்களே) அதை நியமித்துவிட வேண்டும் என்று 1925லேயே முடிவு செய்து கொண்டார். சுயராச்சியக் கட்சியினரில் சிலரைத் தங்கள் பக்கம் இழுத்துக்கொள்ளவும் தேசியவாதிகளிடையே பிளவை ஏற்படுத்தவுமே இவ்வாறு திட்டமிட்டார்கள். 1925 டிசம்பர் 10ல் வைசிராய்க்கு பர்க்கன்ஹெட் எழுதிய கடிதத்தில் இந்த எண்ணம் தெளிவாக வெளிப்பட்டுத் தெரிகிறது :

"பொதுப்படையாகப் பார்த்தால் கூட, இந்த (ராயல்) கமிஷனை 1927 கோடைகாலத்துக்கு முன்பு நாம் நியமித்துவிட வேண்டியது அவசியம் என்பதே என்னுடைய நீண்டநாள் எண்ணம். நமக்குச் சாதகமாகப் பேரம் பண்ணுவதற்கு அல்லது சுயராச்சியக் கட்சியாரிடையே மேலும் பிளவை உண்டாக்குவதற்கு இதை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதும் என் எண்ணம். இதுபற்றிய உங்கள் கருத்தை அறிய விரும்புகிறேன்."

இந்தச் சமயத்திலும் இதைத் தொடர்ந்தும்தான் சுயராச்சியக் கட்சியில் பெரிய பிளவு ஏற்பட்டது என்பதையும், அது வளர்ந்து வளர்ந்து பொறுப்பான ஒத்துழைப்புக் கட்சியை உருவாக்கியது என்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

பிரிட்டிஷார் தளராமல் தங்கள் (பிரிவினை) முயற்சிகளில் ஈடுபட்டு வந்தார்கள். சைமன் குழு நியமிக்கப்பட்ட போதும், குழுவினர் முதன் முதலாக இந்தியாவுக்குச் செல்லும்போது குறிப்பிட்ட சில தனி மனிதர்களையும் குழுக்களையும் மட்டும்தான் சந்திக்க வேண்டும் என்றே இந்தியா மந்திரி விரும்பினார். இதிலேயும் அவருடைய நோக்கம் தெளிவானதே. 1928 பிப்ரவரி 19ல் சைமன் குழுவினர் இந்தியாவுக்குப் புறப்பட இருந்த

சமயத்தில், புதிய வைசிராய்க்குத் தனிப்பட்ட முறையில் பின் வருமாறு எழுதினார் பர்க்கன்ஹெட் :

"பகிஷ்கரிப்பு இயக்கத்தில் ஈடுபாடு கொள்ளாத முஸ்லிம்கள், தாழ்த்தப்பட்ட மக்கள், வர்த்தகர்கள் மற்றும் பலரைத் துணையாகக் கொண்டே, நாம் பகிஷ்கரிப்பு உணர்ச்சியை முறியடித்து வந்திருக்கிறோம். சைமன் குழு இந்தியாவுக்கு வருகின்ற இப்போதும், அதே விதமான நடவடிக்கைகளை மேற்கொண்டு எதிர்ப்பு அணியில் பிளவை உண்டாக்க வேண்டியதின் அத்தியாவசியத்தை மனத்தில் கொண்டே நீங்களும் சைமனும் செயலாற்ற வேண்டும்."

சைமன் குழு இந்தியாவில் வந்து இறங்கியபோது, கருப்புக் கொடிகளும் "திரும்பிப் போ!" என்னும் சுவரொட்டிகளுமே அவர்களை வரவேற்றதைக் கண்ட இந்தியா மந்திரிக்கு மிகுந்த ஏமாற்றமாக இருந்தது. பொதுமக்கள் மட்டுமன்றி, (அவர்கள் எதிர்பார்த்த) அரசியல் தலைவர்களும் "சரி"யாக நடந்துகொள்ளவில்லை. முக்கியமாக, ஜின்னாவுக்கு நல்ல "பாடம் கற்பித்தாக" வேண்டும்! இந்த உணர்ச்சிகள் தொனிக்கும்படி 1928 பிப்ரவரியில் வைசிராய்க்குப் பின்கண்டவாறு எழுதினார் இந்தியா மந்திரி :

"மூன்று அரசியல் கட்சிகளைச் சேர்ந்த தலைவர்கள், சைமன் குழுவோடு எந்த விதத்திலும் தொடர்புபடுவதில்லை என்ற தங்களின் பழைய முடிவைச் சிறிதும் மாற்றிக் கொள்ளவில்லை என்று அறிக்கை விட்டிருக்கிறார்கள். இது பெரிதும் ஏமாற்றமளிப்பதாக இருக்கிறது.

"குழுவைப் பகிஷ்கரிக்காத தொகுதியினரில் முக்கியமானவர்களை சைமன் கண்டிப்பாகச் சந்திக்க வேண்டும். குறிப்பாக முஸ்லிம்களையும் தாழ்த்தப்பட்ட மக்களையும் கட்டாயம் சந்திக்க வேண்டும் என்பது என் விருப்பம். முஸ்லிம் சமுதாயப் பிரதிநிதிகளுடன் குழுவினர் ஏற்படுத்திக் கொள்ளும் சந்திப்புப் பேட்டிகள் அனைத்துக்கும் பரவலான விளம்பரம் கொடுக்க வேண்டும். நம்முடைய கொள்கை இப்போது உங்களுக்குத் தெளிவாக விளங்கும் என்று நம்புகிறேன். 'சைமன் குழு முஸ்லிம்களின் கையில் சிக்கிவிட்டது; எனவே அது இந்துக்

களுக்குப் பாதகமான அறிக்கையைத்தான் கொடுக்கும்' என்று நம்பி இந்துச் சங்கம் பீதி அடைய வேண்டும். அதன் மூலம், முஸ்லிம்களின் ஒருமித்த ஆதரவைப் பெற்றுக்கொண்டு ஜின்னாவை நாம் அந்தரத்தில் விட்டுவிட வேண்டும். இதுவே நமது திட்டம்.''

இந்தியா மந்திரி (இப்படிச்) சொல்லிக்கொண்டிருந்ததெல்லாம் வெறும் பேச்சல்ல என்பது பின்னால் ஏற்பட்ட நிகழ்ச்சிகளால் தெளிவாக விளங்கிவிட்டது.

**சைமன் குழுவைப் பகிஷ்கரியுங்கள் :**
**சட்டசபையின் தீர்மானம்**

1928 பிப்ரவரி 3ஆம் தேதி சைமன் குழு பம்பாயில் வந்து இறங்கியது. நாட்டின் சூழ்நிலையோ மிகவும் சூடேறியிருந்தது. நாடெங்கும் அர்த்தால்களும் ஆர்ப்பாட்டங்களும் நடந்தன. பம்பாயில் ஓர் அரசியல் சக்தியாக வளர்ந்துவிட்ட தொழிலாளர்கள் பெரிய வேலை நிறுத்தம் செய்ததோடு ''சைமன் திரும்பிப் போ!'' என்றும் முழங்கினார்கள். இந்த முழக்கம் இந்தியா எங்கும் பரவி எதிரொலித்தது. சட்டசபையிலும் அதன் எதிரொலி பலமாகக் கேட்டது.

பிப்ரவரி 16 ஆம் தேதியன்று, தேசீயக் கட்சித் தலைவர்களில் ஒருவரான லாலா லஜ்பத் ராய் சட்டசபையில் ஒரு தீர்மானத் தைக் கொண்டு வந்தார். அதன் வாசகம் பின்வருமாறு: ''இப்போதுள்ள அரசியல் அமைப்பையும் சட்டப்படி அமைந்த இந்தக் (சைமன்) குழுவையும் இந்தச் சபை ஏற்கவில்லை. எனவே அந்தக் குழுவோடு எந்த நிலையிலும் எந்த வகையிலும் தன்னைத் தொடர்புபடுத்திக் கொள்ள இந்தச் சபை தயாராக இல்லை. இதை மேன்மை தங்கிய மன்னர்பிரானின் அரசாங்கத்திற்குத் தெரிவித்து விடுமாறு இச்சபை கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்கிறது.''

தமது கருத்தை விளக்கிப் பேசிய லஜ்பத் ராய், இந்த அரசாங்கமோ இந்தக் குழுவை நியமித்தவர்களோ இதை உண்மை யான நன்னோக்கில் செய்யவில்லை என்றும் குழுவின் தகுதிப் பாட்டில் தமக்கு நம்பிக்கையில்லை என்றும் தெரிவித்தார். ''இங்குள்ள அதிகாரவர்க்கம் சொல்வதைத்தான் குழு கிராம

போன் தட்டில் ஒலிப்பதிவு செய்துகொள்ளப் போகிறது. அதே போல, இங்கிலாந்தில் உள்ள வேறு சிலரோடு கலந்து செய்த சிபாரிசுகளை மற்றொரு தட்டில் பதிவு செய்து வைக்கப்போகிறது. ஒரு நாட்டு மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் தகுதி உடையவர்கள்தானா என்பதை முடிவு செய்ய இப்படிப்பட்ட ஒரு குழுவுக்கு என்ன தகுதி இருக்கிறது?'' என்று கேட்டார் லஜ்பத் ராய்.

இந்த விவகாரத்தில் பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கு உள்ள பொறுப்பை லஜ்பத் ராய் மறுக்கவில்லை. ஆனாலும், இரண்டு தரப்பினரின் நலன்களைப் பற்றிய பரஸ்பரப் புரிந்துணர்வோடும் இணக்கத்தோடுமே இந்த விவகாரத்தை அணுக வேண்டும்; அந்த அடிப்படையில் ஏற்படும் தீர்வுதான் இரண்டு சாராரும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் பாராளுமன்றம் அப்படியே ஒப்புக்கொள்ளக் கூடியதாகவும் இருக்கும் என்றார் அவர்.

தொடர்ந்து பேசுகையில், முஸ்லிம்களுக்கு உருக்கமான வேண்டுகோள் ஒன்றை விடுத்தார் லஜ்பத் ராய்: ''பிரிட்டிஷ்காரர்களை நம்பாதீர்கள். இந்த அரசாங்கம் அள்ளி வழங்கும் வாக்குறுதிகள் உங்களுக்கு உதவப்போவதில்லை. வங்காளப் பிரிவினையை நினைத்துப் பாருங்கள். ஸிவ்ரேஸ் ஒப்பந்தத்தை நினைத்துப் பாருங்கள். மற்றவர்களைக் கெஞ்சி நிற்கும் அடிமைகளாக வாழும்படி உங்களுக்கு இஸ்லாம் கற்பிக்கவில்லை. துணிவுடன் உரிமைப் போராட்டத்தில் சேர்ந்து முன் நில்லுங்கள்!'' என்று தூண்டினார் அவர்.

முஸ்லிம் உறுப்பினர்களின் தலைவராக இருந்த நவாப் சர் ஸுல்ஃபிக்கர் அலி கான் இதற்கு முற்றிலும் மாறான குரலை எழுப்பினார். லஜ்பத் ராயின் தீர்மானத்துக்கு ஒரு திருத்தத்தையும் கொண்டு வந்தார் அவர்:

''இந்தியச் சட்டமுறைக் கமிஷன் வகுத்துள்ள விதிமுறை இந்தச் சட்டசபையின் பரிவான கவனத்துக்கு உரியதாக உள்ளதென்று சபை கருதுகிறது. இதை, மேன்மை தங்கிய மன்னர் பிரானின் அரசாங்கத்துக்குத் தெரிவிக்குமாறு கவர்னர் ஜெனரலை

இந்தச் சபை கேட்டுக் கொள்கிறது" என்று சிபாரிசு செய்தது அந்தத் திருத்தம்.

சட்டமுறைக் கமிஷனை ஆதரிப்பதற்குரிய காரணங்களை ஸுல்பிக்கர் அலி கான் விளக்கி வந்தபோது பல உறுப்பினர்கள் குறுக்கிட்டார்கள். இந்தியாவிலுள்ள பெரும்பான்மை வகுப்பார் சிறுபான்மையினரின் உரிமைகளை வழங்க மறுத்ததே (சிறு பான்மையினர்) கமிஷனை ஏற்றுக் கொள்வதற்குரிய முக்கியமான காரணங்களுள் ஒன்று என்று குறிப்பிட்டார் அலி கான்.

விவாதம் சூடேறி விட்டது. சபையின் உறுப்பினர்களில் சிலர் இந்தப் பக்கமும் சிலர் அந்தப் பக்கமும் நின்று, காரசாரமாகவும் உரிய காரணங்களுடனும் விவாதித்தார்கள்.

காங்கிரஸ் (சுயராச்சியக்) கட்சியின் துணைத்தலைவரான சீனிவாச அய்யங்கார், லஜ்பத் ராயின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில், தங்களுக்குத் தேவையான ஆட்சி முறை எது என்பதைத் தீர்மானிக்கும் உரிமை இந்திய மக்களுக்கு உண்டு என்றார். "இந்திய மக்களின் உரிமையை மறுப்பதே இந்தியா மந்திரி தந்துள்ள திட்டத்தின் உள்நோக்கம். இந்திய மக்களின் மீது உள்ள அவநம்பிக்கையின் அடிப்படையிலேயே இந்தக் குழு அமைக்கப்பட்டுள்ளது. உண்மையில், இது இந்திய மக்களைப் பகிரங்கமாக அவமானப்படுத்துவதாகும்!" என்று முழங்கிய அய்யங்கார், லஜ்பத் ராயின் தீர்மானத்தை அனைவரும் ஆதரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

எம். ஆர். ஜயகர் பேசுகையில், இந்தியத் தலைவர்கள் வழங்க முன்வந்த ஒத்துழைப்பை அரசாங்கம்தான் ஏற்கவில்லை என்று சுட்டிக் காட்டினார். 1919ஆம் ஆண்டு (இந்தியாச்) சட்டத்தின்படி இந்தியர்களை அந்தக் குழுவின் உறுப்பினர்களாக நியமிக்கும் அதிகாரம் தங்களுக்கு இல்லை என்று அரசாங்கம் எடுத் துரைத்ததை வன்மையாக மறுத்தார் அவர். லஜ்பத் ராயின் தீர்மானத்தை அவர் ஆதரித்தாலும், தம்முடைய நிலையும் காங்கிரஸ் கட்சியின் நிலையும் வெவ்வேறு என்பதை அவர் விளக்கித் தெளிவுபடுத்தினார். "அரசாங்கத்தோடு ஒத்துழைப்ப தில்லை என்பது என்னுடைய கொள்கையல்ல; ஆனால், இந்தக்

குழு அமைக்கப்பட்டுள்ள முறையும் அது செயல்பட வகுக்கப் பட்டுள்ள திட்டங்களும், அதனோடு நான் ஒத்துழைக்க முடியாத நிலைமையை உண்டாக்கிவிட்டன " என்றார் ஐயகர்.

ஜின்னா பேசுகையில் அரசாங்கத்தின் போக்கை எள்ளி நகை யாடினார். "'தாங்கள் எது செய்தாலும், அது சரியே. தாங்கள் எப்படி வேண்டுமானாலும் முடிவு செய்யுங்கள். ஆனால், என்னையும் கொஞ்சம் கடைக்கண் பாருங்கள். நான் தங்கள் மனிதன்; என்னால் வேறு என்ன செய்ய இயலும்?' என்று கெஞ்சி விண்ணப்பம் செய்பவர்களையே அரசாங்கம் திருப்திப்படுத்த விரும்புகிறது" என்று கூறி, பஞ்சாப் நிலச்சுவான்தார்களின் பிரதிநிதியாகிய முகம்மத் நவாஸ் கானையும் இத்தகைய விண்ணப்ப தாரர்களில் ஒருவராகக் குறிப்பிட்டார் ஜின்னா. (சில முஸ்லிம் உறுப்பினர்கள் இதற்குக் கடுமையாக எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.)

அடுத்து, ஸுல்பிக்கர் அலி கானின் குழுவினரைக் குறிப்பிட்டு முஸ்லிம்களுக்குப் பொன்கொழிக்கும் காலம் வந்திருப்பதாக இவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற ஜின்னா, "கடந்த 150 ஆண்டுகளாக முட்டாள்களாக்கப்பட்டு வந்தும் உங்களுக்குத் தெளிவு ஏற்படவில்லையா?" என்று அவர்களைக் கேட்டார்.

அவர் தொடர்ந்து பேசுகையில், (உள்ள நிலைமைகளைப் பற்றி) விசாரிக்கவும், ஆராயவும், இந்தியப் பிரதிநிதிகளுக்கும் சமமான உரிமையும் அதிகாரமும் கொடுக்கப்படாத வரையில் எந்தக் குழுவையும் தாம் ஏற்கமுடியாது என்று திட்டவட்டமாக அறிவித்தார்.

தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதியான நியமன உறுப்பினர் ராவ் பகதூர் எம். ஸி. ராஜா, லஜ்பத் ராயைக் கடுமையாகத் தாக்கி, ஸுல்பிக்கர் அலி கானின் திருத்தத்தை ஆதரித்தார். அரசாங்கம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அதிகமான நன்மைகளைச் செய்ய முடியவில்லை என்றால், உயர்சாதிக்காரர்கள் தாழ்த்தப் பட்ட மக்களின் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடுவதே காரணம் என்று சாடினார் அவர்.

பிப்ரவரி 18ஆம் தேதி நடந்த விவாதத்தின்போது மோதிலால் நேரு, மதன் மோகன் மாளவியா, டி. சி. கோஸ்வாமி, புருஷோத்தமதாஸ், தாகுர்தாஸ், சி. எஸ். ரங்க அய்யர் மற்றும் பலர் லஜ்பத்ராயின் தீர்மானத்துக்குப் பெரும் ஆதரவளித்துப் பேசினார்கள். ஏ. சுராவர்த்தி, முகம்மது நவாஸ் கான் போன்றவர்கள் அதே அளவு உறுதியுடன் எதிர்த் தரப்பை ஆதரித்துப் பேசினார்கள்.

1924–25 ஆம் ஆண்டுகளில் அரசாங்கத்தோடு ஒத்துழைக்க முன்வந்து உடன்பாட்டுத் தீர்மானங்களைக் கொண்டு வந்ததையும் அதை அரசாங்கம் அப்போது நிராகரித்து விட்டதையும் நினைவு படுத்திப் பேசினார் மோதிலால் நேரு. இப்போது காங்கிரஸ் முழுமையான சுதந்திரம் என்னும் லட்சியத்தை ஏற்றிருக்கிறதென்றாலும், இப்போதைய நிலைக்கும் அந்த லட்சியத்துக்கும் இடைப்பட்ட நிலை ஒன்று உண்டு என்பதைத் தாம் மறுக்கவில்லை என்றார் அவர். அதனாலேதான் இந்திய அரசியல் அமைப்பைப் பற்றிக் கூடிப்பேசி முடிவு செய்வதற்குக் காங்கிரஸ் தயாராக இருக்கிறது என்றும் அவர் தெரிவித்தார். அவர் தொடர்ந்து பேசியதாவது :

"இப்படியான ஒரு கூட்டு முடிவுக்கு நாங்கள் இணங்குகிறோம் என்பதாலேயே, இந்திய அரசியல் அமைப்பு எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றி வெளியார் யாரையும் கலந்துகொள்ள எங்கள் கட்சி ஆயத்தமாக இருக்கிறது என்று ஆகிவிடாது. இதிலே சம்பந்தப்பட்ட வெளியாரின் நலன்களைப் பொறுத்த அளவில் மட்டுமே அவர்களை நாங்கள் கலந்து ஆலோசிக்க இணங்குவோம். அந்த நோக்கில் அவர்களோடு கலந்து பேசவும் பிரிட்டிஷார் மற்றும் வெளியார்களின் நலன்களைப் பாதுகாக்கவும் ஏற்பாடுகளைச் செய்ய நாங்கள் தயாராக இருக்கிறோம். ஆயினும், பூரண சுயராச்சிய லட்சியம் என்னும் எங்கள் உரிமையை விட்டுக் கொடுக்க மாட்டோம் என்பதையும் நான் தெளிவுபடுத்தி விட விரும்புகிறேன்."

இறுதியாக, "இந்திய வெகுஜன அபிப்பிராயமும் ஆங்கில அபிப்பிராயமும் ஒன்றுக்கொன்று நேர்மாறாக இருப்பதால், அவை இரண்டையும் ஒன்றிணைத்து வைப்பதற்கு மேற்கொள்ளப்படும்

முயற்சி வீண் முயற்சியே" என்ருர் மோதிலால் நேரு. ஆங்கில அரசாங்கத்தின் உதவியுடனே பாராளுமன்றத்தின் மூலமாகவோ இந்தியா சுதந்திரம் பெற முடியாது; தன்னுடைய சுயமான திடசங்கற்பத்திஞலும் சொந்தப் பலத்திஞலுமே அது சுதந்திரம் பெற்ருக வேண்டும் என்றும் கூறிஞர் அவர்.

இந்த விவாதத்தின் போது, அரசாங்கக் கட்சியின் சில முக்கிய உறுப்பினர்கள் சுயேச்சை உறுப்பினர்களை வசப்படுத்த எல்லா விதமான தந்திர உபாயங்களையும் கையாண்டு பார்த்தார்கள். குறிப்பாக, நிதித்துறை உறுப்பினர் ஜின்னுவைக் கவர முனைந்து தமது வாசாலகத்தைக் காட்டிஞர். ஜின்னு மோதிலால் நேருவின் வரவேற்பு அறைக்குள் நுழைந்ததோடு அங்கே முழுமையாக விழுங்கப்பட்டும் போனுர் என்று கிண்டலாகக் குறிப்பிட்ட நிதித்துறை உறுப்பினர், "சிலந்தி ஜின்னுவைச் சீரணித்துக் கொண்டுவிட்டது" என்று அடுக்கிஞர். "சிலந்தி (காங்கிரசு)க்குப் பசி இருக்கலாம்; ஆனுல் இந்தப் பூச்சி (ஜின்னு) ஏன் இவ்வளவு அவசரப்பட வேண்டும்?" என்றும் குத்திக் காட்டிஞர்.

ஆனுல், பாவம், அவருடைய தந்திரம் (ஜின்னுவிடம்) பலிக்க வில்லை. "உங்களோடு இருப்பதைவிட அந்த (எதிர்க்கட்சி)ப் பக்கத்தில் இருப்பதால் இந்தப் பூச்சிக்கு ஏற்படக் கூடிய சங்கடம் குறைவு" என்று ரத்தினச் சுருக்கமாகப் பதில் கொடுத்து விட்டார் ஜின்னு.

இரண்டு நாள் நடந்த இந்த விவாதம் சில போது மிகவும் கார சாரமாகவும் இருந்தது. தீர்மானத்தால் ஏற்பட்ட எழுச்சியும் அதன் மீது உண்டான போராட்ட முனைப்பும் எல்லை மீறியவை யாக இருந்தன. கடுமையாக நோய்வாய்ப்பட்டுக் கராச்சியில் இருந்து வந்த தேசீயக் கட்சி உறுப்பினர் ஒருவர் வாக்களிப்பதற் காகவே (உடல் நலிவையும் பொருட்படுத்தாமல்) புறப்பட்டு வந்துவிட்டார். ஆனுல், பாவம், வாக்களிக்கு முன்பே அவர் இறந்து போனுர். மிகுந்த ஆர்வச் சுழல்களுக்கிடையில் ஓட்டு எண்ணப்பட்டது. லஜ்பத் ராயின் தீர்மானம் 68க்கு 62 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. சபையில் நடைபெற்ற இரண்டாவது பெரிய வாக்கெடுப்பு இது. உறுப்பினர்கள்

"வந்தே மாதரம்" முழங்கி இந்த வெற்றியைக் கொண் டாடினார்கள்.

சைமன் குழுவுக்கு எதிரான போராட்டம் இத்துடன் முடிந்து விடவில்லை. 1928 மார்ச் 13 ஆம் தேதி, பொது வரவு செலவுத் திட்டத்தின் கீழ், பலவகைச் செலவுகளுக்கான கோரிக்கை ஒன்று சமர்ப்பிக்கப்பட்ட போது, மோதிலால் நேரு அதிலே ஒரு குறிப்பிட்ட தொகையைக் குறைக்க வேண்டும் என்ற தீர்மானத் தைக் கொண்டு வந்தார். பிப்ரவரி 18ல் சபை நிறைவேற்றியுள்ள ஒரு தீர்மானத்தின் நேர்விளைவான தீர்மானம் இது என்றும் அவர் சுட்டிக்காட்டினார். மாளவியா, எம். கே. ஆச்சாரியா, முன்ஷி ஈஸ்வர் சரண், ஜின்னா மற்றும் பலர் நேருவின் தீர்மானத்தை ஆதரித்தார்கள். மாளவியா பேசுகையில், "குழுவை நியமித்தவர் களே (பிரிட்டிஷ் அரசாங்கமே) அதற்குச் சம்பளம் கொடுக்க வேண்டும்" என்று குறிப்பிட்டு, "மேளக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தவன்தானே மேளக்காரனுக்குப் பணம் கொடுக்கவேண்டும்?" என்று கேட்டார்.

கடைசியில் நேருவின் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு, 62க்கு 59 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. அரசாங்கம் மீண்டும் மண் கவ்வியதால், இந்திய மக்கள் பெருத்த ஆனந்தம் அடைந்தார்கள்.

### லாலா லஜ்பத் ராயின் மரணம் : சட்டசபையில் எதிரொலி

1928 ஆம் ஆண்டு முழுவதும் இந்திய அரசியல் இயக்கத்தின் செயல்முறை, முழுக்க முழுக்க சைமன் குழு எதிர்ப்பையும் அது தொடர்பான நடவடிக்கைகளையும் நோக்கியதாகவே இருந்தது. அக்டோபர் மாதத்தில் குழு இந்தியாவுக்கு வந்தது. பகிஷ்கரிப்பு இயக்கமும் தீவிரமடைந்தது. போலீசும், ஆர்ப்பாட்டங்களை நசுக்குவதற்குக் கடுமையான அடக்குமுறைகளைக் கையாண்டது. குழு லாகூர் சென்றபோது, லாலா லஜ்பத் ராய் தலைமையில் குழுவுக்கு எதிரான கருப்புக் கொடி ஆர்ப்பாட்டம் ஒன்று நடைபெற்றது. போலீஸ் படை ஊர்வலத்தின் மீது பாய்ந்து கடுமையான தடியடி நடத்தியது. இதிலே மார்பில் அடிபட்டுக்

காயமுற்ற லஜ்பத் ராய் நவம்பர் 17ல் காலமானார். காந்தியடிகள் பிறகு ஒரு சமயம் குறிப்பிட்டது போல குழு சென்ற வழியில் படிந்திருந்த ரத்தக்கறையைக் கண்டு நாடே கொதித்து எழுந்தது.

1929ல் வரவு செலவுத் திட்டக் கூட்டத்தொடர் தில்லியில் தொடங்கியபோது, பண்டித துவாரக பிரசாத் மிஸ்ரா, லஜ்பத் ராயின் மரணத்தைப் பற்றிய தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார். இந்தத் தீர்மானம் பிப்ரவரி 15ஆம் தேதி சட்டசபையில் கொண்டுவரப்பட்டது. லஜ்பத் ராயின் மரணத்துக்கான சூழ்நிலையைப் பற்றித் தொழிற் கட்சி உறுப்பினர் ஒருவர் (பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில்) கேட்ட கேள்விகளுக்கு இந்தியத் துணைமந்திரியாக இருந்த விண்டர்ட்டன் பிரபு (லஜ்பத் ராயை இழிவுபடுத்தும் முறையில்) அளித்த பதிலை இத்தீர்மானம் வன்மையாகக் கண்டித்தது. அக்டோபர் 30ல் லாகூரில் நடந்த அந்தத் தடியடி நிகழ்ச்சியில் லாலா லஜ்பத் ராய் பட்ட அடியே அவருடைய மரணத்தைத் துரிதப்படுத்தியது என்றும் பஞ்சாப் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட பாயிட் கமிட்டியின் விசாரணை ஒரு வெளிப்பூச்சே என்றும் தீர்மானம் குறிப்பிட்டது. இந்த விவரங்களைக் கவர்னர் ஜெனரல் இந்தியா மந்திரிக்குத் தெரிவிக்க வேண்டும் என்றும் தீர்மானம் கோரியது.

முன்ஷி ஈஸ்வர் சரண் இந்தத் தீர்மானத்துக்கு ஒரு திருத்தம் கொண்டுவந்தார். அதிலே, லஜ்பத் ராய் தாக்கப்பட்டது பற்றியும் அதுவே அவருடைய மரணத்துக்குக் காரணமாகவோ அதைத் துரிதப்படுத்துவதாகவோ இருந்தது என்பது பற்றியும் உள்ள குற்றச்சாட்டை விசாரிக்க, கவர்னர் ஜெனரலே சட்டமன்ற உறுப்பினர்களைக் கொண்ட ஒரு குழுவை நியமிக்க வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

பண்டித மதன் மோகன் மாளவியாவும் லாலா ஹன்ஸ்ராஜும் அந்த (லாகூர் தடியடி) நிகழ்ச்சியில் தங்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களை விவரித்துப் பேசினார்கள். ஆனால், உள்துறை உறுப்பினர் கிரேரர், பஞ்சாப் அரசு நடத்திய பாரபட்சமற்ற நீதி விசாரணை போலீஸ்காரர்கள் தங்களுக்கு இடப்பட்ட ஆணை களுக்கு ஏற்பவே நடந்திருக்கிறார்கள் என்பதை மெய்ப்பித்திருக்

கிறது என்றார். மேலும், மாளவியாவும் ஹன்ஸ்ராஜூம் இதிலே விசாரணை உத்தரவிடப் போதிய அடிப்படைச் சான்றுகள் இருப்பதாகக் காட்டவில்லை என்றும், இந்தத் தீர்மானம் வெறும் அரசியல் நோக்கோடு கொண்டுவரப்பட்டதே என்றும் அவர் சொன்னார்.

**உள்துறை** உறுப்பினரின் பேச்சைக் கடுமையாகத் தாக்கிப் பேசிய ஜின்னாவும் ஐயகரும், இந்த நிகழ்ச்சியைப்பற்றி, சுயேச்சையான பகிரங்க விசாரணை ஒன்று நடத்துவதற்குப் போதிய ஆதாரம் இருக்கிறது என்று வலியுறுத்தினார்கள். மோதிலால் நேருவும், விசாரணைக்கு அடிப்படையே இல்லை என்ற உறுப்பினரின் கூற்றை வன்மையாகக் கண்டித்தார். மாளவியாவும் ஹன்ஸ்ராஜூம் குறிப்பிட்ட விதமாகவே நிகழ்ச்சிகள் நடைபெற்றிருக்குமானால் இது கொலையைத் தவிர வேறில்லை என்றார் அவர். இதைப்பற்றி பகிரங்க நீதி விசாரணை ஒன்றை நடத்த அரசாங்கம் தயங்குகிறது என்றால், ஐயகர் குறிப்பிட்டது போல, அரசாங்கம் தனது அடிப்படை நாகரிகத் தன்மையையே இழந்துவிட்டது என்றுதான் பொருள் என்றும் அவர் குமுறினார்.

ஈஸ்வர் சரணின் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டது. அரசாங்கம் அதைக் கடுமையாக எதிர்த்து நின்றபோதிலும், தீர்மானம் 57க்கு 45 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

### நேரு அறிக்கை :

சில ஆண்டுகளுக்கு முன்பு, அதாவது 1925 ஜூலை 7ஆம் தேதி, "இந்தியப் பெருமக்கள் அனைவரின் ஒருமுகமான ஆதரவைக் கொண்ட அரசியல் அமைப்பு ஒன்றை எந்த இந்தியப் பெருமகனாவது உருவாக்கித் தர முடியுமா?" என்று பர்க்கன்ஹெட் சவால் விட்டார். சைமன் குழு அமைப்புப் பற்றி அறிவித்து, அதிலே இந்திய உறுப்பினர்கள் இடம் பெறாததற்கான காரணத்தை விளக்கிய போதும், ஆழமான வகுப்பு உணர்ச்சிக்கு ஆளாகியுள்ள இந்தியர்களை நியமித்தால் அவர்கள் இந்து அறிக்கை, முஸ்லிம் அறிக்கை போன்றவைகளையே தயாரிப்பார்கள் (பொதுவான ஓர் அறிக்கையை அவர்களால் தயாரிக்க இயலாது) என்று அவர் குறிப்பிட்டார்.

இந்த ஏளனம், எல்லோரும் ஏற்கும் அரசியல் அமைப்பு ஒன்றை ஏற்படுத்தியாக வேண்டும் என்ற ஓர் அறைகூவலாகவே இந்தியர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. சென்னைக் காங்கிரஸ் (1927 டிசம்பரில்) இது பற்றி ஆலோசித்து, மற்றக் கட்சிகளோடும் தொகுதியினரோடும் தொடர்பு கொண்டு எல்லோரும் ஏற்பதான ஒரு அரசியல் அமைப்புக் குறிப்பைத் தயார் செய்யும் அதிகாரத்தைச் செயற்குழுவுக்கு வழங்கியது. இந்த முடிவுக்கு ஏற்பவே, 1928 பிப்ரவரியில் அனைத்துக்கட்சி மாநாடு ஒன்று தில்லியில் கூட்டப்பட்டது. மீண்டும், மே மாதத்தில் பம்பாயில் கூடிய இந்த மாநாடு, மோதிலால் நேருவின் தலைமையில் அரசியல் அமைப்பை உருவாக்கும் குழு ஒன்றை நியமித்தது.

மிதவாதியும் அரசியல் சட்ட விற்பன்னருமான சர் தேஜ் பகதூர் ஸப்ரூ போன்றவர்களை உறுப்பினர்களாகக் கொண்டிருந்தும், இந்தக் குழு பல பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. வகுப்புவாரிப் பிரச்சினையும் அதனுடன் தொடர்பு பட்ட வாக்காளர் பிரச்சினையும் அவைகளுள் முக்கியமானவை. இந்தக் குழு தயாரித்து வழங்கிய அறிக்கை நேரு அறிக்கை என்று சொல்லப்பட்டது. இந்த அறிக்கை ஆகஸ்டு மாதத்தில் வழங்கப்பட்டது. உடனடியான (தேசீய) இலக்கு டொமினியன் அந்தஸ்துப் பெறுவதாக இருக்க வேண்டும் என்றும் முழுச் சுதந்திரம் கோருகிறவர்கள் அதற்கு ஏற்ற பிரசாரங்களில் ஈடுபடலாம் என்றும் அறிக்கை விளக்கியிருந்தது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைக்கு முழு அதிகாரம் வேண்டும் என்றும் நிருவாகம் சட்டசபைக்குப் பொறுப்புடையதாக இருக்க வேண்டும் என்றும் குறிப்பிட்ட அறிக்கை, இந்த விதமான அமைப்பே முழுமையான பொறுப்பாட்சி என்று அறிவித்தது.

தேவையான பொருளாதார நிலைமைகளைப் பற்றி ஆராய்ந்து சிந்துப் பகுதியைத் தனி மாகாணமாக்க வேண்டும் என்றும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தை உள்ளிட்ட அனைத்து மாகாணங்களிலும் இந்த அறிக்கையில் கண்ட புதிய அரசியல் அமைப்பே செயற்படுத்தப்பட வேண்டும் என்றும் அறிக்கையில் கூறப்பட்டிருந்தது. கமிட்டி மேலும் தெரிவித்ததாவது :

முஸ்லிம்கள் சிறுபான்மையாக உள்ள மாகாணங்களில் அவர்களுக்கும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் முஸ்லிம் அல்லாத சிறுபான்மையினருக்கும் மட்டுமே தனித்தொகுதிகள் ஒதுக்க வேண்டும்; வேறு யாருக்கும் மத்திய சட்டசபை (மக்கள் பிரதிநிதிகள் சபை)யில் தனித் தொகுதி ஒதுக்கக் கூடாது. இந்த விதமான இட ஒதுக்கீடுகள், அங்கங்கு உள்ள சிறுபான்மையினரின் மொத்தத் தொகைக்கு ஏற்ற விகிதத்திலேயே இருக்க வேண்டும். ஆனாலும், சிறுபான்மையினர் மற்ற இடங்களில் போட்டியிட உரிமை உண்டு.

மாகாணங்களைப் பொறுத்தவரை பஞ்சாபிலும் வங்காளத்திலும் தனித் தொகுதிகளே கூடாது என்று குழு சிபாரிசு செய்தது. மற்ற மாகாணங்களில் மட்டும் சிறுபான்மையினருக்கு மேலே குறித்த விதமான உரிமைகள் வழங்கப்பட வேண்டும். ஆயினும், தனி இட ஒதுக்கீட்டு முறை பத்து ஆண்டுகளுக்கு மட்டுமே அமுலில் இருக்க வேண்டும் என்றும் குழு தெரிவித்தது.

ஆகஸ்டு மாதத்தில் லக்னோவில் நடந்த அனைத்துக்கட்சி மாநாட்டில் நேரு அறிக்கை விவாதிக்கப்பட்டது. இந்த மாநாட்டில் காங்கிரஸ், லிபரல் பெடரேஷன், முஸ்லிம் லீக், இந்து மகாசபை, சீக்கியர் மத்திய லீக் ஆகிய கட்சிகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள். நேரு அறிக்கை சில திருத்தங்களோடு கொள்கை அளவில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அத்துடன், இந்த அறிக்கையையே ஒரு மசோதா வடிவில் தயாரித்து டிசம்பர் மாதம் கல்கத்தாவில் நடைபெற இருந்த தேசியப் பேரரங்கில் வழங்குமாறு நேரு கமிட்டியை மாநாடு கேட்டுக் கொண்டது.

இதற்கிடையில், நேரு அறிக்கையை ஏற்பதா வேண்டாமா என்பது பற்றி முஸ்லிம் லீகர்களிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டது. மஹ்மூதாபாத் ராஜாவின் தலைமையில் இயங்கியவர்கள் நேரு அறிக்கையை ஆதரித்தார்கள்; ஷவுக்கத் அலி தலைமையில் இயங்கியவர்கள் இதை எதிர்த்தார்கள். 1929 மார்ச் மாதத்தில் கூடுவதாக இருந்த சிறப்பு அவையில் நேரு அறிக்கையைப் பரிசீலனை செய்வது என்று முஸ்லிம் லீக் முடிவு

செய்தது. ஆனாலும், கல்கத்தா தேசியப் பேரரங்கில் பிரதிநிதிகளாகக் கலந்து கொள்ள ஜின்னாவை உள்ளிட்ட ஒரு பேராளர் குழுவையும் தேர்ந்தெடுத்தது. சிந்து மாகாணத்தைத் தனியாகப் பிரிக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருந்ததால் மூஞ்ஜே போன்ற இந்து மகாசபைத் தலைவர்களும், நேரு அறிக்கையை எதிர்க்கத் தொடங்கினார்கள். இட ஒதுக்கல் தொடர்பான சிபாரிசுகளில் திருப்தி அடையாததால், சீக்கியத் தலைவர்கள் அறிக்கையை எதிர்த்தார்கள்.

கல்கத்தா தேசியப் பேரரங்கின் போது ஜின்னாவின் போக்கு வெகுவாக மாறியிருந்தது. இட ஒதுக்கீடு, தனிவாக்காளர் பட்டியல் போன்ற பிரச்சினைகளில் ஏற்கெனவே இணக்கம் தெரிவித்திருந்த அவர், இப்போது, மத்திய சட்டசபையில் மூன்றில் ஒரு பங்கு இடங்கள் முஸ்லிம்களுக்கு ஒதுக்கப்பட வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கத் தொடங்கினார். (முஸ்லிம்களுக்குத் தனிச்சலுகை என்னும் இந்தப் போக்கு அனைத்துக் கட்சி மாநாட்டில் ஒருமனதாகக் கைவிடப்பட்டது என்பது குறிப்பிடத் தக்கது.) வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை வழங்கப்படாவிட்டால் பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லிம்களுக்குத் தனி இடங்கள் ஒதுக்கப்பட வேண்டும் என்றும், இந்த ஒதுக்கல் முறை பத்து ஆண்டுகள் நீடிக்க வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினார். மேலும், மாகாணங்களுக்கு "எஞ்சிய" அதிகாரங்கள் வழங்கப்பட வேண்டும் என்றும், எந்த நிபந்தனையுமின்றி பம்பாயிலிருந்து சிந்துவைப் பிரித்துவிட வேண்டும் என்றும் அவர் கோரினார். இந்தக் கோரிக்கைகளைப் பேரரங்கு நிராகரித்ததால், ஜின்னா, தமது எதிர்ப்பைத் தெரிவிக்கும் முறையில் பேரரங்கிலிருந்து வெளியேறினார். இந்த வெளியேற்றமே ஜின்னா மேற்கொண்ட தனி (பிரிவினை) வழியின் தொடக்கமாக அமைந்தது.

1929 மார்ச்சில், ஜின்னா, தம்முடைய கருத்துக்களை உள்ளிட்ட அறிக்கை ஒன்றை வெளியிட்டார். "முஸ்லிம்களுக்கு முழுப் பாதுகாப்போடு கூடிய எதிர்கால இந்திய அரசியல் திட்டம்" என்ற கருத்தை வெளியிட்ட இந்த அறிக்கையே ஜின்னாவின்

"பதினாலு குறிப்புகள்" கொண்ட திட்டம் என்று பெயர் பெற்றது. வேறு பலவற்றுடன், பின்கண்ட கோரிக்கைகளையும் வெளியிட்டது இந்த அறிக்கை: மத்திய சட்டசபையில் மூன்றில் ஒரு பகுதி இடங்களாவது முஸ்லிம்களுக்கு ஒதுக்கப்பட வேண்டும்; இப்போது உள்ளது போலவே தனிவாக்காளர் பட்டியல் முறை தொடர்ந்து இருந்துவர வேண்டும்; என்றாலும் அந்த உரிமையைப் பெற்றுள்ள சிறுபான்மையினர், தாங்களாகப் பொதுப் பட்டியலில் இடம் பெற விரும்பினால் அப்படிச் செய்து கொள்ள அவர்களுக்கு உரிமை இருக்க வேண்டும். காங்கிரசுக்கும் ஜின்னாவுக்கும் இடையில் ஏற்பட்ட பிளவு விரிவடைந்து விட்டது என்பதை இந்த அறிக்கை தெளிவாக உணர்த்தியது.

**சட்டசபையில் நேரு அறிக்கை:**

இந்திய அரசியலில் ஏற்பட்ட இந்தப் பிளவு அடுத்த வரவு செலவுத் திட்டக் கூட்டத் தொடரில் முழுமையாக வெளிப்பட்டு அரசாங்கத்திற்கும் அதன் ஆதரவாளர்களுக்கும் மிகுந்த உற்சாகத்தைக் கொடுத்தது. 1928 மார்ச் 11 ஆம் தேதி வைசிராயின் நிருவாகச் சபைச் செலவுக்கான மானியக் கோரிக்கையை அரசாங்கம் கொண்டு வந்தபோது, மோதிலால் நேரு அதில் ஒரு ரூபாய் குறைக்கப்பட வேண்டும் என்ற தீர்மானம் ஒன்றைக் கொணர்ந்தார். இந்தியர்களின் தேசீயக் கோரிக்கை வரலாற்றை ஆதியோடந்தமாக விவரித்து, அது சம்பந்தமாக அரசாங்கம் பொறுப்பாக நடந்துகொள்ள வில்லையே என்று கண்டித்தார் நேரு. சைமன் குழுவைப் பற்றிக் குறிப்பிடுகையில், அந்தக் குழு கொடுக்கப்போகிற அறிக்கை இங்குள்ள ஐரோப்பியர் களையும் ஆளும் கட்சியையும் தவிர வேறு யாருக்கும் திருப்தி யளிக்கப் போவதில்லை என்றார். இந்தியர்கள் நீண்டகாலமாக எழுப்பி வந்துள்ள தேசீயக் கோரிக்கை, அனைத்துக் கட்சி மாநாடு நியமித்த குழுவினர் தயாரித்துள்ள அரசியல் திட்டத்தில் (நேரு அறிக்கையில்) புதிய உருவம் பெற்றுள்ளது என்றும் நேரு சுட்டிக்காட்டினார். வகுப்புவாத உரிமைகளைப் பொறுத்தவரை சில வேறுபாடுகள் இருப்பினும் (இந்தியாவுக்கு) டொமினியன் அந்தஸ்து வழங்கப்பட்டால் இந்த வேறுபாடுகளெல்லாம்

சரிப்பட்டுவிடும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்தார். அவர் தொடர்ந்து பேசுகையில், உடனடியாக டொமினியன் அந்தஸ்து வழங்கப்பட வேண்டும் என்பதே காங்கிரசின் கோரிக்கை என்றும், 1929 கடைசிக்குள் அந்தக் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்படா விட்டால் காங்கிரஸ் தானே அதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டு நாட்டு மக்களையும் அந்தப் போராட்டத்தில் குதிக்கத் தூண்டும் என்றும் தெரிவித்தார். அதன் பிறகு இந்தக் குழுவின் அறிக்கை (நேரு அறிக்கை) யாரையும் கட்டுப் படுத்தாது என்றும் அவர் எச்சரித்தார்.

அனைத்துக்கட்சி மாநாட்டுக் குழுவின் அறிக்கையை நேரு குறிப்பிட்டது குளவிக் கூட்டில் கல்லெறிந்தது போலாயிற்று. அநேக முஸ்லிம் உறுப்பினர்களும் ஐரோப்பியர்களும் சீறி எழுந்து, "முஸ்லிம்கள் ஏற்றுக் கொள்ளாத அந்த அறிக்கை தேசீயக் கோரிக்கை ஆகாது!" என்று மறுத்தார்கள்.

விவாதம் மார்ச் 12 ஆம் தேதியும் தொடர்ந்து நடந்தது. எல்லோருடைய கவனமும் ஜின்னாவின் பக்கமே திரும்பியது. அவரோ அவநம்பிக்கைக் குரலை எழுப்பினார். பிரச்சினை அபாயகர மானது என்று குறிப்பிட்ட ஜின்னா, மோதிலாலின் சில கருத்துக் களை ஏற்றுக்கொண்டாலும், நேருவின் பேச்சில் அவர் உடன் படாத கருத்துக்களே மிகுதியாக இருந்தன. முதலாவதாக, காங்கிரசின் கொள்கையும் செயல்முறையும் அவருக்கு உடன் பாடாக இல்லை. முக்கியமாக, டொமினியன் அந்தஸ்துக்கு மேற்பட்ட உரிமையை அவர் ஆதரிக்கவில்லை. "டொமினியன் பொறுப்பாட்சியை நிறுவுவதே நான் பிரதிநிதித்துவப்படுத்துகிற எங்கள் குழுவின் கொள்கை; அதற்குக் குறைவானதை நாங்கள் ஏற்பதாக இல்லை; அதற்கு அதிகமானதைக் கோருவதாகவு மில்லை. இதை இங்கே திட்டவட்டமாகவும் தெளிவாகவும் நான் அறிவித்துவிட விழைகிறேன்!" என்றார் ஜின்னா. இரண்டாவ தாக, நேரு அறிக்கை முஸ்லிம்களின் கோரிக்கைகளை உள்ளடக்கிய தாக இல்லை என்று குறிப்பிட்டு அவர் பேசியதாவது:

"நேரு அறிக்கையைப் பற்றி ஒரு கருத்தை நான் தெளிவுபடுத்தி விட விரும்புகிறேன். வகுப்புவாரி உரிமைகளைப் பொறுத்த

வரையில், முஸ்லிம்களின் சார்பில் பேசும் அந்த அறிக்கையின் பகுதியில் உள்ளவை அனைத்தும் 1927ல் முஸ்லிம்கள் விடுத்த கோரிக்கைகளுக்கு எதிரான இந்துக்களின் கோரிக்கைகளே. இவைகளை முஸ்லிம்கள் ஏற்கவில்லை.''

இதைத் தொடர்ந்து மோதிலால் நேருவுக்கும் ஜின்னா, மௌலவி முகம்மது யாகூப், கே. அகமது ஆகியோருக்குமிடையே கடுமையான வாக்குவாதம் ஏற்பட்டது. ''இந்த அறிக்கையை முஸ்லிம்கள் ஏற்றுக் கொள்கிறார்களா என்பதை முடிவு செய்ய வாக்கெடுப்பு நடத்தத் தயாரா?'' என்று மோதிலால் நேருவுக்குச் சவால் விட்டார் ஜின்னா. அதற்கு நேரு, ''முஸ்லிம்களில் ஒரு பகுதியினர் மட்டும்தான் அந்த அறிக்கையை ஏற்கவில்லை'' என்று பதிலளித்தார். உடனே ஜின்னா, ''நேரு அறிக்கையை முஸ்லிம்கள் ஏற்கவில்லை ; இதை அவர் (நேரு) உணர்ந்துகொள்ள வேண்டும் ; விரைவில் உணர்ந்து கொள்வது மிகவும் நல்லது'' என்று ஓங்கி முழக்கினார்.

ஆனாலும், நேரு அறிக்கையின் மீது தீர்ப்புச் சொல்வதற்கு இது சமயமல்ல என்று குறிப்பிட்டு, ஆட்சி இயல் சீர்திருத்தங்களை அமுல் படுத்துமாறு இந்தச் சபை பலமுறை நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை அரசாங்கம் புறக்கணித்து வந்திருப்பதை எடுத்துக் காட்டுவதே நமது நோக்கம் என்று தெளிவுபடுத்தினார் ஜின்னா. எனவே மோதிலால் நேரு கொண்டு வந்துள்ள கண்டனத் தீர்மானத்தைச் சபை ஆதரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

இந்த விவாதத்தில் கலந்து கொண்ட டி. ஏ. கே. ஷெர்வானி வகுப்புவாத முஸ்லிம்களுக்கு எதிராகக் குரல் எழுப்பினார். ''நேரு அறிக்கைக்கு எதிராக அறிக்கை விட்டுள்ள முஸ்லிம் உறுப்பினர்களுக்கு இந்திய முஸ்லிம்களின் சார்பில் பேச உரிமை இல்லை. இந்திய முஸ்லிம்களின் கருத்து விசாரித்து அறியப்படாத நிலையில், நேரு அறிக்கையை எதிர்ப்பவர்கள் முஸ்லிம்கள் அதை ஏற்கவில்லை என்று சொல்வது போலவே முஸ்லிம்கள் அதை ஏற்றுக் கொண்டுள்ளார்கள் என்று சொல்ல எனக்கும் உரிமை உண்டு. ஆனால், இங்கே நாம் விவாதிக்கும் பிரச்சினை இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் உள்ள சிக்கல் அல்ல. இந்துக்கள்,

முஸ்லிம்கள், பார்சிகள் ஆகியவர்களை உள்ளிட்ட இந்தியர்களுக்கும் அரசாங்கத்துக்கும் இடையிலுள்ள பிரச்சினையைப் பற்றித்தான் நாம் விவாதிக்கிறோம். அரசாங்கத்திடமிருந்து இந்தியர்கள் தங்கள் உரிமையைப் பெற்றுவிட்டால், இந்து முஸ்லிம் வேற்றுமை தீர்ந்து போகும்.'' இவ்வாறு விளக்கிய ஷெர்வானி, ''நேரு அறிக்கையின் சிறப்பைப் பார்த்தீர்களா? அதன் எதிரிகளுக்குக் கூட அது பயன்படுகிறது!'' என்று கிண்டலாகக் குறிப்பிட்டார். ''எப்போதும் அரசாங்கத்துக்குச் சாதகமாகவே வாக்களித்து வந்த உறுப்பினர்கள் இப்போது நேரு அறிக்கையின் பேரைச் சொல்லிக்கொண்டு அதே காரியத்தைச் செய்ய விரும்புகிறார்கள்'' என்றும் அவர் கண்டித்தார்.

ஐரோப்பிய உறுப்பினரான கல்னல் கிராபோர்டு, ''காங்கிரசின் கோரிக்கைதான் என்ன? டொமினியன் அந்தஸ்தா, சுதந்திரமா?'' என்று ஏளனமாகப் பலமுறை கேட்டதைச் சுட்டிக்காட்டி சீனிவாச அய்யங்கார் பேசினார்: ''சுதந்திரம் ஒன்றுதான் இந்தியாவின் லட்சியம். ஆனாலும் அனைத்துக் கட்சிப் பேரரங்கு தயாரித்த அரசியல் திட்டத்தை ஏற்றுக்கொள்வதற்காகக் கல்கத்தா காங்கிரஸ் (1928) தனது மூலநோக்கத்தைக் கொஞ்சம் விட்டுக் கொடுத்து டொமினியன் அந்தஸ்தை ஏற்றுக்கொண்டு இருக்கிறது. 1929 கடைசிக்குள் அரசாங்கம் இந்தக் கோரிக்கைக்கு இணங்காவிட்டால், நானும் எனது காங்கிரஸ் தோழர்களும், டொமினியன் அந்தஸ்து என்ற எல்லைக்குக் கட்டுப்படாமல் எங்கள் (பூரண சுதந்திரத்துக்கான) நடவடிக்கைகளில் ஈடுபட எங்களுக்கு உரிமை உண்டு!'' என்று தெளிவுபடுத்திய அய்யங்கார், ஆங்கில அரசாங்கத்துக்கு எதிரான போராட்டத்தில் இந்துக்களோடு ஒத்துழைக்குமாறு முஸ்லிம்களைக் கேட்டுக் கொண்டார்.

இரண்டு நாள் காரசாரமான விவாதத்துக்குப் பின் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டது. மோதிலால் நேருவின் தீர்மானம் 63க்கு 52 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. இது எதிர்க் கட்சிகளுக்குப் பெரிய வெற்றியே என்றாலும், இந்தியாவில் வகுப்புவாதப் பிரிவினை உணர்ச்சி விரிவடைந்து கொண்டிருப் பதையே இந்த விவாதம் தெளியக் காட்டியதால், இதை உண்மை

யான வெற்றி என்று சொல்ல முடியாது. இதைக் கவனித்த அரசாங்கத் தரப்பினர், "எத்தனை மாநாடுகள் கூட்டினாலும் இணைய முடியாதவைகளை இணைத்துவைக்கவே முடியாது" என்னும் பர்க்கன்ஹெட்டின் "பொன்மொழி"யை நினைத்து உள்ளுக்குள்ளேயே சிரித்துக் கொண்டார்கள்.

### பொதுப் பாதுகாப்பு மசோதா:

### மும்முரமான மோதல்

1926 லிருந்தே இடதுசாரி இயக்கம் இந்தியாவில் வேரூன்றி வந்தது. தொடக்கத்தில் தொழிலாளர் கட்சிகளும் மற்றும் விவசாயிகளின் கட்சிகளுமே இந்த இயக்கத்தின் அரசியல் அமைப்புகளாக விளங்கின. பல மாநிலங்களில் தனித்தனியே இயங்கிவந்த இந்தக் கட்சிகள் ஒன்று சேர்ந்து, 1928ல் அகில இந்தியத் தொழிலாளர் மற்றும் விவசாயிகள் கட்சி உருவாயிற்று. இதற்குள்ளேயே, காங்கிரஸ் கட்சிக்குள் நிலவிய இடதுசாரிப் போக்கும் அங்கீகரிக்கப்பட்டது. கல்கத்தாவில் (1928ல்) கூடிய காங்கிரஸ் அவை ஜவஹர்லால் நேருவையும் சுபாஷ் சந்திர போஸையும் காங்கிரஸ் செயலாளர்களாகத் தேர்ந்தெடுத்த தால் இந்த உண்மை தெள்ளத் தெளிவாகப் புலப்பட்டு விட்டது. தொழிலாளர் மற்றும் விவசாயிகள் கட்சியானது, காங்கிரசிலிருந்த இடதுசாரியினருக்கும் காங்கிரசுக்கு வெளியே செயற்பட்ட தொழிலாளர் இயக்கத்துக்கும் இடைப்பட்ட ஓர் அமைப்பாக இருந்தது. தொழிலாளர் இயக்கம் வரவரத் தீவிரப் போக்கு உடையதாகவும் மாறிக்கொண்டு வந்தது. 1928ல் ஏற்பட்ட தொழிலாளர் வேலைநிறுத்தம் 3·15 கோடி வேலைநாள் இழப்புக்குக் காரணமாயிற்று. தவிர, தொழிலாளர்கள் இப்போது ஓர் அரசியல் சக்தியாகவும் செயல்படத் தொடங்கிவிட்டார்கள். சைமன் குழு இந்தியாவுக்கு வந்து சேர்ந்தபோது, பல இடங்களில் தொழிலாளர்களே முன் நின்று ஆர்ப்பாட்டங்களையும் கடை யடைப்புக்களையும் நடத்தியது இந்தப் புதிய வளர்ச்சியைத் தெளிவாக உணர்த்தியது. இவைகளைக் கவனித்த **பாம்பே கிராணிக்கிள்** என்னும் பத்திரிகை, 1929 மே மாதத்தில் "சோஷலிஸ உணர்வு எங்கும் பரவிவிட்டது" என்று எழுதியது.

இந்தியாவில் கம்யூனிஸக் கொள்கை செல்வாக்குப் பெறுவது கண்டு இந்திய அரசாங்கம் பதறியது. இந்தியாவில் கம்யூனிஸக் கொள்கை வளர்வதற்கு ரஷ்யாவிலுள்ள கம்யூனிஸ்ட் இண்டர்நேஷனல் (அனைத்துலகப் பொதுவுடைமை அமைப்பு) தான் ஊட்டமளித்து வருகிறது என்பது இந்திய அரசாங்கத்தின் கணிப்பு. மாஸ்கோ கம்யூனிஸ்ட் இண்டர்நேஷனல்தான் பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுகளை இந்தியாவுக்கு அனுப்பிக் கொண்டிருப்பதாகவும் அது நம்பியது. இங்குள்ள தொழிலாளர் அமைப்புகளில் கம்யூனிஸ்டுகள் ஊடுருவி விட்டார்கள் என்று அரசாங்கத்துக்குச் செய்தி கிடைத்தது. கல்கத்தாக் காங்கிரசில் தீவிரவாதம் செல்வாக்குப் பெற்றதற்கு இதுவே காரணம் என்று அரசாங்கம் கருதியது. எனவே, இந்த "இடதுசாரித் தொல்லை"யை ஒழித்துக் கட்டுவதற்காகச் சட்டசபையில் இரண்டு மசோதாக்களைக் கொண்டுவந்தது. அவைகளுள் ஒன்று, பொதுப் பாதுகாப்பு மசோதா; மற்றது, தொழில் தகராறுகள் மசோதா.

பொதுப் பாதுகாப்பு மசோதாவுக்கு ஒரு நீண்ட வரலாறு உண்டு. அந்த மசோதாவைப் பற்றிச் சட்டசபையில் நடந்த விவாதமோ, அதைவிட நீண்டதாக இருந்தது! இந்த மசோதா 1928 செப்டம்பர் 4ஆம் தேதி முதல்முதலாகச் சபையில் கொண்டு வரப்பட்டது. சதி வேலைகளில் ஈடுபடும் இந்தியரல்லாதவர்களை பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து வெளியேற்றுவதற்கு இந்த மசோதாவில் வகைசெய்யப்பட்டுள்ளது என்று உள்துறை உறுப்பினர் விளக்கினர். ஆயினும், இந்த மசோதா ஒவ்வொரு கட்டத்திலும் தீவிரமான எதிர்ப்பையே சந்தித்தது.

மசோதாவை ஒரு பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்ப வேண்டும் என்ற திருத்தம் வந்தபோதே எதிர்ப்பின் முதல் கட்டம் தொடங்கி விட்டது. இந்த மசோதாவைப் பொதுமக்களிடம் அனுப்பி அவர்களின் கருத்தை அறிய வேண்டும் என்றார் அமர்நாத் தத். சி. எஸ். ரங்க அய்யர், "இந்தியாவைத் தனிமைப்படுத்தி உலகத்தின் மற்ற நாடுகளோடு அதற்கு உள்ள தொடர்பை அறுப்பதற்காக மேற்கொள்ளப் பட்டுள்ள கெடுநோக்குடைய சட்டம் இது" என்றார். லாலா லஜ்பத் ராய் பேசுகையில், "இது

நல்ல நோக்கத்தோடு மேற்கொள்ளப்படும் நடவடிக்கை அல்ல'' என்று குறிப்பிட்டு, '' எங்களுக்கு பால்ஷிவிஸமோ, கம்யூனிஸமோ ஆபத்தில்லை,—முதலாளித்துவச் சுரண்டல்காரர்களால் ஏற்படும் ஆபத்தே எங்களுக்குப் பெரிய ஆபத்து !'' என்றார். அடக்குமுறையையும் எதேச்சாதிகாரத்தையுமே வலுப்படுத்தும் இந்த மசோதாவை எதிர்ப்பதில் தயக்கமே காட்ட வேண்டியதில்லை என்று வற்புறுத்திய சீனிவாச அய்யங்கார், (அரசாங்கம் காட்டுகிற) கம்யூனிஸப் பூச்சாண்டியைக் கண்டு யாரும் பயந்துவிடக் கூடாது என்று உறுப்பினர்களை எச்சரித்தார். இந்திய வணிகக்குழுவின் பிரதிநிதியான புருஷோத்தமதாஸ் தாகுர்தாஸ், இந்த மசோதா அவசியமுமில்லை, இதைக் கொண்டு வருவதில் எந்த நியாயமும் இல்லை என்று குறிப்பிட்டார். தனது இந்திய எதிர்ப்புக் கொள்கைகளால் இங்கே கம்யூனிஸத்துக்குக் களம் அமைத்ததும் உரமிட்டதும் இந்திய அரசாங்கமே என்றும் அவர் தெரிவித்தார். தொழிலாளர்கள் பிரதிநிதியான என். எம். ஜோஷி, மற்றவர்களுக்குத் தங்கள் கொள்கைகளைப் பிரசாரம் செய்ய உரிமை இருப்பது போல, கம்யூனிஸ்டுகளுக்கும் தங்கள் கருத்தை மக்கள் இடையே எடுத்துச் சொல்ல உரிமை வேண்டும் என்றார்.

எதிர்க்கட்சித் தலைவரான பண்டித மோதிலால் நேரு செப்டம்பர் 14ஆம் தேதி இந்த மசோதாவின் மீது பேசினார். மசோதாவைக் கடுமையாக எதிர்த்துப் பேசிய அவர் கூறியதாவது : '' செம்புரட்சியையும் கம்யூனிஸத்தையும் நமது உள்துறை உறுப்பினர் படுபயங்கரமாகச் சித்திரித்த போது, நண்பர் சர் ஹரி சிங் கௌர் மிகவும் வாட்டமுற்றதை நான் கவனித்துக் கொண்டுதான் இருந்தேன். நான் 1927ல் ரஷ்யாவுக்குச் சென்றிருந்தேன். அங்கே அவரவர் விரும்பும் மதத்தைப் பின்பற்ற மக்களுக்கு உரிமை வழங்கப் பட்டிருக்கிறது. சமுதாயத்துறை, கல்வித்துறை, பொருளாதாரத்துறை ஆகியவற்றில் சோவியத் ரஷ்யா பெரும் முன்னேற்றங்களைக் கண்டிருக்கிறது. சோவியத்துக்கு எதிரான பிரசாரம் வெறும் புரளியே. தவிர, ஆசிய நாடுகளுடன் சமுதாய மற்றும் பண்பாட்டு உறவுகளை வளர்த்துக் கொள்ளும் ஆர்வம் இந்திய மக்களிடையே மிகுதியாக இருக்கிறது. இந்த மசோதா

நிறைவேற்றப்பட்டால், இந்திய மக்களின் மேற்படி ஆர்வம் பெரிதும் பாதிக்கப்படும்". இவ்வாறு விளக்கிய நேரு, இறுதியாக, இந்த மசோதா சட்டமாகுமானால், அது "சட்டப் புத்தகத்தில் விழுந்த பெரிய கறை" யாகவே கொள்ளப்படும் என்று எச்சரித்தார்.

மோதிலாலைத் தொடர்ந்து பேசிய ஐயகர், இந்த நிருவாகத் துறையை நம்ப முடியாது என்றும் ஆனால் அதற்கே இந்த மசோதா அளவற்ற அதிகாரங்களைக் கொடுக்கிறது என்றும் கூறி எதிர்ப்புத் தெரிவித்தார். மாளவியா பேசுகையில், "எனக்குக் கம்யூனிஸத்தில் எந்த மோகமும் இல்லை; ஆனாலும், மக்களுக்கு இழைக்கப்பட்டுவரும் அநீதிகள் நிறுத்தப்படும் வரை இந்தியாவில் கம்யூனிஸம் பரவுவதை யாராலும் தடுக்க முடியாது" என்று குறிப்பிட்டார். பம்பாயைச் சேர்ந்த டி. வி. பிரெல்வி 'புரட்சி என்பது நாம் விரும்பியபடி உண்டாக்கிக் கொள்வதல்ல; இந்தியாவில் புரட்சி ஏற்பட வேண்டுமானால், அதற்கு ஏற்ற வரலாற்றுச் சூழ்நிலை இருக்கவேண்டும்' என்றார். மசோதாவின் பெயரில் உள்ள ஒரு முரண்பாட்டைக் கே. சி. நியோகி சுட்டிக் காட்டியபோது சபையே கொல்லென்று சிரித்தது: "இந்த மசோதாவைத் தயாரித்தவர் ஒளிவு மறைவு இல்லாத மனிதர். அதனால் தான், மசோதாவின் உண்மையான நோக்கத்தை அவர் அதன் பெயரிலேயே சொல்லிவைத்து விட்டார். "இந்தச் சட்டம் பொதுப் பாதுகாப்பு (இந்தியாவிலிருந்து அகற்றுதல்) சட்டம் என்று பெயர் பெறும்" என்பதில் உள்ள இந்தியாவிலிருந்து அகற்றுதல் என்பதைக் கவனியுங்கள். அதாவது இந்தியாவில் பொது மக்களுக்கு உள்ள பாதுகாப்பை ஒழிப்பதுதான் இந்தச் சட்டத்தின் நோக்கம் என்று சட்டமே சொல்லுகிறது! அதனால் தான் நான் இதை எதிர்க்கிறேன்." என்றார் நியோகி.

அரசாங்கத்துக்கும் உறுதியான ஆதரவாளர்கள் பலர் இருந்தார்கள். அவர்களில் ஹரி சிங் கௌர், சர்தார் பகதூர் கேப்டன் ஹிரா சிங் பிரார், விக்டர் ஸஸூன், சாகிப்ஜாதா அப்துல் கையூம், இப்ராகீம் ரஹிம்துல்லா ஆகியோர் முக்கிய மானவர்கள்.

போராட்டம் மிகக் கடுமையாக இருந்தது. மசோதாவைப் பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்ப வேண்டும் என்ற தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்ட போது, 62க்கு 59 என்ற வாக்கு வித்தியாசத்தில் அது வெற்றி பெற்றது.

பொறுக்குக் குழுவின் அறிக்கையோடு மீண்டும் இந்த மசோதா 1928 செப்டம்பர் 20ல் சபையில் கொண்டு வரப்பட்டது. இப்போது, முன்பு நடந்த போராட்டம் புதிய உத்வேகத்துடன் மீண்டும் மூண்டது. (எடுத்த எடுப்பிலேயே) துரைசாமி அய்யங்கார், இந்த மசோதா முன்பு வந்ததை விட மோசமான நிலையில் திரும்பி வந்திருக்கிறது என்றார். "தொழிலாளர்களையும் விவசாயிகளையும் கொண்டே இந்தியா சுதந்திரம் அடைந்தாக வேண்டும். இதை உணர்ந்திருப்பதால், அரசாங்கம் அந்த வகுப்பினரிடையே தேசீய உணர்ச்சி வளர்வதைத் தடுக்கும் முயற்சிகளில் தீவிரமாக ஈடுபட்டு வருகிறது. இந்த மசோதாவின் நோக்கமும் அதுவே. எனவே, நான் இந்த மசோதாவை முழு மூச்சாக எதிர்க்கிறேன்" என்றார் டி. பிரகாசம். என். சி. கேல்கர் பேசுகையில் பிரிட்டிஷ் பாராளுமன்றம் மேற்கொள்ள வேண்டிய ஒரு பொறுப்பு அர்த்தமில்லாமல் இந்தியச் சட்டசபையின் மீது திணிக்கப்பட்டிருக்கிறது என்றார். கம்யூனிஸக் கொள்கையைப் பொறுத்தவரை, அதிலே அசம்பாவிதம் எதுவுமில்லை; மற்ற (அரசியல்) கொள்கைகளைப் போலவே இதையும் நோக்க நாடு ஆயத்தமாக இருக்க வேண்டும் என்றும் அவர் சொன்னார்.

முந்திய தடவையை விட, இந்தத் தடவை, மசோதாவின் மீதான விவாதம் கடுமையாக இருந்தது. ஓட்டுக்கு விடப்பட்ட போது இரண்டு பக்கத்துக்கும் (ஒரே அளவான) 61 வாக்குகளே கிடைத்தன. எல்லோருடைய கண்களும் சபைத் தலைவர் படேலை நோக்கின. முழுமையான பெரும்பான்மை இல்லாமல் இத்தகைய முக்கியமான ஒரு சட்டம் வெற்றி பெற்றதாக அரசாங்கம் எழுதிக்கொள்வதை அவர் அனுமதிக்கத் தயாராக இல்லை. அவர் மசோதாவுக்கு எதிராக வாக்களிக்கவே அரசாங்கம் தோல்வியடைந்தது.

இருந்தாலும், இந்திய அரசாங்கம், அதை அப்படியே விட்டுவிடத் தயாராக இல்லை. இந்தியாவில் பொது உடைமைக் கருத்துக்களும் இடதுசாரி எண்ணங்களும் பரவுவதைப் பற்றி அரசாங்கத்திற்கு இருந்து வந்த கலக்கத்தை வைசிராயே வெளிப் படுத்தினர். 1929 ஜனவரியில் சட்டசபையில் பேசும்போது, "அமைதிக்குப் பங்கம் விளையும் விதமாகக் கம்யூனிஸக் கொள்கைகள் பரவி வருவது கவலைக்குரியதாக உள்ளது" என்றார் வைசிராய். எனவே, உள்துறை உறுப்பினர், புதுக்கிய பொதுப் பாதுகாப்பு மசோதா ஒன்றை 1929 பிப்ரவரி 4ஆம் தேதி சபையில் கொண்டு வந்தார். அவரே, மசோதாவைப் பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பலாம் என்றும் ஆலோசனை தெரிவித்தார். பழைய பிரம்மாண்டமான யுத்தம் மீண்டும் தொடங்கி விட்டது! பீகார், முசாபர்பூரைச் சேர்ந்த கயா பிரசாத் சிங் இந்த மசோதாவை மக்களின் கருத்தறிவதற்கு அனுப்ப வேண்டும் என்ற திருத்தம் ஒன்றைக் கொணர்ந்தார். ஏற்கெனவே இது போன்ற ஒரு மசோதாவை எதிர்க்கட்சி எதிர்த்திருக்கிறது; இப்போதும் அது எதிர்க்கிறது என்றார் அவர். முந்திய மசோதா பிரிட்டிஷ் இந்தியக் குடிகளை மட்டுமே வெளியேற்றக் கூடியதாக இருந்தது. இப்போது இந்தியக் குடிகள் என்று பொதுவாகக் குறிப்பிட்டிருப்பதால் மசோதாவின் அமுல் எல்லை விரிவடைந்திருப்பதையும் அவர் சுட்டிக்காட்டினர். மசோதாவை எதிர்த்த திவான் சமன் லால், "சோஷலிசத்துக்கு எதிராகப் பிரசாரம் செய்ய முயல்கிறீர்கள் என்றால்,—சோஷலிசத்தை நசுக்கவே அதிகாரம் கோருகிறீர்கள் என்றால்,—எங்கள் பிணங்களின் மீது நடந்து சென்றுதான் நீங்கள் அந்த அதிகாரத்தைப் பெற வேண்டும்!" என்று முழங்கினர். ரங்கசாமி அய்யங்கார் பேசுகையில், இந்த மசோதா அரசாங்கம் என்கிற அதிகார வர்க்கத்தின் கரங்களை வலுப்படுத்துகிறதே தவிர, மக்கள் நலனைப் பற்றிய நோக்கமே இதில் இல்லை என்றார்.

தொழிலதிபர் கனஷியாம் தாஸ் பிர்லா பேசும்போது, "நான் கம்யூனிஸக் கொள்கையை ஆதரிப்பவனல்ல; ஏற்கனவே எத்தனையோ கிளர்ச்சிகள் நடந்திருந்தாலும் முதலாளித்துவம் அழியாது என்பது என் திடமான நம்பிக்கை" என்றார். ஆனாலும்,

இந்தியாவின் மற்ற முதலாளிகளைப் போலவே, அவரும், யாரையும் நாடு கடத்தவோ, தடுத்து வைக்கவோ, விசாரணை இல்லாது சிறைப்படுத்தவோ அரசாங்கத்துக்கு அதிகாரம் கொடுத்து வைப்பதை ஏற்கவில்லை. தொடர்ந்து பேசுகையில் பிர்லா கூறியதாவது :

"இந்த மசோதா சென்ற செப்டம்பரில் சபையில் கொண்டு வரப்பட்டு நிராகரிக்கப்பட்டது. கம்யூனிஸத்தைக் கட்டுப்படுத்துவதே அரசாங்கத்தின் நோக்கமானால், இந்தியத் தொழிலதிபர்களைச் சேர்த்துக்கொண்டே அவர்கள் இதைச் செய்திருக்க வேண்டும். இது சம்பந்தமாக அரசாங்கம் ஐரோப்பிய முதலாளிகளைக் கலந்து ஆலோசித்ததா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், இந்திய வர்த்தக அமைப்புகளை நம்பிக்கைக்குப் பாத்திரமாக அவர்கள் கருதவில்லை என்பது மட்டும் எனக்குத் தெரியும்."

பேராரைச் சேர்ந்த எம். எஸ். ஆனே, கம்யூனிஸப் பிரச்சினையைத் தீர்ப்பதே அரசாங்கத்தின் நோக்கமாகத் தோன்றவில்லை என்றார். "ஏகாதிபத்தியத்துக்கு எதிரான எழுச்சியே கம்யூனிஸம். கம்யூனிஸத்தை எதிர்ப்பதுதான் அரசாங்கத்தின் விருப்பம் என்றால், முதலில் அது எதிர்க்கட்சியினரோடு சேர்ந்து ஆங்கில ஏகாதிபத்தியத்தை எதிர்க்க வேண்டும். அதற்கு அரசாங்கம் தயாரா?" என்று கேட்டார் ஆனே.

மோதிலால் நேருவும் மாளவியாவும், இப்போதும் மசோதாவைக் கண்டித்துப் பேசினார்கள். நீதித்துறைக்கு இருக்க வேண்டிய அதிகாரங்களை இந்த மசோதா நிருவாகத் துறையின் கையில் ஒப்படைக்கிறது என்று குற்றஞ்சாட்டி அதை எதிர்த்தார் மாளவியா. இது இந்தியத் தேசீயத்தின் மீதும் இந்தியத் தேசீயக் காங்கிரசின் மீதும் தொடுக்கப்பட்ட நேரிடையான தாக்குதல் என்று வருணித்த மோதிலால் நேரு, "முதல் நம்பர் இந்திய அடிமை மசோதா இது!" என்று சாடினார்.

ஆனால், முகம்மது ஷா நவாஸ் போன்ற உறுப்பினர்கள், "இந்த முக்கியமான மசோதாவை நிறைவேற்றாவிட்டால் தேசீய எழுச்சியே பாதிக்கப்படும்" என்று கருத்துத் தெரிவித்தார்கள்.

எம். கே. ஆச்சாரியா, "கம்யூனிஸ அபாயத்தைத் தடுத்து நிறுத்துவதற்குச் சட்டம் இயற்றுவதை" எதிர்க்காவிட்டாலும், இந்த மசோதாவில் உள்ள இவ்வளவு சங்கதிகள் தேவையில்லை என்றார்.

இந்தத் தடவை அரசாங்கம் தனக்குச் சாதகமான சக்திகளை ஒன்று திரட்டி உறுதிப்படுத்தி வைத்திருந்தது. ஆதலால், மசோதாவைப் பொறுக்குக் குழுவுக்கு அனுப்புவது என்ற (அரசாங்கத்) தீர்மானம் வெற்றி பெற்றது.

பொறுக்குக் குழு திருத்தி அமைத்தபடி, மசோதா மார்ச் 28ல் சபையில் கொண்டுவரப்பட்டது. ஆனால், இதற்கு ஒரு வாரத்துக்கு முன்புதான் அரசாங்கம், முக்கியமான கம்யூனிஸ்டுகளும் தொழிற் சங்கவாதிகளுமான 31 பேரைக் கைது செய்திருந்தது. விசாரணைக்காக ஓர் ஒதுக்குப்புற மாவட்ட நகரமாகிய மீரட்டுக்கு அவர்களைக் கொண்டு சென்றது. இதுதான், பிறகு புகழ்பெற்ற மீரட் சதி வழக்கு என்று பெயர் பெற்றது. நாடெங்கும் அரசாங்க நடவடிக்கைக்கு எதிரான உணர்ச்சி கிளம்பியது. காந்தியடிகள், "இது கம்யூனிஸத்தை அழிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை அல்ல; இந்தியர் நெஞ்சத்தில் நடுக்கத்தைப் பாய்ச்சுவதே இதன் நோக்கம்" என்று குறிப்பிட்டார். "சட்டத்தின் பேரால் நடத்தப்படும் அராஜகம் இது" என்றும் அவர் அதை வருணித்தார்.

மசோதா சபையில் கொண்டுவரப்பட்டது. சட்டத்துறை உறுப்பினர், பொறுக்குக் குழு கொடுத்திருந்த அறிக்கையை விளக்கினார். உடனே ஐயகர் எழுந்து, கம்யூனிஸ்டுகள் கைது செய்யப்பட்டு அவர்கள் மீது மீரட்டில் விசாரணை நடக்க இருக்கிற இந்த நேரத்தில் இந்த மசோதாவைப் பற்றிய விவாதத்தை ஒத்திப் போடுவது நல்லது என்னும் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பினார். வழக்கு விசாரணையிலிருக்கும்போது அதுபற்றி இங்கே பேசுவதால் வழக்கு பாதிக்கப்படும் என்றும் அவர் சுட்டிக் காட்டினார். ஏப்ரல் 2ஆம் தேதி சபை மீண்டும் கூடியபோது, "பொதுப் பாதுகாப்பு மசோதாவுக்கும் மீரட் சதிவழக்குக்கும் அடிப்படை ஒன்றே" என்றும் அதனால், இந்த மசோதாவை

விவாதிப்பதால் விசாரணையில் உள்ள அந்த வழக்குப் பாதிக்கப் படும் என்றும் சபைத் தலைவர் படேல் விளக்கினார். எனவே மசோதாவை ஒத்திவைக்கலாம் என்று அவர் கருத்துத் தெரிவித்தார். ஒருவேளை, இந்த மசோதாவை உடனடியாக நிறைவேற்றியாக வேண்டுமென்று அரசாங்கம் கருதுமானால் மீரட் சதிவழக்கை வாபஸ் பெற்றுக்கொண்டு அதன் பிறகு மசோதாவை நிறைவேற்ற நடவடிக்கை மேற்கொள்ளலாம் என்று அரசாங்கத்துக்கு ஆலோசனை தெரிவித்தார் அவர். பாவம், அரசாங்கத்தின் பாடு திண்டாட்டமாகப் போய்விட்டது.

ஏப்ரல் 4-ஆம் தேதி உள்துறை உறுப்பினர் அரசாங்கத்தின் கருத்தைச் சபையில் தெரிவித்தார். அவர் கூற்றுப்படி, மீரட் சதிவழக்கு நடந்து கொண்டிருந்தாலும், இந்த மசோதாவை விவாதிப்பதற்குச் சட்டப்படி எந்தத் தடையும் இல்லை என்பது அரசாங்கத்தின் கருத்து. எனவே, இதன் உடனடித் தேவையை முன்னிட்டுச் சபை இதைப்பற்றிய பரிசீலனையைத் தொடரலாம் என்று அவர் கேட்டுக்கொண்டார். அதைத் தொடர்ந்து சட்டப் பிரச்சினை பற்றி விவாதம் எழுந்தது. தேசியவாதிகள், சட்டப்படி, மசோதாவைச் சபை விவாதிக்க முடியாது என்றார்கள். ஜின்னா இது தொடர்பாக அனுப்பிய தந்தி ஒன்றை ராஜா கஜன்பர் அலி கான் சபைக்குத் தெரிவித்தார். அதில், மசோதா பற்றிய விவாதத்தை சபைத்தலைவர் நிறுத்தி வைக்க முடியாது என்று குறிப்பிட்டிருந்தார் ஜின்னா.

தலைவர் படேல், ஏப்ரல் 11ஆம் தேதி, இறுதியாகத் தமது முடிவை அறிவித்தார். நீண்ட அறிக்கையாக அமைந்த அந்த அறிவிப்பு பின்கண்டவாறு கூறியது: விசாரணையில் உள்ள வழக்கைத் தொடர்புபடுத்தாமல் இந்த மசோதாவின் மீது விவாதம் நடைபெற இயலாது. இப்போது உள்ள நிலையில் மசோதாவின் மீதான விவாதத்தை நிறுத்தி வைக்கும் அதிகாரம் சபைத்தலைவருக்கு இருப்பதாக வெளிப்படையாகச் சொல்லும் விதி எதுவும் இல்லை என்பது உண்மையே. ஆனால், இதுபோன்ற பழைய நிகழ்ச்சிகளையும் இப்போது ஏற்பட்டுள்ள நெருக்கடியான சூழ்நிலையையும் கருத்தில் கொண்டு கவனிக்கையில், சபைத்

தலைவருக்கு அந்த அதிகாரம் உண்டு என்பது குறிப்பாகப் புலப் படவே செய்கிறது. மேலும் சபையின் நடைக்கும் நடை முறைக்கும் குந்தகம் விளைக்கும் என்ற காரணத்தைக் கொண்டு எந்தப் பிரேரணையையும் நிராகரிக்கும் அதிகாரம் இயல்பாகவே சபைத் தலைவருக்கு உண்டு. இவைகளின் அடிப்படையில், பொதுப் பாதுகாப்பு மசோதாவின்மீதான விவாதத்தை படேல் நிராகரித்தார்.

ஆனாலும், இந்தத் தீர்ப்பு அரசாங்கத்தைத் தடுக்கவில்லை. அடுத்தநாளே, வைசிராய் இரண்டு சபை உறுப்பினர்களுக்கும் உரை நிகழ்த்தி, சபைத் தலைவரின் தீர்ப்பைத் தாம் ஏற்றுக் கொள்ளாததையும் தெரிவித்தார். "இந்தியச் சட்ட சபை இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவது தடைப்பட்டு விட்டதால், புரட்சி இயக்கங்களைப் பின்னால் இருந்து இயக்குவோர் சும்மா இருந்து விடப் போவதில்லை" என்றும் அவர் கூறினார். எனவே, அந்த மசோதாவில் கோரப்பட்டிருந்த எல்லா அதிகாரங்களையும் கவர்னர் ஜெனரலுக்கு வழங்கும் அவசரச் சட்டம் ஒன்றைப் பிறப்பித்து விட்டார் வைசிராய்.

1929 ஆம் ஆண்டின் வரவு செலவுத் திட்டக் கூட்டத் தொடரில் கொண்டு வரப்பட்ட தொழில் தகராறுகள் மசோதா பலர் கவனத்தைக் கவர்ந்தது. இந்த மசோதாவின் மீதும், அரசாங்கத் துக்கும் எதிர்க் கட்சிக்கும் பலப் பரீட்சை நடந்தது. பொதுமக்கள் கருத்தறிவதற்காக இந்த மசோதா 1928 செப்டம்பரிலேயே வெளியிடப்பட்டிருந்தது. 1929 பிப்ரவரி 11ல் இந்த மசோதா வைப் பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்பலாம் என்று கோரும் தீர்மானத்தைத் தொழில்துறை உறுப்பினர் சர் பூபேந்திர நாத் மித்ரா சபையில் மொழிந்தார். பம்பாயில் தொடர்ச்சியாக நடந்து வந்த வேலை நிறுத்தங்களைக் குறிப்பிட்டு, இந்தச் சூழ்நிலையில் மேற்படி மசோதாவை உடனடியாகக் கொண்டுவர வேண்டியதாயிற்று என்று விளக்கினார் அவர். (தொழில்) நீதி மன்றங்களை அமைப்பதும் சமரச போர்டுகளை ஏற்படுத்துவதுமே மசோதாவின் நோக்கம். அத்தியாவசியத் தொழில்களில் ஏற்படும் திடீர் வேலை நிறுத்தங்களுக்குத் தண்டனை வழங்குவதற்கும் தொழிலாளர் நலனோடு தொடர்புபடாத வேலைநிறுத்தங்களைத்

தடை செய்வதற்கும் மசோதா வகை செய்தது. இந்த மசோதாவும் ஒவ்வொரு கட்டத்திலும் எதிர்ப்புக்கு உள்ளாயிற்று.

பொறுக்குக் குழு திருத்தி அமைத்தபடி, இந்த மசோதா 1929 ஏப்ரல் 2 ஆம் தேதி சபையில் திரும்பவும் கொண்டு வரப் பட்டது. வி. வி. ஜோகையா, விட்லி (தொழிலாளர் நலக்) குழுவின் அறிக்கை வரும் வரை இந்த மசோதாவைப் பற்றிய விவாதத்தை ஒத்திப்போட வேண்டும் என்ற தீர்மானத்தைக் கொண்டு வந்தார். இந்த மசோதா தொழிலாளர் உரிமைக்கும் இந்திய மக்கள் அனைவருக்குமே பாதகமானதாக இருப்பதால் மீண்டும் இதைப்பற்றி மக்களின் கருத்தை அறிய வேண்டும் என்றார் திவான் சமன் லால். என். சி. கேல்கரும் சீனிவாச அய்யங் காரும் அவர் கருத்தை ஆதரித்துப் பேசினார்கள். ஜம்னாதாஸ் எம். மேத்தா, மசோதாவை, "உழைப்பாளர்களை ஒடுக்குவதற்கு அதிகார வர்க்கம் தயாரித்துள்ள ஒரு பட்டயம்" என்று வருணித்தார். இது ஒரு அரசியல் மசோதாவாகும் என்று எடுத்துரைத்த பண்டித தாகுர்தாஸ் பார்கவா, இது தொழில் தகராறுகள் மசோதா என்ற மாற்றுடையில் இந்தச் சபைக்குக் கடத்திக் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று கடிந்தார். எம். எஸ். ஆனே, இந்த மசோதா இந்தியாவில் தொழிலாளர் இயக்கம் வளர்வதைத் தடுக்கும் என்று கருத்துத் தெரிவித்தார்.

அரசாங்கத் தரப்பினர் அல்லாதவர்கள் பலமாக எதிர்த்தும், மசோதா ஏப்ரல் 8 ஆம் தேதி நிறைவேற்றப்பட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் பார்வையாளர் பகுதியிலிருந்து வீசப்பட்ட இரண்டு குண்டுகள் அரசாங்கத் தரப்பு உறுப்பினர்கள் அமர்ந் திருந்த இடத்தில் விழுந்து வெடித்தன. குழப்பத்திற்கிடையே சபை ஒத்திவைக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சியால், இம் மசோதா நிறைவேற்றப்பட்ட செய்திக்கு ஒரு பிரபலம் ஏற்பட்டு விட்டது.

## ஜதீன் தாஸ் மரணம் : சட்டசபைக் கண்டனத் தீர்மானம்

வெடிகுண்டு நிகழ்ச்சியைத் தொடர்ந்து சர்தார் பகத் சிங், பதுகேஸ்வர் தத் என்ற இரண்டு இளம் புரட்சிக்காரர்கள் கைது

செய்யப்பட்டார்கள். பின்னர் பல புரட்சிக்காரர்கள் கைது செய்யப்பட்டு, லாகூர் நீதிமன்றத்தில் அவர்கள் மேல் வழக்கும் தொடரப்பட்டது. லாகூர் சதிவழக்கு என்று பெயர்பெற்ற இந்த வழக்கு இந்திய மக்கள் மத்தியில் பெரிய கொந்தளிப்பை உண்டாக்கியது.

லாகூர் சதிவழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் சிறைச்சாலையில் சாதாரணக் குற்றவாளிகளைப் போலவே நடத்தப்பட்டார்கள். அதைக் கண்டித்தும் தங்களை அரசியல் கைதிகள் போல நடத்த வேண்டுமென்று கோரியும் சிறையிலேயே பகத் சிங் தலைமையில் அவர்கள் ஒரு போராட்டத்தைத் தொடங்கினார்கள். அரசாங்கம் இந்தக் கோரிக்கையை ஏற்காததால் அவர்கள் உண்ணாவிரதம் மேற்கொண்டார்கள். லட்சிய வீறும் புரட்சி வேகமும் கொண்ட இளைஞர் ஜதீந்திர நாத் தாஸ் இந்தப் போராட்ட வீரர்களிலே ஒருவர். இந்த இளைஞர்களின் உயிரை அரசாங்கம் பாதுகாக்க வேண்டும் என்று நாடெங்கும் பலத்த கோரிக்கை எழுப்பப் பட்டும், அரசாங்கம் செவிசாய்க்கவில்லை. 1929 செப்டம்பர் 13 ஆம் தேதி ஜதீன் தாஸ் இறந்து போனார். அரசாங்கத்தின் இரக்கமற்ற போக்கால் இந்த இளைஞர் உயிர் துறக்க நேர்ந்ததை அறிந்து நாடே கொதித்து எழுந்தது.

தில்லியில் இச்செய்தி கிடைத்தபோது சட்டசபை நடந்து கொண்டிருந்தது. செப்டம்பர் 14ஆம் தேதி, ஜதீன் தாஸின் மரணத்தையும் அதனோடு தொடர்புடைய விவகாரங்களையும் பற்றி விவாதிப்பதற்காகச் சட்டசபை நடவடிக்கைகளை ஒத்தி வைக்க வேண்டும் என்ற தீர்மானம் ஒன்றை மோதிலால் நேரு கொண்டுவந்தார். அவ்வாறே நடவடிக்கைகள் ஒத்திவைக்கப் பட்டன. எதிர்க்கட்சி உறுப்பினர்கள், அரசாங்கம் லாகூர்க் கைதி களிடம் மனிதப் பண்போடு நடந்து கொள்ளாததைச் சுட்டிக் காட்டிக் கண்டித்தார்கள்.

லாகூரில் மனித உயிர் அழிந்துகொண்டிருந்த நிலையிலும் இரக்க மின்றி வீற்றிருந்த அரசாங்கத்தின் போக்கை மோதிலால் நேரு கடுமையாகச் சாடினார்: "நமது காருண்யமிக்க சர்க்கார் (ரோம் நகரம் பற்றி எரிந்து கொண்டிருந்த போது பிடில் வாசித்துக்

கொண்டிருந்த) நீரோ மன்னனையும் மிஞ்சிவிட்டது! ஆம்; தவருன வழியில் திருப்பி விடப்பட்டவர்களாஞலும், இந்த இளைஞர்கள் தேசீய வீரர்கள். அவர்களின் மரணப் படுக்கை யிலேயே நமது அரசாங்கம் பிடில் வாசித்துக் கொண்டு இருக்கிறது. அந்த இளைஞர்களின் ஆவி அணு அணுவாகப் பிரிந்து கொண் டிருந்ததைக் கண்டு ரசித்துக்கொண்டு இருக்கிறது இந்த அரசாங்கம்! அது மட்டுமல்ல. அங்கே உயிர்கள் போய்க் கொண்டு இருக்கையில், இது சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்ற ஆராய்ச்சியிலேயே இன்னமும் அரசாங்கம் பொழுது போக்கிக் கொண்டிருப்பது வேதனையாக இருக்கிறது" என்ருர் நேரு.

உள்துறை உறுப்பினர் ஏதேதோ சொல்லி அரசாங்கம் மேற் கொண்ட நிலை சரியே என்று நிலைநாட்ட முயன்ருர். ஆஞலும் அவருடைய விளக்கம் எதிர்க்கட்சியினருக்குக் கொஞ்சமும் திருப்தியளிக்கவில்லை. மாளவியா, பகத் சிங்கின் கடிதத்தில் ஒரு பகுதியைப் படித்துக் காட்டி, "அவர்களின் கோரிக்கை எவ்வளவு நியாயமானது பாருங்கள்" என்று சபையைக் கேட்டார். நேர் மையும் தன்மான உணர்ச்சியும் உள்ள எந்த மனிதனும் தன்னுடைய நாட்டுக்கு விடுதலை தேடவே விரும்புவான்; அத்தகையதொரு விருப்பத்திலேயே செயல் புரிந்துள்ள இந்த இளைஞர்கள் மிகுந்த மதிப்புக்கு உரியவர்கள் என்ருர் மாளவியா. அவர்களின் நியாயமான கோரிக்கைக்கு அரசாங்கம் செவிசாய்க் காததால் ஓர் அரிய இளம் உயிரையே இழக்க நேரிட்டுவிட்டது என்ருர் அவர். அமர்நாத் தத், "ஜதீன் தாஸைக் கொலைபுரிந்த கொலையாளி இந்த அரசாங்கமே!" என்று குற்றஞ்சாட்டிஞர். கே. சி. நியோகி (லாகூர் சதிவழக்குக்) கைதிகள் காட்டிய வீர சாகசத்தைப் பாராட்டிஞர். புருஷோத்தமதாஸ் தாகுர்தாஸ் பேசுகையில், குற்றத்துக்கு உற்சாகமளிப்பதை நான் ஏற்க இயலா தென்ருலும், அரசாங்கத்தின் பழிவாங்கும் போக்கை நானும் என் நண்பர்களும் நிச்சயமாக ஆதரிக்கமுடியாது என்று திட்ட வட்டமாக அறிவித்தார்.

இறுதியாக ஒத்துழைப்புத் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு 55க்கு 47 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

வெளியே மக்களின் கண்டனத்துக்கு ஆளாகி நின்ற அரசாங்கம், சட்டசபையிலும் கண்டனத்தையே அள்ளிக் கட்டிக்கொண்டது.

**சாரதா மசோதா :**

சமுதாய வாழ்வில் நிலவிய கேடுகளை ஒழிப்பதற்கு அனுசரணை யான சட்டங்களை இயற்ற முயன்றது சட்டசபையில் தேசிய வாதிகள் ஆற்றிய பணியின் மற்றோர் அம்சம் ஆகும். குழந்தை மணமும் அதன் விளைவான கைம்மைக் கொடுமையும் இந்துக் களிடையே நிலவிய மேற்குறித்த சமுதாயக் கேடுகளில் ஒன்று. இதை ஒழிப்பதில் கணிசமான பங்கு ஏற்றவர் அஜ்மீரைச் சேர்ந்த ராய் பகதூர் ஹர்பிலாஸ் சாரதா. சாரதா மசோதா என்று வழங்கப்பட்ட குழந்தைத் திருமண(தடுப்பு) மசோதாவைக் கொண்டுவந்து நிறைவேற்றுவதில் அவர் முழுமூச்சாக ஈடுபட்டு இருந்தார். மூன்றாவது சட்டசபைக்காலம் முழுவதும் அவர் இதே வேலையாகவே இருந்தார். பையன்களுக்குப் 18 வயதுக்கு முன்பும் பெண்களுக்குப் 14 வயதுக்கு முன்பும் திருமணம் நடத்தப் படுவதைத் தடுப்பதே இந்த மசோதாவின் நோக்கம். அரசாங்கத்தின் அசமந்தப் போக்குக்கு மட்டுமன்றி, இந்தியாவில் உள்ள பல பழமைவாதிகளுக்கும் ஈடுகொடுத்தே ஹர்பிலாஸ் சாரதா இந்தக் காரியத்தைச் செய்யவேண்டியிருந்தது. ஆனாலும், மோதிலால் நேரு, ஜின்னா போன்ற புதுமை விரும்பிகளும் எச். என். குன்ஸ்ரு, எச். பி. மோடி போன்ற மிதவாதிகளும் முழுமையாக ஆதரவு தந்ததால், இந்த மசோதா 1929 செப்டம்பர் 28ல் நிறைவேறியது. இந்தியாவில் நிறைவேற்றப்பட்ட சமுதாயச் சீர்திருத்தச் சட்டங்களின் வரலாற்றில் இந்த (சாரதா)ச் சட்டத்துக்கு முக்கியமானதோர் இடம் உண்டு.

**சபையின் உரிமைக்கான போராட்டம் :**

சட்டசபை மூலம் நடைபெற்ற சுதந்திரப் போராட்டத்தில், சட்டசபை மற்றும் அதன் உறுப்பினர்களின் உரிமையை நிலை நாட்டுவதிலே உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்கள் ஆற்றிய பணியும் முக்கியமானது. அப்போதைய அரசியல் சட்டம் எப்படிப் பட்டதாக இருந்தாலும், சட்டசபை மற்றும் உறுப்பினர்களின்

உரிமைகள் அரசாங்கத்திடமும் அதிகாரவர்க்கத்திடமும் சிக்கி விடாமல் பார்த்துக் கொள்வதில் இவர்கள் எப்போதும் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தார்கள். பிரிட்டிஷ் மக்கள்சபைக்கு உள்ள உரிமைகளும் சலுகைகளும் இந்தியச் சட்டச்சபைக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கிலேயே இவர்கள் விதிகளையும் மரபுகளையும் உருவாக்கி வந்தார்கள். இந்த முயற்சியில், 1925 ஆகஸ்டு 24ல் சபைத்தலைவராகப் பொறுப்பேற்ற வி. ஜே. படேல் ஆற்றிய பணி ஆற்றல் வாய்ந்ததும் முக்கியத்துவம் வாய்ந்தது மாகும். சபை உறுப்பினர்களின் உரிமையையும் பெருமையையும் கட்டிக் காத்தவர்களுள் முதன்மையானவராக விளங்கியதோடு, "ஒரு சுந்ததிரக் குடியரசு நாட்டில் எதிர்க்கட்சிக்கும் அதன் தலைவருக்கும் உரிமையான எல்லாச் சிறப்பு நிலைகளையும் வழங்கியவர்" என்னும் பெருமைக்கும் உரியவரானார் படேல்.

இந்த (உரிமைப்) போராட்டத்தின் வரலாறு நீளமானது. அதிலே ஒருசில நிகழ்ச்சிகளை மட்டும் இங்கே காண்போம்.

அரசாங்க ஆதரவுடன் போட்டியிட்ட டி. ரங்காச்சாரியாரைத் தோற்கடித்து சபைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் வி. ஜி. படேல். அவர் தேர்ந்தெடுக்கப்பட்ட போது, 'தளராத சுயராச்சியவாதியும் அரசாங்க எதிர்ப்பாளருமாகிய இவர் தமது போராட்ட உணர்ச்சியைக் கைவிடாமல் எப்படிச் சபையை நடத்தப் போகிறார்?' என்ற பெரிய கேள்வி பலரிடையே எழுந்தது.

தலைமைப் பொறுப்பை ஏற்ற தொடக்கத்தில், படேலுக்கு சிறிது சங்கடமாகத்தான் இருந்தது. காரணம், எல்லா நடவடிக்கைகளுக்கும் அவர் சட்டசபைச் செயலாளரின் ஆலோசனையையே நாட வேண்டியிருந்தது. சட்டசபைச் செயலாளர் பொதுவாக, கவர்னர் ஜெனரலுக்கே பதில் சொல்லவேண்டிய பொறுப்புடைய வராக இருந்தார்; சபைத்தலைவருக்கு அவர் எந்த வகையிலும் கட்டுப்பட்டு நடக்க வேண்டியதில்லை. மேலும். செயலாளர், நியமன உறுப்பினராகையால் எந்த ஒரு கட்சியுடனும் சேரவும் அதற்காகவே வேலை செய்யவும் அதன் சார்பில் ஓட்டளிக்கவும் அவருக்கு முழு உரிமை இருந்தது. இத்தகைய ஒருவரின்

ஆலோசனையை நடுநிலையானதென்றோ சுதந்திரமானதென்றோ ஏற்க முடியாதென்பது தெளிவு. படேல் இதைக் கவர்னர் ஜெனரலிடம் விளக்கிக் கூறியதன் பேரில், 1928 (ஆகஸ்ட் செப்டம்பர் அக்டோபர்) இலையுதிர் காலக்கூட்டத் தொடரிலிருந்து, செயலாளரைச் சட்டசபை உறுப்பினராக நியமிக்கும் வழக்கம் கைவிடப்பட்டது.

இந்த நடவடிக்கையால் நிலைமை ஓரளவுதான் சரிப்பட்டது. சட்டசபைக்கு என்று உரிமை பெற்ற தனி ஊழியர்கள் இல்லை என்பதே பெரிய குறையாக இருந்து வந்தது. 1926 ஜனவரியில் நடந்த சட்டசபைத் தலைவர்களின் மாநாடு, படேலுடைய தூண்டுதலின் பேரில், சட்டசபைக்கு என்றே அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் வராத தனி அலுவலகம் ஒன்று அமைக்க வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியது. இது சம்பந்தமாக அரசாங்கம் எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளாததால், படேலே விவரமான திட்டம் ஒன்றைத் தயாரித்து அரசாங்கத்திடம் கொடுத்தார். அரசாங்கத்தின் சட்டத்துறையிலிருந்து சட்டசபையைத் தனியே பிரிக்க வேண்டும் என்பதும் இந்த அலுவலகமும் இதன் அதிகாரிகளும் சட்டசபையின் தலைவருக்கே கட்டுப்பட்டவர்களாக இருக்க வேண்டும் என்பதுமே இந்தத் திட்டத்தின் முக்கியமான அம்சங்கள். இது தொடர்பான பேச்சு வார்த்தைகள் நடந்தன என்றாலும், முக்கியமான அம்சங்களில் அரசாங்கம் தலைவர் படேலுடன் கருத்து வேறுபட்டது.

1928 செப்டம்பர் 5ல் தலைவர் படேல் இந்த விவகாரங்களைப் பற்றிச் சட்டசபையில் தெரிவித்தார். 1928 டிசம்பர் 1ஆம் தேதிக்குள் சட்டசபைக்கான தனி அலுவலகம் ஒன்றை அமைக்க வேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றை எதிர்க்கட்சித் தலைவரான பண்டித மோதிலால் நேரு செப்டம்பர் மாதம் 22ஆம் தேதி சபையில் கொண்டுவந்தார். கவர்னர் ஜெனரல் சபைத் தலைவருடன் கலந்தாலோசித்து இந்த அலுவலகத்தின் முக்கியமான அதிகாரிகளை நியமிக்க வேண்டும் என்றும் அந்த அதிகாரிகளின் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கும் அதிகாரம் சபைத் தலைவருக்கே இருக்க வேண்டும் என்றும் தீர்மானம் மேலும்

கோரியது. அவ்வாறு நடவடிக்கைகளுக்கு உட்பட்ட அதிகாரிகளுக்குக் கவர்னர் ஜெனரலிடம் முறையிட்டுக் கொள்ளும் உரிமை வழங்கலாம் என்றும் தீர்மானம் குறிப்பிட்டது. இந்தத் தீர்மானம் சட்டசபையில் நிறைவேறி, அதன்படியே தனியான சட்டசபை அலுவலகம் ஒன்றும் அமைந்தது.

சட்டசபைத் தலைமையின் கவுரவத்தைக் காப்பதில் சபை உறுப்பினர்களும் பல சமயங்களில் சபைத் தலைவரும் கூட மிகவும் சிரமப்பட வேண்டியிருந்தது. சில பிரிட்டிஷ் மற்றும் ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள் சிலபோது தலைவரைக் கடுமையாகக் குறை கூறி வந்தன. 1928 செப்டம்பர் 4ஆம் தேதி, தலைவர் மீதான இத்தகைய தாக்குதல்களைப் பற்றி விவாதிப்பதற்காகச் சபை நடவடிக்கைகளை ஒத்தி வைக்கவேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றை கயா பிரசாத் சிங் கொண்டுவந்தார். ஆனால், அந்தத் தீர்மானம் முறையாகக் கொண்டுவரப் படவில்லை என்று சொல்லித் தலைவர் அதை நிராகரித்துவிட்டார். மீண்டும், செப்டம்பர் 14 ஆம் தேதி இதே விவகாரம் எதிர்க்கட்சித் தலைவர் பண்டித மோதிலால் நேருவால் சட்டசபையில் எழுப்பப்பட்டது. **டெய்லி டெலிகிராப், டைம்ஸ் ஆப் இந்தியா** ஆகிய பத்திரிகைகளின் நிருபர்கள் (வேண்டுமென்றே) தலைவரை நிந்திக்கும் பிரசாரத்தை மேற்கொண்டு வருகிறார்கள் என்றும் **பயனியர்** பத்திரிகையின் சிம்லா நிருபர், "சபைத் தலைவருக்கு எதிரான பிரசாரத்துக்கு அரசாங்கமே பாதுகாப்பளித்து வருகிறது" என்று எடுத்துச் சொல்லியுள்ளாரென்றும் அவர் குறிப்பிட்டார். தொடர்ந்து நடந்த விவாதத்தில் கலந்துகொண்ட உள்துறை உறுப்பினர் இது சம்பந்தமாக உறுப்பினர்கள் கொண்டுள்ள அதிருப்தி நியாயமானதே என்று ஒப்புக்கொண்டார். அதன் பேரில், எதிர்க்கட்சித் தலைவர் (பத்திரிகை நிருபர்கள் மீது) சுமத்திய குற்றச் சாட்டுக்கள் சரியானவைகளே என்று சபைத்தலைவர் அறிவித்தார். பின்னர், தலைவர் இந்த நிருபர்களின் அனுமதிச் சீட்டை ரத்துச் செய்ததோடு, தம்மிடமிருந்து அடுத்த உத்தரவு வரும் வரையில் இந்தப் பத்திரிகைகளுக்கு அறிக்கைகள், மசோதாக்கள் முதலியவைகளை அனுப்பக்கூடாது என்றும் கட்டளையிட்டார்.

தலைவர் தமக்கு உரிமையான அதிகாரத்தைப் பிரயோகித்து, 1929 ஏப்ரல் 11ல் பொதுப் பாதுகாப்பு மசோதா மீதான விவாதங்களைத் தடுத்து நிறுத்தியதை ஏற்கனவே பார்த்தோம். அடுத்த நாளே வைசிராய் இரண்டு சபைகளைச் சேர்ந்த உறுப்பினர்களிடையே உரை நிகழ்த்தி, சபைத் தலைவருக்குரிய உரிமைகள் பற்றிய தலைவரின் விளக்கங்களுக்கு எதிரான கருத்தை வெளியிட்டதும் நாம் அறிந்ததே.

சட்டசபையின் அடுத்த கூட்டத்தொடர் 1929 செப்டம்பர் 2ஆம் தேதி தொடங்கியது. இதற்கிடையில், தலைவர் படேல் இந்த விவகாரத்தை வைசிராயின் கவனத்துக்குக் கொண்டுவந்து, தம்முடைய தீர்ப்புக்கு எதிராக வைசிராய் கருத்து வெளியிட்டதற்குக் கடுமையான எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டார். வைசிராய் தம்முடைய கருத்தை விட்டுக் கொடுக்கவில்லை. ஆனாலும், சபைத் தலைவரை அவமதிக்கக் கருதியதில்லை என்றும் (தலைவரின் உரிமைகள் தொடர்பான) விதிகளைச் சபையில் விளக்குவதற்குச் சபைத் தலைவர் பெற்றிருக்கிற உரிமையைத் தாம் மறுக்கவில்லை என்றும் அவர் தெளிவு படுத்தினர். செப்டம்பர் 2ல் சபை தொடங்கியதும், தலைவர் படேல், இந்த விவகாரங்களைப் பற்றி நீண்டதோர் அறிக்கையை வெளியிட்டார். அதிலே, சட்ட சபையில் அதன் தலைவர் வழங்கும் தீர்ப்புக்களைப் பற்றி விமர்சிக்கவும் கண்டிக்கவும் சபைக்கு மட்டும் தான் அதிகாரம் உண்டு என்பதை வைசிராய் ஏற்றுக்கொண்டது பற்றித் தலைவர் திருப்தி தெரிவித்தார். எனவே, இந்த விவகாரம் இத்துடன் முடிந்ததாகக் கருதவேண்டும் என்று உறுப்பினர்களைக் கேட்டுக்கொண்டார். "நான் தலைவராக இருக்கும்வரை, அரசியல் சட்டத்துக்கு உட்பட்டு, சட்டசபை மற்றும் அதன் தலைமையில் உயர்ந்த ஸ்தானத்தைக் கட்டிக் காத்து வருவேன்" என்றும் அழுத்தம் திருத்தமாக அறிவித்தார் படேல்.

சட்டசபைக் கட்டிடத்துக்குப் போலீஸ் பாதுகாப்பு அளிப்பது பற்றிய விவகாரத்தில் தலைவர் படேல், அரசாங்கத்தோடும் அதிகாரவர்க்கத்தோடும் மல்லுக் கட்டவே வேண்டியிருந்தது. 1929 ஏப்ரல் 8ஆம் தேதி நடைபெற்ற குண்டு வீச்சு நிகழ்ச்சிக்குப்

பிறகு சபைப் பாதுகாப்பைப் பற்றிய பிரச்சினை முக்கியத்துவம் பெறலாயிற்று. இது பற்றி விசாரிப்பதற்காக உள்துறை உறுப்பினரின் தலைமையில் ஒரு குழுவை நியமித்தார் தலைவர் படேல். இந்த விவகாரம் சம்பந்தமாகச் சர்ச்சை ஒன்றும் உருவாகி வந்தது. 1930 ஜனவரி 20ஆம் தேதி, உத்தியோக உடையணிந்த சில போலீஸ்காரர்கள் பார்வையாளர் பகுதியில் அமர்ந்திருந்தார்கள். அதைப் பார்த்துவிட்ட தலைவர் படேல், உடனேயே அவர்களை வெளியேறுமாறு கட்டளையிட்டார்; அவர்களும் தயங்கித் தயங்கி வெளியே போனார்கள். சட்டசபைக் கட்டிடத்துக்குப் பாதுகாப்பளிப்பது சம்பந்தமாகத் தமக்கும் இந்திய அரசாங்கம் மற்றும் தில்லித் தல ஆட்சிக்கும் ஏற்பட்ட கருத்து வேற்றுமையின் விளைவாக உருவாகியுள்ள நெருக்கடியைத் தலைவர் விவரித்தார். தலைவர் என்ற உரிமையில், சட்டசபையின், எல்லைக்கு உட்பட்ட இடத்தின் பாதுகாப்பைப் பொறுத்தவரையில் அவருடைய கருத்தே முடிந்த முடிபாக இருக்கவேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார் படேல். அரசாங்கமோ, சபைத் தலைவரையும் உறுப்பினர்களையும் பாதுகாக்கவேண்டிய பொறுப்பு அரசாங்கத்தைச் சார்ந்தது என்றும் அவர்களின் பாதுகாப்புக்கு எவ்வளவு போலீசை நியமிக்க வேண்டும் என்பதை நிர்ணயிக்கும் உரிமை அரசாங்கத்துக்கே இருக்கவேண்டும் என்றும் வற்புறுத்தியது. இந்த விவகாரத்தைப்பற்றி அரசாங்கம் மறு பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்ட தலைவர் படேல், அடுத்த உத்தரவு வரும் வரை பத்திரிகையாளர் காலரி நீங்கலாக உள்ள பார்வையாளர் பகுதி முழுவதையும் மூடிவிடும்படிக் கட்டளையிட்டார்.

இந்த நிலையில், வைசிராய் இர்வின் தலையிட்டுச் சபைத் தலைவரையும் எதிர்க்கட்சித் தலைவரையும் மற்றக் கட்சித் தலைவர்களையும் அழைத்து இது பற்றி விவாதித்தார். சர்ச்சைக்குரிய அந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு ஏற்றதான தமது ஆலோசனைகளையும் பிப்ரவரி 20ல் சபைக்குத் தெரிவித்தார். அரசாங்கம் நியமித்து அனுப்பும் பெரிய அதிகாரி ஒருவர் சட்டசபைத் தலைவருக்கு உட்பட்டு, சபையின் எல்லைக்கு உட்பட்ட இடங்களின் பாதுகாப்பைக் கவனித்துவர வேண்டும் என்பதே அந்த

ஆலோசனையின் முக்கியமான அம்சம். சட்டசபைக்கு வெளியில் உள்ள பகுதிகளின் புறநிலைக் காவல் பற்றி இன்னும் ஆலோசித்து முடிவுக்கு வரவேண்டும் என்ற குறிப்புடன் பின்கண்ட கருத்துக்களும் அதில் இருந்தன: "சட்டசபையின் வெளிப்பகுதிக் காவலைப் பொறுத்தவரை தில்லித் தல ஆட்சி, சட்டசபைத் தலைவரின் ஒப்புதலோடு அந்த ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்; இது சம்பந்தமான நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு இந்திய அரசாங்கம் தில்லித் தல ஆட்சிக்கு உத்தரவிடும்." பாதுகாப்பு விவகாரத்தைப் பற்றிய இந்த ஏற்பாடு தலைவரும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாகவே இருந்தது.

இதுதான் சட்டசபையின் உரிமை, பெருமை, சலுகைகளின் வளர்ச்சிக்காகவும் பராமரிப்புக்காகவும், தலைவரும் உறுப்பினர்களும் நடத்த வேண்டியிருந்த போராட்டத்தின் சுருக்கமான வரலாறு. இந்தப் போராட்டத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் இந்திய அதிகாரவர்க்கம் தனது எதிர்ப்பைக் காட்டியே வந்தது. காரணம், பிரிட்டிஷ் மக்கள் சபை அனுபவித்து வந்த எல்லா உரிமைகளையும் பின்வாசல் வழியாக இந்திய சட்டசபைக்குக் கொண்டுவரவே இந்த முயற்சிகள் நடக்கின்றன என்று அவர்கள் கருதினார்கள். என்ன அகம்பாவம் இந்த அப்பாவி இந்தியர்களுக்கு...!

### சுதந்திரக் கொடி ஏற்றப்பட்டது:

சட்டசபைக்குள்ளே இந்த விவகாரங்கள் நடந்து கொண்டிருக்கும்போதே, வெளியே, ஆங்கில ஏகாதிபத்தியத்துக்கு எதிரான பெரிய போராட்டம் ஒன்றுக்கு மக்கள் தயாராகி வந்தார்கள். நாட்டின் இந்த எழுச்சி, சைமன் குழு பகிஷ்காரம், நாணய மசோதா, உருக்குப் பாதுகாப்பு மசோதா, பொதுப் பாதுகாப்பு மசோதா ஆகியவை தொடர்பான சட்டசபை நடவடிக்கைகளில் பிரதிபலித்ததென்றாலும், சட்டசபைக்கு வெளியே ஏற்பட்டிருந்த நிலையை இவைகளைக் கொண்டே முழுவதுமாக மதிப்பிட முடியாது.

காந்தியடிகளின் அகிம்சை ஆயுதம் அவருடைய தளபதியான சர்தார் வல்லபாய் படேல் மூலம் 1928ல் பர்தோலி வரிகொடா இயக்கத்தில் பரீட்சித்துப் பார்க்கப்பட்டது. காந்தியடிகள் 1928 டிசம்பரில் கல்கத்தாக் காங்கிரசில் கலந்து கொண்டதும், "பூரண சுயராச்சியமே நமது நோக்கம்" என்ற சென்னை (காங்கிரஸ்) தீர்மானத்தை, நேரு அறிக்கைக்கு ஏற்ற விதமாக "டொமினியன் அந்தஸ்தே நோக்கம்" என்ற தீர்மானமாக மாற்றிக் கொண்டதும், அவர் நீண்டகாலம் அரசியலிலிருந்து விலகியிருக்கப் போவதில்லை என்பதை உணர்த்தின. அதே சமயம், இந்திய அரசாங்கம் 1929 கடைசிக்குள் நேரு அறிக்கையை ஏற்றுக் கொள்ளாவிட்டால், காங்கிரஸ் பூரண சுதந்திரம் பெறுவதற்காக அகிம்சை நெறி ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கும் என்று அரசாங்கத்துக்கு இறுதி எச்சரிக்கை ஒன்றும் தரப்பட்டது. இந்தத் தடவை ஒத்துழையாமை இயக்கம் வரி கொடா இயக்கமாகத் தொடங்கும் என்றும் அறிவிக்கப்பட்டது. 1929 மார்ச் மாத வாக்கில், "சட்டமறுப்பு மற்றும் வரிகொடா இயக்கங்களின் பிரம்மாண்டமான விளைவுகளை நான் அறியாமலில்லை; ஆனாலும், சுதந்திரப் பைத்தியம் பிடித்த என்போன்ற ஒருவன் அத்தகைய பெரிய ஆபத்துக்களை ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை" என்று சொல்லிக் கொண்டிருந்தார் காந்தியடிகள். மீரட் சதிவழக்கு, லாகூர் சதிவழக்கு, ஜதீன் தாஸின் தியாக மரணம் ஆகியவைகளால் நாட்டிலே ஏற்பட்டிருந்த குமுறல், நாட்டின் இளைய சமுதாயமும் தொழிலாளர்களும் எந்தத் திசையில் இயங்கிக் கொண்டிருந்தார்கள் என்பதைத் தெளிவாக வெளிப்படுத்தியது. இவைகளின் உச்ச கட்டமாக சைமன் குழு பகிஷ்காரமும் வந்து சேர்ந்தது.

பெருங்குழப்பத்துக்கு உள்ளாக்கப்பட்ட இந்தியா போர்ப் பாதையை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது, அதைச் சாந்தப் படுத்தும் நடவடிக்கை ஒன்று உடனடியாகத் தேவை, என்பதை 1929 ஆம் ஆண்டின் இடைப்பகுதியில் உணரலானார் வைசிராய் லார்டு இர்வின். இந்தச் சமயத்தில், இங்கிலாந்தில் மீண்டும் தொழிற்கட்சி பதவிக்கு வந்திருந்தது. எனவே, லார்டு இர்வின் அதே ஆண்டு கோடைகாலத்தில் இங்கிலாந்துக்குச் சென்று அது

சம்பந்தமாக அரசாங்கத்துடன் யோசனை கலந்தார். சைமன் குழு அறிக்கை வெளியிடப்பட்டதும், இந்தியாவைப் பற்றிய ஆங்கில ஆட்சியின் கொள்கை என்ன என்பது பற்றியும் இந்திய அரசியல் திட்டம் ஒன்றைத் தயாரிப்பதில் எந்தெந்த வகையிலும் முறையிலும் இந்தியர்களைத் தொடர்புபடுத்தலாம் என்பது பற்றியும் நாம் தெளிவாக அறிவிக்கவேண்டும் என்று அங்கே எடுத்துரைத்தார். இதற்கிடையில், சைமன் குழுவின் அறிக்கை இன்னும் தயாராகாததால், 1929 (ஆகஸ்டு செப்டம்பர் அக்டோபர்) இலையுதிர்காலத்தில் நடக்க இருந்த சட்டசபைத் தேர்தல் தள்ளி வைக்கப்பட்டிருக்கிறது என்றும் அவர் அறிவித்தார்.

இங்கிலாந்தில் நடைபெற்ற ஆலோசனைகளின்படி, இந்தியா திரும்பியதும், 1929 அக்டோபர் 30ல் பின்கண்ட அறிவிப்பை வெளியிட்டார் வைசிராய்:

"இந்தியா டொமினியன் அந்தஸ்தைப் பெறவேண்டும் என்பதே இந்தியா மேற்கொள்ளும் அரசியல் அமைப்பு முன்னேற்றங்களின் முடிவான லட்சியம் என்னும் செய்தி 1917ல் அரசாங்கம் வெளியிட்ட அறிக்கையில் அடங்கியிருக்கிறது என்பதே இந்த அரசாங்கத்தின் கருத்து. இதைத் தெளிவாக அறிவிக்கும் அதிகாரத்தை மேன்மை தங்கிய மாமன்னரின் அரசாங்கம் எனக்கு (வைசிராய்க்கு) வழங்கியுள்ளது."

இந்தியாவில் பிரிட்டனின் நோக்கம் என்ன என்பதைப்பற்றிய ஐயப்பாடுகளை இந்த அறிக்கை களைந்துவிடும் என்று வைசிராய் நம்பினார். இந்தியாவின் எதிர்கால அரசியல் திட்டத்தை உருவாக்கும் பணியில் இந்தியர்களையும் சேர்த்துக் கொள்வது பற்றி அந்த அறிக்கையில் குறிப்பிடுகையில், சைமன் குழு அறிக்கை வெளிவந்து அரசாங்கம் அதைப் பரிசீலித்த பின், பிரிட்டிஷ் இந்தியா மற்றும் முழு இந்தியாவின் பிரச்சினைகளைப் பற்றிப் பேசி முடிவெடுப்பதற்காக பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகளையும் சுதேச சமஸ்தானங்களின் பிரதிநிதிகளையும் பிரிட்டிஷ் அரசாங்கம் அழைக்கும் என்று அவர் தெரிவித்தார். அதாவது, அடுத்த அரசியல் சட்டச் சீர்திருத்தங்கள் சம்பந்தமாக வட்ட மேசை மாநாடு ஒன்று கூட்டப்படும் என்பது வைசிராயின்

அறிக்கை. சைமன் குழுவில் இந்தியர் யாரும் நியமிக்கப்படாததால் இந்தியர்களிடையே ஏற்பட்டிருந்த எரிச்சலைத் தணிப்பதற்காகவே இவ்வாறு அறிவிக்கப்பட்டது.

வைசிராயின் அறிக்கையைப் பரிசீலனை செய்வதற்காக, முக்கியமான அரசியல் தலைவர்களின் கூட்டம் ஒன்று நவம்பர் 1 ஆம் தேதி தில்லியில் ஏற்பாடு செய்யப்பட்டது. காந்தியடிகள், மாளவியா, மோதிலால் நேரு, ஜவஹர்லால் நேரு, சுபாஷ் சந்திர போஸ், தேஜ் பகதூர் ஸப்ரூ போன்ற காங்கிரஸ் மற்றும் மிதவாதப் பெருந்தலைவர்கள் இதில் கலந்து கொண்டார்கள். கூட்ட முடிவில் மிக எச்சரிக்கையான வாசகங்களைக் கொண்ட அறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது. இதில் கையொப்பமிட்டவர்கள், "மேன்மை தங்கிய மாமன்னரின் அரசாங்கத்துக்கு ஒத்துழைப்பு நல்க இயலும் என்றே நாங்கள் நம்புகிறோம்" என்று முதலில் குறிப்பிட்டார்கள். ஆனாலும், "இந்தியாவிலுள்ள முக்கியமான அரசியல் கட்சிகளுக்கெல்லாம் (அரசாங்கத்தின் மீது) நம்பிக்கை ஏற்பட்டு அவைகள் ஒத்துழைப்பு நல்குவதற்கு ஏற்ற முறையில், சில விவகாரங்களை அரசாங்கம் தெளிவு படுத்துவதோடு, (அரசியல் கைதிகளுக்குப் போதிய வசதிகள் அளிப்பது போன்ற) சில நடவடிக்கைகளையும் அரசாங்கம் உடனடியாக மேற்கொள்ள வேண்டும்" என்றும் வற்புறுத்தினார்கள்.

"இருந்தபோதிலும், வைசிராய் கூட்டப்போகிற மாநாடு இந்தியாவுக்கு டொமினியன் அரசியல் அமைப்பு ஒன்றை தயாரிப்பதற்குத் திட்டம் வகுக்கவே கூடுகிறது என்றும் இங்கே எப்போது டொமினியன் ஆட்சி நிறுவப்படும் என்பது பற்றி இந்த மாநாடு பரிசீலிக்காது என்றுமே நாங்கள் நினைக்கிறோம்" என்று அந்த அறிக்கை மேலும் கூறியது.

அடுத்து, காந்தியடிகள், ஜின்னா, மோதிலால் நேரு, ஸப்ரூ மற்றும் சில பேரைக் கொண்ட மாநாடு ஒன்றை வைசிராய் டிசம்பர் 23ல் வைசிராய் மாளிகையில் கூட்டினார். நடக்க இருக்கும் வட்ட மேசை மாநாடு, இந்தியாவில் டொமினியன் ஆட்சியை ஏற்படுத்தக்கூடிய அரசியல் சட்டத்தைத் தயாரிக்குமென்றும்

இந்த அரசியல் சட்டம் உடனேயே அமுலுக்கு வருமென்றும் உறுதியளிக்குமாறு காங்கிரஸ் தலைவர்கள் கோரினர்கள். வைசிராய் இந்த விதமான ஓர் உறுதிமொழியை வழங்கக்கூடிய நிலையில் இல்லை. எனவே இந்த மாநாட்டால் எந்தப் பயனும் ஏற்படவில்லை.

இந்தச் சூழ்நிலையிலேதான், 1929 கடைசியில் இந்தியத் தேசீயக் காங்கிரஸ் லாகூரில் கூடியது. இளைய இந்தியாவின் லட்சியத் தலைவராகிய பண்டித ஜவஹர்லால் நேரு தலைமை தாங்கினர். அவர் தலைமையில், காந்தியடிகள் முதன்மையான தீர்மானத்தை முன்மொழிந்தார். அந்தத் தீர்மானம், வேறு பல செய்திகளோடு பின்கண்ட கருத்தையும் தந்தது :

"கடந்த ஆண்டு கல்கத்தாவில் நடந்த கூட்டத்தில் நிறைவேற்றிய தீர்மானத்துக்கு ஏற்ப, காங்கிரஸ் அமைப்புச் சட்டத்தின் முதலாவது விதியில் சொல்லப்பட்டுள்ள "சுய ராச்சியம்" என்னும் சொல் பூரண சுதந்திரம் என்றே பொருள் படும் என்று இந்தக் கூட்டம் முடிவு செய்கிறது. மேலும் நேரு குழுவின் அறிக்கையில் வகுத்துத் தரப்பட்ட திட்டம் காலாவதியாகி விட்டதால், இந்தியாவுக்குப் பூரண சுதந்திரம் என்னும் இலக்கை நோக்கியே எல்லாக் காங்கிரஸ்காரர்களும் செயல்பட வேண்டும் என்றும் இந்தக் கூட்டம் தீர்மானிக்கிறது."

பூரண சுதந்திரமே இப்போது தேசீயக் கோரிக்கையாயிற்று. காங்கிரஸ்காரர்களின் கவனம் வேறு திசைகளில் திருப்பப்படா திருப்பதற்காக, அடுத்துவரும் சட்டசபைத் தேர்தல்களில் நேரிடையாகவோ மறைமுகமாகவோ காங்கிரஸ்காரர்கள் பங்கு கொள்ளக் கூடாது என்ற கட்டளையும் பிறப்பிக்கப்பட்டது. இறுதியாக, சட்டசபைப் பதவிகளையும் அதன் குழுக்களில் வகித்துவந்த பதவிகளையும் துறந்து விடுமாறு காங்கிரஸ்காரர் அனைவருக்கும் உத்தரவிடப்பட்டது.

1929 டிசம்பர் 31ஆம் தேதி இரவு பன்னிரண்டு மணிக்கு, எங்கும் உற்சாக எழுச்சி கரைபுரண்டு ஓட, சுதந்திரக் கொடி ஏற்றப்பட்டது. சுதந்திரத்தின் எழுச்சி அலை எவ்வாறு இந்தியச்

சட்டசபைக் கட்டிடத்திலே எதிரொலித்தது என்பதை அடுத்த அத்தியாயத்திலேதான் பார்க்கப்போகிறோம். ஆயினும், இந்தியா தனது சக்திகளை ஒன்று திரட்டிக் கொண்டிருந்த 1927-1929 காலத்திலேயே சட்டசபை, சுதந்திரப் போராட்டக் கனலை அணையவிடாது காப்பாற்றி வந்தது என்பதையும், பிற்போக்குச் சக்திகளின் கடுமையான எதிர்ப்புக்கு இடையிலும் தனது பணியை அது தளராமல் ஆற்றிக்கொண்டுதான் இருந்தது என்பதையும், இங்கே குறிப்பிடலாம்.

அத்தியாயம் 5

# சுயராச்சியக் கட்சியார் இல்லாத சட்டசபை: (1930-1934)

1929 டிசம்பரில் நடந்த லாகூர் காங்கிரஸ், பூரண சுதந்திரத்துக்குப் போராடுமாறு மக்களுக்கு அறைகூவல் விடுத்தது. எனவே, 1930ல் நாடு முழுமையுமே ஒருவிதமான எழுச்சி கொண்டு நின்றது. போராட்ட நடவடிக்கைத் திட்டத்தை வகுக்கின்ற உரிமையை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கு வழங்கி, கிளர்ச்சி தொடங்குவது பற்றிய ஆணையைக் காந்தியடிகள் பிறப்பிப்பார் என்றும் லாகூர்க் காங்கிரஸ் தெரிவித்திருந்ததால், என்ன நடக்குமோ என்ற ஒரு இறுக்கமான நிலையே எங்கும் பரவலாகக் காணப்பட்டது. பின்னர் இதைப் பற்றி எழுதிய ஜவஹர்லால் நேரு, "சக்கரங்கள் இயக்கப்பட்டு விட்டன; ஆனாலும், எங்கே எப்படித் தொடங்குவது என்பதைப் பற்றி எங்களுக்கு எந்தத் தெளிவும் இல்லை" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

லாகூர்க் காங்கிரசின் முடிவுகளைச் செயற்படுத்துவதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்வதற்காகக் காங்கிரசின் புதிய செயற்குழு 1930 ஜனவரி 2ஆம் தேதி கூடியது. முதலாவதாக, சட்டசபைப் பகிஷ்கரிப்பு பற்றி முடிவு செய்து, லாகூர்க் காங்கிரசின் இந்த முடிவின்படித் தங்கள் கவுன்சில் உறுப்பினர் பதவியை ராஜிநாமாச் செய்யாத உறுப்பினர்களை, அவ்வாறு செய்யுமாறு பதிவு பெற்ற வாக்காளர்கள் வற்புறுத்த வேண்டும் என்று கேட்டுக்கொண்டது. அதே சமயம், அடுத்து வரவிருந்த சட்டசபைத் தேர்தல்களில் கலந்துகொள்ள வேண்டாம் என்றும் வாக்காளர்களைக் கேட்டுக்கொண்டது. இது தவிர, ஜனவரி 26ம் தேதியைச் சுதந்திர தினமாக நாடெங்கும் கொண்டாட வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. காந்தியடிகள் தயாரித்த ஒரு சுதந்திரப் பிரகடனமும் (காங்கிரஸ்) செயற்குழுவில் நிறை

வேற்றப்பட்டது. அந்தப் பிரகடனம், வேறு பல செய்திகளுடன் பின்கண்ட குறிப்பையும் கொண்டிருந்தது: "நமது நாட்டுக்கே அழிவை ஏற்படுத்திய ஓர் ஆட்சிக்கு நாம் இனிமேலும் பணிந்து நடப்பது மனிதனுக்கும் கடவுளுக்கும் எதிரான குற்றமாகும் என்று நாங்கள் கருதுகிறோம்." இந்த அறிக்கை, நாடெங்கும், கிராமங்களிலும் நகரங்களிலும், மக்களிடையே படித்துக் காட்டப் படவேண்டும். அங்கேயே, "பூர்ண சுயராச்சியம்" அடைவதற்காகக் காங்கிரஸ் அவ்வப்போது வெளியிடும் திட்டங்களை ஏற்று அதன்படி நடப்பதாகவும் மக்களை உறுதி எடுத்துக் கொள்ளச் செய்ய வேண்டும். இந்தவிதமான முடிவுடன் சுதந்திர தினத்தைக் கொண்டாடுவதற்கான ஏற்பாடுகள் மிகுந்த உற்சாகத்தோடு மேற்கொள்ளப்பட்டன.

இந்தச் சூழ்நிலையிலேதான், மூன்றாவது சட்டசபையின் ஆறாவது கூட்டத்தொடர் ஜனவரி 20ஆம் தேதி தில்லியில் தொடங்கியது. காங்கிரசின் அறிவிப்பை ஏற்று இருபத்தேழு சட்டசபை உறுப்பினர்கள் தங்கள் பதவியை ராஜிநாமாச் செய்திருந்தார்கள். இப்படிச் சுயராச்சியக் கட்சி காலி செய்த இடத்தில், பண்டித மதன் மோகன் மாளவியாவின் தலைமையில் தேசீயக் கட்சியார் வந்து அமர்ந்தார்கள். பதவி விலகாமல் இருந்த ஒரு சில சுயராச்சியக் கட்சி உறுப்பினர்கள் பின்னணியில் தள்ளப்பட்டார்கள். சபையின் கட்டுக்கோப்பு, அது "அமைதியாக" நடைபெறும் என்று உறுதியளிப்பதாக இருந்தது.

ஆனாலும், இந்த அமைதி சபைத் தலைவராலேயே சிறிது குலைக்கப் பட்டது. காங்கிரஸ் தீர்மானத்தின்படி சபைத்தலைமைப் பதவியை ராஜிநாமாச் செய்யாதிருந்த வி. ஜே. படேல், முதல் நாளிலேயே, சட்டசபைக் கட்டிடத்தின் பராமரிப்புக்கான ஏற்பாடுகளைப் பற்றிய சர்ச்சை ஒன்றைக் கிளப்பினார். அதன்மீது தீவிரமான கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டாலும், கடைசியில் நிலைமை ஒருவாறு சரிக்கட்டப்பட்டது. (4ஆம் அத்தியாயம் பார்க்க.) அடுத்தநாளே, சட்டசபைப் பகிஷ்காரம் பற்றிய தமது நிலையை விளக்கிச் சபைத்தலைவர் ஓர் அறிக்கை வெளியிட்டார். ஓர் அரசியல் கட்சி மேற்கொண்ட முடிவின்படிச் சட்டசபைத் தலைவர்

தமது பதவியை ராஜிநாமாச் செய்வது சரியில்லை என்பது தமது கருத்து என்றும் அதனாலேயே தாம் அப்படிச் செய்யவில்லை என்றும் அதில் குறிப்பிட்டிருந்தார். அந்த அறிக்கை மேலும் கூறியதாவது : "இந்தியா ஒரு விநோதமான சூழ்நிலையில் அகப்பட்டிருக்கிறது. இந்தச் சூழ்நிலையில் தலைவர் மிக மிக நிதானமாகவே செயல்பட வேண்டியிருக்கிறது. இப்போது சபைத்தலைவர் தம்முடைய பதவியை ராஜிநாமாச் செய்வதால் சில பயன்கள் ஏற்படவே கூடும். ஆனாலும், இதைவிட அதிகமான நலன்கள் ஏற்படக் கூடிய ஒரு சூழ்நிலையில் தலைவர் தமது பதவியை ராஜிநாமாச் செய்வதே நல்லது."

லாகூர்க் காங்கிரசில் மேற்கொள்ளப்பட்ட முடிவுகளைத் தொடர்ந்து ஏற்பாடு செய்யப்பட்டு வந்த சட்டமறுப்பு இயக்கம் தொடர்பாக அரசாங்கத்தின் நிலைமை என்ன என்பதை விளக்கி வைப்பதில் வைசிராயும் தயங்கவில்லை. அவர் ஜனவரி 25ஆம் தேதி சட்டசபையில் ஓர் உரை நிகழ்த்தினார். அதில் 1929 அக்டோபர் 31ல் அவர் வெளியிட்ட அறிக்கையைப் பற்றிய சந்தேகங்களைத் தெளிவுபடுத்த முயன்றார். அந்தச் சமயத்தில் இந்திய ஆட்சியியல் முன்னேற்றத்தின் லட்சியத்தைப் பற்றியே தாம் விளக்க விரும்பியதாகவும் அதையும் அந்த லட்சியத்தை அடையும் வழிமுறையையும் குழப்பிக் கொள்ளக் கூடாது என்றும் அவர் கேட்டுக்கொண்டார். பின்னர், "இப்போதுள்ள தொல்லைகளைச் சமாளிப்பதில் பிரிட்டனும் இந்தியாவும் ஒத்துழைக்கும் விதமாக, இந்திய அரசாங்கத்துக்கும் இந்திய அரசியல்வாதிகளுக்கும் இடையே ஓர் இணக்கத்தை ஏற்படுத்தவே நான் முழுமூச்சாக முயன்று வருகிறேன்" என்றும் தெரிவித்தார். லாகூர்க் காங்கிரசின் தீர்மானத்தைக் குறிப்பிட்டு, மேற் குறிப்பிட்ட தொனியில் அவர் எச்சரித்துப் பேசியதாவது :

"(ஒத்துழையாமை இயக்கத்தைப் பொறுத்த அளவில்) என்னுடைய நிலைமையைத் தெளிவுபடுத்தி விட வேண்டியதும் என்னுடைய கடமை என்று நான் கருதுகிறேன். சட்டத்தின் தலைமையை நிலைநாட்டுவதிலும் ஒழுங்கையும் அமைதியையும் காப்பதிலும் எனக்கும் என்னுடைய அரசாங்கத்துக்கும் உள்ள

பொறுப்பை முழுமையாக ஏற்று நிறைவேற்றுவதில் நான் அணுவளவும் தயங்கப் போவதில்லை.''

**தண்டி யாத்திரை :**

முக்கியமான இந்த அறிக்கைகள் வெளியிடப்பட்டதோடு, சபையில் வேறு பல விவகாரங்கள் குறித்த மசோதாக்களும் விவாதிக்கப்பட்டன. உண்மையான எதிர்க்கட்சி எதுவும் இல்லாத தால், இந்த மசோதாக்களை நிறைவேற்றிக் கொள்வதில் அரசாங் கத்திற்குச் சிரமம் எதுவும் இருக்கவில்லை. ரெயில்வே வரவு செலவுத் திட்டமும் சிறிய விவாதத்தின் பின் சுலபமாக நிறை வேறியது.

இதற்கிடையில், சட்டசபைக்கு வெளியே நிலைமை சூடு பிடிக்கத் தொடங்கியிருந்தது. ஜனவரி 26 ('' சுதந்திர தினம் '') நாடெங்கும் உற்சாகமாகக் கொண்டாடப்பட்டது. எனினும் காந்தியடிகள் இன்னமும் போராட்டப்பாதையில் இறங்கவில்லை. ஜனவரி 30ல் காந்தியடிகள் **யங் இந்தியாவில்** பதினொரு அம்சக் கோரிக்கை ஒன்றை வெளியிட்டு, அதைக் குறித்து இந்தியர் களுக்குத் திருப்தி தரும்படியான முடிவு வேண்டும் என்று வைசிராயைக் கேட்டார். காங்கிரஸ் தலைவரான ஜவஹர்லால் நேருவை உள்ளிட்ட பல தலைவர்கள், 'தமது பதினொரு அம்சக் கோரிக்கையின் மூலம் காந்தியடிகள் பூரண சுயராச்சியம் என்னும் கோரிக்கையின் வலுவையே குலைத்து விட்டார்!' என்று கருதி னார்கள். காந்தியடிகளோ, 'சுதந்திரம் என்பதன் வார்த்தை வடிவத்தை விட அதன் உள்ளர்த்தத்தையே நான் முக்கியமாகக் கருதுகிறேன்' என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். அத்துடன், '' இந்தக் கோரிக்கையில் இந்தியர்களுக்குத் திருப்தி ஏற்படும்படி அவர் (வைசிராய்) நடவடிக்கை மேற்கொண்டால் சட்டமறுப்பைப் பற்றிய பேச்சே இராது என்றும் தங்கள் கோரிக்கைகளுக்கும் பேச்சுச் சுதந்திரத்துக்கும் இடமளிக்கும் எந்த மாநாட்டிலும் காங்கிரஸ் மகிழ்ச்சியோடு கலந்துகொள்ளும்'' என்றும் அறிவித்து விட்டார்.

அரசாங்கத்திடமிருந்து இந்தக் கோரிக்கைக்குப் பதிலோ, நியாயமான விளக்கமோ எதுவும் இல்லாததால், உப்புச் சட்டங்

களுக்கு எதிரான தமது சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்குவது என்று பிப்ரவரி கடைசியில் முடிவு செய்தார் காந்தியடிகள். "ஏழை மக்களின் நோக்கில் உப்புவரியே மாபெரும் அநியாயம்" ஆனபடியால், மக்கள் சுதந்திரமாக உப்புத் தயாரித்துக் கொள்ளும் உரிமையைத் தடுக்கின்ற உப்பு வரிச் சட்டத்தை மீறுவதையே தம்முடைய சுதந்திரப் போராட்டத்தின் தொடக்கமாகக் கொள்வது என்று அவர் முடிவு செய்தார். மீண்டும் மார்ச் மாதம் 2ஆம் தேதி வைசிராய்க்கு ஒரு கடிதம் எழுதி, அந்தக் கடிதத்தில் தாம் குறிப்பிட்ட பிரிட்டிஷ் ஆட்சியின்கேடுகளை நீக்குமாறு கேட்டுக்கொண்டார். வைசிராய் இந்த நடவடிக்கைகளில் ஈடுபடத் தவறுவாரானால், தாமும் தம்முடைய சகதொண்டர்களும் தண்டிக் கடற்கரைக்குப் புறப்பட்டுச் சென்று அங்கே உப்புச் சட்டத்தை மீறப் போவதாகவும் தெரிவித்தார். வைசிராயின் பதில் சுருக்கமாகவும் கோரிக்கைகளை மறுப்பதாகவுமே இருந்தது. பேச்சு வார்த்தைகளுக்கு இடமில்லாத தால் காந்தியடிகள், தேர்ந்தெடுத்த எழுபத்தொன்பது தோழர் களுடன் தமது 141 மைல் தண்டி யாத்திரையைத் தொடங்கினர். இந்த முடிவுக்கு, நாட்டு மக்கள் ஆரவாரமான ஆதரவைத் தெரி வித்தார்கள்.

இங்கே இது நடந்து கொண்டிருக்கையில், அரசாங்கமும் சும்மா இருக்கவில்லை. காந்தியடிகள் தம்முடைய யாத்திரையைத் தொடங்கு முன்பே, குஜராத், போர்ஸாத் தாலுகாவில் ஒரு கிராமத்தில் நடந்த கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்த போது சர்தார் வல்லபாய் படேலை அரசாங்கம் கைது செய்தது. சுதந்திரப் போராட்டக்காரர்களுக்கு அரசாங்கம் விடுத்த முன்னெச்சரிக்கை இது.

### சட்டசபையின் மீது மாளவியாவின் ஏமாற்றம்:

படேல் கைது செய்யப்பட்டபோது, தில்லியில் சட்டசபை நடந்துகொண்டிருந்தது. சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவராக இருந்த பண்டித மதன் மோகன் மாளவியா, சர்தார் படேல் கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டதை விவாதிப்பதற்காகச்

சபை நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டும் என்ற தீர்மானத்தை மார்ச் 10ல் கொண்டு வந்தார். அதற்கு அனுமதி வழங்கப் பட்டதும், இரண்டு அம்சங்களின் மீது அரசாங்கத்தை வன்மையாகக் கண்டித்தார்: முதலாவது, படேல் பேசத் தொடங்குமுன்பே அரசாங்கம் அவரைக் கைது செய்திருக்கிறது; அதன் மூலம் நடைமுறையில் உள்ள சட்டத்தையே அரசாங்கம் மீறி உள்ளது. இரண்டாவதாக, காந்தியடிகள் அரசாங்கத்தோடு ஒத்துழைக்க முன்வந்த போதெல்லாம் அவரை ஒதுக்கித் தள்ளியதன்மூலம் சத்தியாக்கிரக இயக்கம் ஒன்றைத் தொடங்குமாறு அவரை (அரசாங்கமே) நிர்ப்பந்தப்படுத்தியிருக்கிறது. "காந்தியடிகளின் இயக்கம் இந்தியப் பொதுமக்களுடைய அல்லது இந்தியாவின் பெரும்பான்மையான மக்களுடைய சுதந்திர வேட்கையின் வெளிப்பாடே என்பதை (அரசாங்கம்) நினைவில் கொள்ள வேண்டும்." இப்போது ஏற்பட்டிருப்பது மிக நெருக்கடியான ஒரு நிலைமை. (இதைத் தவிர்க்கும் பொருட்டு), அடுத்து நடைமுறை விதிகள் திருத்தம் மேற்கொள்ளப்படும் போது இந்தியாவில் டொமினியன் அந்தஸ்தும் ஏற்பட்டு விடும் என்று அறிவிக்குமாறு இந்திய அரசாங்கம் மேன்மை தங்கிய மாமன்னரின் அரசாங்கத்துக்குத் தெரிவிக்க வேண்டும் என்றும் மாளவியா கேட்டுக் கொண்டார். அப்படிச் செய்ய மேன்மை தங்கிய மாமன்னரின் அரசாங்கம் யாராக இல்லை என்றால், இந்தியா உறுப்பினராக உள்ள சர்வதேச சங்கத்துக்கு இந்த விவகாரத்தை அனுப்ப வேண்டியிருக்கும் என்றும் அவர் எச்சரித்தார்.

மாளவியாவை முழுமையாக ஆதரித்துப் பேசிய சி. எஸ். ரங்க அய்யர், "காந்தியடிகள் சிறையில் இருக்கையில் அணுவளவாவது நாட்டுப்பற்று உள்ள எந்த ஒரு இந்தியனும் வட்ட மேசை மாநாட்டுக்குப் போகமாட்டான் என்பதை அரசாங்கம் மறந்து விடக் கூடாது" என்றார். எம். எஸ். ஆனே, "அரசாங்கம் தனது அடக்குமுறைப் போக்கைக் கைவிட்டு, பொதுஜனக் கருத்தை மதித்து, காந்தியடிகள் போன்ற பெருந்தலைவர்களோடு இணங்கிப் போக வேண்டும்" என்று வற்புறுத்தினர்.

ஆனால், மௌல்வி முகம்மது யாகூப் கான் என்பவர் மாளவியாவின் கருத்தை ஏற்கவில்லை. "நியாயமாகப் பார்த்தால், படேலைக் கைது செய்தது நடைமுறையிலுள்ள சட்டங்களை மீறும் செயலல்ல" என்று வாதிட்டார் அவர். "மேலும், காங்கிரஸ் மேற்கொண்டுள்ள கொள்கை நாட்டைக் குழப்பத்திலும் அராஜகத்திலும்தான் கொண்டு சேர்க்கும்" என்றும் அவர் சொன்னார். ஜின்னாவும், அந்த இயக்கத்தைத் தாம் ஆதரிக்கவில்லை என்பதைத் தெளிவுபடுத்தினார். "இதை ஆதரிக்காதது மட்டுமல்ல, அரசாங்கத்தை அச்சுறுத்தவும் நெருக்குவதற்கும் இதை ஒரு கருவியாகப் பயன்படுத்த நான் விரும்பவில்லை என்பதையும் நான் தெளிவுபடுத்திவிட விரும்புகிறேன்" என்றார் அவர். ஆனாலும், குற்றச்சட்டத் தொகுப்பின்படி தண்டனைக்குரிய பேச்சு எதையும் சர்தார் படேல் நிகழ்த்தியதாகத் தாம் கருதவில்லை என்றார் ஜின்னா.

இறுதியாக நடந்த வாக்கெடுப்பில் 53க்கு 30 என்ற வாக்கு வித்தியாசத்தில் மாளவியாவின் தீர்மானம் தள்ளுபடி செய்யப்பட்டது. சுயேச்சை உறுப்பினர்கள் நடுநிலைமை வகித்தார்கள்; முஸ்லிம் உறுப்பினர்கள், தங்கள் கட்சியின் முடிவுப்படி, அரசாங்கத்தை ஆதரித்து வாக்களித்தார்கள்.

மாளவியாவின் பெரிய ஏமாற்றம் இதற்குப் பிறகுதான் ஏற்பட்டது. பருத்தி நெசவுத் தொழில் (பாதுகாப்பு) மசோதாவை மார்ச் 13 ஆம் தேதி (சபையில்) கொண்டுவந்தபோது அரசாங்கமே அப்படியான ஒரு சூழ்நிலையை உருவாக்கி விட்டது. இங்கிலாந்து நீங்கலாக உள்ள எல்லா வெளிநாடுகளிலிருந்தும் இறக்குமதியாகும் பருத்தி சவுளிகளின் மீது 20 சதவீத வரி விதிக்க வேண்டும் என்றது, இந்த மசோதா. ஆனால் இங்கிலாந்துக்கு 5 சதவீதம் சாம்ராச்சிய முன்னுரிமை வழங்கி, இங்கிலாந்து இறக்குமதிகளுக்கு மட்டும் 15 சதவீத வரி விதிக்க வேண்டும் என்றும்' மசோதா குறிப்பிட்டது. மாளவியா, குன்ஸ்ரு, விஸ்வநாத் தாஸ், கனஷியாம் தாஸ் பிர்லா, சமன் லால், ஜயகர், கே. சி. நியோகி ஆகியோரும் மற்றும் பல உறுப்பினர்களும் சாம்ராச்சிய முன்னுரிமை என்னும் கோட்பாட்டை எதிர்த்

தார்கள். ஆனால், அரசாங்கத்தின் சார்பில் சில உறுப்பினர்கள் அதை முழுமையாக ஆதரித்தார்கள். ஜின்னாவின் நிலை இரண்டு பக்கத்தையும் சார்ந்ததும் சாராததுமாக இருந்தது. மார்ச் 27 ஆம் தேதி, மாளவியா முறைப்படியான திருத்தத் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார். அத்தீர்மானம், எந்த நாட்டிலிருந்து வரும் பருத்திப் பொருளுக்கும் ஒரேவிதமான இறக்குமதி வரியே விதிக்க வேண்டும் என்றது. மீண்டும், இந்தத் திருத்தத் தீர்மானத்தின் மீதும் முதல் தீர்மானத்தின் மீதும் மூன்று நாள் தொடர்ந்து கடுமையான விவாதம் நடைபெற்றது. மார்ச் 31 ஆம் தேதி நடந்த வாக்கெடுப்பில் மாளவியாவின் திருத்தத் தீர்மானம் 60க்கு 44 என்று வாக்கு வித்தியாசத்தில் தோல்வியுற்றது.

வாக்கெடுப்பின் முடிவு அறிவிக்கப்பட்ட உடனேயே மாளவியா எழுந்து, "இந்த மசோதாவைப் பற்றிய விவாதத்தில் நான் இனிமேலும் பங்குகொள்வது பாபகாரியமாகும்" என்று சொல்லி விட்டு, தம்முடைய சுதேசியக் கட்சி உறுப்பினர்களோடு சபையை விட்டு வெளியேறினார். அதைத் தொடர்ந்து, மாளவியா சொன்னவைகளை அப்படியே வழி மொழிந்த திவான் சமன் லாலும், புதிய சுயராச்சியக் கட்சியின் உறுப்பினர்களோடு சபையை விட்டு வெளியேறினார். அதன்பின், (பெயரளவில்) சண்முகம் செட்டி கொண்டுவந்த ஒரு ("அப்பாவி"த்) திருத்தத் துடன், சபை அந்த மசோதாவை நிறைவேற்றியது.

அன்றைய நடவடிக்கைகள் முடிவடையுமுன் சபைத்தலைவர் படேல் உறுப்பினர்கள் அனைவரோடும் கைகுலுக்கி, "சபையின் அடுத்த கூட்டத்தொடர் நடக்குமா என்பதும் நடந்தால் நம்மில் எத்தனை பேர் இங்கே வருவோம் என்பதும் தெரியவில்லை" என்று சொன்னார். இந்த விதமான ஒரு சூழ்நிலையில்தான் சட்ட சபையின் தில்லிக் கூட்டத் தொடர் முடிவுற்றது.

இரண்டு நாள் கழித்து, ஏப்ரல் 2 ஆம் தேதி மாளவியா தமது சட்டசபை உறுப்பினர் பதவியை ராஜிநாமாச் செய்தார். தம் முடைய ராஜிநாமாக் கடிதத்தில், பருத்தித் தொழில் பாதுகாப்பு மசோதா, அதை எதிர்த்து நின்ற உறுப்பினர் அனைவர் மீதும்

வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்ட விதத்தை அவர் விவரித்திருந்தார். "இத்தகைய கொடுமையை என் மக்களுக்கு இழைப்பதற்கு உரிமை வழங்கும் ஓர் அரசியல் சட்டத்துக்கு ஆதரவு தரக்கூடாது என்பதால் நான் இந்த முடிவுக்கு வரவேண்டியவனானேன்" என்றும் அதில் குறிப்பிட்டிருந்தார்.

**உப்புச் சத்தியாக்கிரகம் :**

காந்தியடிகள், 24 நாள் பிரயாணம் செய்து ஏப்ரல் 5 ஆம் தேதி தண்டியை அடைந்தார். அடுத்த நாளே, இந்திய அரசாங்கத்தின் உப்புச் சட்டத்தை மீறும் முகமாக, கடற்கரையிலிருந்து ஒரு பிடி உப்புக் கட்டியை எடுத்தார். அதுமுதல் ஒரு வார காலத்தை உப்புவரிக்கு எதிரான அகிம்சைப் போராட்டத்தை நடத்தும் தேசீய வாரமாகக் கொண்டாடுமாறு நாட்டு மக்களுக்கு அறைகூவல் விடுத்தார். தேசீய வாரம் நாடெங்கும் கொண்டாடப்பட்டது. (பட்டாபி) சீதாராமையா எழுதியிருப்பதுபோல, "நாடு முழுமையும் எழுச்சி பொங்கி நின்றது!" ஏப்ரல் 18 ஆம் தேதி புரட்சிக்கார இளைஞர்களின் கூட்டம் ஒன்று சிட்டகாங் படைத் தளவாடப் பண்டகசாலையைத் தாக்கி அதன் காவலாளிகளைக் கொன்றது. இதைவிட, எல்லைப்புறத் தலைவர் அப்துல் கஃபார் கானைக் கைது செய்ததை எதிர்த்து பெஷாவரில் ஆர்ப்பாட்டம் நடத்தியவர்கள் மீது, 39வது கர்வால் ரைபிளின் இரண்டு படையணிகள் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய மறுத்ததே அரசாங்கத்தைப் பெரிதும் கலவரமடையச் செய்தது. எனவே, அரசாங்கம், விறைப்பான போக்கை மேற்கொண்டு, எப்ரல் 16ல் ஜவஹர்லால் நேருவைக் கைது செய்தது; ஏப்ரல் 23ல் வங்காள அவசரச் சட்டத்தைப் பிரகடனம் செய்து, நிர்வாகத்துக்கும் நீதித்துறைக்கும் அளவற்ற அதிகாரங்களை வழங்கி, தேசீய இயக்கத்தை அடக்க முனைந்தது. பெஷாவரில் அரசின் கோரத்தனம் தாண்டவமாடியது. காந்தியடிகளும் மே 5 ஆம் தேதி கைது செய்யப்பட்டார். விடுதலைப் போரின் வெற்றிக்கு எல்லாவிதமான தியாகங்களையும் செய்ய முன்வருமாறு காங்கிரஸ் செயற்குழு நாட்டுமக்கள் அனைவருக்கும் அறைகூவல் விடுத்தது. அரசாங்கமும் மிகக் கடுமையான அடக்கு முறைகளைக் கட்டவிழ்த்து விட்டது.

**சட்டசபையிலிருந்து**
**வி. ஜே. படேல் ராஜினுமா :**

நிலைமை மிகவும் கடுமையாகிக் கொண்டிருந்தது. லாகூர்க் காங்கிரசின் அறைகூவலை ஏற்று வெளியேருதிருந்த வி. ஜே. படேல் தமது முடிவை மறுபரிசீலனை செய்யலானுர். தம்முடைய நாட்டு மக்கள் சுதந்திரத்துக்கான ஜீவமரணப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும்போது, தாம் மட்டும், போலித்தனமான ஒரு சட்டசபையில் ஒட்டிக்கொண்டிருப்பது சரியில்லை என்று அவருக்குப் பட்டுவிட்டது. உடனேயே, சபையின் தலைமைப் பதவியையும் உறுப்பினர் பதவியையும் ராஜினுமாச் செய்து, ஏப்ரல் 25ல் வைசிராய்க்கு ஒரு கடிதம் எழுதினுர். அந்தக் கடிதத்தில் அவர் குறிப்பிட்டதாவது :

" இன்றைய இந்தியாவின் மாபெரும் மனிதராகிய காந்தியடிகளின் தலைமையில் இந்தியத் தேசியக் காங்கிரஸ் தொடங்கிய அகிம்சைநெறி ஒத்துழையாமைச் சட்டமறுப்பு இயக்கங்கள் முழு வேகத்தோடு நடைபெற்று வருகின்றன. எனது நாட்டின் நூற்றுக்கணக்கான பெரியவர்கள், மேன்மை தங்கிய மாமன்னரின் சிறைக்கூடங்களுக்குப் போய்ச் சேர்ந்து விட்டார்கள். எனது நாட்டுச் சுதந்திரப் போராட்ட வரலாறு இப்படியான ஒரு கட்டத்தை அடைந்திருக்கிற இந்த நேரத்தில் நான் இருக்க வேண்டிய இடம் சட்டசபையின் (தலைமை) நாற்காலியல்ல ; என் நாட்டு மக்களுடனேயே நான் நிற்கவேண்டும். எனவே அவர்களுடன் தோளோடு தோள் இணைந்து நிற்பது என்று நான் முடிவு செய்துவிட்டேன்."

அந்தக் கடிதத்தில் வைசிராய்க்கு அவர் மேலும் தெரிவித்திருந்ததாவது : " மேன்மேலும் துன்பங்களை அனுபவிக்காமலும் தியாகங்களைப் புரிய நேராமலும், உங்களுடைய (இர்வினுடைய) நன்முயற்சிகளின் மூலமே, இந்தியா ஒரு தன்னுட்சி நாடு என்ற பெருமையோடு பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளில் ஒன்ருக வீற்றிருக்கும் காலம் வெகு விரைவிலேயே வரும் என்று நான் நம்பியிருந்தேன். அண்மையில் இங்கிலாந்திலும் இந்தியாவிலும் நடைபெற்றுள்ள நிகழ்ச்சிகளால் என் நம்பிக்கை சிதறடிக்கப்

பட்டு விட்டது. அதிகார மாற்றத்தைப் பற்றி பிரிட்டிஷ் அரசாங்கம் பேசி வரும் பேச்செல்லாம் வெறும் கண்துடைப்பே என்பதும் தெரிந்துவிட்டது. நடக்கப்போகும் வட்ட மேசை மாநாடு பற்றிக் காந்தியடிகள் கொண்டுள்ள கருத்தே சரி என்பதும் தெள்ளத் தெளிவாக விளங்கிவிட்டது. எனவே, இந்திய அரசாங்கத்தோடு எனக்கு உள்ள எல்லாத் தொடர்பு களையும் துண்டித்துக் கொள்ளுகிறேன்.''

சட்டசபைத் தலைவர் என்ற முறையில் அரசாங்கத்துக்குத் தலைவலி கொடுத்துக் கொண்டிருந்த படேல் எப்போது விலகுவார் என்றே வைசிராய் எதிர்பார்த்துக்கொண்டு இருந்தது போலத் தோன்றியது. படேலின் ராஜிநாமாவை உடனேயே ஏற்றுக் கொண்டு, நியாயமான வாதங்கள் மூலம் ''நீங்கள் செய்துள்ள முடிவிலிருந்து உங்களை மாற்ற முடியாது என்பதையே உங்கள் கடிதங்கள் தெளிவாகக் காட்டுகின்றன'' என்று மட்டும் சுருக்க மாகப் பதில் எழுதினார் வைசிராய்.

**சட்டசபையில் ஏற்பட்ட பாதிப்பு :**

சட்டசபையின் வேனிற்காலக் கூட்டத்தொடர் ஜூலை 7ல் தொடங்கிய போது, முந்திய சில மாதங்களில் ஏற்பட்ட அரசியல் நிகழ்ச்சிகளின் பாதிப்பு சட்டசபை நடவடிக்கைகளில் தெளிவாகத் தெரிந்தது. நாட்டில் நடந்து கொண்டிருந்த சட்டமறுப்பு இயக்கத்தையும் அதுபற்றிய அரசாங்கத்தின் நோக்கையும் மனத்தில் கொண்டே ஒவ்வோர் உறுப்பினரும் தங்கள் நடவடிக் கையை வகுத்துக்கொள்ள வேண்டியிருந்தது. மேலும், மிக விரும்பி எதிர்பார்க்கப்பட்ட சைமன் குழு அறிக்கை ஜூன் மாதத்தில் வெளியிடப்பட்டு நாட்டுமக்களைப் பெரிதும் ஏமாற்றத் திற்கு உள்ளாக்கியிருந்தது.

வைசிராய் இரண்டு சபைகளின் உறுப்பினர்களும் அடங்கிய கூட்டத்தில் ஜூலை 9 ஆம் தேதி தமது உரையை நிகழ்த்தினார். அதிலே, சட்டமறுப்பு இயக்கம் பற்றிய அவருடைய கருத்தையும் அதுபற்றி அவர் எவ்வாறு நடந்துகொள்ளப் போகிறார் என்ப தையும் தெரிவித்தார்: ''சட்டமறுப்பு இயக்கம் நீடிக்கும் வரை

நாம் உறுதியாக அதை எதிர்த்து நிற்கவேண்டும்" என்று கூறிய அவர், வட்ட மேசை மாநாடு அக்டோபர் கடைசியில் நடைபெறும் என்று அறிவித்தார். சைமன் குழு அறிக்கை, இந்தியாவின் முக்கியமான எல்லாத் தொகுதியினருக்குமே ஏமாற்றம் அளித்திருக்கிறது என்பதை நன்ருகத் தெரிந்திருந்தும், பின்வருமாறு உறுதியளித்தார், வைசிராய்: "இந்த (வ. மே.) மாநாடு தனது பணிகளில் முழுச் சுதந்திரத்தோடு செயற்படும்; அதற்கான எல்லா வசதிகளும் செய்து தரப்படும். (சைமன்) குழுவின் அறிக்கைக்கோ அல்லது மற்றெந்த அறிக்கைக் குறிப்புக்களுக்கோ அது கட்டுப்பட்டு இயங்கவேண்டியதில்லை."

அடுத்த நாளே, நிதித்துறை உறுப்பினர் துணைமானியக் கோரிக்கை ஒன்றைச் சபையில் கொண்டு வந்தார். வட்ட மேசை மாநாட்டுக்காகச் செலவிடப் போகிற தொகையே அதில் கேட்கப் பட்ட தொகையில் பெரும்பகுதி. வைசிராயின் உரை மற்றும் புதிய சட்டசபையின் உறுப்பினர் கலவை அமைப்பு ஆகியவற்றின் பின்னணியில் இந்தக் கோரிக்கை எளிதாக நிறைவேறிவிடும் என்றே எதிர்பார்க்கப்பட்டது. கோரிக்கைத் தொகையில் அடையாள வெட்டாக ரூ. 100 குறைக்கவேண்டும் என்னும் வெட்டுத் தீர்மானத்தை மியான் முகம்மது ஷா நவாஸ் கொண்டு வந்தபோது நிகழ்ந்த விவாதமும் நிதானத் தொனியில்தான் சென்றது. காங்கிரஸ் தொடங்கிய சட்டமறுப்பு இயக்கத்தைத் தாங்கள் ஆதரிக்கவில்லை என்பதையும் உறுப்பினர்கள் ஒளிவு மறைவு இன்றி வெளியிட்டார்கள். ஆனுலும், காங்கிரசும் காந்தியடிகள் போன்ற அதன் தலைவர்களுமே இந்திய பொதுஜன அபிப்பிராயத்தைப் பிரதிபலிப்பவர்கள் என்பதை அவர்கள் அனைவரும் தங்கள் இதய ஆழத்தில் புரிந்து கொண்டுதான் இருந்தார்கள். எனவே, காங்கிரசோடு ஓர் இணக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளுமாறே அவர்கள் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார்கள்.

லண்டனில் நடைபெற இருந்த வட்ட மேசை மாநாட்டில் இந்தியர்கள் கலந்து கொள்ளவேண்டும் என்று தாம் விரும்புவதற் குரிய காரணத்தை விளக்கினுர் ஜின்னு. "லண்டன் மாநாடு நமது நம்பிக்கைகளையும் விழைவுகளையும், ஒருவேளை சிதறடித்

தாலும் அடித்துவிடலாம். ஆனாலும், நான் அங்கே போகக் கூடாது என்பதையும் என் கட்சியை எடுத்துரைக்கக் கூடாது என்பதையும் என்னால் ஏற்க முடியவில்லை. காரணம், அப்படி விலகி நிற்பது, நான் முழு நம்பிக்கை கொண்டிருக்கிற நீதி நேர்மைகளின் நோக்கில், நான் என் கடமையிலிருந்து தவறுவதாகும் என்றே எனக்குத் தோன்றுகிறது. மேலும், (மாநாட்டில் கலந்து கொள்வதன் மூலம்) நான் எதையும் இழந்துவிடப் போவதுமில்லை,—எதற்கும் கட்டுப்பட்டுவிடப் போவதுமில்லை.'' எனவே, செலவுத் தொகைக் கோரிக்கை சரியானதே என்றார் ஜின்னா.

சி. பி. ராமசாமி அய்யரும் இதே கருத்துடையவராகவே இருந்தார். டொமினியன் அந்தஸ்து என்பது மிக உண்மையும் உன்னதமுமான ஒரு கோட்பாடு என்றும் அது வெற்றி பெறுவது உறுதி என்றும் அவர் நம்பிக்கை தெரிவித்தார். வட்ட மேசை மாநாடு, எந்த விதத்திலும் இந்தியாவின் நலன்களுக்குக் கேடு விளைவிப்பதாக இருக்க முடியாது என்றும் அவர் கூறினார்.

எம். கே. ஆச்சார்யா வட்ட மேசை மாநாட்டுக் கோரிக்கையை ஆதரித்ததோடு, காந்தியடிகள், மாளவியா போன்ற தலைவர்களை அந்த மாநாட்டில் பங்கு கொள்ளச் செய்வதில் உறுப்பினர் அனைவரும் ஒன்றுபட்டு உழைக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

வடசென்னையைச் சேர்ந்த அப்துல் லத்தீப் சாகிப் ஃபரூக்கி, இப்போது உள்ள சூழ்நிலையில் சட்டமறுப்பில் ஈடுபடுவதன் மூலம் இந்தியாவுக்குச் சுதந்திரம் தேடிவிடலாம் என்பதைத் தாம் ஒப்புக்கொள்ளவில்லை என்றார். ஆனாலும், காங்கிரஸ் தலைவர்களை வட்ட மேசை மாநாட்டில் பங்குகொள்ளச் செய்யும் முயற்சியில் அரசு முழு மனத்தோடு ஈடுபடவில்லை என்றும் அவர் குறை கூறினார். அவர் மேலும் பேசுகையில், காங்கிரஸ் பங்குகொள்ளாவிட்டால் இந்த மாநாடு இந்திய மக்களின் உணர்ச்சிகளை முழுமையாகப் பிரதிபலிப்பதாக இராது என்றும் அரசாங்கம் மேற்கொண்டுள்ள அடக்குமுறை, இங்கே அமைதியான சூழ்நிலையும் நல்லெண்ணமும் உண்டாவதற்குத் துணை செய்யாது என்றும் சுட்டிக்காட்டினார்.

சைமன் குழு அறிக்கையை வன்மையாகக் கண்டித்த என். ஜி. ரங்கா "ஆபத்தும் குறும்புத்தனமும் நிறைந்த இந்த அறிக்கை"யை அரசாங்கம் பெரிதாக விளம்பரப்படுத்துவது மிகமிகத் தவறு என்றார். "பிரிட்டிஷ் அரசாங்கம் வட்ட மேசை மாநாடு பற்றியும் சைமன் அறிக்கை பற்றியும் ஏற்கனவே முடிவு செய்து வைத்துவிட்டது. இவ்வளவு பெரிய சட்ட மறுப்பு இயக்கத்தின் பிறகும் நியாய உணர்வு பெறாத இந்திய அரசாங்கத்தையும் பிரிட்டிஷ் அரசாங்கத்தையும் நீங்கள் ஒருவர் சென்று திருத்திவிடப் போகிறீர்களா?" என்று ஜின்னாவைக் கேட்டார் ரங்கா. காந்தியடிகள் போன்ற தலைவர்கள் பங்கு பெறாவிட்டால் வட்ட மேசை மாநாடு தோல்வியடைவது உறுதி என்றும் அவர் எச்சரித்தார்.

கே. சி. நியோகி தம்முடைய சொந்த அனுபவங்களை விவரித்து, "டையரின் அட்டூழிய வெறியே இந்தியாவில் தொடர்ந்து நடமாடிக் கொண்டிருக்கிறது" என்று சாடினார். தமக்கு முன்பு பேசிய பல உறுப்பினர்களின் கருத்தை ஆதரித்துப் பேசிய எச். பி. மோடி, காங்கிரசின் ஒப்புதலைப் பெறாவிட்டால் வட்ட மேசை மாநாட்டின் முடிவுகள் எந்தப் பயனும் தரப் போவதில்லை என்றும், எனவே அரசாங்கத்திற்கும் காங்கிரசிற்கும் இடையே இணக்கம் ஏற்பட வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். காங்கிரசிடம் அரசாங்கம் அத்துமீறி நடந்துகொள்வதாக எச்சரித்த ஐயகர், இந்தியப் பெருந்தலைவர்களை வட்ட மேசை மாநாட்டுக்கு ஈர்க்கும் விதமாக அரசாங்கம் இணக்கமான நடைமுறைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ஆனாலும், வட்ட மேசை மாநாடு தடைப்படாதபடி (அதன் செலவுக்குப் பணம் கோரும்) துணைமானியக் கோரிக்கையைத் தாமும் தமது கட்சியும் ஆதரிப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

சட்ட மறுப்பு இயக்கத்தை அடக்குவதில் மாநில அரசாங்கங்களுக்கு உள்ள அதிகார வரம்பைக் குறித்து இந்திய அரசாங்கம் மேற்கொண்டுள்ள நிலை திருப்தியளிப்பதாக இல்லை என்று சண்முகம் செட்டி கூறினார். சட்ட ஒழுங்குப் பொறுப்பு மத்திய அரசாங்கத்தையே சார்ந்ததாக இருப்பதால், இந்த (சட்ட மறுப்பு இயக்க) விவகாரத்தை மாநில அரசுகளிடம் விடாமல்



கோவிந்த வல்லப பந்த்



வி. எஸ். ஸ்ரீநிவாச சாஸ்திரி

இதிலே தெளிவான ஒரு கொள்கையை இந்திய அரசாங்கம் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினார். கல்கத்தாவைச் சேர்ந்த சரதீந்த முகர்ஜி பேசுகையில், இப்போது நடைபெறும் குழப்பங்களின் விளைவாக நாட்டு மக்களுக்கு ஏற்படும் உயிர்ச் சேதம் உறுப்புச் சேதம் அனைத்துக்கும் அரசாங்கமே பொறுப்பு ஏற்கவேண்டும் என்று கூறினார்.

மூன்று நாள் நடைபெற்ற விவாதத்தின் இறுதியில் வெட்டுப் பிரேரணை ஓட்டுக்கு விடப்பட்டு, 60க்கு 48 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. வைசிராய் அப்போதுதான் "அற்புதமான" உரை ஒன்று நிகழ்த்தியிருந்த சூழ்நிலையில் அரசாங்கத்துக்கு இப்படி ஒரு தோல்வி ஏற்படும் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை. ஆனாலும், அரசாங்கத்துக்கு மிகவும் வேண்டியவர்களாக இருந்த பல உறுப்பினர்கள் இந்தச் சமயத்தில் அரசாங்கத்துக்கு எதிராக வாக்களிக்கத் தயங்காததாலேயே (அரசாங்கத்துக்கு) இந்தத் தோல்வி ஏற்பட்டது.

பிரிட்டிஷ் சாம்ராச்சியத்துக்கு உட்பட்ட இந்திய ஆட்சி அமைப்பை உருவாக்கிக் கொள்வதற்கு இந்தியாவுக்கு உள்ள உரிமையை இங்கிலாந்து அங்கீகரிக்க வேண்டும் என்றும் எந்த விதமான பலாத்கார நடவடிக்கைகளுக்காகவும் தண்டிக்கப்படாத காந்தியடிகள் போன்ற அரசியல் கைதிகள் எல்லோரையும் அரசாங்கம் விடுதலை செய்யவேண்டும் என்றும் வற்புறுத்தும் தீர்மானம் ஒன்றை ஜுலை 17ல் எம். கே. ஆச்சார்யா கொண்டு வந்தார். இதன் மீதான விவாதம், நாட்டின் அரசியல் நிலை பற்றிய சர்ச்சையை மீண்டும் கிளப்பியது. இதில் பங்குகொண்ட உறுப்பினர்கள், சைமன் குழு அறிக்கை ஏமாற்றமளிக்கிறது என்பதை எடுத்துரைத்ததோடு, வட்ட மேசை மாநாடு வெற்றி பெற வேண்டுமானால் (அரசாங்கம்) காங்கிரஸ் தலைவர்களோடு இணங்கிப் போகவேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். கிழக்குப் பஞ்சாபைச் சேர்ந்த அப்துல் ஹயே பேசுகையில், இந்து முஸ்லிம் வேற்றுமைகளை அரசாங்கம் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொண்டார். "தங்கள் வகுப்பு வேற்றுமையைத் தீர்த்துக்கொள்ள முடியாததால் இந்தி

யர்கள் சுதந்திர ஆட்சிக்குத் தகுதியற்றவர்கள் என்றால், இந்தப் பிரச்சினையைத் தீர்த்து வைக்க முடியாத இந்திய அரசாங்கத்துக்கும் இந்தியாவை ஆள உரிமை கிடையாது!" என்றார் அவர். ஹேயே தமது பேச்சை முடிக்கையில், "காந்தியடிகள் ஒருவரே இப்போது தேவையானதைச் செய்து முடிக்கக் கூடியவர்; எனவே அவரைப் புறக்கணிக்க இயலாது" என்று வலியுறுத்தினார். இந்தத் தீர்மானத்தின்மீது விவாதம் மட்டுமே நடந்தது; வாக்கெடுப்பு நடைபெறவில்லை.

**நாலாவது சட்டசபை :**

வைசிராய் ஏற்கனவே அறிவித்திருந்தபடி, நாலாவது சட்டசபைக்கான தேர்தல் 1930 செப்டம்பரில் நடந்தது. காங்கிரஸ், தனது சட்டமறுப்பு இயக்கத்தின் திட்டங்களுக்கு ஏற்ப, தேர்தலைப் பகிஷ்கரித்தது. ஆண்களும் பெண்களுமான பல காங்கிரஸ் தொண்டர்கள், வாக்குச் சாவடிகளின் முன்பு மறியல் செய்தார்கள். பலர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்; சட்டசபையின் எல்லா இடங்களும் நிரப்பப்பட்டன.

ஆனால், ஜூலை மாதம் முதல், சட்ட மறுப்பு இயக்கம், பிரிட்டிஷ் பொருட்களைப் பகிஷ்கரிப்பது மற்றும் வரிகொடாமை என்னும் தனது இரண்டாவது கட்டத்தை அடைந்தது. அரசாங்கமும், சுதந்திரப் போராட்டக்காரர்களுக்கு எதிரான தனது வழக்கமான யுத்தத்தைத் தொடங்கியிருந்தது. கிழக்கில் வங்காளமும் வடமேற்கில் எல்லைப்புற மாகாணமும் அவர்களுடைய தாக்குதலின் முக்கியமான கேந்திரங்களாக விளங்கின. எல்லைப்புற மாகாணத்தில் சுமார் ஐந்து மாதங்களுக்கும் மேலாக ராணுவச் சட்டம் அமுலில் இருந்தது. குஜராத்திலும் மத்திய மாகாணத்திலும் நடந்த வரிகொடா இயக்கமும் அரசாங்கத்தின் கடுமையான தாக்குதலுக்கு உள்ளாயிற்று.

நிலவரம் இந்தவிதமாக இருக்கையில்தான், நாலாவது சட்டசபையின் முதலாவது கூட்டத்தொடர், தில்லியில் 1931 ஜனவரி 14ல் ஆரம்பமானது. வழக்கமான விவாதங்கள் நடந்தபோதிலும், ரெயில்வே வரவு செலவு, பொது வரவு செலவுத் திட்டம் மற்றும்

பல மசோதாக்களை, எந்தவிதமான தடங்கலும் இல்லாமல் சபை நிறைவேற்றியது. ஆனாலும், வெளியே நடைபெற்று வந்த அரசாங்க அடக்குமுறைகளை அலட்சியப்படுத்த முடியாத உறுப்பினர்கள், பல சமயங்களில், அந்தப் பிரச்சினையைச் சபையிலே எழுப்பினார்கள்.

**ஒத்துப் போகுமாறு கோரிக்கை :**

அத்தகைய நிகழ்ச்சி ஒன்று ஜனவரி 29ல் நடைபெற்றது. பஞ்சாபைச் சேர்ந்த ஷேக் ஸாதிக் ஹஸன், அரசாங்கத்தின் அடக்குமுறைகளைக் குறித்த தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார். அத்தீர்மானத்தின் வாசகம் வருமாறு: "அரசாங்கம் கடைப்பிடித்து வரும் அடக்குமுறைப் போக்கைக் கைவிட்டு அனுதாபமும் இணக்கமும் கலந்த ஒரு போக்கை மேற்கொள்ளுமாறு இந்தச் சபை கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொள்ளுகிறது."

இந்தத் தீர்மானம் வருவதற்கு முன்பே, ஜனவரி 19ல், முதலாம் வட்ட மேசை மாநாட்டின் முடிவில் பிரதமர் மக்டொனல்டு நிகழ்த்திய உரையைத் தொடர்ந்து, அரசின் இணக்க நடவடிக்கையாக, காந்தியடிகளும் வேறு சில பெருந் தலைவர்களும் ஜனவரி 26 ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டிருந் தார்கள். ஹஸன், இதைக் குறிப்பிட்டு, அரசாங்கத்துக்கும் மக்களுக்கும் இடையே நல்லுறவு ஏற்பட வேண்டுமானால் காந்தியடிகளையும் மற்றும் சில தலைவர்களையும் மட்டும் விடுவித்தால் போதாது; இதே சலுகை, பலாத்காரச் செயல் களுக்காகத் தண்டிக்கப்படாத அரசியல் கைதிகள் அனைவருக்கும் வழங்கப்பட வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். இப்போது நிலவிவரும் சூழ்நிலையில் அரசாங்கம் தனது அடக்குமுறைப் போக்கைக் கைவிடுவது மட்டும் போதாது என்று குறிப்பிட்ட முகம்மது யாமின் கான், சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டுக் கைது செய்யப்பட்டுள்ள அனைவரும் விடுதலை செய்யப்படவும் வேண்டும் என்று வற்புறுத்தினார்.

பி. ஆர். பூரி, பி. தாஸ், சி. எஸ். ரங்க அய்யர் ஆகியோர் ஹஸனின் தீர்மானத்தை முழுமையாக ஆதரித்தார்கள்.

விவாதம் பிப்ரவரி 5ஆம் தேதி வரை நீண்டது. அன்றைக்கு, சிந்துவைச் சேர்ந்த சேட் அப்துல்லா ஹாரூன் இந்தத் தீர்மானத்துக்கு ஒரு திருத்தம் கொண்டு வந்தார். இப்போது ஏற்பட்டுள்ள நெருக்கடிக்கு இரண்டு தரப்பினருமே காரணம் என்று கூறிய அவர், வட்ட மேசை மாநாட்டில் கலந்து கொள்வதற்குக் கிடைத்த வாய்ப்புக்களை எல்லாம் புறக்கணித்துக் காந்தியடிகள் ஓர் இயக்கத்தைத் தொடங்கியது நாட்டுக்குத் தீங்கு விளைவித்துள்ளது என்றார். அதேபோல, அரசாங்கமும் இவ்விஷயத்தில் காழ்ப்புணர்ச்சியின்றி நடந்து கொள்ளவில்லை என்றும் குறிப்பிட்டார். இறுதியாக, இரண்டு சாராரும் இணக்க நெறியில் இறங்கி வரவேண்டும் என்று ஹாரூன் கேட்டுக்கொண்டார்.

இந்தப் பேச்சின் இடையே, ராணுவச் சட்டம் அமுலிலிருந்த வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் நிலைமையைப் பின் வருமாறு விவரித்தார் ஹாரூன் :

"ஐயா, முசல்மான்கள் இந்த நாட்டில் தங்களின் நிலை என்ன என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய கட்டம் நெருங்கிவிட்டது. அரசாங்கத்தையோ மற்றவர்களையோ நம்பியிராமல் முசல்மான் தங்கள் பலத்தையே நம்பவேண்டிய நேரம் வந்துவிட்டது. இந்திய நாட்டை முன்னேற்றும் பணியில் தங்களின் முழுப் பொறுப்பையும் ஏற்க முன்வர வேண்டுமென்று, இங்கேயும் இந்த சபைக்கு வெளியிலேயும் உள்ள என் முசல்மான் நண்பர்களை நான் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்."

இந்தத் தீர்மானத்துக்குக் கொண்டுவந்த திருத்தம் ஒன்றில், அரசாங்கம் தனது அடக்குமுறைச் சட்டங்களை எல்லாம் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றும் அரசியல் கைதிகளை எல்லாம் விடுதலை செய்யவேண்டும் என்றும் அமர் நாத் தத் கேட்டுக்கொண்டார். இந்த இயக்கம் நியாயமானதும் சட்டத்துக்கு உட்பட்டதுமாகும் என்று தெளிவுறுத்திய ஹரி சிங் கௌர், எப்போதாவது இயக்கத்தில் வன்முறை பயன்படுத்தப் பட்டால் காந்தியடிகள் போன்ற தலைவர்கள் அதைக் கண்டித்து வந்திருக்கிறார்கள் என்பதையும் நினைவூட்டினார். அவர் மேலும் பேசுகையில், அரசாங்கம் கைதானவர்களைத் துணிந்து விடுதலை

செய்யுமானால் சட்டமறுப்பு இயக்கம் மீண்டும் உண்டாவதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கமாட்டா என்று நம்பிக்கை தெரிவித்தார்.

சுயேச்சைக் கட்சியின் தலைவராக இருந்த சர் அப்தூர் ரஹீமும், அரசாங்கத்தின் அடக்குமுறைச் சட்டங்களைக் கண்டித்ததோடு, அரசியல் கைதிகள் எல்லோரும் விடுதலை செய்யப்பட்டாலல்லாமல், ஆட்சியியல் சிந்தனைகளை விவாதிப்பதற்குச் சாதகமான சூழ்நிலையை உருவாக்க முடியாது என்னும் காந்தியடிகளின் கூற்றையும் முழுமையாக ஒப்புக்கொண்டார்.

இரண்டு நாள் நடைபெற்ற இவ்விவாதத்தில், இருதரப்பாரும் தங்கள் முஸ்தீபுகளைக் கைவிட்டு ஓர் ஒப்பந்தத்துக்கு இணங்கி வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளும் ஒரு தோரணையே மேலோங்கி நின்றது. விவாதத்தின் முடிவில், தீர்மானத்தின் மீது வாக்கெடுப்பு நடத்தக் கூடாது என்றும் விவாதம் காலவரையறையின்றித் தள்ளிப் போடப்பட வேண்டும் என்றும் ஹரி சிங் கௌர் ஒரு பிரேரணையைக் கொண்டு வந்தார். ஆளும் கட்சித் தலைவரான சர் ஜார்ஜ் ரெய்னி இதற்குத் தடை எழுப்பாததால், தீர்மானத்தைப் பற்றிய விவாதம் காலவரையறையின்றி ஒத்திப் போடப்பட்டது.

அந்தச் சமயத்தில் சட்ட சபைக்கு வெளியில் உருவாகி வந்த —மார்ச் 5ஆம் தேதி காந்தி—இர்வின் ஒப்பந்தத்துக்கு வழி நடத்திய—சூழ்நிலையையே இந்த முடிவு பிரதிபலித்தது.

**பகத் சிங் தூக்கிலிடப்பட்டதற்கு எதிர்ப்பு :**

பகத் சிங்கும் மற்றும் இரண்டு புரட்சிக்காரர்களும் தூக்கிலிடப் பட்ட மறுநாள், மார்ச் 24ஆம் நாள், இருதரப்பாரிடையேயும் உருவாகி வந்த இந்த ஒற்றுமை உணர்ச்சி வெகுவாகப் பாதிக்கப் பட்டது. அப்போது எதிர்க்கட்சித் தலைவராக இருந்த திவான் பகதூர் டி. ரங்காச்சாரியார், பகத் சிங் எந்தக் குற்றச்சாட்டின் பேரில் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டாரோ அதற்கும் அவருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்றே மிகப் பெரும் பான்மையான மக்கள் கருதுகிறார்கள் என்று சபையில் தெரிவித்தார். காந்தியடிகள் போன்ற ஒரு பெருந்தலைவர் மூலம்

தெரிவிக்கப்பட்ட பொது மக்களின் அபிப்பிராயத்தை அரசாங்கம் மதிக்கும் என்றே மக்கள் எதிர்பார்த்தார்கள்; அரசாங்கமோ, மக்கள் குரலைத் தூக்கி எறிந்துவிட்டது என்று இடித்துரைத்த ரங்காச்சாரியார், "அரசாங்கத்தின் இந்த நடவடிக்கையை நானும் தேசீயக் கட்சியும் ஒப்புக்கொள்ளவே முடியாது. எனவே நாங்கள் வெளிநடப்புச் செய்கிறோம்" என்றார்.

இவ்வாறு அறிவித்துவிட்டு, அரசாங்கம் என்ன பதில் சொல்லுகிறது என்பதைத் தெரிந்துகொள்வதற்காகச் சிறிது நேரம் சபையிலேயே இருந்தார் ரங்காச்சாரியார். உள்துறை உறுப்பினர் எழுந்து, "(பகத் சிங்) விசாரணை நேர்மையாக நடந்திருப்பதாகவும் நியாயமான தண்டனையே வழங்கப்பட்டிருப்பதாகவும் அரசாங்கம் திடமாக நம்புவதால் நாங்கள் அந்த விவகாரத்தில் தலையிடவில்லை" என்றார். ஆளும் கட்சித் தலைவரான சர் ஜார்ஜ் ரெய்னி தேசீயக் கட்சியினரை நோக்கி, "நீங்கள் வெளிநடப்புச் செய்வது உங்கள் உங்கள் தொகுதி வாக்காளர்களுக்கு நீங்கள் நிறைவேற்ற வேண்டிய கடமையிலிருந்து தவறுவதாகும்" என்றார். உடனேயே, தேசீயக் கட்சி உறுப்பினர்கள், "அதெல்லாம் எங்களுக்குத் தெரியும்" என்று கோபக் குரல் எழுப்பியவாறே சபையை விட்டு வெளியேறினார்கள்.

**"அவசரச் சட்டங்களின் அரசாங்கம்" மீது தீர்மானம்:**

சட்டசபையிலிருந்த எதிர்க்கட்சி உறுப்பினர்கள் சட்ட மறுப்பு இயக்கம் சரியானதென்றோ தேவையானதென்றோ கருதவில்லை. ஆனாலும், அரசாங்கத்தின் அடக்குமுறைப் போக்கை எதிர்த்து உறுப்பினர்கள் குரல் எழுப்புவது இந்தச் சட்ட சபையின் "அன்றாட" நிகழ்ச்சிபோல் ஆகிவிட்டது. 1931 இறுதியிலும் 1932 தொடக்கத்திலும் இந்தக் குரலை எழுப்புவதற்குரிய ஒரு வாய்ப்பு மீண்டும் ஏற்பட்டது. வெலிங்டன் பிரபுவின் தலைமையில் அமைந்த இந்திய அரசாங்கம் காங்கிரசின் மீது கடுமையான தாக்குதலைத் தொடங்கியதே இதற்குக் காரணம். இரண்டாவது வட்ட மேசை மாநாட்டில் கலந்து கொண்ட காந்தியடிகள் லண்டனிலிருந்து திரும்புமுன்பே

ஜவஹர்லால் நேரு, அப்துல் கஃபார் கான் போன்ற தலைவர்களை அரசாங்கம் கைது செய்தது. அவசரகால அதிகாரங்களை மேற்கொண்டு, வங்காளப் புரட்சி இயக்கம், வடமேற்கு எல்லைப் புறச் செஞ்சட்டை இயக்கம், மத்திய மாகாண வரிகொடா இயக்கம் ஆகியவைகளை அடக்கத் தன்னைத் தயார் செய்து கொண்டது. இந்திய நிலைமைகளைப் பற்றி வைசிராயுடன் பேச விரும்புவதாகத் தெரிவித்துக் காந்தியடிகள் கடிதம் எழுதியபோது, அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கைகளைப் பற்றி எதுவும் பேசமுடியாது என்று மறுத்துவிட்டார் வைசிராய். காந்தியடிகள் 1931 டிசம்பர் 28ல் பம்பாய் வந்து இறங்கினர். அன்றைக்கே காங்கிரஸ் செயற்குழு கூடியது. அக்கூட்டம் வட்ட மேசை மாநாட்டின் விளைவுகள் திருப்தி தரவில்லை என்று விவரித்ததோடு, அரசாங்கத்தின் அடக்கு முறைகளையும் கண்டித்தது. அவசரச் சட்டங்கள் செயற்படுத்தப்படும் முறையைப் பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்ற (காங்கிரசின்) கோரிக்கைக்கு அரசாங்கத் தரப்பிலிருந்து திருப்திகரமான பதில் இல்லாவிட்டால் சட்ட மறுப்பு இயக்கத்தை மீண்டும் தொடங்குமாறு, இந்தச் செயற்குழு நாட்டு மக்களைக் கேட்டுக் கொண்டது.

இந்திய அரசாங்கம் சமரசப் பேச்சுக்குத் தயாராக இல்லை. மாறாக, 1932 ஜனவரி 4 ஆம் தேதி காந்தியடிகளைக் கைது செய்தது அரசாங்கம். இந்த நடவடிக்கையை, "இந்தியா முழுவதையும் முற்றுகையிடுவதை முன் கூட்டி அறிவிக்கும் ஒரு பிரகடனம்" என்று வருணித்தார் நேரு. அமெரிக்க மிதவாதப் பத்திரிகையான **தி நேஷன்** கூட, "இந்தியாவில் யுத்தம்" என்றே இதைக் குறிப்பிட்டது!

இத்தகையதொரு "போர்ச் சூழ்நிலை"யில், சட்டசபையின் உத்தியோகச் சார்பற்ற உறுப்பினர்கள் சும்மா இருக்க முடியவில்லை. பிப்ரவரி 1ஆம் தேதி, ஹரி சிங் கௌர் நீண்டதொரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். சட்டசபையின் நவம்பர் மாதக் கூட்டத் தொடருக்குப் பிறகு பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டங்களை எல்லாம் இந்தத் தீர்மானம் நிராகரித்தது; காந்தியடிகளும் மற்றத் தலைவர்களும் கைது செய்யப் பட்டதற்குத் தன்

எதிர்ப்பையும் தெரிவித்தது. அதே சமயம், பயங்கர பலாத்கார நடவடிக்கைகளைக் கண்டித்து, வரிகொடா இயக்கம் போன்ற திட்டங்களையும் தீர்மானம் நிராகரித்தது. அதன் மேல் அவசர மசோதாக்கள் இருந்தால், அவை, முதலில் சபையின் பரிசீலனைக்குக் கொண்டுவரப் படவேண்டும் என்றும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும் மத்திய மாகாணத்திலும் ஏற்பட்டுள்ள நிகழ்ச்சிகளைப் பற்றி ஆராய ஒரு விசாரணைக் குழுவை நியமிக்க வேண்டும் என்றும் இத்தீர்மானம் சிபாரிசு செய்தது. அடுத்து, இந்தியாவுக்கு ஒரு புதிய அரசியலமைப்பைத் தொடங்கிவைப்பதில் இந்தியாவிலுள்ள எல்லா ஸ்தாபனங்களின் ஒத்துழைப்பையும் வைசிராய் பெற வேண்டும் என்று ஒரு சிபாரிசு செய்தது. தீர்மானத்தின் மீது பேசுகையில், அவசரச் சட்டத்தின் கொடுங்கோன்மைத்தனமான அம்சங்களை வன்மையாகக் கண்டித்தார் கௌர். நாட்டின் தலைவர்களைச் சிறையில் தள்ளிவிட்டு, அரசியல் சட்டத்தை உருவாக்குவதற்குக் கட்சிகளின் ஆதரவைக் கோரினால் எப்படி? என்றும் கேட்டார் அவர்.

கௌரின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய ஏ. ராமசாமி முதலியார், சட்டசபை தனது சட்ட நடவடிக்கைகளை மேற்கொள்ள அனுமதிக்கப்படவில்லை என்றும், சட்ட சபையை வைத்துக் கொண்டே அவசரச் சட்டங்களைப் பிறப்பித்துக் கொண்டிருப்பதை விடச் சட்டசபையையே கலைத்துவிடுவது நல்லது என்றும் கூறினார். அசாமைச் சேர்ந்த அப்துல் மதீன் சௌதுரி, இந்தியாவின் எதேச்சாதிகார ஆட்சியாளர்களை ரஷ்யாவின் ஜார் மன்னர்களோடு ஒப்பிட்டுச் சாடினார். ஆட்டம் கொடுத்துக் கொண்டிருக்கிற இந்திய அதிகார வர்க்கத்தை அவசரச் சட்டங்களின் மூலம் காப்பாற்றி விட முடியாது என்றும் அவர் எச்சரித்தார். சௌதுரியுடன் சேர்ந்து, பி. தாஸ், பி. ஆர். பூரி, என். எம். ஜோஷி மற்றும் பல உறுப்பினர்கள் அரசாங்கத்தின் நடவடிக்கையை வன்மையாகக் கண்டித்தார்கள்.

விவாதம் பிப்ரவரி 2 ஆம் தேதியும் தொடர்ந்து நடந்தது. சண்முகம் செட்டி, அவசரச் சட்டங்களைச் சட்ட வரம்புக்குப் புறம்பானவை என்று கருதாவிட்டாலும், அவைகளின்

நோக்கத்தைக் கண்டித்துப் பேசினார். இந்த நோக்கம் லண்டன் வைட் ஹாலிலிருந்தே ஊற்றெடுத்துப் பொங்குவதால், அதைச் செயல்படுத்தும் இங்குள்ள அதிகாரிகளையும் பிரதிநிதிகளையும் கண்டிப்பதில் பொருளில்லை என்று கூறிய சண்முகம், அண்மையில் நிகழ்த்திய ஒலிபரப்பு ஒன்றில், "நாய்கள் குரைத்துக் கொண்டிருந்தாலும் வணிகர் கூட்டம் சென்று கொண்டே இருக்கிறது" என்று இந்தியா மந்திரி இறுமாப்போடு குறிப்பிட்டுள்ளார் என்பதைச் சபைக்கு நினைவூட்டினார்.

சர் கோவாஸ்ஜி ஜெஹாங்கீர் பேசுகையில், "என்னைப் பொறுத்தவரையில், நம் வாழ்நாளளவும் நாம் பிரிட்டிஷாருடைய தொடர்பை அறுத்துக் கொள்ளக் கூடாது என்ற கொள்கையுடையவர்களிலே ஒருவன். ஆனால், இந்த அவசரச் சட்டங்களால் அந்தத் தொடர்பு வலுவிழந்து போகும் என்றே நான் அஞ்சுகிறேன்" என்றார். இத்தகைய நடவடிக்கைகளை அரசாங்கம் தவிர்க்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

அப்துர் ரஹீம் பேசுகையில், அரசாங்கம் எதைக் குறி வைத்து இப்படிச் செய்து வருகிறது என்பதை உறுப்பினர்கள் தெரிந்து கொள்வதற்கு வசதியாக முறையான மசோதா ஒன்றை அரசாங்கம் கொண்டுவரவேண்டும் என்று விருப்பம் தெரிவித்தார். அரசாங்கம் அப்படிச் செய்யவில்லையானால், அரசாங்கத்தின் மனத்தில் வேறேதோ இருக்கிறது என்ற முடிவுக்கே உறுப்பினர்கள் வரவேண்டியிருக்கும் என்றும் எச்சரித்தார் அவர்.

ஆனால், முகம்மது யாமின் கான், அந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்தவர் (ஹரி சிங் கௌர்) மீது சீறி விழுந்தார்: "இந்தத் தீர்மானம் உண்மையில், அரசாங்கத்தின் மீது கொண்டு வரப்பட்ட கண்டனத் தீர்மானமே. தீர்மானத்தைக் கொண்டு வந்தவர் இதைத் தெளிவாகவே சொல்லியிருக்கலாம். சண்டை போட விரும்புகிறவர்கள் அதை வெளிப்படையாகவே போடலாமே" என்று காய்ந்தார் அவர். போராட்டக்காரர்கள் அரசியல் சட்டத் தயாரிப்பில் ஒத்துழைப்பதற்குப் போதிய வாய்ப்புக்களை அரசாங்கம் ஏற்படுத்தித் தந்தது; அவர்கள்

(போராட்டக்காரர்கள்) தாம் அதை எல்லாம் உதறித் தள்ளி விட்டார்கள். இதற்கும் மேல் அரசாங்கம் என்னதான் செய்ய முடியும்? என்று கேட்டார் அவர்.

இறுதியில் நடந்த வாக்கெடுப்பில் கௌரின் தீர்மானம் 62க்கு 44 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்ததாக அறிவிக்கப்பட்டது. அரசாங்கத்தோடு "இணங்கிச் செல்லும்" ஒரு சட்டசபை அரசாங்கத்தைக் கண்டிக்கின்ற பொருளுடைய ஒரு தீர்மானத்தை நிறைவேற்றும் என்று எதிர் பார்க்க முடியாது தானே?

### அரசியல் சட்டப் பிரச்சினை :

1930 ஜூலை 10, 11, 12 தேதிகளில் நடைபெற இருந்த வட்ட மேசை மாநாட்டுச் செலவுக்கான துணைமானியக் கோரிக்கை விவாதிக்கப்பட்ட போது, காங்கிரஸ் தலைவர்கள், அவர்களிலும் குறிப்பாகக் காந்தியடிகள் அந்த மாநாட்டில் கலந்துகொள்ளும் விதமாக அரசாங்கம் இணக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று உறுப்பினர்கள் கேட்டுக்கொண்டது நாம் அறிந்ததே. பிறகும், ஸப்ரூவும் ஐயகரும், அரசாங்கத்துக்கும் காங்கிரஸ் தலைவர்களுக்கும் இடையே ஓர் உடன்பாட்டை ஏற்படுத்த முயன்றார்கள். ஆனாலும், அவர்களின் முயற்சி வெற்றி பெறவில்லை.

இதைத் தொடர்ந்து, இந்திய அரசாங்கம் சுதேச மன்னர்களிலும் காங்கிரஸ்காரர் அல்லாதவர்களிலுமிருந்து பிரதிநிதிகளைத் தேர்ந்து எடுத்து, முதலாவது வட்ட மேசை மாநாட்டை நவம்பர் 12ல் லண்டனில் தொடங்கியது. மாநாட்டில் கலந்து கொள்ள இருந்தவர்கள் இந்திய மக்களின் வெவ்வேறு தொகுதியினரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களல்லர்; வைசிராயே அவர்களை நியமித்து அனுப்பியிருந்தார். இன்னும் படுமோசமான நிலைமை என்னவென்றால், இந்தியாவின் மிகப் பெரிய அரசியல் ஸ்தாபனமாகிய காங்கிரசின் பிரதிநிதி ஒருவர் கூட மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை. ஆகவே, அந்த மாநாடே நடக்குமோ நடக்காதோ என்ற சந்தேகம் பரவலாக இருந்து வந்தது.

பிரிட்டிஷ் இந்தியாவையும் இந்திய சுதேச சமஸ்தானங்களையும் அரவணைத்துச் செயற்படக் கூடிய கூட்டமைப்பு ஒன்று இந்தியாவில், புதிய அரசியல் சட்டச் சீர்திருத்தத்தின் கீழ் உருவாக வேண்டும் என்பதில் மாநாட்டுக்கு வந்தவர்களிடையே ஒருமித்த கருத்து நிலவியது. சுதேச மன்னர்கள் முன்பு மேற்கொண்டிருந்த போக்கைக் கவனிக்கையில் இது வியப்புக்குரிய ஓர் ஒருமைப்பாடே. ஆனால், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தைப் பற்றிய சிக்கல் மாநாட்டையே செயல்பட விடாமல் தடுத்து நின்றது. முஸ்லிம் வகுப்புவாதத் தலைவர்களான ஆகா கானும் ஜின்னாவும் முஸ்லிம்களுக்குத் தனித்தொகுதி வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தார்கள். தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதி என்று உரிமை கொண்டாடிய பி. ஆர். அம்பேத்கார், பிரதிநிதித்துவம் வழங்குவதைப் பொறுத்தவரையில், தாழ்த்தப்பட்ட மக்கள் தனிவகுப்பினராகக் கொள்ளப்பட வேண்டும் என்று வற்புறுத்தினார். இந்துப் பிரதிநிதிகளோ, பொதுத் தொகுதிகளையே வற்புறுத்தியதோடு, தேவையானால், சிறுபான்மை வகுப்பினருக்குச் சில இடங்களை மட்டும் ஒதுக்கலாம் என்றார்கள். எனவே வகுப்புரிமைப் பிரச்சினையில் ஒன்றுபட்ட கருத்து ஏற்படவில்லை.

மாநாடு, 1931 ஜனவரி 19ஆம் தேதி வரை நடைபெற்றது. கடைசிநாளில், மாநாட்டு நடவடிக்கைகளைத் தொகுத்துரைத்த (பிரிட்டிஷ்) பிரதமர் மெக்டொனால்டு, பேரரசின் அரசாங்கத்தினுடைய கொள்கையைப் பகைப்புலமாகக் கொண்டு அந்த மாநாட்டின் முன் உள்ள முக்கியமான பிரச்சினைகளை விளக்கிக் கூறினார். கூட்டாட்சி அமைப்பை மாநாடு பொதுவாக ஒப்புக் கொண்டிருப்பதைச் சுட்டிக்காட்டி, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கம் என்ன என்பதையும் பின்வருமாறு விவரித்தார் அவர்:

"இந்தியாவில் அதிகாரமாற்றம் ஏற்படும் வரையில் மத்திய மற்றும் மாநிலச்சட்டசபைகளே இந்திய அரசாங்கத்தின் காரியங்களைப் பொறுப்பேற்று நடத்த வேண்டும். அப்படி நடந்து வரும் போது ஏற்படக்கூடிய சூழ்நிலைகளுக்கும் நிறைவேற்ற வேண்டிய குறிப்பிட்ட கடமைகளுக்கும் அவைகளே பொறுப்பாக வேண்டும். இந்தக் காலக்கட்டத்தில், இந்தச் சட்டசபைகள், சிறுபான்மை

வகுப்பினரின் அரசியல் உரிமைகளுக்கும் சலுகைகளுக்கும் போதிய உத்திரவாதமும் அளித்து வரவேண்டும். இப்போது உள்ள சூழ்நிலையில் நாட்டுப் பாதுகாப்பையும் வெளிவிவகாரத்தையும் கவர்னர் ஜெனரலே கவனித்து வரவேண்டும். இவைகளைக் கவனித்து நடத்தி வைப்பதற்குத் தேவையான அதிகாரங்களும் அவருக்கு வழங்கப்பட வேண்டும்.'' பிறகு பிரதமர், சட்ட மறுப்பில் ஈடுபட்டுள்ளவர்கள் வைசிராயின் வேண்டுகோளை ஏற்று இருதரப்பினரும் இணைந்து செய்ய வேண்டியதாக உள்ள பணிகளில் பொறுப்பு ஏற்பார்கள் என்று நம்புகிறேன் என்றும் தெரிவித்தார்.

## சட்டசபையும் முதல் வட்ட மேசை மாநாடும்:

முதலாவது வட்ட மேசை மாநாட்டு நடவடிக்கைகளை ஆராய்வதில் சட்டசபை உறுப்பினர்கள் மிகுந்த ஆர்வமாக இருந்தார்கள். எனவே, வட்ட மேசை மாநாட்டு நடவடிக்கைக் குறிப்புக்களைச் சபையில் தாக்கல் செய்யுமாறு கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்வதாக கே. சி. ராய் **1931** ஜனவரி **31**ல் கொண்டுவந்த தீர்மானம் சபையில் எளிதாக நிறைவேறியது.

சபையில் ஆளும் கட்சித்தலைவராயிருந்த சர் ஜார்ஜ் ரெய்னி, வட்ட மேசை மாநாடு தொடர்பான தஸ்தாவேஜுகள் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்ற தீர்மானம் ஒன்றை மார்ச் 2ஆம் தேதி பிரேரித்தார்.

இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அரசாங்கத்தின் அடக்கு முறைப் போக்குகளை வன்மையாகக் கண்டித்தார் டி. ரங்காச்சாரியார்: ''தடியடிகள், ஆயுதத்தளவாடங்கள் ஏற்றிய கார்கள், வெடிகுண்டுகள் ஆகியவைகளைக் கொண்டே அரசாங்கத்தார் இந்தியாவைத் தங்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஒட்டுநாடாக நீடித்து வைத்திருக்கலாம் என்று கருதினால் அது நடக்காது! மிதவாதிகள் சட்டமறுப்பு இயக்கத்தைக் கண்டிக்க வேண்டும் என்று அரசாங்கம் விரும்புகிறது. ஆனால், அரசாங்கம் கடுமையான அடக்குமுறைகளைக் கட்ட

விழ்ந்து விட்டிருக்கும்போது, மிதவாதிகள் மக்கள் முன் அத்தகையதொரு கண்டனத்தை எழுப்ப முடியாது என்பதை அரசு ஏனே உணரவில்லை" என்ருர் ரங்காச்சாரியார். வட்டமேசை மாநாடு பற்றிப் பேசுகையில், லண்டனில் இது தொடர்பாக உருவாகியுள்ள அடிப்படைக் கோட்பாடுகளை இந்தச்சபை பொது வாக ஒப்புக்கொண்டால் போதும்; தனித்தனிப் பிரச்சினைகளைக் குழுக்களே விவாதிக்குமாறு விட்டுவிட வேண்டும் என்று கூறினுர். லண்டனில் பிரபுக்கள் சபை ஒருமனதாக முடிவு செய்தது போல இந்தச் சபையும் இந்த விவகாரத்தில் ஒன்று பட்டுச் செயலாற்ற வேண்டும் என்றும் உறுப்பினர்கள் அனை வரையும் கேட்டுக் கொண்டார். சுயேச்சைக் கட்சியின் தலைவரான சர் அப்துர் ரஹீம் பேசுகையில், வகுப்புப் பிரச்சினை லண்டனிலேயே தீர்க்கப்படாமல் போனது பற்றி வருத்தம் தெரிவித்தார். எல்லாரும் ஒன்று கூடி, சொந்த விருப்பு வெறுப்பு களுக்கு இடம் தராமல் பிரச்சினைகளை அமைதியாக அணுகினல் பெரும்பாலான சிக்கல்கள் தீர்ந்துவிடும் என்று நம்புவதாக அவர் தெரிவித்தார்.

சண்முகம் செட்டி பேசுகையில், வட்ட மேசை மாநாட்டில் தெரிவிக்கப்பட்ட பாதுகாப்பு உத்தரவாதங்களை அலசி ஆராய்ந் தார்: "நமக்குக் கிடைக்கும் சுதந்திரமானது நாட்டின் முழுமை யான பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு சிறிதளவு தடையாக இருக்குமென்ருலும் அத்தகைய சுயராச்சியத்தால் நமக்கு யாதொரு பயனும் இல்லை. இந்த நோக்கில், மாநாட்டில் வகுக்கப் பட்ட பொருளாதாரப் பாதுகாப்பு உத்தரவாதங்களைப் பார்க்கும் போது ஏமாற்றமே மிஞ்சுகிறது. வரவு செலவுத் திட்டங்களைப் பொறுத்தவரை இந்த மாநாடு எல்லோரையும் மீறிச் செல்லக் கூடிய அதிகாரங்களைக் கவர்னர் ஜெனரலுக்குச் கொடுத்துள்ளது. இது போன்ற (பொருளாதார) விவகாரங்களில் கவர்னர் ஜெனரலுக்கு ஆலோசனை கூறக் கூடியவர் யார்? நிதித்துறை உறுப்பினர் சரியாகச் செயல்படுகிருரா அல்லவா என்பது பற்றி (அத்துறையில் உள்ள)சில அதிகாரிகளே அவருக்கு ஆலோசனை சொல்லுவார்களா? அல்லது வைட் ஹாலிலிருந்தோ லண்டனி லுள்ள வியாபாரிகளிடமிருந்தோ அவர் ஆலோசனை பெறப்

போகிறாரா?'' இவ்வாறு அடுக்கடுக்கான கேள்விகளை எழுப்பிய சண்முகம்செட்டி, பொருளாதாரம் தொடர்பான திட்டம் சுலபமாகச் செயற்படுத்த முடியாததாகவும் நாட்டின் சீரான வளர்ச்சியைக் கெடுப்பதாகவும் உள்ளது என்றார்.

அநேக உறுப்பினர்கள் பாதுகாப்பு உத்தரவாதங்கள் குறித்து அவநம்பிக்கையே தெரிவித்தார்கள். பி. தாசும், பி. ஆர். பூரியும் பாதுகாப்புச் செலவுகளைத் தீர்மானிக்கும் உரிமை சட்டசபைக்கே இருக்கவேண்டும் என்றார்கள். பாதுகாப்பு உத்தரவாதங்கள் பற்றிய தமது மாறுபட்ட கருத்தை வட்ட மேசை மாநாட்டிலேயே தெரிவித்திருந்த எச். பி. மோடி, பொருளாதாரப் பாதுகாப்பு உத்தரவாதங்கள் தேவைக்கு அதிகமானவைகளாகவும் தெளிவில்லாதவைகளாகவும் இருக்கின்றன என்றார். உதாரணமாக நாட்டின் நாணயச் சட்டங்களில் மாறுதல் கோரும் எந்த மசோதாவுக்கும் கவர்னர் ஜெனரலின் முன் அனுமதி பெறவேண்டும் என்ற நிபந்தனை நிரந்தரமாக்கப்பட்டுள்ளது. ஆனால், ரிசர்வ் பாங்கு உண்டாகும் வரையில் மட்டுமே இந்த அதிகாரம் கவர்னர் ஜெனரலுக்குத் தரப்படுகிறது என்று குறிப்பிட்டிருக்க வேண்டும் என்று விளக்கினார் அவர்.

வட்ட மேசை மாநாடு பெரிதும் வெற்றி பெற்றிருப்பதாக மியான் முகம்மது ஷா நவாஸ் கருதினார். அதில் தெரிவிக்கப்பட்டுள்ள பாதுகாப்பு நடவடிக்கைகள் அவ்வளவு மோசமானவை அல்ல என்று குறிப்பிட்ட அவர், கவர்னர்களுக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் வழங்கப் பட்டுள்ள தனி அதிகாரங்களைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கையில், "இந்தியா எந்த அந்நிய ஆட்சியின் உதவியும் இல்லாமலே தனது அரசியல் சட்டத்தைத் தயாரித்துக் கொள்வதானாலும் இத்தகைய பாதுகாப்புகள் சிலவாயினும் அதில் இருந்தே தீரும்'' என்றார். ஆனால், சிறுபான்மையினருக்கு வழங்கப்பட்டுள்ள பாதுகாப்பு உத்தரவாதங்கள்தாம் ஏமாற்றமளிக்கின்றன என்றார் மியான்.

பாட்னாவைச் சேர்ந்த மசூது அகமது, வட்ட மேசை மாநாடு தெரிவித்திருந்த கருத்துக்களை ஜின்னாவின் 14 குறிப்புகளோடு ஒப்பிட்டுக் காட்டி, முஸ்லிம்களின் நியாயமான கோரிக்கைகள்

ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்று குற்றஞ்சாட்டினார். முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதி வேண்டும் என்பதில் மிகத் தீவிரமாக இருந்தார் அகமது. "நிபந்தனையுடனோ நிபந்தனை இல்லாமலோ, பொதுத் தொகுதி முறையை முஸ்லிம்கள் இப்போது ஏற்கத் தயாராக இல்லை என்பதை நான் திட்டவட்டமாகத் தெரிவித்துவிட விரும்புகிறேன். ஸ்தல ஸ்தாபனங்களிலே கூட, முஸ்லிம்கள் தனித் தொகுதியையே விரும்புகிறார்கள்" என்றார் அவர். இது தொடர்பான திட்டவட்டமான முடிவு எதுவும் மேற்கொள்ளப்படாதது பற்றி வருத்தம் தெரிவித்த அவர், "தங்கள் கோரிக்கையைப் பற்றிய பிரச்சினை சரிவரத் தீர்க்கப்படாவிட்டால், அதுவே உள்நாட்டுக் குழப்பத்துக்கு வழிகோலலாம் என்று பல முஸ்லிம்கள் நினைக்கிறார்கள்" என்று எச்சரிக்கை விட்டார்.

மௌல்வி முகம்மது யாகூபைப் பொறுத்த அளவில், (வ. மே. மா.) கருத்துரைகள் எழுச்சி தருவனவாகவோ சோர்வு தருவனவாகவோ இல்லை. அதே சமயம், மாநாட்டின் மூலம் முஸ்லிம்களுக்கு எதுவும் கிடைத்துவிடவில்லை என்றே அவரும் கருதினார். அவர் மேலும் பேசுகையில், மத்தியக் கூட்டாட்சி தடங்கலில்லாமல் நடைபெற வேண்டுமானால், எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கு உரியவைகளாகவே இருக்க வேண்டும் என்று கருத்துத் தெரிவித்தார்.

பஞ்சாபைச் சேர்ந்த இந்து மகாசபைத் தலைவரான பாய் பரமானந்த், "இந்தியா ஒரு கூட்டாட்சியாக விளங்க வேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்ட ஆட்சியியல் அமைப்பே மாநாட்டின் பெரிய வெற்றி" என்றார். இது தவிர, பாதுகாப்பு உத்தரவாதங்களும் இட ஒதுக்கீடுகளும் ஆகிய கட்டுவேலிகளுக்கு உட்பட்டதாக இருந்தாலும், இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி என்ற முடிவு மாநாட்டின் மற்றொரு சாதனையாகும் என்றார் அவர். வகுப்புப் பிரச்சினை தீர்க்கப்படாததற்கு ஜின்னாவே காரணம் என்று குறை கூறிய பரமானந்த், மாநிலங்களுக்குச் சுய ஆட்சி வழங்குவது பற்றித் தமக்குத் தடையேதும் இல்லை என்றும் தெரிவித்துக் கொண்டார். அவர் தொடர்ந்து குறிப்பிட்டதாவது:

"அதெல்லாம், நாட்டுக்குப் பொறுப்பாட்சி வழங்கப்பட்ட பிறகு இந்த சபையிலேயே முடிவு செய்யப்பட வேண்டும். அப்படிக்கில்லாமல், இது தொடர்பான ஒரு தீர்வுக்குப் பாதுகாப்பு உத்தரவாதங்களையே இங்குள்ள முஸ்லிம்கள் முன்நிபந்தனை களாக விதிப்பார்களானால், அது தீவிரமானதொரு வகுப் புணர்ச்சிப் போக்கையே காட்டும். அந்தப் போக்கு இந்தியாவில் உண்மையான தேசீய உணர்ச்சி ஏற்படுவதற்குப் பெரிய தடை யாகும் என்று நான் கருதுகிறேன்."

அடுத்துப் பேசிய என். எம். ஜோஷி, "தொழிலாளர் விவகாரங் களில் மாநில ஆட்சிகளைக் கட்டுப்படுத்தித் தட்டிக்கேட்கும் அதிகாரம் மத்திய சட்டசபைக்கு இல்லாவிட்டால் மத்திய அரசு தொழிலாளர் உரிமைகளைச் சரிவரப் பாதுகாக்க இயலாது. எனவே, தொழிலாளர் நலன் என்னும் விவகாரம் மத்திய அரசிடமே இருக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

பம்பாயைச் சேர்ந்த நவாப் நகர்சிங்ஜி ஈஸ்வரசிங்ஜி பேசுகையில், முஸ்லிம்கள் தனியொரு தேசீய இனம், ஆதலால் சுயநிர்ணய உரிமையோடு கூடிய தனித்தொகுதி பெறும் உரிமை அவர்களுக்கு இருக்க வேண்டும், என்று வற்புறுத்தினார். முக்கியமாக, "நிலவுடைமையாளர்களின் நலன் பேணப்படுவதற்கு"ப் பாது காப்பு உத்தரவாதங்களும் அவசரகால அதிகாரங்களும் மிகமிக அவசியம் என்றார் அவர்.

ராமசாமி முதலியாரும் கோவாஸ்ஜி ஜெஹாங்கீரும் மாநாட்டின் சாதனைகளை விளக்கி விவரித்து, எல்லாத் தரப்பினரும் ஒருவருக் கொருவர் விட்டுக் கொடுக்கும் போக்கை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்கள்.

முதலாவது வட்ட மேசை மாநாட்டுக்குப் பிறகு காந்தியடிகளும் காங்கிரசின் மற்ற பெருந்தலைவர்களும் விடுதலை செய்யப் பட்டார்கள். காந்தியடிகளுக்கும் வைசிராய்க்குமிடையே சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடந்து ஓர் உடன்பாடும் ஏற்பட்டது. இந்த உடன்பாடுதான் 'காந்தி இர்வின் ஒப்பந்தம்' என்று சொல்லப்படுகிறது. இதனால், காங்கிரஸ் சார்பில் காந்தியடிகள் இரண்டாவது வட்ட மேசை மாநாட்டில் பங்கு

கொண்டார். தேசீய முஸ்லிம்களின் தலைவரான டாக்டர் அன்சாரியை (ப்பிரதிநிதியாக) நியமித்து அனுப்ப வேண்டும் என்று காந்தியடிகள் கோரினார். அரசாங்கம் இந்தக் கோரிக்கையை மறுத்து, மாநாட்டுக்கு வேறு பிரதிநிதிகளை நியமித்தது. இவ்வாறு நியமனம் பெற்ற முஸ்லிம் பிரதிநிதிகளில் ஜின்னாவும் ஒருவர்.

இரண்டாவது வட்ட மேசை மாநாடு 1931 செப்டம்பர் 7 ஆம் தேதி லண்டனில் தொடங்கியது. இதற்கிடையில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி நடைபெற்றது. அதாவது, இங்கிலாந்தில் தொழில் கட்சி அரசாங்கம் மாறி, ராம்சே மெக்டொனால்டைப் பிரதமராகக் கொண்ட தேசீய அரசாங்கம் பதவி ஏற்றது. ஆனாலும், அரசாங்கத்தில் கன்சர்வேட்டிவ் கட்சியே பெரும்பான்மையாக இருந்தது. இந்தியா மந்திரியாகப் பொறுப்பேற்றிருந்த சர் சாமுவல் ஹோரும் அந்தக் கட்சியைச் சேர்ந்தவராகவே இருந்தார்.

காந்தியடிகள், காங்கிரசின் தீர்மானத்துக்கு இணங்க, மத்தியிலும் மாநிலங்களிலும் முழுப் பொறுப்பாட்சி ஏற்பட வேண்டும் என்றும் கவர்னர் ஜெனரலுக்குத் தனி அதிகாரம் எதுவும் இருக்கக் கூடாது என்றும் கோரினார். இந்த முறையும் வகுப்புப் பிரச்சினையே பெரிய தடையாக இருந்தது. இதைப்பற்றி ஆராய்வதற்குச் சிறுபான்மைக் குழு ஒன்றை மாநாடு நியமித்தது. ஆனால், அந்தக் குழுவும், எல்லோரும் ஒப்புக்கொள்ளத்தக்கதான முடிவுக்கு வர முடியவில்லை. வகுப்புவாரியான தனித்தொகுதி முறையைக் காந்தியடிகள் ஏற்கவில்லை; முஸ்லிம் வகுப்புவாதிகள் அந்த உரிமையை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. காந்தியடிகள் மேற்கொண்ட சமரச முயற்சிகளை இந்து வகுப்புவாதிகள் உறுதியாகத் தடுத்து நின்றார்கள். (பிரிட்டிஷ்) ஏகாதிபத்தியத்தின் நலன்களும் இந்த விவகாரத்தில் பின்னப்பட்டிருந்ததால், எந்தவிதமான சமரசமும் ஏற்பட முடியவில்லை. இது குறித்து ஆங்கில நூலாசிரியர் எட்வர்ட் தாம்ப்சன் எழுதியிருப்பதாவது:

"வட்ட மேசை மாநாட்டின் போது விட்டுக் கொடுக்காத (பிடிவாதமான) போக்குடைய முஸ்லிம்களுக்கும் குடியாட்சிக் கோட்பாடுகளுக்கு எதிரான சில பிரிட்டிஷ் அரசியல் வட்டாரங்

களுக்கும் இடையே வலுவான கூட்டணி ஒன்று உருவாகிச் செயற்பட்டு வந்தது. மாநாட்டு நடவடிக்கைகளைத் தடுத்து நின்றது இந்தக் கூட்டணிதான் என்று இந்தியாவில் பரவலாகப் பேசப்பட்டு வருகிறது. இது பெரும்பாலும் உண்மையே என்பதை நிரூபிக்க முடியும் என்பதே என் நம்பிக்கை.''

வகுப்புப் பிரச்சினைக்கு எந்தத் தீர்வும் காணுமலேதான் மாநாடு முடிவடைந்தது. முக்கியமான பிரச்சினையிலும், முதலாவது மாநாட்டில் ஏற்பட்டதற்கு மேல் எந்த முன்னேற்றமும் ஏற்பட வில்லை. மாநாடு 1931 டிசம்பர் 11ல் முடிவடைந்தது.

காந்தியடிகள் இந்தியாவுக்குத் திரும்பியதும் அரசாங்கம் காங்கிரஸ் ஸ்தாபனங்களின் மீது தாக்குதல் தொடங்கியது. சட்டமறுப்பு இயக்கமும் மீண்டும் தொடங்கப்பட்டது. காந்தியடிகளும் மற்றத் தலைவர்களும் கைது செய்யப்பட்டார்கள்.

### வகுப்புரிமைச் சிபாரிசும் காந்தியடிகள் சாகும்வரை உண்ணுவிரதம் மேற்கொள்ளுதலும் :

காந்தியடிகள் சிறையிலிருக்கும்போதே, 1932 ஆகஸ்டு 16ல் பிரதமர் மெக்டொனுல்டு தம்முடைய வகுப்புரிமைச் சிபாரிசுகளை அறிவித்தார். இந்தச் சிபாரிசுகளின் படி, முஸ்லிம்களுக்கு மட்டு மல்லாமல், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் மாநிலச் சட்டசபைகளில் தனித்தொகுதி வழங்கப்பட்டது. இந்தியாவில் மேலும் பிளவு ஏற்படுத்தும் ஒரு முயற்சி இது. இதன் மூலம், இந்துக்களுக் குள்ளேயே மேல்சாதிக்காரர்களுக்கும் தீண்டாதவர்களுக்கும் இடையே பிளவை ஏற்படுத்தும் முயற்சி தொடங்கப்பட்டது. காந்தியடிகள் சிறையில் இருந்தே பிரதமருக்கு ஒரு கடிதம் எழுதினர். அதில், "என்னுடைய உயிரைக் கொடுத்தாவது இந்த முடிவைத் தடுப்பேன்'' என்று தெரிவித்திருந்தார். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வழங்கும் திட்டத்தை பிரிட்டிஷ் அரசாங்கம் செப்டம்பர் 20 ஆம் தேதிக்குள் திரும்பப் பெற்றுக்கொள்ளாவிட்டால், சாகும்வரை உண்ணுவிரதம் மேற்கொள்ளப் போவதாகவும் காந்தியடிகள்

எச்சரித்தார். "தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகள் எல்லா வாக்காளர்களாலும் பொதுவாகவே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்; தொகுதி எவ்வளவு விரிவு பட்டதாக இருந்தாலும் சரி" என்றும் விளக்கியிருந்தார் காந்தியடிகள்.

**சட்டசபையில் கவலை :**

காந்தியடிகள் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்தது இந்தியா எங்கும் பெரிய கொந்தளிப்பை ஏற்படுத்தியது. இந்தக் கொந்தளிப்பு சட்டசபையிலும் எதிரொலித்தது. செப்டம்பர் 13 ஆம் தேதி சி. எஸ். ரங்க அய்யர் சபையில் ஒத்தி வைப்புத் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார்.

"காந்தியடிகள் இறந்தால் இங்கே யார் வாழ்வார்?" என்ற உருக்கமான கேள்வியோடு தொடங்கிய ரங்க அய்யர், பிரிட்டிஷ் பிரதமரின் தகாத செயலை வன்மையாகக் கண்டித்தார்: "இருபது ஆண்டுகளாகப் பரப்பப்பட்டு வரும் இந்தப் 'பிரிவினைவாத நஞ்சானது' பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சுயநலனுக்காகவே பரப்பப்படுகிறது. இதனால் நமது மதம், கடவுள், மக்கள் எல்லோரும் சின்னாபின்னமாகச் சிதறிப் போவோம் என்பது திண்ணம். இந்தியப் பொதுஜன அபிப்பிராயத்தைப் பரவலாக்கவும் மக்களின் கருத்தை ஒன்று திரட்டவும் ஒரு வாய்ப்புத் தருமாறு கோரினார், காந்தியடிகள். அரசாங்கம் அதை மறுத்து விட்டது. ஒன்று மட்டும் நிச்சயம்: காந்தியடிகள் இறந்து போவாரானால், இந்தியாவுடன் பிரிட்டனுக்கு உள்ள தொடர்பும் அத்தோடு செத்தது!"

தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருந்த ராவ் பகதூர் எம். சி. ராஜா, "இந்திய வரலாற்றிலேயே, தாழ்த்தப்பட்ட மக்களைப் பற்றிய விவகாரம் என்றைக்கும் இது போல இவ்வளவு முக்கியத்துவம் பெற்றதில்லை" என்றார். இதற்காகத் தாழ்த்தப்பட்ட மக்கள் அனைவரும் காந்தியடிகளுக்கு நன்றி செலுத்த வேண்டும்; காரணம், காந்தியடிகளின் வாழ்க்கை இலட்சியங்களில் தாழ்த்தப்பட்ட மக்களுக்குப் புது வாழ்வு அளிப்பதும் ஒன்று, என்று உருக்கமாகக் குறிப்பிட்ட ராஜா,

ஆட்சி அதிகாரம் இந்தியரின் கைக்கு மாறப்போகிறது என்பது தெளிவாகும் காலத்திலிருந்து பொதுத் தொகுதி முறையை ஏற்றுக் கொள்ளத் தனது (தாழ்த்தப்பட்ட) மக்கள் ஆயத்தமாக இருக்கிறார்கள் என்று உறுதியளித்தார். அவர் தொடர்ந்து பேசியதாவது :

"எங்களுக்கு வேண்டியதெல்லாம் பொதுத் தொகுதிகளிலிருந்து எங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் திட்டவட்டமான அதிகாரமும், அதன் மூலம் அந்தப் பிரதிநிதிகளை எங்கள் நலன்களுக்கு உகந்தவாறு செயற்படுத்தும் உரிமையுமே. பொதுத் தொகுதிகளிலேயே தனி இடங்களை ஒதுக்கும் திட்டம் நடைமுறைக்கு ஒத்துவராது என்று பிரதமர் ஏன் சொல்லுகிறார் என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஏற்கெனவே இந்தத் திட்டம் சென்னையிலும் வேறு சில மாநிலங்களிலும் நடைமுறையில் இருக்கிறது; திருப்திகரமாகவும் செயற்பட்டு வருகிறது."

வகுப்பு உரிமைச் சிபாரிசில் வகுக்கப்பட்டுள்ள திட்டம் தாழ்த்தப்பட்ட மக்களை "அரசியலில் தீண்டாதவர்கள்" என்ற நிலைக்கு ஒதுக்கிவிடும் என்றும் கூறினார் ராஜா. தாழ்த்தப்பட்ட மக்களைப் பிரிக்கும் திட்டம் எதுவும் (இந்தச் சிபாரிசில்) இல்லை என்று பிரதமர் சொல்லியிருந்ததை வன்மையாக மறுத்துரைத்தார் ராஜா. "தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதிகள் உயர் சாதியினரின் வாக்குகளைக் கோரவேண்டியதே இல்லை என்றால், இங்கே, பொதுவான குடியுரிமை பற்றிய எண்ணத்தை எப்படி உண்டாக்க முடியும்?" என்றும் அவர் கேட்டார்.

பஞ்சாபைச் சேர்ந்த சர்தார் சந்த் சிங், "இன்று உலகில் வாழும் ஒரே புனிதமான மனிதர் காந்தியடிகள்" என்று புகழ்ந்துரைத்து, "இந்தப் பிரச்சினையில் அவர் இறக்க நேர்ந்தால், இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் இடையே உள்ள பிளவு, அதன் பிறகு இணையவே முடியாத பெரும் பிளவாகி விடும்" என்று எச்சரித்தார். தங்கள் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ முடிவுகளுக்கு எதிராக என்னென்ன சக்திகளெல்லாம் (இணைந்து) உள்ளன என்பதை அரசாங்கம் புரிந்துகொள்ள வேண்டும் என்றும் அவர் கூறினார்.

வட்ட மேசை மாநாட்டின் போது தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இடங்கள் ஒதுக்குவதைக் காந்தியடிகள் கடுமையாக எதிர்த்ததாலேயே, அவர்களுக்குத் தனித்தொகுதி வேண்டும் என்று அம்பேத்கார் வற்புறுத்தினர் என்ருர் கோவாஸ்ஜி ஜெஹாங்கீர். அவர் தொடர்ந்து பேசுகையில், "இப்போது காந்தியடிகள் தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சில இடங்கள் ஒதுக்குவது பற்றிய பிரச்சினையில் சிறிது விட்டுக் கொடுப்பதாகத் தெரிவதால் எம். சி. ராஜாவுக்கும் அம்பேத்காருக்கும் இடையில் நிலவிய பெரிய கருத்து முரண்பாடு அகன்றிருக்கிறது" என்ருர். எனவே, இந்த விவகாரத்தைத் தீர்த்து வைப்பதற்கு அரசாங்கம் காந்தியடிகளுக்கு மீண்டும் ஒரு வாய்ப்பு அளிக்க வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

முகம்மது யாகூப் பேசுகையில், இதிலே அரசாங்கம் ஒன்றும் செய்வதற்கில்லை என்றும், ஒன்றுபட்டு நின்று இந்தப் பெரியவரின் உயிரைக் காப்பாற்ற வேண்டியது இந்து சமூகத்தின் இரண்டு பிரிவினரிலும் (உயர்சாதி மற்றும் தாழ்த்தப்பட்ட சாதியினரில்) உள்ள தேசியவாதிகளின் கடமையாகும் என்றும் குறிப்பிட்டார். அப்துர் ரஹீமும், இந்தப் பொறுப்பைப் பிரதமரின் தலையில் சுமத்துவது சரியில்லை என்றே கருதினர். ஆனாலும், தாழ்த்தப்பட்ட மக்களின் நலனில் மெய்யான அக்கறை கொண்டுள்ள காந்தியடிகள், உயர்சாதி இந்துத் தலைவர்களையும் தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவர்களையும் சமரசப்படுத்துவதற்கு அரசாங்கம் போதிய வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தரவேண்டும் என்று கூறினர் ரஹீம்.

காந்தியடிகளிடம் தமக்கு மிகுந்த மதிப்பு உண்டு என்று கூறிய அரசாங்கக் கட்சித் தலைவர் சர் சி. பி. ராமசாமி அய்யர், அரசாங்கத்தின் சார்பில் பின்வரும் கருத்துக்களைத் தெரிவித்தார்: "இந்த விவகாரத்தில் காந்தியடிகள் மேற்கொண்டுள்ள நேரடி நடவடிக்கை முறையை என்னல் ஏற்க முடியவில்லை. இதனல் விரும்பத்தகாத விளைவுகளும் சங்கடமான சூழ்நிலைகளும் ஏற்படக்கூடும் என்பது என் கருத்து. இரண்டு தரப்பினரும் மனம் விட்டுப் பேசிச் சமரச முடிவுக்கு வருவதே இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்குரிய ஒரே வழி."

ஹரி சிங் கௌர், எஸ். சி. மித்ரா முதலான வேறுசில உறுப்பினர்கள், சம்பந்தப்பட்ட தலைவர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி சமரசம் ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் காந்தியடிகளுக்குப் போதிய அவகாசம் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். ரங்க அய்யரின் தீர்மானத்தின் மீது விவாதம் மட்டுமே நடந்தது. (வாக்கெடுப்பு நடத்தப்படவில்லை.)

ஆனாலும், சிறைச்சாலையிலேயே பார்வையாளர்களைச் சந்திக்கவும் வெளியில் உள்ளவர்களோடு கடிதத்தொடர்பு வைத்துக் கொள்ளவும், அரசாங்கம் காந்தியடிகளுக்கு வசதி செய்து கொடுத்தது. இந்தியத் தலைவர்களும் சுறுசுறுப்பான நடவடிக்கைகளில் ஈடுபட்டார்கள். ஸப்ரூவின் ஆலோசனையின் பேரில் ஒரு புதிய திட்டம் வகுக்கப்பட்டது. அதன்படி, மாநிலச் சட்டசபைகளில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த (148) இடங்களின் தொகை இரண்டு மடங்குக்கும் அதிகமாக உயர்த்தப்பட்டது. இந்தப் புதிய திட்டத்தின்படி, தாழ்த்தப்பட்ட மக்கள் ஒவ்வோர் இடத்துக்கும் நான்கு பேரைத் தேர்வுசெய்து அறிவிப்பார்கள்; அவர்களுள் ஒருவரை எல்லா வாக்காளர்களுமாகத் தேர்ந்தெடுப்பார்கள். இந்தக் கோட்பாடுகளின் மீதான பூனா ஒப்பந்தம் பிரதமரால் ஏற்றுக்கொள்ளப்பட்டதால், காந்தியடிகள் செப்டம்பர் 26ஆம் தேதி தம்முடைய உண்ணாவிரதத்தைக் கைவிட்டார்.

### வெள்ளை அறிக்கையும் சட்டசபையும் :

வகுப்புரிமைச் சிபாரிசு அறிவிக்கப்பட்டுப் பூனா ஒப்பந்தமும் ஏற்பட்ட பிறகு, வட்ட மேசை மாநாட்டின் குறுகிய கூட்டத் தொடர் ஒன்று 1932 நவம்பர் 17 முதல் டிசம்பர் 24 வரை நடைபெற்றது. இரண்டாவது மாநாடு நியமித்த உட்குழுக்களின் அறிக்கைகளைப் பரிசீலனை செய்வதே இந்தக் கூட்டத் தொடரின் முக்கியமான வேலைத் திட்டம். இந்த அறிக்கைகள் மற்றும் சம்பந்தப்பட்ட குறிப்புக்களின் அடிப்படையில் பிரிட்டிஷ் அரசாங்கம் உருவாக்கிய இந்திய ஆட்சியியல் திட்டம், 1933 மார்ச் 17ல் ஒரு வெள்ளை அறிக்கையாக வெளியிடப்பட்டது. முதலாவது

வட்ட மேசை மாநாடு முடிந்ததிலிருந்தே தொடர்ந்து (இங்கிலாந்தில்) வலுவடைந்து வந்த பிற்போக்குத்தனமான கண்டனங்களைத் திருப்திப்படுத்தும் விதமாகவே இந்த வெள்ளை அறிக்கை தயாரிக்கப்பட்டிருந்தது. இந்தியாவில், காங்கிரஸ் காரர்களும் மிதவாதக் கட்சியினரும் மட்டுமன்றி முஸ்லிம்களும் இந்தத் திட்டத்தை நிராகரித்தார்கள். இந்தத் திட்டம் பல்வேறு பாதுகாப்பு உத்தரவாதங்களும் ஒதுக்கல்களுமான அரண்களைக் கொண்டதாக இருந்ததோடு, டொமினியன் அந்தஸ்தை அந்தச் சீர்திருத்தத்தின் நோக்கங்களில் ஒன்ருகக் கூடக் குறிப்பிடவில்லை. அலகாபாத் பத்திரிகையான **தி லீடர்**, "இந்தத் திட்டத்தை என்னவாக வேண்டுமானுலும் சொல்லிக் கொள்ளலாம். ஆனுல், இது சுயாட்சித் திட்டமல்ல என்பது மட்டும் நிச்சயம்" என்று குறிப்பிட்டது.

மார்ச் மாதக் கடைசியில் இதுபற்றிச் சட்டசபையில் மூன்று நாள் விவாதம் நடந்தது. மார்ச் 29ல், அப்போது சட்டசபைத் தலைவராக இருந்த சர் பிரோஜேந்திர மித்தர், வெள்ளை அறிக்கையை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளலாம் என்ற தீர்மானத்தை முன்மொழிந்தார். இந்தத் தீர்மானத்துக்கு சர் அப்துர் ரஹீம் ஒரு திருத்தம் கொண்டுவந்தார். அதைக் கேட்டுச் சபையினர் உற்சாக ஆரவாரம் செய்தார்கள். அந்தத் தீர்மானம் கூறியதாவது:

"இந்திய ஆட்சியியல் சீர்திருத்தங்கள் சம்பந்தமாக மேன்மை தங்கிய மன்னர் பிரானின் அரசாங்கம் தெரிவித்துள்ள ஆலோசனைகள், மத்தியிலும் மாநிலங்களிலும் உள்ள சட்டசபைகளின் இந்தியப் பிரதிநிதிகளுக்கு அதிகமான உரிமைகளும் பொறுப்பும் வழங்கும் விதமாகத் தீவிரமாகத் திருத்தம் செய்யப்பட்டால் அன்றி, நாட்டில் முன்னேற்றத்தையும் அமைதியையும் திருப்தியையும் ஏற்படுத்த முடியாது என்று இந்தச் சபை கருதுகிறது. இதை மன்னர்பிரானின் அரசாங்கத்துக்குத் தெரிவித்துவிடுமாறு இச்சபை கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்கிறது."

திருத்தத் தீர்மானத்தின் மீது பேசுகையில், ரஹீம், வெள்ளை அறிக்கை "நாட்டிலே பெரிய கொந்தளிப்பை ஏற்படுத்தியுள்ளது என்று கூறுவது மிகையல்ல" என்ருர். பொறுப்பாட்சி பெறு

வதற்காக இங்கே எவ்வளவு காலமாக அரசியல் கிளர்ச்சி நடந்து வருகிறது என்பது நாமெல்லாம் அறிந்ததே. அதை எல்லாம் கணக்கிலேயே எடுத்துக் கொள்ளாத இந்த ஆலோசனைகளை இந்திய மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று பிரிட்டிஷ் பாராளுமன்றமும் பிரிட்டிஷ் மக்களும் இந்திய அரசாங்கமும் எதிர்பார்ப்பது முறையாகாது; மக்கள் நிச்சயமாக இதை ஏற்க மாட்டார்கள்'' என்றும் அவர் எச்சரித்தார்.

இதை மேலும் விளக்குகையில் ரஹீம் தெரிவித்ததாவது: "ஒரு குறிப்பிட்ட காலத்துக்குப் பாதுகாப்பு உத்தரவாதங்கள் தேவை தாம். ஆனால், மாறுதல் காலம் என்பது எப்போது முடிவடையும்? மேலும், மாறுதல் காலத்திய பாதுகாப்பு உத்தரவாதங்கள் மிகப்பரந்தவையாகவும் கட்டுப்பாடு அற்றவையாகவும் உள்ளன. கவர்னர்களுக்கும் கவனர் ஜெனரலுக்கும் தரப்பட்டுள்ள அதி காரங்கள் மிகமிக அதிகம்; ராணுவம், பாதுகாப்பு, நிதி ஆகியவை மட்டுமல்லாமல் ரெயில்வேக்கள் கூட இவர்களின் அதிகாரத்துக்கு ஒப்படைக்கப்பட்டுவிட்டால், சட்டசபை நிர்வகிக்கக் கூடிய விவகாரம் என்னதான் இருக்கிறது?'' என்று கேட்டார் ரஹீம்.

ஹரி சிங் கௌர், பி. தாஸ், சி. எஸ். ரங்க அய்யர், கே. சி. நியோகி, ராஜா பகதூர் ஜி. கிருஷ்ணமாச்சாரியார், அமர்நாத் தத், கயா பிரசாத் சிங் ஆகியோரும் வேறு பலரும் இந்தத் திட்டத்தில் அடங்கியிருந்த பாதுகாப்பு உத்தரவாதங்களை வன்மையாகக் கண்டித்துப் பேசினார்கள்.

இதற்கு மாருக, "இந்தியாவில் எல்லைப் பிரச்சினையும் வகுப்புப் பிரச்சினையும் இருந்து வருவதால் கவர்னர் ஜெனரலுக்கும் கவர்னர்களுக்கும் சில தனி அதிகாரங்கள் இருக்கவேண்டியது அவசியமே'' என்று முகம்மது யாகூப் கூறினார். ஆனாலும், அவ்வாறு கொடுக்கப்பட்டுள்ள சில அதிகாரங்கள் அரசாங் கத்துக்கு இந்தியர்கள் மீதுள்ள அவநம்பிக்கையையே காட்டுகிறது என்றும் அவர் குறிப்பிட்டார். வெள்ளை அறிக்கையைப் பற்றிப் பேசுவதோடு முஸ்லிம்களுக்குள்ள குறைகளையும் எடுத்துரைக்கப் போவதாகச் சொல்லிக் கொண்ட யாகூப் தொடர்ந்து பேசிய தாவது: மத்தியக் கூட்டாட்சியில் பங்குபெறும் சுதேச

சமஸ்தானங்களின் பிரதிநிதித்துவத்திலும், அமைச்சவையிலும், நிருவாகத்துறையிலும் முஸ்லிம்களுக்கு உரிய பங்கு இவ்வளவு என்று தெளிவாக வரையறுக்கப்பட வேண்டும். தவிர, தனித் தொகுதி அடிப்படையில், மத்திய மேல்சபையிலும் முஸ்லிம் பிரதிநிதிகள் இடம்பெற வேண்டும்.

இந்து மகாசபையின் சார்பில் பேசிய பாய் பரமானந்த், வெள்ளை அறிக்கையில் முஸ்லிம்களுக்கு எவ்வளவோ சலுகைகள் வழங்கப்பட்டிருந்தும், அவர்கள் திருப்தியடையாமல் மேலும் வகுப்புக் கோரிக்கைகளை விடுத்த வண்ணமாக இருக்கிறார்களே என்று கசந்தார். இந்தியாவில் தேசிய உணர்வையும் குடியாட்சி முறையையும் அழிக்கும் விதமான தேர்தல் முறைகளை அரசாங்கம் பின்வாசல் வழியாகப் புகுத்திவருவது மிகவும் கண்டிக்கத்தக்கது என்றார் அவர். இங்குள்ள வகுப்புவாதத்தின் மீது "வட்டம்" வசூலிப்பது போல அரசாங்கம் நடந்துகொள்கிறது என்றும் அவர் குற்றம் சாட்டினார். அவர் தொடர்ந்து பேசுகையில், "மத்திய சட்டசபையில் உள்ள இடங்கள் பகிர்ந்தளிக்கப்படும் முறை இந்தியாவின் பெரும்பான்மையினரான இந்துக்களையே சிறுபான்மையினராக்கும் விதமாக உள்ளது" என்று அரசாங்கத்தைக் குறைகூறினார்.

சீக்கிய வகுப்பினர் சார்பில் பேசிய சர்தார் சந்த் சிங், சீக்கியர்கள் இந்த வெள்ளை அறிக்கையில் உள்ள ஆலோசனைகளில் கருத்துச் செலுத்தவே போவதில்லை என்று அழுத்தம் திருத்தமாக அறிவித்தார். "வெள்ளை அறிக்கையிலுள்ள வகுப்பு உரிமைச் சிபாரிசுகளும் மற்றும் கருத்துரைகளுமே, டோரிக் கட்சி அரசாங்கம் அவர்களின் (சீக்கியரின்) உரிமைகளைப் பற்றிப் பேசும் தகுதி படைத்ததல்ல என்பதைக் காட்டிவிட்டன" என்றார் அவர். "இந்தியாவை முரண்பட்ட வகுப்புக்களின் நிரந்தரமான போர்க்களமாக ஆக்கிவைப்பதே இந்த வெள்ளை அறிக்கையின் நோக்கம். பிரிட்டிஷ்காரர்கள் என்றைக்குமே விட்டுக் கொடுக்கப் போவதில்லை. ஆட்சியதிகாரம் இந்தியர் கைக்கு மாறுவதற்கு இந்தியாவிலுள்ள சிவில் நிருவாகத்தினர் இணங்கப் போவதுமில்லை. விவாதத்தாலும்

விளக்கங்களாலும் பிரிட்டிஷ்காரர்களை இணங்கி வரச் செய்து விடலாம் என்று நம்புகிற நமது நண்பர்கள், உண்மையில், அசல் ஏமாளிகளே !'' என்றார் சர்தார்.

ராமசாமி முதலியாரின் பேச்சில் மிதவாதிகளின் கருத்துத் தோரணை அப்பட்டமாகப் பிரதிபலித்தது. வட்ட மேசை மாநாட்டில் ஏற்பட்ட ஒப்பந்தங்களிலிருந்து இந்த வெள்ளை அறிக்கை வெகு தூரம் விலகிச் சென்றுவிட்டது என்று குறிப்பிட்ட அவர், ''உதாரணமாக அகில இந்திய சர்வீஸ் கமிஷன் உறுப்பினர்களைக் கவர்னர் ஜெனரலும் மாநில சர்வீஸ் கமிஷன் உறுப்பினர்களைக் கவர்னர்களும் நியமிக்க வேண்டும் என்று வட்ட மேசை மாநாடு சிபாரிசு செய்திருந்தும் வெள்ளை அறிக்கையின்படி இந்த அதிகாரம் 'வைட் ஹால் பாதுஷா'வான இந்தியா மந்திரிக்குக் கொடுக்கப்பட்டுள்ளது'' என்று விளக்கினார். இந்த அறிக்கையின் வேறு பல ஆட்சேபகரமான அம்சங்களையும் முதலியார் எடுத்துக் காட்டினார்: ''நிதிப் பொறுப்பைப் பற்றிக் குறிப்பிடும்போது, இந்த வெள்ளை அறிக்கை, இந்தப் பொறுப்பு மாற்றப்படுவதற்கு முன்பு ரிசர்வ் பாங்கு 'ஏற்கனவே வெற்றிகரமாகச் செயற்பட்டுக் கொண்டு' இருக்கவேண்டும் என்கிறது. உண்மையில் இந்தத் தொடரின் பொருள் என்ன என்பதே விளங்கவில்லை. இந்தச் சிபாரிசுகளை ஒவ்வொன்றாக விவாதித்து வந்து இவைகளின் மொத்த விளைவைக் கவனிக்கையில் பழுத்த மிதவாதிகளும் திகைத்து நடுங்கி நிற்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இந்தியா மந்திரிக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் அவ்வளவு அதிகம்!'' என்றார் முதலியார்.

சிந்துவைச் சேர்ந்த லால்சந்த் நவல்ராய் பேசும்போது, ''இந்தத் திட்டம் இந்திய அரசாங்கத்தினுடைய அதிகார வர்க்கப் போக்கின் அப்பட்டமான பிரதிபலிப்பு'' என்றார். ''இந்த அதிகார வர்க்கத்தை உறுதிப்படுத்தவே (இந்தியக்) கூட்டாட்சி அமைப்பில் ஏகாதிபத்தியப் பிரபுத்துவப் போக்கு நுழைக்கப் பட்டிருக்கிறது'' என்றும் அவர் குற்றம் சாட்டினார். சிந்துவிலுள்ள இந்துச் சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு உத்தரவாதம் எதுவும் இல்லாமல் அதைத் தனி மாநிலமாகப் பிரித்து அமைப்பதற்கும் லால்சந்த் எதிர்ப்புத் தெரிவித்தார்.

முதலிலேயே அறிவிக்கப்பட்டபடி, இந்த மூன்று நாள் விவாதங்களிலும், அரசாங்கத் தரப்பு உறுப்பினர் ஒருவரும் வெள்ளை அறிக்கையைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கவில்லை. கடைசியில், சர் அப்துர் ரஹீமின் திருத்தம் சபையில் ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதாவது சுயராச்சியக் கட்சி உறுப்பினர் யாருமே இல்லாத அந்தச் சட்டசபையும் வெள்ளை அறிக்கையை நிராகரித்தது என்று ஆயிற்று.

### சட்டசபையின் இயலாத்தனம் :

பிரிட்டிஷாரின் நலன்களைப் பாதுகாக்கும் விதமாக மேற்கொள்ளப்பட்ட நிதி மற்றும் பொருளாதார சம்பந்தமான நடவடிக்கைகளின் போது சட்டசபையின் இயலாத்தனம் வெட்ட வெளிச்சமாயிற்று. 1931ல் இந்திய அரசாங்கம் கடுமையான நிதிப் பிரச்சினை ஒன்றை எதிர்நோக்க நேர்ந்தது. 1931-32 நிதியாண்டின் முதல் ஐந்து மாதங்களில், அரசாங்கத்தின் வருவாய், வரவு செலவுத் திட்ட மதிப்பீடுகளை விடக் குறைவாக இருந்தது. சட்டமறுப்பு இயக்கத்தின்போது மேற்கொள்ளப்பட்ட வரிகொடா இயக்கம், பகிஷ்கரிப்பு இயக்கம் முதலியவைகளால் ஏற்பட்ட பாதிப்பு இது. நிதியாண்டின் இறுதிக்குள் பற்றுக்குறை 19 கோடியையும் தாண்டிவிடும் என்பதை அரசாங்கம் நன்கு புரிந்துகொண்டது. இந்தச் சரிவை ஈடு கட்டவும் உலகெங்கும் ஏற்பட்டு வந்த பொருளாதார நெருக்கடியின் விளைவுகளைச் சமாளிக்கவும் இந்திய அரசாங்கம் அவசர நிதி மசோதா ஒன்றைக் கொண்டு வந்தது. அதை விவாதித்து நிறைவேற்றுவதற்கென்றே சட்டசபையின் சிறப்புக் கூட்டத் தொடர் ஒன்றையும் தில்லியில் நவம்பர் 4 முதல் 20 வரை நடத்தியது.

நிதியாண்டில் எதிர்பார்க்கப்படும் பெரிய பற்றுக் குறையையும் 1933 மார்ச் வரையிலான பொருளாதாரத் தேவைகளையும் சரிக்கட்டுவதற்கு 1933 மார்ச் கடைசியில் ரூ. 5 கோடி உபரியாக வேண்டும் என்றும் எனவே இந்த (புதிய) திட்டம் 18 மாத காலமே அமுலில் இருக்கும் என்றும் நிதித்துறை உறுப்பினர் விளக்கினார்.

மசோதாவில் சொல்லப்பட்ட வரிவிதிப்புத் திட்டங்கள் ஒரே குழப்பமாக இருந்ததால் அந்த "அப்பாவி"ச் சட்டசபை கூட வரிந்து கட்டிக்கொண்டு எதிர்ப்புக்களை தொடுக்கத் தொடங்கி விட்டது. "நமது மாண்பு மிகு நண்பரின் வரி விதிப்புத் திட்டங்களில் சிலவற்றை நாம் ஏற்க முடியாத நிலையில் (எதிர்ப்புத் தெரிவித்துக் கொண்டு) இருக்கிறோம் என்றால், அவரை எதிர்க்க வேண்டும் என்பதற்காகவே அப்படிச் செய்யவில்லை. வரிச் சுமையைப் பொறுத்தவரையில் தாங்க முடியாத ஒரு கட்டத்துக்கு வந்துவிட்டோம் என்று நாம் உணர்ந்திருப்பதாலேயே அவரை எதிர்க்க வேண்டியவர்களாகிறோம்" என்றார் சண்முகம் செட்டி.

மேலும் வரிச்சுமை ஏற்றப்பட்டால் நாட்டு மக்கள் தாங்க மாட்டார்கள் என்பதை எல்லா உறுப்பினர்களும் அறிந்துதான் இருந்தார்கள். அதேபோல், அரசாங்கம் இந்த மசோதாவை நிறைவேற்றி விடுவதில் பிடிவாதமாக இருக்கிறது என்பதையும் அவர்கள் உணர்ந்தார்கள். எனவே, அப்போது தேசீயக் கட்சியின் தலைவராக இருந்த சர் ஹரி சிங், "நாங்கள் அரசாங்கத்தோடு ஒத்துழையாமை(ப்போர்) நடத்துவதற்காக இங்கு வரவில்லை. ஒத்துழைப்புத் தருவதற்காகவே வந்திருக்கிறோம். அந்த ஒத்துழைப்பை நாங்கள் உரியவாறு வழங்குவதற்கு வசதியாக நீங்கள் (அரசாங்கம்) எங்களோடு ஒத்துழைக்க வேண்டும் என்று விரும்பிக் கேட்டுக் கொள்கிறேன்" என்றார்.

அரசாங்கத்தின் சார்பில், நிதித்துறை உறுப்பினர் மிக அழுத்தமாக வலியுறுத்தியும், மசோதாவில் குறிக்கப்பட்டிருந்த நான்கு வரிவிதிப்புத் திட்டங்களைச் சபை நிராகரித்து விட்டது. இதனால் வரவு செலவுத் திட்டத்தின் மொத்தத் தொகையில் நான்கு கோடி ரூபாய் குறைந்தது. இந்தக் குறைப்பை ஏற்றுக்கொள்ள அரசாங்கம் தயாராக இல்லை. ஹரி சிங் கௌர், அப்துர் ரஹீம், யாமின் கான் ஆகியோர் எவ்வளவோ விளக்கிக் கூறியும் வைசிராய் சட்டசபையின் முடிவுக்கு இணங்கவில்லை. "எனக்கு உள்ள பொறுப்புக்களுக்கு ஊறு ஏற்படாதவாறு நடந்து கொள்ள வேண்டுமானால் வரவு செலவுத் திட்டத்தில் இவ்வளவு (ரூ 4 கோடி) துண்டு விழுவதை நான் அனுமதிக்க முடியாது"

என்று அறிவித்துவிட்டார் அவர். நவம்பர் 20ஆம் தேதி விடுத்த அந்த அறிக்கையில், மசோதாவின் ஆரம்ப நிலைமையே நீடிக்கும் விதமாக (நிராகரிக்கப் பட்ட 4 கோடி வரி விதிப்பையும் உள்ளடக்கியதாக)க் கொண்டு வரப்பட்ட திருத்தங்களுடனேயே மசோதா ஏற்கப்பட வேண்டும் என்று கவர்னர் ஜெனரல் சிபாரிசு செய்தார்.

இதைப் பார்த்து மிகவும் வேதனையடைந்த ஹரி சிங் கௌர், இந்த மசோதாவைப் பற்றிய விவாதங்களில் தம்முடைய கட்சி கலந்துகொள்ளாது என்று அறிவித்தார். அப்துர் ரஹீமுக்கும் இது பெரிய ஏமாற்றமே.

"நாட்டுக்கு எங்களால் இயன்றதைச் செய்வதற்காக லட்சக் கணக்கான மக்கள் எங்களைச் சட்டசபைக்கு அனுப்பி வைத்துள்ளார்கள். ஆனால், இங்கே நாங்கள் எதுவுமே செய்ய இயலாத நிலையில் இருக்கிறோம்" என்று வருந்திய ரஹீம், "அரசாங்க நடவடிக்கைகளைப் பொறுத்த அளவில், அவைகளில் எந்தச் சிறிய திருத்தத்தைச் செய்வதற்கும் எங்களுக்குச் சக்தி இல்லை" என்று குமுறினார்.

ஒரு காலத்தில் மோதிலால் நேருவைப் பின்பற்றுகிறவராக இருந்து இப்போது அரசாங்கத்தோடு ஒத்துழைப்பவராக மாறியிருந்த ரங்க அய்யர், "சட்டசபையின் முடிவை அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும் என்பதே என் விருப்பம். ஏனென்றால், அத்தகைய நடவடிக்கை 'சட்டசபையைப் பகிஷ்கரியுங்கள்' என்பவர்களுக்கு நல்ல பதிலடியாக இருந்திருக்கும்" என்று குறிப்பிட்டார். அரசாங்கம் இதற்கெல்லாம் செவிசாய்க்கும் நிலையில் இல்லை. அதன் விருப்பப்படியே வரவு செலவுத் திட்ட வரிவிதிப்புக் குறைப்பை அகற்றும் திருத்தங்களை நிறைவேற்றிக் கொண்டது. தேசீயக்கட்சி மற்றும் சுயேச்சைக் கட்சிகளின் உறுப்பினர்கள் இந்தத் திருத்தங்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்து வெளிநடப்புச் செய்திருந்தார்கள். ஆனால், அவை வாக்கெடுப்புக்கு விடப்படும்போது எதிர்க்கவேண்டும் என்ற திடமான முடிவுடன் அவர்கள் மீண்டும் சபைக்கு வந்தார்கள். வெளியில் உள்ள மக்களின் மனநிலையை நன்கு உணர்ந்திருந்ததால்

அவர்கள் கடைசி நேரத்தில் கூடத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்துவிட முடிவு செய்தார்கள். இறுதியாக, திருத்தங்களோடு கூடிய மசோதா ஓட்டுக்கு விடப்பட்ட போது 63க்கு 48 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது.

சட்டசபையில் தோல்வியடைந்தும் வைசிராய் அந்த மசோதாவைக் கைவிடவில்லை. தம்முடைய சிறப்பு அதிகாரத்தைப் பயன்படுத்தி மசோதாவை ராச்சியக் கவுன்சிலுக்கு அனுப்பினர். அங்கேயும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அதை எதிர்த்தார்கள் என்றாலும், இறுதியாக, 24க்கு 8 என்ற வாக்கு வித்தியாசத்தில் மசோதா நிறைவேறியது. அதன் பிறகு, வைசிராயின் அதிகார முத்திரையைப் பெற்று, அம்மசோதா சட்டமாயிற்று. இவ்வளவு "அற்பமான" விவகாரங்களால் அரசாங்க நடவடிக்கை தடைப்பட முடியுமா, என்ன!

## ஆட்டவா வியாபார ஒப்பந்தம் :

சுமார் ஓராண்டுக்குப் பின்னர் சட்டசபைக்கும் அரசாங்கத்துக்கும் இடையில் மற்றொரு கடுமையான கருத்துமோதல் ஏற்பட்டது. பிரிட்டிஷ் பொருளாதார நலன்கள் மிகுதியான பாதிப்புக்கு உட்பட்டதே அதற்குக் காரணம்.

பொருளாதாரச் சிக்கல் ஒன்றில் அகப்பட்டுக் கொண்ட பிரிட்டன் 1931ல் வரியில்லாத வியாபாரம் என்னும் தனது வழக்கமான கொள்கையைக் கைவிட்டது. அதன்படி 1932 தொடக்கத்தில் பிரிட்டனில் இறக்குமதியாகும் பொருள்களின் மீது 10 சதவீத வியாபார வரியை விதித்தது. இந்தியாவுக்கும் மற்ற டொமினியன் நாடுகளுக்கும், 1932 நவம்பர் வரையில், இந்த வரிக் கொள்கையிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது. ஆனாலும், அந்த (1932 நவம்பர்)த் தேதிக்குள் பிரிட்டனுடன் வியாபார ஒப்பந்தம் செய்து கொள்ளாத நாடுகளின் இறக்குமதிப் பொருள்களுக்கு அந்த வரி விதிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

இந்த நிர்ப்பந்தத்தின் பேரில் சாம்ராச்சியப் பொருளாதார மாநாடு ஒன்று, 1932 ஜூலையில் ஆட்டவா நகரில் கூட்டப்பட்டது. இந்திய அரசாங்கம், சட்டசபையைக் கலந்து

ஆலோசிக்காமலே ஆட்டவா மாநாட்டுக்குப் பிரதிநிதிக் குழு ஒன்றை நியமித்தது. சட்டசபை உறுப்பினர்களான சண்முகம் செட்டியும் அப்துல்லா ஹாரூனும் அந்தக் குழுவில் இரண்டு உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள்.

இந்த மாநாட்டின் விளைவாக, இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் இடையே வியாபார ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டது. அதன்படி, இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருள்களுக்குப் 10 சதவீத வரியிலிருந்து அளிக்கப்பட்ட விலக்குத் தொடர்ந்து நீடிக்கும். இந்தியாவுக்கு இந்தச் சலுகை நீடிக்கும் வகையில், ஆங்கில ஏகாதிபத்தியத்துக்கு வெளியில் உள்ள நாடுகளின் பொருள்களுக்கு மேலும் அதிகமான வரி விதிக்கப்படும். இந்தியா இறக்குமதி செய்யும் பிரிட்டிஷ் பொருள்களில் சிலவற்றுக்கு 10 சதவீதமும் சிலவகையான மோட்டார் வாகனங்களுக்கு 7.5 சதவீதமும் வரித்தள்ளுபடி செய்ய வேண்டும். ஆட்டவா மாநாட்டின் முடிவில், துணை ஒப்பந்தம் ஒன்றும் செய்து கொள்ளப்பட்டது. அதன்படி, மின்சாரமுலாம் பூசப்பட்ட பிரிட்டிஷ் உருக்குக்கு இந்தியச் சந்தையில் தனிச்சலுகை தரப்பட வேண்டும் என்றும், அதற்கு ஈடாக இந்திய உருக்குக்கு பிரிட்டனில் தனிச்சலுகை இருக்க வேண்டும் என்றும் ஒப்புக் கொள்ளப் பட்டது.

இந்த ஒப்பந்தத்துக்கு இந்தியா எங்கும் பரவலான எதிர்ப்பு ஏற்பட்டது. இந்திய வெளிநாட்டு வர்த்தகத்தில் பெரும்பகுதி பிரிட்டிஷ் சாம்ராச்சியத்துக்கு உட்படாத நாடுகளுடனேயே நடைபெற்றது. எனவே, (பிரிட்டன் கோரிய) சாம்ராச்சிய முன்னுரிமை காரணமாக இந்திய வர்த்தகம் பாதிக்கப்படுவது திண்ணம் என்ற நிலைமையே இருந்தது. மேலும், அந்நிய நாடுகள் இந்த நடவடிக்கைகளுக்கு எதிர்நடவடிக்கை எடுக்கும் என்ற அச்சமும் நிலவியது. இந்தியாவின் தேயிலை, சணல் முதலிய பொருள்களுக்கு பிரிட்டனில் ஏற்கனவே மிகுந்த கிராக்கி இருந்ததால், இந்தியப் பொருள்களுக்குத் தனிச்சலுகை என்ற பேச்சு அர்த்தமற்றது. சில பொருள்களைப் பொறுத்த அளவில் (உலகச்சந்தையில்) இந்தியப் பொருள்களுக்குப் போட்டியே இல்லை. அவைகளுக்குச் சலுகை கிடைப்பதால் எந்த

மாறுதலும் ஏற்படப் போவதில்லை. ஆனால், சாம்ராச்சிய முன்னுரிமை காரணமாக பிரிட்டன் தனது பொருள்களை இந்தியாவில் கொண்டுவந்து குவிக்கும். வேறுநாட்டுப் பொருள்களுக்கு அதிகமான (இறக்குமதி) வரிகள் விதிக்கப்படுவதால் அந்த நாடுகள் பிரிட்டிஷ் பொருள்களுடன் போட்டி போட முடியாது. இதன் காரணமாக, நுகர்வாளிகள் பொருள்களுக்கு அதிக விலை கொடுக்க நேர்வதே கண்ட பலன். சுருக்கமாக, இந்திய நலனுக்குக் குந்தகமும் பிரிட்டனுக்குப் பெரிய நலன்களும் ஏற்படுத்துவதே சாம்ராச்சிய முன்னுரிமை. எனவே, இந்தியத் தேசீயப் பத்திரிகைகள் ஆட்டவா வியாபார ஒப்பந்தத்தைக் கடுமையாக எதிர்த்தன.

இந்தச் சூழ்நிலையில்தான் வாணிகத்துறை உறுப்பினர் சர். ஜோசப் போர், நவம்பர் 7ஆம் தேதி சபையில் ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். அதன் ஒரு பகுதி பின் வருமாறு:

"இந்திய அரசாங்கம் பிரிட்டிஷ் பேரரசரின் அரசாங்கத்தோடு ஆட்டவாவில் 1932 ஆகஸ்ட் 20ல் கையொப்பமிட்டுச் செய்து கொண்ட வியாபார ஒப்பந்தத்தை இந்தச் சபை ஏற்றுக் கொள்கிறது. அந்த ஒப்பந்தத்தை நடைமுறைப் படுத்துவதற்குத் தோதுவான சட்டங்களை விரைவிலேயே இந்தியச் சட்டசபையில் கொண்டுவருமாறு கவர்னர் ஜெனரலை இந்தச் சபை கேட்டுக் கொள்கிறது."

பல உறுப்பினர்கள் இந்தத் தீர்மானத்திற்குத் திருத்தங்களைக் கொண்டு வந்தார்கள். அவைகளுள் தேசீயக்கட்சியார் கொண்டு வந்த திருத்தம் முக்கியமானது. அது, "இந்தியாவுக்குப் பொறுப்பான சுயஆட்சி வழங்கப்படும் வரை இத்தகைய பரஸ்பர ஒப்பந்தங்களைப் பற்றி ஆலோசிக்கவே இந்தியா தயாராக இல்லை என்று பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குத் தெரிவித்துவிட வேண்டும்" என்று கூறியது. இந்தத் திருத்தத்தை விளக்கி அக்கட்சியார் கூறியதாவது: "ஆட்டவாவுக்குச் சென்ற இந்தியக் குழுவினர் இந்திய அரசாங்கத்து சார்பாளரே தவிர, இந்திய மக்களின் பிரதிநிதிகள் அல்லர். இந்த ஒப்பந்தம், இந்தியாவுக்குப் பொருளாதாரச் சுதந்திரமே இல்லை என்பதையும் அரசியல் அல்லது

நிதி விவகாரங்களில் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு உட்பட்டதாகத்தான் இந்தியா இருக்கிறது என்பதையும்தான் காட்டுகிறது. தவிர, இந்த ஒப்பந்தத்தால் பயனடையும் நாடு பிரிட்டன் மட்டுமே. உள்நாட்டுத் தொழில்கள் முழுவளர்ச்சி அடைவதற்கு வசதியாக இறக்குமதிப் பொருள்களின் மீது வரிவிதிக்கும் உரிமை இந்தியாவுக்கு இருக்க வேண்டும்." மேற்படி மசோதாவின் மீது உரை நிகழ்த்திய ஹரி சிங் கௌர், நிதித்துறை உறுப்பினர் கொண்டு வந்துள்ளது போன்ற ஒரு பிரேரணை இதற்கு முன் என்றுமே வந்ததில்லை என்று கூறினர். அவர் மேலும் பேசுகையில், "அந்த மசோதாவின் உள்ளடக்கம் என்ன என்றே உறுப்பினர்களுக்குத் தெரியாத நிலையில் அதன் கோட்பாடு பற்றி முடிவு செய்யவேண்டும் என்று நிதித்துறை உறுப்பினர் கோருவது வேடிக்கையாக இருக்கிறது" என்றார். இந்த ஒப்பந்தத்தின் விளைவாக இந்திய நுகர்வாளிகள் அதிகப் பளுவை ஏற்க நேரும் அல்லது இந்திய வருமானம் வீழ்ச்சியடைய நேரும் என்று எச்சரித்தார் மோடி. அப்துர் ரஹீம், இன்னும் ஒருபடி மேலே சென்று, "இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டால் இந்தியாவின் பொருளாதார நலன்களுக்கே பெரிய அபாயம் ஏற்படும்" என்று பேசினர். மத்திய மாகாணத்தைச் சேர்ந்த ஸியாவுதீன் அகமது, இந்த ஒப்பந்தம் முதலில் சட்டசபைக் குழு ஒன்றினால் பரிசீலிக்கப் படவேண்டும் என்ற ஒரு தீர்மானத்தையே கொண்டுவந்து விட்டார்!

ஒப்பந்தத்துக்கு ஏற்பட்டிருந்த எதிர்ப்பைக் கவனித்த அரசாங்கம், அதைச் சட்டசபைத் தனிக்குழு ஒன்றின் பரிசீலனைக்குவிட ஒப்புக்கொண்டது. ஆனாலும், குழுவினரிடையே கருத்து ஒற்றுமை நிலவவில்லை. எனவே, குழு, தனித் தனியான இரண்டு அறிக்கைகளைக் கொடுத்தது. அறிக்கைகள் கொடுக்கப்பட்ட பிறகும் நிதி மசோதாவின் மீது மற்றொரு விவாதம் நடைபெற்றது. ஆனாலும், மசோதாவின் மீது கொண்டு வரப்பட்ட தனிநபர் திருத்தப் பிரேரணைகளில் சில தோல்வியடைந்தன; மற்றவை வாபஸ் பெறப்பட்டன. இறுதியாக, நிதித் துறை உறுப்பினரின் தீர்மானம் 1932 டிசம்பர் 15ல் நிறைவேறியது. ஆட்டவா ஒப்பந்தத்தை உள்ளிட்ட இறக்குமதி

வரிவிதிப்பு மசோதா ஒன்றும் ஏற்கப்பட்டது. இந்தியாவின் மீது ஆட்டவா ஒப்பந்தம் திணிக்கப்பட்ட வரலாறு இது.

**காந்தியடிகளைப் பற்றிச் சட்டசபையின் கவலை:**

1932 செப்டம்பரில் பூனா ஒப்பந்தம் ஏற்பட்ட பிறகு, காந்தியடிகள் சிறையில் இருந்தவாறே ஹரிஜன முன்னேற்றப் பணிகளில் கவனம் செலுத்தலானார். புதிதாகத் தொடங்கிய **ஹரிஜன்** என்னும் வார இதழின் மூலம், இந்து சமூகத்தார் கடைப்பிடித்து வந்த தீண்டாமைப் பழக்கத்தை ஒழிக்க முற்பட்டார் அடிகள். வெளியிலே, சட்ட மறுப்பு இயக்கம் ஏதோ நடந்து வந்தாலும், அதன் செல்வாக்கு இறங்குமுகமாகவே இருந்தது. தீண்டாமை ஒழிப்பு இயக்கத்துக்கும் வைதீக இந்துக்கள் எதிர்ப்புத் தெரிவித்து வந்தார்கள்.

அதே சமயம், காந்தியடிகளை விடுதலை செய்ய வேண்டுமென்று நாட்டுமக்கள் கோரிக்கை விட்ட வண்ணமாக இருந்தார்கள். சட்டசபையிலும், காந்தியடிகளை விடுதலை செய்வது பற்றிய அரசாங்கத்தின் கருத்தை அறிவதற்காகப் பல கேள்விகளும் துணைக் கேள்விகளும் அடிக்கடி கேட்கப்பட்டன. மக்களுடைய கோரிக்கையின் ஒரு பிரதிபலிப்பாக, காந்தியடிகளையும் ஜமியத் உல் உலீமா இயக்கத்தின் தலைவரான முஃப்தி கிஃபாயத்துல்லாவையும் விடுதலை செய்யுமாறு கவர்னர் ஜெனரலுக்குச் சிபாரிசு செய்யும் தீர்மானம் ஒன்றை மசூது அகமது 1933 பிப்ரவரி 15ல் கொண்டுவந்தார். காந்தியடிகள் ஹரிஜன முன்னேற்றத்துக்கான பணிகளோடு முடங்கிவிட்டதால் நாட்டின் அரசியலே ஸ்தம்பித்துப் போய்விட்டது என்றும், இந்த நிலையை உண்டாக்கிய அரசாங்கம் காந்தியடிகளை விடுதலை செய்து அரசியல் விவகாரத்தில் முன்னேற்றம் ஏற்பட வழி செய்ய வேண்டும் என்றும் அவர் கேட்டுக் கொண்டார்.

இந்தத் தீர்மானத்துக்குத் தீவிரமான ஆதரவு தெரிவித்துப் பேசிய சந்த் சிங், "காந்தியடிகள் போன்ற புனிதமான மனிதர்களையும் முஃப்தி கிஃபாயத்துல்லா போன்ற தலைவர்களையும் சிறையில் அடைத்து வைக்கிற ஓர் ஆட்சிமுறை நல்ல ஆட்சிமுறை என்று எப்படிச் சொல்ல முடியும்?" என்று அரசாங்கத்தைக் கேட்டார்.

அவர் மேலும் பேசுகையில், "நாட்டு மக்கள் காந்தியடிகளின் அகிம்சைக் கொள்கையை முழுமையாக ஏற்றுக்கொண்டு அவர் பக்கமே நிற்கிறார்கள்" என்று கூறினார். எஸ். சி. மித்ரா மற்றும் பல உறுப்பினர்கள் சந்த் சிங்கை ஆதரித்துப் பேசினார்கள்.

விவாதம் மார்ச் 1ஆம் தேதி வரை தொடர்ந்தது. காந்தியடிகளின் ஹரிஜன சேவையைப் பாராட்டிப் பேசிய ரங்க அய்யர், அடிகள் அப்பணியில் தீவிரமாக ஈடுபடுவதற்கு வசதியாக அவரை அரசாங்கம் விடுதலை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். காந்தியடிகள் நடத்துகிற தீண்டாமை ஒழிப்பு இயக்கம் சட்ட மறுப்பு இயக்கத்தையே ஒழித்துவிடும் என்றும் அவர் சுட்டிக் காட்டினார். காந்தியடிகளும் மற்ற அரசியல் தலைவர்களும் விடுதலை செய்யப்பட்டால்தான் நாட்டில் அரசியல் அமைதியை ஏற்படுத்த முடியும் என்று வற்புறுத்தினார் என். எம். ஜோஷி.

ஆனால், இதற்கு முற்றிலும் மாறுபட்ட கருத்துடையவர்களும் இருந்தார்கள். சான்றாக, முகம்மது யாகூப் கான், அரசாங்கம் தன்னுடைய தற்போதைய போக்கை மாற்றிக் கொண்டால் காங்கிரஸ்காரர்கள் அதற்கேற்றபடித் தங்கள் கருத்தை மாற்றிக் கொள்வார்கள் என்பதற்கான அறிகுறி எதுவும் இதுவரை தென்படவே இல்லை என்றார். எனவே, "அப்படிப்பட்டதொரு உறுதியைக் காங்கிரஸ்காரரிடமிருந்து பெறுவதே முதலில் செய்யத்தக்கது" என்று ஆலோசனை கூறினார் அவர்.

ஏப்ரல் முதல் தேதி மீண்டும் விவாதம் தொடங்கியபோது, "காந்தியடிகள் என்னதான் புகழ் வாய்ந்தவராக இருந்தாலும் தாம் நினைத்தபடியே மக்கள் நடக்கவேண்டும் என்று அவர் வற்புறுத்துவதன்மூலம் நாட்டுக்குப் பெரிய தீங்கையே விளைவித்து வருகிறார்" என்று குற்றம் சாட்டினார் முகம்மது யாமின் கான். எனவே, "காந்தியடிகளை விடுதலை செய்ய இது சரியான தருணமல்ல" என்றும் அவர் கூறினார். ஆனால், அடுத்துப் பேசிய மௌல்வி சய்யிது முர்த்துசா சாகேப் பகதூர், யாமின் கானின் கருத்தை ஏற்கவில்லை. காந்தியடிகள் இந்திய மக்களுக்காகச் செய்துள்ள தியாகம் மகத்தானது என்றும் அதே சமயம், இந்திய அரசாங்கம் இந்த நாட்டின் காவலன் என்பதை இனிமேல்தான்

மெய்ப்பிக்க வேண்டியிருக்கிறது என்றும் அவர் கூறினர். மௌல்வி சாகேப் மேலும் கூறியதாவது: "ஆட்சியில் சீர்திருத்த முன்னேற்றத்தைப் பொறுத்தவரையில், காங்கிரஸ் ஒன்றுதான் காந்தியடிகள் மூலமாக அதை நிறைவேற்றி வைக்க முடியும். எனவே அரசியல் தலைவர்களை அரசாங்கம் விடுதலை செய்ய வேண்டும் இந்தச் சமயத்தில், அந்தத் தீர்மானத்துக்குத் திருத்தப் பிரேரணை ஒன்று கொண்டு வரப்பட்டதால் விவாதம் முற்றுப்பெருமலே நின்றுவிட்டது.

ஏப்ரல் 30ஆம் தேதி, சிறையில் இருந்தவாறே ஹரிஜன முன்னேற்றத்தைக் கருதித் தம்மையும் தம்முடைய தோழர்களையும் புனிதப்படுத்திக் கொள்வதற்காக, மே 8ஆம் தேதி முதல் 21 நாள் உண்ணுவிரதம் மேற்கொள்ளப் போவதாகவும், அந்த உண்ணுவிரதம் எந்த நிபந்தனைக்கும் உட்பட்டதோ இடையில் நிறுத்தத் தக்கதோ அல்ல என்றும் காந்தியடிகள் அறிவித்தார். அறிவித்தபடியே மே 8ஆம் தேதி காந்தியடிகள் உண்ணு விரதத்தைத் தொடங்கினர். உண்ணுவிரதத்தின் நோக்கத்தை முன்னிட்டு அரசாங்கம் அவரை அன்றைக்கே விடுதலை செய்தது. வெளியில் வந்ததும், சட்டமறுப்பு இயக்கத்தை ஆறு வார காலம் நிறுத்தி வைப்பதாகத் தெரிவித்து, "நாட்டில் அமைதி நிலவ வேண்டுமென்பது அரசாங்கத்தாரின் விருப்பமானல் அவர்கள் உடனேயே அரசியல் கைதிகளை விடுதலை செய்ய வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார் காந்தியடிகள். அரசாங்கம் அதை ஏற்காததோடு, சட்டமறுப்பு இயக்கம் முழுமையாகக் கைவிடப்படா விட்டால் காந்தியடிகளுக்குப் பேட்டியளிக்க முடியாது என்றும் மறுத்துவிட்டது. அதன் பேரில், சட்டமறுப்பு இயக்கத்தையே தனிநபர் சத்தியாக்கிரகமாக நடத்துவது என்று காங்கிரஸ் முடிவு செய்தது. அதன்படி, (சத்தியாக்கிரகம் செய்ய) ராஸ் என்னும் கிராமத்துக்குப் போக இருந்த காந்தியடிகள் ஆகஸ்ட் 1ஆம் தேதி கைது செய்யப்பட்டார்.

இந்தத் தடவை சிறையில் இருந்தபடியே ஹரிஜன முன்னேற்றப் பணிகளில் ஈடுபடுவதற்குப் போதிய வசதிகள் காந்தியடிகளுக்குத் தரப்படவில்லை. எனவே, ஆகஸ்ட் 17 முதல் அவர் மற்ருெரு

உண்ணுவிரதத்தை மேற்கொண்டார். சில நாட்களிலேயே காந்தியடிகள் மிகவும் பலவீனமடைந்தார். ஆகவே அவர் விடுதலை செய்யப்பட வேண்டும் என்ற கோரிக்கை நாடெங்கும் வலுத்தது.

ஆகஸ்ட் 23 ஆம் தேதி காந்தியடிகளுக்குச் சிறைச்சாலையில் போதிய வசதிகள் செய்து தரப்படாததை விவாதிக்கச் சபையின் நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டும் என்ற தீர்மானத்தை எஸ். சி. மித்ரா கொண்டுவந்தார். முன்பு போலவே, சர்தார் சந்த்சிங், அப்துல் மதீன் சௌதுரி மற்றும் பலர் தீர்மானத்தை ஆதரித்தார்கள். தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தைத் தொடங்கிய தற்காகக் காந்தியடிகளை வெகுவாகப் பாராட்டிய எம். சி. ராஜா, அரசாங்கம் இதிலே அவருக்கு உதவியாக இருக்கவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார். பம்பாயைச் சேர்ந்த பி. வி. ஜாதவ் அவரை ஆதரித்துப் பேசினார்.

ஆனால், காந்தியடிகளின் இயக்கத்தை எதிர்த்த வைதீக இந்துக்களின் கருத்தைப் பிரதிபலிப்பவராக விளங்கிய பண்டித சத்யேந்திரநாத் சென், மித்ராவின் தீர்மானத்தை எதிர்த்தார். "அவருக்கு (காந்திடிகளுக்கு)க் கொடுக்கப்பட்ட வசதிகள் குறைக்கப்பட்டுள்ளனவா என்பதல்ல நமது கவலை; அவருக்கு வசதிகளே கொடுக்கப்பட்டிருக்கக் கூடாது என்பதே நமது குறைபாடு" என்று குமுறினார் அவர். நவாப் மேஜர் மாலிக் தலீப் மேதி கானும் காந்தியடிகளைக் குற்றஞ் சாட்டியே பேசினார். "காந்தியடிகள் சிறையிலிருந்து வெளியேற மறுப்பதற்கு நாம் அரசாங்கத்தைக் குறை கூறினால் எப்படி?" என்று வினவினார் அவர். அந்தச் சமயத்தில், காந்தியடிகளை அரசாங்கம் நிபந்தனையின்றி விடுதலை செய்திருப்பதாகவும் காந்தியடிகள் உண்ணுவிரதத்தைக் கைவிட்டுவிட்டதாகவும் தந்தி ஒன்று வந்தது. அந்தத் தந்தி சபையில் படிக்கப்பட்டதால், சபையிலே நிலவிய கவலை உணர்ச்சி ஒருவாறு தணிந்தது.

**சுயராச்சியக் கட்சியின் மறுமலர்ச்சி :**

விடுதலை பெற்ற காந்தியடிகள் ஹரிஜன சேவையிலேயே முழுமையாக ஈடுபட முடிவு செய்தார். அதற்காக, நவம்பரில் இந்தியச் சுற்றுப்பயணம் ஒன்றையும் தொடங்கினார். போன

இடங்களிலெல்லாம் வைதீக இந்துக்களின் எதிர்ப்பு பலமாக இருந்தது. அதே சமயம், காந்தியடிகளின் நோக்கங்களை அடிப்படையாகக் கொண்ட இரு மசோதாக்கள்—தீண்டாமை ஒழிப்பு மசோதாவும் இந்துக் கோயில் நுழைவு மசோதாவும்—சட்டசபையில் கொண்டுவரப்பட்டன. அங்கு ஏற்பட்ட எதிரொலியும் பலவகைப்பட்டதாகவே இருந்தது. ஆகையால் முதல் மசோதா (தீண்டாமை ஒழிப்பு மசோதா) பொதுமக்களின் கருத்தை அறிவதற்காக 1934 ஆகஸ்ட் 1 ஆம் தேதி மக்களிடையே பரப்பப்பட்டது; இரண்டாவது மசோதா வாபஸ் பெறப்பட்டது. 1934 ஏப்ரல் 11ல் நிறைவேற்றப்பட்ட இந்திய சமஸ்தானங்கள் பாதுகாப்பு மசோதாவின் மீது உரையாற்றிய மௌல்வி ஷஃபீ தாவூதி குறிப்பிட்டது போல, "சட்டசபைக்கு இருந்து வந்த எதிர்ப்பு ஆற்றலே இதற்குள் வற்றி மடிந்து சூன்ய நிலையை எட்டி விட்டது!"

சட்டசபை தனது கடைசிக் கூட்டத் தொடருக்காக சிம்லாவில் ஜூலை 16ல் கூடியபோது, அதன் அப்பாவித்தனம் மேலும் தெளிவாகப் புலப்பட்டது. அரசாங்கம் கொண்டு வந்த பல மசோதாக்களை இந்தச் சபை நிறைவேற்றிக் கொடுத்தது. அவைகளுள் இந்திய நோக்கில் மிகுந்த ஆட்சேபகரமான மசோதாக்களும் உண்டு. அத்தகைய மசோதாக்களில், வங்காளக் குற்றவியல் சட்டத்திருத்தத் துணை (நீடிப்பு) மசோதாவும் ஒன்று. பயங்கரவாதிகளை வங்காளத்துக்கு வெளியிலுள்ள தடுப்பு முகாம்களுக்கு மாற்றும் அதிகாரத்தைச் சட்டச் சாசனத்தில் நிரந்தரமாகப் பொறித்துவைக்க வழிவகுக்கும் மசோதா அது. இந்திய ராணுவச்சட்ட(த்திருத்த) மசோதா இதுபோன்ற மற்றொன்று. இதன்படி, டேரா டூனில் உள்ள ராணுவ அக்காடெமியில் தேர்ச்சி பெற்ற இந்திய அதிகாரிகள் தனி ஒரு தரவகுப்பாகப் பிரித்து வைக்கப்பட்டார்கள். இந்த மசோதா, பிரிட்டிஷ் துருப்புக்களுக்குத் தலைமை ஏற்று நடத்தும் பொறுப்புரிமையை இந்திய அதிகாரிகளுக்கு வழங்க மறுப்பதால், இந்திய அதிகாரிகள் உயர்ந்த தலைமைப் பொறுப்புக்களை அடையவே முடியாது என்று கூறித் தேசியவாதிகள் மசோதாவை எதிர்த்தார்கள். மசோதாவை முழுமையாக எதிர்த்த பி. தாஸ், புதிய அரசியல் சட்டம் அமுலுக்கு

வரும் வரை இந்த மசோதாவைத் தள்ளிப் போடவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ஆனால், புதிய அரசியல் சட்டம் வரும் வரை அரசாங்கம் காத்திருக்கத் தயாராக இல்லை; மசோதா நிறைவேற்றப்பட்டது. வெளியிலே, சட்டசபை இந்திய மக்களின் நலனைப் பாதுகாக்கத் தவறிவிட்டது என்று மக்கள் குறைப் பட்டுக் கொண்டார்கள்.

நாட்டுமக்கள் மிகவும் சோர்ந்து போனார்கள். விடுதலை கோரி நடத்தப்பட்டு வந்த சட்டமறுப்பு நடவடிக்கைகளை எல்லாம் கைவிடுமாறு ஏப்ரல் 7 ஆம் தேதி காந்தியடிகள் காங்கிரஸ்காரர் களுக்குத் தெரிவித்தார். இதை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியும் ஏற்றுக்கொண்டது. அதன்பேரில், 1934 மே 20 ஆம் தேதி முதல் சட்டமறுப்பு இயக்கம் முறைப்படி நிறுத்தப்பட்டது. இதற்கிடையில், டாக்டர் அன்சாரியின் யோசனைப்படியும் காந்தி யடிகளின் ஒப்புதலோடும், சுயராச்சியக் கட்சியை மீண்டும் தொடங்கி நடத்துவது என்றும் (அதன் சார்பில்) ஐந்தாவது சட்டசபைக்கான தேர்தலில் போட்டியிடுவது என்றும் முடிவு செய்யப்பட்டது. மே 18, 19 ஆம் தேதிகளில் நடந்த அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில், " இப்போது உள்ள சூழ்நிலையில் நாட்டை அதன் இலக்கை நோக்கி நடத்திச் செல்வதற்குச் சட்டசபை நுழைவு அவசியம் " என்று ஒப்புக்கொள்ளப்பட்டது. நெருங்கி வந்துகொண்டிருந்த தேர்தலில் காங்கிரஸ்காரர்களின் செயல் முறையைக் கண்காணித்து நடத்துவதற்கு ஒரு பார்லிமெண்டரி போர்டை அமைக்கவும் கமிட்டி அதிகாரம் வழங்கியது. இது முன்பே கையாளப்பட்ட போராட்ட முறைதான். என்றாலும், பொதுஜன இயக்கம் தளர்ச்சியடையும்போது சட்டத்துக்கு உட்பட்ட (போராட்ட) முறைகளைத் தாமே மேற்கொள்ள வேண்டியதாகிறது?

*அத்தியாயம் 6*

# 1935 ஆம் ஆண்டு இந்தியாச் சட்டத்துக்கு எதிரான போராட்டம்: ஐந்தாவது சட்டசபை

**ஐந்தாவது சட்டசபை தேர்தல் :**

*1934* மே *20* ஆம் தேதி சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தப் பட்டது. அத்துடனேயே, நாட்டில் *1930* முதல் *34* வரை பொங்கி நின்ற தேசியப் போராட்டத்தின் ஒரு பெரிய அலையும் ஓய்ந்தது. ஆனாலும், நாட்டில் நிலவிய சூழ்நிலைக்கு ஏற்றவித மாக, சுதந்திரப் போராட்டத்தை வேறு முறையில் நடத்துவதற் கான ஆயத்தமும் ஒரு பக்கம் நடந்துதான் வந்தது. அதாவது, இப்போது, நவம்பரில் நடக்க இருந்த சட்டசபைத் தேர்தலில் (முன்பு போல் சுயராச்சியக் கட்சியை நிறுத்தாமல்) காங்கிரசே நேரிடையாகப் போட்டியிடுவது என்று முடிவு செய்யப்பட்டது. இதற்காக, மதன் மோகன் மாளவியாவின் தலைமையில் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு ஒன்றும் நியமிக்கப்பட்டது.

இதற்கிடையில் வகுப்புரிமைச் சிபாரிசு சம்பந்தமாகக் காங்கிரசுக்குள்ளேயே பெருத்த கருத்து வேறுபாடு உருவாயிற்று. இதைப் பற்றிய பிரச்சினையில் காங்கிரஸ் நடுநிலை வகித்தது. மாளவியாவும் ஆனேயும் அதை அடியோடு நிராகரிக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். இதிலே சமரசம் ஏற்பட முடியாத தால், பார்லிமெண்டரி போர்டு தலைவர் பதவியை மாளவியா ராஜினாமாச் செய்துவிட்டார்; ஆனே, காங்கிரஸ் செயற் குழுவி லிருந்தே விலகினார். அவர்கள் இருவரும் ஒரு தனிக்கட்சியை ஆரம்பித்து, அதற்கு காங்கிரஸ் தேசீயக் கட்சி என்று பெயரும் சூட்டினார்கள். வகுப்புரிமைச் சிபாரிசைப் புறக்கணிப்பதையே தேர்தல் கொள்கையாக்கி, புதிய கட்சியின் சார்பில் பல வேட்பாளர்களையும் நிறுத்தினார்கள். காங்கிரசும், சர்தார்

வல்லபாய் படேல் சொன்னது போல, "நாட்டு மக்களின் முன் உள்ள கேள்வி வகுப்புரிமைச் சிபாரிசைப் பற்றியது அல்ல; காங்கிரசா அரசாங்கமா, எது வேண்டும்? என்பதே மக்கள் முன் உள்ள கேள்வி" என்று திட்டவட்டமாக அறிவித்தது. காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டின் தலைமைப் பொறுப்பை ஏற்றிருந்த டாக்டர் அன்சாரி, "காங்கிரசுக்குப் போடும் ஒவ்வொரு ஓட்டும் இந்திய சுதந்திரத்துக்குப் போடும் ஓட்டு!" என்று முழங்கினர். காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த ராஜேந்திர பிரசாத் தேர்தல் பிரசாரத்துக்கே புதிய சுறு சுறுப்பை ஊட்டினர். சட்டசபையில் இப்போது வீற்றிருப் பவர்கள், "மக்கள் வைத்த நம்பிக்கைக்குத் துரோகம் செய்து நாட்டையே காட்டிக் கொடுத்தவர்கள்" என்பது எல்லோருக்கும் விளங்கும்படியாக, மக்கள் அவர்களைத் தோற்கடித்து அதே இடத்துக்குக் காங்கிரஸ் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார் ராஜேந்திர பிரசாத். சட்டசபைக்குச் செல்லும் காங்கிரஸ் உறுப்பினர்கள் அரசாங்கத்தை எதிர்த்து அதன் நிருவாகத்துக்கு முட்டுக்கட்டை போடுவார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது.

தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டன. காங்கிரசே, சட்ட சபையின் தனிப் பெரும் கட்சியாக வெற்றி பெற்றிருந்தது. சட்ட சபை உறுப்பினர் தொகை காங்கிரஸ் 44, காங்கிரஸ் தேசீயக் கட்சி 11, (மூன்று பேர் நீங்கலாக உள்ள எல்லா முஸ்லிம் களையும் உள்ளிட்ட) சுயேச்சையாளர் 22, ஐரோப்பியர்கள் 22, நியமன அதிகாரிகள் 26, அதிகாரிகளல்லாத நியமன உறுப் பினர்கள் 13 என்ற முறையில் இருந்தது. ஆட்டவா சாம்ராச்சிய மாநாட்டுப் பேராளர்களில் ஒருவரும் பின்னர் சட்ட சபைத் தலைவராக இருந்தவரும் ஆன சண்முகம் செட்டி காங்கிரஸ் வேட்பாளர் வெங்கடாசலம் செட்டியாரால் தோற்கடிக்கப் பட்டார். வணிகர் தொகுதி ஒன்றில் நடந்த இந்தப் போட்டியில், அரசாங்கம் சண்முகம் செட்டியை முழுமூச்சாக ஆதரித்தது என்பதும் குறிப்பிடத்தக்கது. எனவே, சண்முகம் செட்டியின் தோல்வி இந்தத் தேர்தலிலேயே கவனத்துக்குரிய ஓர் அம்சமாகி விட்டது. முந்திய சட்டசபையின் மற்றொரு பழம்பெருந்தலைவரான

எச் எஸ். கௌரின் கதையும் அதே விதமாகவே முடிந்தது. சென்னையில் நீதிக்கட்சியின் பெருந் தலைவர்களுள் ஒருவரான ராமசாமி முதலியாரைக் காங்கிரஸ் வேட்பாளர் எஸ். சத்திய மூர்த்தி தோற்கடித்தார். பீகாரில் பெருந்தொழில் அதிபரான சேட் ராமகிருஷ்ண டால்மியாவை அனுக்கிரக நாராயண் சின்ஹா தோற்கடித்தார். மிதவாதிகளும், அநேகமாக அடியோடு நீக்கப் பட்டார்கள். சுருக்கமாக, அரசாங்கத்தின் கடுரமான தாக்குதல் ஒரு பக்கமும் சட்டமறுப்பு இயக்கத்தின் வீழ்ச்சி ஒரு பக்கமும் இருந்தாலும், மக்களின் நம்பிக்கையைக் காங்கிரஸ் ஓரளவாவது இழந்து விடாமலிருந்தது என்பதையே தேர்தல் முடிவு தெரி வித்தது.

## சட்டசபையின் புதிய தோற்றம்:

ஐந்தாவது சட்டசபை முழுக்க முழுக்கப் புதிய தோற்ற மளித்தது. பம்பாயில் பேர்பெற்ற வழக்கறிஞராக இருந்த புலாபாய் தேசாய் சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் தலைமையை ஏற்றார். விரைவிலேயே உள்துறை உறுப்பினருக்குச் சிம்ம சொப்பனமாகி விட்ட கோவிந்த வல்லப பந்த் அதன் துணைத் தலைவரானார். "பயங்கரச் சொல் வீரர்" எஸ். சத்திய மூர்த்தியும் நீலகண்ட தாசும் காங்கிரஸ் கட்சியின் செயலாளர் களாக நியமிக்கப்பட்டார்கள். ஆஸஃப் அலி தலைமைக் கொறடா. டி. எஸ். எஸ். ராஜனும் என். வி. காட்கிலும் துணைக் கொற டாக்கள். வி. வி. கிரி, என் ஜி. ரங்கா, என். எம். ஜோஷி, மோகன்லால் சாக்சேனா ஆகிய உறுப்பினர்கள், தொழிலாளர் மற்றும் விவசாயிகள் நலச்சட்டங்களில் மிகுந்த ஆர்வம் காட்டி வந்தார்கள்.

சுயேச்சையாளரின் தலைவராக மீண்டும் ஜின்னா அமர்ந் திருந்தார். காங்கிரஸ் தேசியக் கட்சி எம். எஸ். ஆனே தலைமையில் இயங்கியது. எச். பி. மோடியும் கோவாஸ்ஜி ஜெஹாங்கீரும் மிதவாத, மற்றும் பரந்த அரசியல் நோக்கின் பிரதிநிதிகளாக வந்திருந்தார்கள். மொத்தத்தில் நாலாவது சட்ட சபையைப் போல் இல்லாமல், அக்காலத்தில் அரசியல் பெருந்தலைவர்கள் பலரைக் கொண்டு, இரண்டாவது மூன்றாவது சட்டசபைகளைப் போல

விளங்கியது இந்த ஐந்தாவது சட்டசபை. காங்கிரஸ்காரர்கள் அணிந்திருந்த காந்திக்குல்லாவும் அவர்களுக்கு (காங்கிரஸ் காரர்களுக்கு)ப் பொதுப்படையாக ஏற்பட்டிருந்த ஒரு நம்பிக்கையும் சேர்ந்து சட்டசபைக்கே ஓர் எழுச்சித் தோரணை யைத் தந்தன. ஆனாலும், சட்டசபையில் ஜின்னாவும் அவருடைய சுயேச்சைத் தோழர்களும் தங்களோடு சேர்ந்தால்தான் அரசாங் கத்தைத் தோற்கடிக்க முடியும் என்பதை நினைத்தபோது காங்கிரஸ்காரர்களின் நம்பிக்கை சற்றே தொய்வு காட்டத்தான் செய்தது. ஜின்னா இந்தச் சட்டசபையில் தமக்கு உள்ள முக்கியத் துவத்தை நன்றாக உணர்ந்து கொண்டார். அரசாங்கத் தரப் பினரும் அவருடைய முக்கியத்துவத்தை நன்கு உணர்ந் திருந்ததால், அவர் காங்கிரசின் பிடிக்குள் சிக்கிவிடாதபடி என்னென்னவோ செய்து வந்தார்கள்.

1935 ஜனவரியில் தொடங்கிய சட்டசபையின் முதலாவது கூட்டத் தொடரிலேயே இந்தச் சூழ்நிலை தெளிவாகி விட்டது. சட்டசபைத் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டம் அது. சட்டசபையைத் தன் விருப்பத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள விரும்பிய அரசாங்கத்துக்கு, முந்திய தலைவர் படேலிடம் மிகக் கசப்பான அனுபவம் ஏற்பட்டிருந்தது. சட்டசபை விதிகளுக்கு உட்பட்டே, அரசாங்கத்தின் பேராசைகளை பலமுறை அவர் தடுத்து நின்றதை அரசாங்கம் மறந்துவிடவில்லை. ஆகவே, அந்தக் கோணத்திலேயே இந்தத் தேர்தலை அணுகித் தனது நிலையைப் பலப்படுத்திக் கொள்ளும் முயற்சிகளில் ஈடுபட்டது அரசாங்கம். ஜின்னாவின் தலைமையில் உள்ள சுயேச்சையாளரின் வாக்கே தலைவர் தேர்தலின் முடிவை நிர்ணயிக்கப் போகிறது என்பதைப் புரிந்துகொண்ட அரசாங்கம், ஏற்கனவே தாற்காலிக மாகச் சட்டசபைத் தலைவராக இருந்திருந்த சர் அப்துர் ரஹீமைத் தனது வேட்பாளராக நிறுத்தியது. காங்கிரஸ் கட்சி, தேசீய முஸ்லிம் தலைவர்களுள் ஒருவரான டி. ஏ. கே. ஷெர்வானியைத் தனது வேட்பாளராக நிறுத்தியது. இதைக் கண்ட ஜின்னா எந்த முடிவுக்கும் வர முடியாமல் திணறினார். ஆனாலும், இறுதியில், அரசாங்க வேட்பாளரையே ஆதரிப்பது என்று முடிவு செய்தார்.

அதனால் தேசீயக் கட்சி வேட்பாளர் 70க்கு 62 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோற்கடிக்கப் பட்டார்.

## முதலாவது கணைமாரி :

இந்தக் கூட்டத்தொடரின் முதலாவது கணைமாரி காங்கிரஸ் காரர்களிடமிருந்தே கிளம்பியது. அதுவும், காந்தியடிகளையும் அவருடைய நடவடிக்கைகளையும் பற்றியதாகவே புறப்பட்டது.

1934 செப்டம்பர் 7ஆம் நாளன்று, காங்கிரசோடு உள்ள எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக்கொண்டு ஆக்க பூர்வமான பணிகளில் ஈடுபடப் போவது பற்றித் தீவிரமாகச் சிந்தித்து வருவதாக அறிவித்தார் காந்தியடிகள். அவர் விருப்பத்தின் படியே, அக்டோபரில் பம்பாயில் கூடிய காங்கிரசும், ஆக்க பூர்வமான நடவடிக்கைகளுக்கு ஊக்கம் தரும் பல தீர்மானங்களை நிறைவேற்றியது. அந்தத் தீர்மானங்களிலே ஒன்று, காந்தியடி களின் மேற்பார்வையில் அகில இந்தியக் கிராமத் தொழில் சங்கம் ஒன்றை அமைக்க ஜே. சி. குமரப்பாவுக்கு அதிகாரம் வழங்கியது. கை நூற்பு நீங்கலாக உள்ள மற்றெல்லாக் கிராமக் கைத்தொழில் களையும் புதுப்பித்து ஊக்குவிக்க வேண்டும் என்பதே இந்தச் சங்கத்தின் நோக்கம். காங்கிரசின் அரசியல் நடவடிக்கைகளுடன் எந்தத் தொடர்பும் இல்லாமல், அயராத தனி உழைப்பை மேற் கொண்டால்தான் இத்தகைய புத்தெழுச்சியை நாட்டிலே உண்டாக்கமுடியும் என்று அந்தத் தீர்மானத்தில் கண்டிருந்தது.

காந்தியடிகள் கொண்டுவந்தார் என்பதனாலேயே, எந்த விதமான வம்புக்கும் இடமே இல்லாத இந்தத் திட்டத்தையும் அரசாங்கம் ஆத்திரக் கண்கொண்டே நோக்கியது. அதன் விளைவாக, நவம்பர் 23ல் எல்லாத் தல அரசாங்கங்களுக்கும் நிருவாகங்களுக்கும் ஒரு ரகசியச் சுற்றறிக்கையையும் அனுப்பியது. பம்பாய்க் காங்கிரஸ் தீர்மானங்களால் ஏற்படக் கூடிய நிலைமை களையும், குறிப்பாக அகில இந்தியக் கிராமத்தொழில் சங்கத்தை யும் உன்னிப்பாகக் கவனித்து வரவேண்டும் என்று அரசாங்கம் அவர்களைக் கேட்டுக்கொண்டது. அரசியல் அரங்கில் தோல்வி அடைந்த காந்தியடிகள், தமது செல்வாக்கைக் கிராமங்கள்வரை

விரிவுபடுத்தி இந்தியா முழுவதையும் தமது தலைமைக்குள் கொண்டுவரத் திட்டமிடுகிறார் என்றே அரசாங்கம் கருதியது. அதனால்தான், அந்தச் சங்கத்தின் நடவடிக்கைகளைப் பற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்றும் அதற்கு எந்த உதவியும் செய்யக்கூடாது என்றும் அதிகாரிகளுக்கு ஆணை பிறப்பித்தது. **இந்துஸ்தான் டைம்ஸ்** பத்திரிகையின் பம்பாய் நிருபருடைய சாகசத்தால், இப்படி ஒரு அந்தரங்க அறிக்கை வெளி அனுப்பப்பட்டிருக்கும் செய்தி அம்பலமாகி, பாவம், அரசாங்கத்தின் நிலைமை மிகவும் சங்கடமாகி விட்டது.

முதல் கூட்டத் தொடரின் முதல் (1935 செப்டம்பர் 21) நாளிலேயே, காங்கிரஸ் உறுப்பினர் சத்தியமூர்த்தி இதை எடுத்துக்காட்டி அரசாங்கத்தின் ரகசியச் சுற்றறிக்கையைப் பற்றி விவாதிப்பதற்காகச் சபையின் மற்ற நடவடிக்கைகளை ஒத்தி வைக்க வேண்டுமென்று கோரினார். அதற்கு அனுமதி கிடைத்ததும் காரசாரமான விவாதம் தொடங்கிவிட்டது.

“மக்களின் முன்னேற்றத்துக்கான பணிகளில் ஒத்துழைக்க வேண்டும் என்று அரசாங்கம் அடிக்கடி கோரிக்கை விடுகிறது. தலைவர்கள் அத்தகைய முன்னேற்றப் பணிகளில் ஈடுபட்டாலோ, அரசாங்கம் தந்திரமாக நழுவிக் கொண்டு, அவர்களுக்கு எந்த உதவியும் செய்யாதே!, என்று அதிகாரிகளுக்கும் ஆணை பிறப்பிக்கிறது. இதைக் கண்ணாரக் கண்டபிறகு, ஒத்துழைப்பு என்றும் சமரசம் என்றும் சமாதானம் என்றும் நல்லெண்ணம் என்றும் அரசாங்கம் நீள நீளப் பேசுவதெல்லாம் வெறும் ஏமாற்றுப் பேச்சே தவிர உண்மையான பேச்சல்ல என்று நாங்கள் சொன்னால் அதிலே தவறு உண்டா?” என்று காரசாரமாகக் கேட்டார் சத்தியமூர்த்தி.

அவரை ஆதரித்து பந்த் நிகழ்த்திய உரையில் ஏளனத்தொனி இழையோடியது. “முன்பெல்லாம் இந்தியப் பத்திரிகை என்றாலே, நமது அரசாங்கத்துக்குக் கிட்டவரக் கூடாது. ஆனால் இப்போது இங்கே விவாதிக்கப்படும் விவகாரத்தில் நமது உள்துறை உறுப்பினர் குறுக்கித் திரித்த சில (இந்தியப்) பத்திரிகைக் குறிப்புக்களையே ஆதாரமாகக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

இப்போதாவது, இந்தியப் பத்திரிகைகள் நம்பத் தகுந்தவைகளே என்ற ஞானம் அவருக்கு உதயமாகியிருப்பது கண்டு அவரைப் பாராட்டுகிறேன்'' என்றார் பந்த். இதே கையோடு இந்திய அரசாங்கம் பத்திரிகைச் சட்டங்களை எல்லாம் ரத்து செய்து விடும் என்று நம்புகிறேன் என்று அவர் குத்திக் காட்டினார். "அப்படி நேர்ந்து விடுமானால், இந்த எதிர்பாராத சாதனைக்காகக் கிராமத் தொழில் சங்கம் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். கிராமத் தொழில் சங்கத்துக்கு எந்த ஒத்துழைப்பும் தரக்கூடாது என்று முடிவு செய்திருந்த அரசாங்கத்துக்குப் பத்திரிகைகளைப் பற்றியாவது இந்த ஞானோதயம் ஏற்பட்டதே என்பதற்காகக் கிராமத் தொழில் சங்கம் அரசாங்கத்தைப் பாராட்டும் என்றே நம்புகிறேன்'' என்றும் இடித்துக்காட்டினார் பந்த். அதே தோரணையில் பேச்சைத் தொடர்ந்த அவர், "மக்களின் பிரதிநிதிகள் வெகு விரைவிலேயே தங்கள் சொந்த அரசாங்கத்தை அமைத்துக் கொள்ளக் கூடிய சூழ்நிலை உருவாகி வருகிறது. ஆனாலும் நிருவாகத்தையும் அதிகார வர்க்கத்தையும் ஒன்று சேர்த்து, அவர்களை மக்கள் பிரதிநிதிகளின் மேல் உட்கார வைக்கும் முயற்சியை அரசாங்கம் இன்னும் கைவிட்டதாகத் தெரியவில்லை. அரசாங்கம் இதே கொள்கையைத்தான் தொடர்ந்து கடைப்பிடிக்கப் போகிறதா என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்று கேட்டார். "தொழில்களில் ஒரு பகுதி என்ற முறையில், கிராமத் தொழிலும் 1919ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டத்தின்படி, மாற்றப்பட்டவை என்ற பகுதியில் அடங்கும். அதைப் பற்றி ஒரு சுற்றறிக்கை விட்டதன் மூலம் மத்திய அரசாங்கம் மேற்படி இந்தியாச் சட்டத்தை மீறியதாகாதா?'' என்றும் சுட்டிக்கேட்டார் பந்த்.

அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்ட சுற்றறிக்கை ஒரு சாதாரண உத்தரவுதான் என்று உள்துறை உறுப்பினர் சொன்னதைக் குறிப்பிட்டு, "ஆமாம்; அது ஒரு சாதாரண உத்தரவுதான்; பழிதீர்க்கும் நோக்குடைய சாதாரண உத்தரவு! அது மட்டுமல்ல; காந்தியடிகளோ காங்கிரசோ ஏழைமக்களின் முன்னேற்றம் கருதித் தொடங்கும் எந்த இயக்கத்தையும் கொன்றுவிட வேண்டும் என்ற உத்தரவு அது!'' என்று காட்டமாகப் பேசினார் ராஜன்.

காங்கிரஸ் தேசீயக் கட்சியைச் சேர்ந்த பி. என். பானர்ஜியும், கிராமத் தொழில் சங்கத்தின்பால் அரசாங்கம் காண்பித்த குரோதத்தை வன்மையாகக் கண்டித்தார்.

சட்டசபையின் முதல் நாளிலேயே அரசாங்கமும் எதிர்க் கட்சியும் பரீட்சையில் இறங்க நேர்ந்தது குறித்து வருத்தம் தெரிவித்துக் கொண்ட (வங்காளத்தைச் சேர்ந்த) ஃபஸ்லுல் ஹக், இதன் முழுப்பொறுப்பும் அதிகாரிகளையே சார்ந்தது என்று எடுத்துரைத்தார். டாக்காவைச் சேர்ந்த கஸ்னவி அரசாங்கம் செய்ததில் தவறு எதுவும் இல்லை என்று வாதித்தார். "சட்ட மறுப்பு இயக்கம் மாகாணங்களிலே பெரும் விபரீதங்களை விளைவித்திருக்கிறது. அவைகளைக் கருத்தில் கொண்டு, அப்படியான தொல்லைகள் மீண்டும் ஏற்படாதபடி அரசாங்கம் முன்னெச்சரிக்கையாக இருப்பதிலே என்ன தவறு? புதிய பெயரிலே ஏற்படும் இயக்கம் பழைய சட்டமறுப்பு இயக்கம் போல உருவெடுத்து விடக்கூடாது என்று அரசாங்கம் நடவடிக்கை மேற்கொள்வது கூடத் தப்பா?" என்று கேட்டார் கஸ்னவி.

காங்கிரஸ் உறுப்பினர்கள், இந்த விவாதத்தை இத்துடன் முடித்துக் கொள்ளலாம் என்று கேட்டுக்கொண்டார்கள். சபைத் தலைவர் அதற்கு இணங்காததால், தீர்மானம் வெறுமனே பேசித் தீர்க்கப்பட்டது.

**மீண்டும் உரிமைப் பிரச்சினை :**

இரண்டாவது நாள் என். சி. பர்தோலி ஒத்திவைப்புத் தீர்மானம் ஒன்றைச் சபையில் கொண்டு வந்தார். 'தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினராகிய சரத் சந்திர போஸ் சபைக்கு வர முடியாதபடி அரசாங்கம் தடுத்து வைத்திருக்கிறது; இது சபையின் உரிமையில் தலையிடுவதாகும். அவரைப் போட்டியின்றித் தேர்ந்தெடுத்த தொகுதி மக்களின் பிரதிநிதித்துவ உரிமையைப் பறிப்பதும் ஆகும். எனவே, இதைப்பற்றி விவாதிப்பதற்காகச் சபையின் மற்ற நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டும்' என்று அந்தத் தீர்மானம் கோரியது. இதன்மீது காரசாரமாக நடந்த விவாதம் எட்டு ஆண்டுகளுக்கு முன் மூன்றாவது சட்ட

சபையில் எஸ். சி. மித்ராவைப் பற்றிய இதே விவகாரத்தின்மீது நடந்த விவாதத்தையே நினைவூட்டுவதாக இருந்தது.

அரசின் சார்பில் பேசிய சட்டத்துறை உறுப்பினர் சர் நிருபேந்திர நாத் சர்க்கார், "சாம்ராச்சிய சட்ட விதிப்படி அமைக்கப்பட்ட இந்தச் சட்டசபைக்கு அந்தச் சட்ட விதிப்படி உள்ள உரிமைகள் தவிர வேறு உரிமைகள் கிடையா; ஆகையால், சரத் சந்திர போஸைத் தடுத்து வைத்தது எந்த வகையிலும் சட்டசபையின் உரிமையைப் பாதிப்பதாகாது" என்று வாதாடினார். சட்டத்துறை உறுப்பினரின் வாதத்துக்குச் சரியான எதிரடி கொடுத்தார், புலாபாய் தேசாய்: "சாம்ராச்சிய சட்ட விதி இந்தச் சபைக்குத் தனி உரிமைகளை வழங்கவில்லை என்று சொல்லப்பட்டது. அதே சமயம், 1818 ஆம் ஆண்டின் 3வது ஒழுங்குமுறைச் சட்டம் போன்ற ஒரு சட்டத்தால் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டால் ஒரு சபை உறுப்பினர் தமது உரிமைகளை இழந்து போவார் என்றும் அந்தச் சட்டவிதி சொல்லவில்லை என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. இங்கிலாந்தின் மக்கள் சபை உறுப்பினர்களுக்கு உள்ள உரிமைகளின் அடிப்படையில் நான் தனிச்சலுகை எதையும் கோரவில்லை. சட்டவிதி இந்தச் சபை உறுப்பினரின் உரிமை எதையும் மறுக்காத வரையில் அந்த உரிமை அவருக்கு வழங்கப்பட்டாக வேண்டும் என்பதே என் வாதம். முந்திய தடவை (மூன்றாவது சட்டசபையில்) இதைப் பற்றிச் சட்டசபை நிறைவேற்றிய தீர்மானத்தை அரசாங்கம் ஏற்று அமுல் படுத்தாவிட்டாலும், தடுப்புக் காவலில் வைக்கப் படும் ஓர் உறுப்பினர் தனது சட்டசபைப் பொறுப்புக்களை நிறைவேற்றுவதற்குத் தடை இருக்கக் கூடாது என்ற கருத்தை இந்தச் சபை ஏற்கெனவே ஏற்றுக் கொண்டிருக்கிறது என்பதை மறுக்க முடியாது!" உறுப்பினர்களின் கரஒலி ஆரவாரத் திடையே தொடர்ந்து பேசிய தேசாய் பின்வரும் உருக்கமான வேண்டுகோளையும் விடுத்தார்:

"இது தொடர்பாக ஒரு கருத்தை அரசாங்கக் கட்சித் தலைவரின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். தண்டனை அனுபவித்து வருகிற ஒரு குற்றவாளி நீதிமன்றத்தில்

சாட்சி சொல்வதற்காக அழைக்கப்பட்டால், நீதிபரிபாலனத்தில் அவனுடைய உதவி தேவைப்படுகிறது என்பதால், (தகுந்த பாதுகாவலுடன்) அவன் நீதிமன்றத்துக்குக் கொண்டு வரப் படுகிருன். சட்டசபையில் நடந்து வருவது நீதிமன்றத்தில் நடப்பதை விட முக்கியமான பணி. இப்பணியிலே உதவியாக இருக்க வேண்டிய உறுப்பினர் ஒருவர், கேவலம், ஒரு நிருவாக உத்தரவினுல்தான் தடுத்து வைக்கப்பட்டிருக்கிருர். அவர் எந்தக் குற்றமும் செய்து தண்டிக்கப்பட்டவரல்ல. அப்படி இருந்தும், அவரை இங்கு வரமுடியாதபடித் தடுத்து வைத் திருப்பது சரிதான் என்று அரசாங்கம் சொல்ல முடியுமா? அப்படிச் சொன்ஞலும், நாளுே, இந்தச் சபையோ அதை ஏற்கத்தான் முடியுமா? எனவே, 'திரு. எஸ். சி. போஸின் உரிமை பெரியது, புனிதமானது, ஆகவே காக்கப்பட வேண்டியது' என்று இந்தச் சபை தீர்ப்பளிக்க வேண்டும் என்று விரும்பிக் கேட்டுக் கொள்கிறேன்" என்ருர் தேசாய்.

தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய ஜின்னு, "இந்தச் சபை (முழு உரிமையுடைய) ஒரு பாராளுமன்றம் அல்ல என்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனுல், 1932 பிப்ரவரியிலேயே தடுப்புக்காவலில் வைக்கப்பட்ட போஸை விசாரணைக்கும் அனுப்பாமல் இந்தச் சபையின் உறுப்பினர் என்ற முறையில் அவருடைய கடமைகளிலும் ஈடுபட விடாமல் அரசாங்கம் தடுத்து வைத்திருப்பது நியாயம்தானு?" என்று கேட்டார். "அரசாங் கத்தின் நடத்தை இந்தச் சபையில் கடுமையான கண்டனத்துக்கு உரியது; அதைக் கண்டித்து நிராகரிக்க நமக்கு முழு உரிமை உண்டு" என்று வலியுறுத்தி, எல்லோரும் ஒருவிதத் தயக்கமு மின்றி இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தை ஆதரிக்க வேண்டும் என்று உறுப்பினர்களைக் கேட்டுக்கொண்டார் ஜின்னு.

கடுமையான விவாதத்துக்குப் பின் ஓட்டுக்கு விடப்பட்ட தீர்மானம் 58க்கு 54 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. இந்தச் சட்டசபையில் அரசாங்கத்துக்குக் கிடைத்த முதல் தோல்வி இது.

## அரசியல் முனையில் போராட்டம்

### கூட்டுப்பொறுக்குக் குழு அறிக்கை நிராகரிக்கப்பட்டது :

அரசியல் சீர்திருத்தங்களைப் பற்றிய வெள்ளை அறிக்கைக்கு இந்தியாவில் எந்தவிதமான வரவேற்புக் கிடைத்தது என்பதை ஏற்கெனவே (ஐந்தாவது அத்தியாயத்தில்) பார்த்தோம். அப்போதிருந்த சட்டசபை அதை அப்பட்டமாக நிராகரித்தது. ஆனாலும், பிரிட்டிஷ் அரசாங்கம் அரசியல் சட்டத் தயாரிப்புப் பணியை நிறுத்தவில்லை. வெள்ளை அறிக்கையில் கண்ட சிபாரிசு களைப் பரிசீலனை செய்வதற்காக லின்லித்கோ (பிரபு)வின் தலைமையில் பாராளுமன்றத்தின் கூட்டுப் பொறுக்குக் குழு ஒன்றை நியமித்தது.

1934 நவம்பரில் கொடுக்கப்பட்ட கூ. பொ. குழுவின் அறிக்கை வெள்ளை அறிக்கையின் பெரும்பாலான சிபாரிசுகளை அப்படியே ஏற்றுக்கொண்டிருந்தது. என்றாலும், சில முக்கியமான அம்சங் களில் அதைவிடப் பிற்போக்கான சிபாரிசுகளைச் செய்தது. உதாரணமாக, மத்திய (கீழ்ச்) சட்டசபை உறுப்பினர்களின் நேர்முகத் தேர்தலால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்பது வெள்ளை அறிக்கையின் சிபாரிசு ; கூ. பொ. குழுவோ, அவர்கள் மறைமுகத் தேர்தல் மூலம் தேர்வு பெற வேண்டும் என்று சொல்லிற்று. மேலும், பாதுகாப்பு உத்தரவாதங்களுக்கு வெள்ளை அறிக்கை கொடுத்ததை விட அதிகமான முக்கியத்துவத் தைக் கொடுத்து, அதற்கு ஏற்ப, கவர்னர்களுக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் மேலும் அதிகமான அதிகாரங்கள் தரப்பட வேண்டும் என்று கூ. பொ. குழு சிபாரிசு செய்திருந்தது.

இந்திய அரசியல் சீர்திருத்தங்களைப்பற்றிப் பேச்சு வந்தபோது, சில பிரிட்டிஷ்காரர்கள் (பிரிட்டிஷ் அரசாங்கம் பிரிட்டிஷாரின் நலனை விட்டுக் கொடுத்து விடுமோ என்று) சந்தேகப்பட்டார்கள். அவர்களின் சந்தேகத்தைப் போக்குவதற்காக, 1935 ஆம் ஆண்டு இந்தியாச் சட்டத்தை உருவாக்கிய பிரிட்டிஷ் பிரதமர் ஸ்டான்லி பால்ட்வின், அவர்களுக்கு ஓர் உறுதிமொழியை வழங்கினார். அது பின்வருமாறு: இந்தியாவில் உள்ள நமது வைசிராய்கள் மற்றும்

கவர்னர்களுக்கும் அவர்களுக்கு உதவியாக இந்தியா மந்திரியால் நியமிக்கப்பட்டு (பிரிட்டிஷ்) பாராளுமன்றத்தினுல் ஆதரிக்கப் பட்டு வரும் நிருவாகிகளுக்கும் ஒரு முக்கியமான பொறுப்பும் அதற்குத் தேவையான அதிகாரமும் உண்டு. அதாவது, தேவை ஏற்பட்டால், இந்தியர்களாகிய அமைச்சர்களும் இந்தியச் சட்டசபைகளும் நம்முடைய நோக்கங்களுக்குச் சாதகமான முறையிலேயே அதிகாரம் செலுத்தும்படி (வைசிராய் முதலான) அவர்கள் பார்த்துக்கொள்ள வேண்டும்.'' இதிலே குறிக்கப்பட்ட ''நோக்கங்களு''க்கு ஏற்ற விதமாகவே சீர்திருத்தங்களும் பரிசீலனைகளும் அமைந்திருந்தன என்பது கண்கூடு.

இந்தியாவின் பல்வேறுபட்ட கருத்தினரும் கூட்டுப்பொறுக்குக் குழு அறிக்கையின் பிற்போக்குத்தனமான சிபாரிசுகளை ஒரு முகமாகக் கண்டித்தார்கள். டிசம்பர் மாதத்தில் பாட்னுவில் கூடிய காங்கிரஸ், ''இந்த நாட்டில் நடைபெற்று வரும் அந்நிய மேலாதிக்கத்தையும் சுரண்டலையும் சுலபமாக்கி நிரந்தரப் படுத்துவதையே நோக்கமாகக் கொண்ட ஒரு திட்டம் இது'' என்று வருணித்து, அதை அடியோடு நிராகரிக்குமாறு மக்களைக் கேட்டுக் கொண்டது. டிசம்பர் மாதத்திலேயே பூனுவில் நடைபெற்ற தேசீய மிதவாதக் கூட்டணியின் பதினுருவது ஆண்டவைக்குத் தலைமை ஏற்ற இருதய நாத் குன்ஸ்ரு, ''இந்த அறிக்கையை ஏற்றுக் கொண்டால் இந்தியத் தேசீய சக்தியை ஒன்றுதிரட்டி இந்திய ஒற்றுமையின் சின்னமாக விளங்குதற்குத் தேவையான ஆற்றலையே மத்திய சட்டசபை இழந்து போகும்; எனவே, இதை நிராகரித்துவிட்டே மறுவேலை பார்க்க வேண்டும்'' என்ருர். ''கூட்டுப் பொறுக்குக் குழுவின் அறிக்கைக்கு எதிரான போராட்டம், நம்மைப் பொறுத்தவரை, உயிர்ப் போராட்டம்!'' என்று முழங்கினுர் குன்ஸ்ரு. 1935 ஜனவரி 27ல் முஸ்லிம் லீகும் அதைக் கண்டித்தது. ஆனுல் அகில இந்திய முஸ்லிம் மாநாடு, இந்த அறிக்கையில் கொடுக்கப்பட்டுள்ள திட்டம் ''திருப்திகரமான தாக இல்லாவிட்டாலும்'' இந்தியர்கள் அதை அடியோடு நிராகரிக்க வேண்டியதில்லை; மாருக, முழுப்பொறுப்பாட்சி பெறுவதற்கான முயற்சிகளில் அவர்கள் ஒன்றுபட்டு இயங்க வேண்டும், என்று கருத்துத் தெரிவித்தது.

பொதுமக்கள் பரவலாக வெளியிட்ட இந்தக் கருத்துப் போக்கே சட்டசபையிலும் எதிரொலித்தது. 1935 பிப்ரவரி 4ஆம் தேதி அரசாங்கக் கட்சித் தலைவரான சர்க்கார், "கூட்டுப் பொறுக்குக் குழு"வின் அறிக்கையைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம் என்று பிரேரித்த உடனேயே, பல உறுப்பினர்கள், பலவிதமான திருத்தக் கோரிக்கைகளோடு எழுந்து நின்றார்கள். சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் தலைவரான தேசாய் கொண்டுவந்த திருத்தம் இரண்டு அம்சங்களைக் கொண்டது: முதலாவது, இந்த அரசியல் திட்டம் "சாம்ராச்சிய மேலாதிக்கத்தையும் பொருளாதாரச் சுரண்டலையுமே" நோக்கமாகக் கொண்டிருப்பதால் அதிகாரத்தை இந்திய மக்களுக்கு மாற்றித் தர வேண்டும் என்ற நாட்டமே அதில் தொனிக்கவில்லை என்று எடுத்துக்காட்டி, இந்த அடிப்படையில் சட்டம் இயற்றுவதைக் கைவிட வேண்டும் என்று கேட்டுக்கொண்டது. அடுத்தபடியாக, பரஸ்பர ஒத்துழைப்பின் பேரிலேயே தேசீய ஒழுங்கமைதியை நிலைநாட்ட முடியும் என்பதைச் சுட்டிக் காட்டி, இப்போதைக்கு வகுப்புரிமைச் சிபாரிசை ஏற்பது அல்லது நிராகரிப்பது பற்றி எந்தவிதமான முடிவும் தெரிவிக்க வேண்டாம் என்று இந்தச் சபை கருதுகிறது என்று கேட்டுக் கொண்டது.

ஜின்னா கொண்டு வந்த திருத்தம் மூன்று அம்சங்களைக் கொண்டது: அதன் முதல்பகுதி, எல்லோரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய மாற்றுத் திட்டம் ஒன்று உருவாகும் வரை இப்போது வழங்கப்பட்டுள்ள வகுப்புரிமைச் சிபாரிசைச் சபை ஏற்றுக் கொள்கிறது என்று தெரிவித்தது. இதிலே வகுத்துக் கொடுக்கப் பட்டுள்ள மாகாண அரசாங்க முறையானது நிருவாகமும் சட்டசபையும் செயலிழந்து போகுமாறு அமைந்திருப்பதால் அது மிகுந்த ஏமாற்றமளிப்பதாக இருக்கிறது என்று இரண்டாவது பகுதி எடுத்துரைத்தது. "விரும்பத்தகாத" இந்த அம்சங்கள் நீக்கப் படாவிட்டால் இந்தியாவின் எந்தத் தொகுதியினரும் அதை ஏற்க மாட்டார்கள் என்றும் அப்பகுதி சுட்டிக் காட்டியது. மூன்றாவது பகுதியில், "அகில இந்தியக் கூட்டரசு" என்ற விதமாக வகுக்கப் பட்டுள்ள மத்திய அரசாங்க அமைப்பு அடிப்படையிலேயே மோசமானது என்றும் பிரிட்டிஷ் இந்திய மக்கள் அதை ஏற்கவே

மாட்டார்கள் என்றும் விளக்கி வலியுறுத்தியிருந்தார் ஜின்னு. இதே பகுதியில், "இந்த திட்டத்தின் அடிப்படையில் எந்தச் சட்டமும் இயற்ற வேண்டாம்" என்று இந்திய அரசாங்கம் மன்னர்பிரானின் அரசாங்கத்துக்குச் சொல்லிவிட வேண்டும் என்றும் பிரிட்டிஷ் இந்தியப் பகுதிகளில் மட்டும் முழுப் பொறுப் பாட்சியை அமைப்பதற்குரிய ஏற்பாடுகளை விரைந்து செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது.

இந்து மகா சபையின் கருத்தோட்டத்தில், ஒரு திருத்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார் பாய் பரமானந்த். "எதேச் சாதிகாரப் போக்கிலும் நியாயமற்ற முறையிலும் அமைந்த வகுப்புரிமைச் சிபாரிசை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப் பட்ட இந்த (கூ. பொ. கு.) அறிக்கை இந்துக்களுக்கும், தேசீயத் துக்கும், குடியாட்சி மரபுகளுக்கும் நேர் எதிராக இருப்பதால் இதைச் சட்டசபை ஏற்க முடியாது" என்றது அந்தத் தீர்மானம்.

கஸ்னவி, முஸ்லிம் மாநாட்டின் கருத்தை முன்வைத்தார். அவருடைய (திருத்தத்) தீர்மானம், எல்லோரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய வேறு திட்டம் எதுவும் இல்லாததால், வகுப்புரிமைச் சிபாரிசை ஏற்றுக்கொள்ளலாம் என்றது. பிரிட்டிஷ் இந்தியப் பிரதிநிதிகள் குழு கூட்டாகத் தயாரித்துக் கூட்டுப் பொறுக்குக் குழுவிடம் வழங்கிய கோரிக்கையில் உள்ள ஆலோசனைகளுக்கு ஏற்றவிதமாக இந்தத் திட்டத்தில் மாற்றங்கள் செய்யவேண்டும் என்றும் அவருடைய தீர்மானம் கோரியது.

சபையில் கொண்டுவரப்பட்ட திருத்தங்கள் எல்லாவற்றையும் அலசி ஆராய்ந்த தேசாய், "இந்தத் தீர்மானங்களை எல்லாம் ஒட்டு மொத்தமாகப் பார்த்தால், எல்லோரும் கூ. பொ. குழுவின் அறிக்கையை நிராகரிக்கிறார்கள் என்பதே தெளிவாகிறது" என்றார். "என்னுடைய கருத்தும் ஜின்னுவின் கருத்தும் ஒன்றே என்று தெரிவித்த சட்டத்துறை உறுப்பினருக்கு என் நன்றியைத் தெரிவிக்கிறேன்" என்று தொடங்கிய தேசாய், "கூட்டரசு அமைப்பை இந்த அறிக்கை வற்புறுத்துகிறது. ஆனால், சுதேச மன்னர்களே பிரிட்டிஷ் இந்தியாவும் தங்கள் பகுதிகளும் ஒன்றாக இணைய முடியாது என்று கருதுகிறார்கள்" என்று சுட்டிக்

காட்டினுர். அவர் மேலும் பேசுகையில் கூறியதாவது: "பாதுகாப்பு உத்தரவாதங்களையும் கவர்னர் ஜெனரலுக்கு உள்ள தனி அதிகாரப் பொறுப்புகளையும் கவனிப்போர், அதிகாரத்தை மக்கள் பிரதிநிதிகளிடம் மாற்றிக் கொடுக்க இந்தத் திட்டத்தில் எந்த ஏற்பாடும் இல்லை என்பதை உணர்வார்கள். மாநில சுய ஆட்சியோ, ஒரு அசல் கேலிக் கூத்து. இங்குள்ள மதங்களும் இனங்களும் மொழிகளும் அரசியலில் மோசமான விளைவுகளையே ஏற்படுத்தும் என்கிறது கூ. பொ. குழு அறிக்கை. இதைப்போன்ற அபத்தமான கணிப்பு வேறு இருக்க முடியாது" என்று கண்டித்தார் தேசாய்.

உறுப்பினர்களின் கைதட்டலிடையே எழுந்து ஜின்ஞ, "என்னைப் பொறுத்தவரை வகுப்புரிமைச் சொரிசு எனக்குக் கொஞ்சமும் திருப்தியளிக்கவில்லை. மீண்டும் என் கருத்தை எடுத்துச் சொல்வதானுல், நாமே நமக்குரிய ஒரு திட்டத்தை வகுத்துக் கொள்ளாதவரை என்னுடைய தன்மான உணர்ச்சி திருப்தியடையப் போவதில்லை!" என்ருர். "மதமோ இனமோ அரசியலில் நுழைய அனுமதிக்கக் கூடாது என்று தேசாய் கூறியதை நானும் ஒப்புக் கொள்கிறேன். ஆனுல், இது முழுக்க முழுக்க மதம் சம்பந்தப்பட்டதா? இது முழுக்க முழுக்க மொழி சம்பந்தப்பட்டதா?" என்று கேள்வி எழுப்பிய ஜின்ஞ, "இது சிறுபான்மையினரைப் பற்றிய பிரச்சினை. ஆகவே, முழுக்க முழுக்க அரசியல் பிரச்சினை என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்" என்று பதிலும் தந்தார்.

அறிக்கையில் கண்ட கூட்டரசுத் திட்டத்தைக் குறிப்பிட்டு, "இது அசல் அபத்தம், இதன் அடிப்படையே மோசம், எனவே அடியோடு புறக்கணிக்கப்பட வேண்டியது!" என்ருர் ஜின்ஞ. "கூட்டரசுத் திட்டம் வேறென்றுமில்லை. பிரிட்டிஷ் இந்தியச் சட்டத்தின்படி ஆட்சிப்பொறுப்பு முழுவதையும் மத்திய அரசின் கைக்குள் பிடித்து வைத்துக் கொள்ள வகுக்கப்பட்ட ஒரு தந்திரம்தான் இது" என்ருர் அவர். மாநில அரசமைப்பைப் பொறுத்தவரை, "திட்டவட்டமான முன்னேற்றம் காணப்படுகிறது" என்று ஒப்புக்கொண்ட ஜின்ஞ, இரண்டாவது சபை,

கவர்னரின் அதிகாரங்கள் போன்றவை ஏற்கத் தக்கவையல்ல என்றும் குறிப்பிட்டார். தமது நீண்ட அபிப்பிராயங்களைத் தொகுத்துக் கூறுகையில், "இந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ள மாநில அரசுத் திட்டத்தைச் செப்பஞ் செய்யுங்கள்; மத்திய அரசுத் திட்டத்தைக் கைவிடுங்கள்; இங்கே முழுமையான பொறுப்பாட்சி நிறுவுவதற்கு ஏற்ற முறையில், இந்திய மக்களின் கருத்தை அனுசரித்து, எல்லாவற்றையுமே மறுபரிசீலனை செய்யுங்கள்" என்று கேட்டுக்கொண்டார் ஜின்னு.

ஃபஸ்லுல் ஹக் பேசுகையில் அமைச்சர்களின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்த உத்தேசிக்கப்பட்டுள்ள திட்டம் பொறுப்பாட்சிக் கொள்கையின் வளர்ச்சியையே பாதிக்கும் என்றார். வகுப்புரிமைச் சிபாரிசு ஒரு தொல்லையே என்று ஒப்புக் கொண்ட அவர், "ஆனாலும், இப்போது உள்ள நிலைமையில் அதைவிட்டால் வேறு வழி இல்லை" என்றும் வலியுறுத்தினர். தமது உரையை முடிக்கையில், "இங்குள்ள எங்கள் (இந்து) நண்பர்கள் இது பற்றி எங்களோடு உட்கார்ந்து பேசி இருவருக்கும் இணக்கமான ஒரு ஏற்பாட்டுக்கு வருவார்களானால் முஸ்லிம்களாகிய நாங்கள் வகுப்புரிமைச் சிபாரிசை, இங்கேயே இப்பொழுதே கைவிடச் சித்தமாக இருக்கிறேம்!" என்று அறைகூவல் விடுத்தார் ஹக்.

தேசாயின் தீர்மானத்தை ஆதரித்துக் காரசாரமாகப் பேசினர் பந்த்: "வகுப்புவாதப் பிரச்சினையை எழுப்பி இந்தியர்களைக் குழப்புவதே இந்த அரசாங்கத்தின் வழக்கமாகி விட்டது. இந்த அரசு என்ன, உலகில் உள்ள எந்த அரசுமே வேற்றுமைகளைத் தூண்டி விடுவதைத்தான் வழக்கமாகக் கொண்டிருக்கிறது" என்றார் அவர். எனவே, "உங்கள் திட்டத்தைக் கைவிட்டு, பொறுப்பாட்சிக்கு வழி வகுக்கக் கூடிய ஒரு திட்டத்தைத் தயாரிக்கும் பொறுப்பைச் சட்டசபையிடம் ஒப்படையுங்கள்" என்று சட்டத்துறை உறுப்பினரைக் கேட்டுக் கொண்டார் அவர். 1922ல் தன்னுரிமை நாடாக அறிவிக்கப்பட்ட எகிப்தில் திணிக்கப் பட்ட பாதுகாப்பு உத்தரவாதங்களின் வரலாற்றை விவரித்த பந்த், "இந்த உத்தரவாதங்களின் பேரால் பிரிட்டிஷ் ஆலோசகர் எகிப்திய அரசரை வற்புறுத்த, அவர் அரசியல் சட்டத்தைத்

தள்ளி வைத்தார்; கடந்த பதினாலு ஆண்டுகளாக அரசியல் சட்டம் தள்ளிவைக்கப்பட்டது போன்ற நிலையே அங்கே நடைமுறையில் உள்ளது" என்று சுட்டிக் காட்டி, "இந்தியாவில் உள்ள பாதுகாப்பு உத்தரவாதங்களின் கதையும் அதுதான்" என்றார். "கூட்டுப் பொறுப்புக் குழுவின் அறிக்கை ஒரு பயங்கர அக்கிரமம், திட்டமிட்ட சதி; உலகின் எந்த நாட்டிலுமே அரசியல் முன்னேற்றத்தின் பேரால் நடைபெற்றிராத குற்றம் இது!" என்று தமது பேச்சுக்கு முத்தாய்ப்பு இட்டார் பந்த்.

கூட்டுப் பொறுக்குக் குழு வழங்கிய திட்டத்தில் கவர்னர்களுக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் உள்ள அதிகாரத்தைக் குறிப்பிட்டுப் பேசிய காட்கில், "இவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களைப் பார்த்தால் சர்வ வல்லமையுள்ள மன்னர்கள் கூட, நமக்கு கவர்னர் பதவி அல்லது கவர்னர் ஜெனரல் பதவி கிடைக்காதா? என்றே ஏங்குவார்கள்." என்றார். பிரிட்டிஷ்காரர்கள் இந்தியாவை விட்டுப் போய் விட்டால் இந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரோடு ஒருவர் அடித்துக் கொள்வார்கள் என்ற மூடக் கருத்தைப் பரப்பி வருவோரைக் குறிப்பிட்டு, "பிரிட்டிஷ் அதிகாரம் அகன்றால், ஒரு வேளை, ஆரம்பத்தில் இவர்கள் பலப்பரிட்சையில் ஈடுபடவும் கூடும்; ஆனாலும் (இந்தியர்களாகிய) இவர்கள் ஒன்றாக உட்கார்ந்து தங்கள் தேசீயத் திட்டத்தை வகுத்துக் கொள்வார்கள் என்பதில் யாருக்கும் சந்தேகம் வேண்டியதில்லை. (அதையே சொல்லிச் சொல்லிப் பூச்சாண்டி காட்ட வேண்டியதுமில்லை!)" என்று கண்டித்தார் காட்கில். அறிக்கையில் கண்ட கூட்டரசுத் திட்டம் என்பது அரசியலின் குடுமியைச் சுதேச மன்னர்களின் கையில் பிடித்துக் கொடுக்கும் திட்டமேயாகும், என்றும் அவர் எச்சரித்தார்.

"அரசியல் சீர்திருத்தம் பற்றிய வெள்ளை அறிக்கையும் இந்த (கூ. பொ.)க் குழுவின் அறிக்கையையும் இந்தியா கண்டித்து ஒதுக்கியிருக்கும் போது அரசியல் சீர்திருத்த மசோதாவை நிறைவேற்றுவதில் (பிரிட்டிஷ்) பாராளுமன்றம் ஏன் இத்தனை அவசரப்பட வேண்டும்?" என்று கேட்டார் ஆஸஃப் அலி. கூட்டுப் பொறுக்குக்குழு தயாரித்துள்ள அறிக்கை பிரிட்டிஷ்

அரசியல் விவேகத்தின் கையறு நிலை வாசகம்தான்; இதில் காணப்படும் புத்தியின்மை காரணமாக பிரிட்டிஷ் சாம்ராச்சியமே இந்தியாவில் காலகதி அடையப் போகிறது," என்று தாக்கினார் அவர். பீகாரைச் சேர்ந்த தீப நாராயண சிங்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அவசரத்தைக் கண்டித்தார். " நாடு முழுவதும் எதிர்த்துப் புறக்கணித்துக் கொண்டிருக்கும் ஒரு திட்டத்தை மக்கள் மீது சுமத்தி விடுவதில் ஏன்தான் இவர்களுக்கு இத்தனை ஆசையோ?" என்று வினவினார் அவர்.

" இந்திய மக்களுக்குள்ளே ஒற்றுமை ஏற்பட்டு விடக் கூடாது என்பது ஒன்றுதான் (பிரிட்டிஷ்) அரசாங்கத்தின் நோக்கம்; வகுப்புரிமைச் சொரிசை மக்களின் தொண்டைக்குள் திணித்து விடுவதில் அவர்கள் காட்டி வருகிற ஆர்வமே இதை விளக்கப் போதுமானது" என்றார் ஆனே. அகில இந்தியக் கூட்டரசு என்ற பெயரில் சுதேச மன்னர்களை இந்திய அரசியலில் கொண்டு வந்து புகுத்துவதும் இந்த நாட்டின் ஒற்றுமையைக் குலைக்கும் ஒரு திட்டமே என்றும் இடித்துக் காட்டினார் அவர்.

அடுத்துப் பேசிய சர்தார் மங்கல் சிங்கும் கூட்டரசுத் திட்டத்தைக் கண்டித்தார். அவர் மேலும் பேசுகையில், சீக்கியர் உள்ளிட்ட இந்தியாவின் எல்லா வகுப்பினரும் வகுப்புரிமைச் சொரிசை ஏற்றுக் கொண்டிருப்பதாகக் கூ. பொ. குழு அறிக்கையில் சொல்லப்பட்டிருப்பது தவறு என்றார். வகுப்புரிமைச் சொரிசு இந்தியாவில் வகுப்புவாத உணர்ச்சியையே வளர்க்கும் என்று குற்றஞ்சாட்டிய மங்கல் சிங், ஐக்கிய மாகாணத்தைப் போல முஸ்லிம்கள் சிறுபான்மையினராக உள்ள பகுதிகளில் அவர்களுக்குச் சில சலுகைகள் வழங்குவதில் தவறில்லை; ஆனால், இதே விதமான சலுகை பஞ்சாபில் (சிறுபான்மையினராக உள்ள) சீக்கியருக்கு வழங்கப்படவில்லை என்று குறை கூறினார்.

பீகார் நிலச்சுவான்தார்களின் பிரதிநிதியான ராஜா பகதூர் ஹரிஹரப் பிரசாத் நாராயண் சின்ஹா, கூ. பொ. குழு அறிக்கையால் ஜமீன்தார்கள் எந்தவிதமாகப் பாதிக்கப்படுவார்கள் என்ற கோணத்திலேயே அதை அலசினார்: " மத்திய மாநிலச் சட்ட

சபைகளில் பல்வேறு தொகுதியினருக்கும் இடமளிக்கப்பட்டிருக்கிறது; ஆனாலும் ஜமீன்தார்களுக்கு நியாயமாக கிடைக்க வேண்டிய பிரதிநிதித்துவம் தரப்படவில்லை'' என்பது அவருடைய முதல் குற்றச்சாட்டு. அவர் தொடர்ந்து உரையாற்றுகையில், ''நிரந்தர நிலவரித் திட்டம் தொடர்ந்து அமுலில் இருக்கவும் அதன் விதிகள் மீறப்படாதிருக்கவும், சட்டக் கோவையிலேயே திருத்தம் செய்து வகைசெய்ய வேண்டும்; ஜமீன்தார்களின் நியாயமான உரிமையும் பெருமையும் பாதுகாக்கப்படுவதற்கு அது ஒன்றுதான் வழி'' என்று வற்புறுத்தினார்.

பம்பாயில் ஆலை அதிபர்கள் சங்கத்தின் பிரதிநிதியான எச். பி. மோடி அரசியல் சட்டச் சீர்திருத்தங்களை முழுவதுமாக ஒதுக்கித் தள்ள முனையவில்லை, இப்போது உள்ள நிலைமையில் இந்தச் சீர்திருத்தம் ஒரு முன்னேற்றமான நடவடிக்கையே என்றும் அதைப் பாராளுமன்றம் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியமே என்றும் அவர் கருதினார். ஆனாலும், பாதுகாப்பு உத்தரவாதங்களை அவர் கண்டித்தார். அரசாங்கம் வெற்றிகரமாக நடைபெறச் சில உத்தரவாதங்கள் அவசியம்தான் என்றாலும், அத்தகைய உத்தரவாதங்களாலேயே அரசியல் சட்டத்தை நிரப்பிவிடக் கூடாது என்றார் மோடி. இந்தியா டொமினியன் அந்தஸ்துப் பெறுவதே இந்த அரசியல் சீர்திருத்தங்களின் நோக்கம் என்ற செய்தி இந்தத் திட்டத்தில் அறிவிக்கப்பட்டிருக்க வேண்டும், அப்படிச் செய்யப்படாதது பெரிய குறை என்றும் மோடி சுட்டிக்காட்டினார்.

''இந்த நாட்டில் யாருக்காவது பாதுகாப்பு உத்தரவாதம் வழங்கவேண்டுமானால், தொழிலாளர்களுக்கும் ஏழைப் பாமர மக்களுக்குமே அது வழங்கப்பட வேண்டும்'' என்று தொடங்கிய என். எம். ஜோஷி, ''இந்த உத்தரவாதத்தின் பேரால் கவர்னர்களுக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் மிகுதியான அதிகாரங்களை வழங்க வேண்டியதில்லை; இந்த மக்களுக்குச் சட்டசபைகளில் போதிய பிரதிநிதித்துவம் வழங்கினாலே போதும்'' என்று எடுத்துரைத்தார். ''இந்தியர்கள் என்று வரும்போது, பிரிட்டிஷ் இந்திய மக்களை விடச் சுதேச மன்னர்களையே பிரிட்டிஷ்

அரசாங்கம் நம்புகிறது; அதே தோரணையில்தான், பிரிட்டிஷ் இந்திய மக்கள் என்று வரும்போது, பொதுமக்களை விட நிலச் சுவான்தார்களையும் பெரும் பெரும் வணிகர்களையுமே கூட்டுப் பொறுக்குக் குழு அதிகமாக நம்பியிருக்கிறது. கூட்டுப் பொறுக்குக் குழுவின் அறிக்கை முழுவதும் இதைத்தான் காட்டுகிறது" என்றார் ஜோஷி.

எதிர்க்கட்சி வாதத்தைத் தொகுத்துரைத்த சத்தியமூர்த்தி, அரசாங்கத்திற்குச் சுருக்கென்று தைக்கிற மாதிரி தம்முடைய கண்டனக் கணையைத் தொடுத்தார். வெள்ளை அறிக்கையை நிராகரிப்போம் என்ற திட்டவட்டமான கொள்கையின் மீதே காங்கிரஸ் தேர்தலில் போட்டியிட்டது; லட்சக்கணக்கான மக்கள் அந்தக் கொள்கையை ஆதரித்தே (காங்கிரசுக்கு) வாக்களித்தார்கள். தவிர, வெள்ளை அறிக்கையை ஆதரிக்க வேண்டும் என்று சொன்னவர்கள் தேர்தலில் படு தோல்வி அடைந்தார்கள். "கூட்டரசுத் திட்டம் கைவிடப்படுவதானால் இந்த மசோதாவே முழுவதுமாகக் கைவிடப்பட வேண்டும்" என்று பேசினார் சட்டத் துறை உறுப்பினர். அவருக்கு நான் சொல்லிக் கொள்ள விரும்புவது இதுதான்: "எங்களுக்காக நீங்கள் கவலைப்பட்டு இந்தத் திட்டத்தை நிறைவேற்றி விட மல்லுக்கட்ட வேண்டாம்; கூட்டரசுத் திட்டத்தையும் மசோதாவையும் கைவிடுங்கள். அதனால் ஏற்படும் எந்தவிதமான நிலைமையையும் ஏற்றுக்கொள்ள நாங்கள் சித்தமாக இருக்கிறோம்!"

இந்த விவாதம் மூன்று நாள் தொடர்ந்து நடைபெற்றது; 12 திருத்தங்களும் கொண்டுவரப்பட்டன. ஒவ்வொரு திருத்தமும் ஒவ்வொரு பகுதியைக் குறித்துத் திருத்தம் கோரியது. இவைகளை எல்லாம் மொத்தமாக ஓட்டுக்கு விடுவது தலைவருக்குப் பெரிய பிரச்சினையாகி விட்டது. ஆகவே ஒவ்வொரு திருத்தத்தையும் பகுதி பகுதியாக ஓட்டுக்கு விட்டார். தேசாய் கொண்டுவந்த திருத்தத்தின் முதல் பகுதி முதலாவதாக ஓட்டுக்கு விடப்பட்டது. இந்த அரசியல் திட்டம் சாம்ராச்சிய மேலாதிக்கத்தையே நோக்கமாகக் கொண்டிருப்பதால் அதை அரசாங்கம் கைவிட வேண்டும் என்று கோரிய அந்தத் திருத்தம் 61க்கு 72 என்று வாக்கு

வித்தியாசத்தில் தோல்வியடைந்தது. ஜின்னு இதை எதிர்த்து வாக்களித்தார்.

அடுத்தபடியாக, "வேறு சரியான திட்டம் இல்லாத நிலையில் வகுப்புரிமைச் சிபாரிசை ஏற்றுக்கொள்ளலாம்" என்ற ஜின்னுவின் திருத்தம் வந்தது. இந்தச் சமயத்தில், தேசாய் தம்முடைய தீர்மானத்தின் இரண்டாம் பகுதியை ஜின்னு தீர்மானத்தின் முதற்பகுதிக்குத் திருத்தமாக மொழிந்தார். இந்த (தேசாய்)த் தீர்மானமும் 44க்கு 84 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோற்றது. ஜின்னுவும் ஆனேயும் இந்தத் தீர்மானத்துக்கு எதிராக வாக்களித்தார்கள்.

அதன்மேல், ஜின்னு தீர்மானத்தின் முதல் பகுதி ஓட்டுக்கு விடப்பட்டது. தேசாயின் கட்சியார் வாக்களிக்கவில்லை; ஆனே தீர்மானத்தை எதிர்த்து வாக்களித்தார். தீர்மானம் 68க்கு 15 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. ஜின்னு தீர்மானத்தின் மற்ற இரண்டு பகுதிகளையும் ஒன்றாக ஓட்டுக்கு விடலாமா தனித்தனியே விடவேண்டுமா என்பது பற்றிப் பலமான வாக்குவாதம் ஒன்று ஏற்பட்டது. கஸ்னவி, கோவாஸ்ஜி ஜெஹாங்கீர், சட்டத்துறை உறுப்பினர் ஆகியோர், அவை தனித்தனியேதான் ஓட்டுக்கு விடப்பட வேண்டும் என்றனர். தேசாய், இரண்டு பகுதிகளும் ஒன்றாகவே ஓட்டுக்கு விடப்பட வேண்டும் என்று வாதிட்டார். சட்டத்துறை உறுப்பினர் ஜின்னுவைத் தம் கட்சிக்கு இழுத்துக் கொள்ள வெகுவாக முயன்றார். ஆனாலும், முதலில் தமது தீர்மானத்தின் பகுதிகள் தனித்தனியே விடப்படுவதையே விரும்பியதாகவும் வாதங்களைக் கேட்ட பிறகு இரண்டையும் ஒன்றாக விடுவதே சரி என்பதை ஒப்புக் கொள்வதாகவும் சொல்லிவிட்டார் ஜின்னு. அவ்விதமே ஜின்னுவின் தீர்மானம் (பின் இரண்டு பகுதிகள்) ஓட்டுக்கு விடப்பட்டது. ஜின்னு, தேசாய், ஆனே ஆகியோர் ஆதரிக்க, கஸ்னவி, மோடி, ஜெஹாங்கீர் ஆகியோர் எதிர்த்து வாக்களித்தார்கள். தீர்மானம் 74க்கு 56 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

இதைத் தொடர்ந்து, ஜின்னுவின் தீர்மானம் முழுமையாக மீண்டும் ஓட்டுக்கு விடப்பட வேண்டுமா என்ற சுவையான விவாதம் ஒன்று ஏற்பட்டது. தேசாய் இந்த விவகாரத்தில்

அப்படி விடவேண்டியதில்லை என்றார்; சட்ட உறுப்பினர் அப்படி மீண்டும் விடப்பட வேண்டியது அவசியம் என்று வற்புறுத்தினார். 'தீர்மானத்தின் முதல் பகுதியை இந்து உறுப்பினர்கள் ஆதரிக்க மாட்டார்கள்; மூன்றாவது பகுதியை முஸ்லிம் உறுப்பினர்கள் விரும்ப மாட்டார்கள். ஆகவே தீர்மானம் முழுமையாக ஓட்டுக்கு விடப்பட்டால் தோற்றுப் போகும்' என்று சட்டத்துறை உறுப்பினர் நம்பி எதிர்பார்த்தார் என்றும் தோன்றியது. இந்த நிலையில் ஜின்னா எழுந்து, "இது முழுவதையுமே அரசாங்கம் ஒரு கேலிக் கூத்தாக்கித் தீர்க்க விரும்புகிறது; உறுப்பினர்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டார்.

முடிவாக, சபைத்தலைவர் தமது தீர்ப்பை அறிவித்தார். "கூட்டுப் பொறுக்குக் குழுவின் அறிக்கையைப் பற்றிய சபையின் கருத்து என்ன என்பதை அறிவதே தீர்மானத்தின் நோக்கம். இங்கு ஏற்பட்டிருக்கும் புதிய வகைச் சூழ்நிலையில், (பகுதி பகுதியாகச் சபையின் கருத்து தெரிந்து கொள்ளப்பட்டு விட்டதால்) மீண்டும் ஒருமுறை சபையின் கருத்தை அறிய முயல வேண்டியதில்லை" என்று தலைவர் அறிவித்ததும் உறுப்பினர்கள் கைதட்டி உற்சாக ஆரவாரம் செய்தார்கள். அரசாங்கம் தோல்வியைத் தழுவி நிற்க, சபை ஒத்திவைக்கப்பட்டது.

சட்டசபையிலும் வெளியிலும் இவ்விதமான எதிர்ப்பு வெளிப்படையாகத் தெரிவிக்கப்பட்டும், "அரசியல் திட்டத்தைச் செயல்படுத்த எல்லோரும் வருவார்கள்" என்றே அரசாங்கம் எதிர்பார்த்தது! மார்ச் 26ல் ஆஸஃப் அலி கேட்ட ஒரு கேள்விக்கும் சத்தியமூர்த்தி போட்ட பல துணைக்கேள்விகளுக்கும் அரசாங்கக் கட்சித்தலைவர் சர்க்கார் அளித்த பதில், அரசாங்கம் இப்படியான ஓர் எண்ணத்தில் இருக்கிறது என்பதையே தெளிவுபடுத்தியது. இந்தியா மந்திரிக்கு அனுப்பிய கடிதங்களில் இந்த எண்ணமும் தெரிவிக்கப்பட்டிருக்கிறதா என்பது பற்றி சர்க்கார் திட்டவட்டமாக எதுவும் சொல்லவில்லை. ஆயினும், அப்படி ஓர் எண்ணம் இருக்கிறது என்பது தெளிவாக ஊகிக்கக் கூடியதாகவே இருந்தது. இந்திய அரசாங்கத்தின் இந்தத் தவறான முடிவைப் பற்றிச் சபையில் விவாதிக்க சபை நடவடிக்கைகளை ஒத்திவைக்க

வேண்டும் என்ற கோரிக்கை ஒன்றை மார்ச் 28ல் சபையில் கொண்டுவந்தார் சத்தியமூர்த்தி. சர்க்கார் அதை அனுமதிக்கக் கூடாது என்று மறுத்ததைத் தொடர்ந்து சிறிய விவாதம் ஒன்று நடந்தது. தலைவர் அந்தத் தீர்மானத்துக்கு அனுமதி மறுத்து விட்டார்.

## அரசியல் நிர்ணய சபைக் கோரிக்கை:

மன்னர்பிரானின் (பிரிட்டிஷ்) அரசாங்கம் இந்தியச் சட்ட சபைகளின் அபிப்பிராயங்களை எதிர்நோக்கிக் காத்திருக்கவில்லை. 1935 பிப்ரவரி முதல் தேதியிலேயே அதாவது, இங்கே மத்திய சட்டசபை அதுபற்றி விவாதிப்பதற்கு முன்பே கூ. பொ. குழு அறிக்கையின்படி அமைந்த இந்தியாச் சட்டத்தைப் பாராளு மன்றத்தில் தாக்கல் செய்துவிட்டது. இந்தியாவில் கிளம்பிய எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் அங்கே, அது பரிசீலிக்கப்பட்டு வந்தது. அதன் பேரில், பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டு 1935 ஆகஸ்ட் 4ல் மன்னரின் ஒப்புதலையும் பெற்றது. அமெரிக்க நூலாசிரியர் ஒருவர் பொருத்தமாகச் சுட்டிக் காட்டியது போல, கூட்டாட்சி அமைப்பு பின்கண்ட அம்சங்களைக் கொண்டதாக இருந்தது: "பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கே கட்டுப்பட்டு இயங்கும் நிருவாகத்துறைக்கு வழங்கப்பட்டிருந்த அபரிமிதமான அதிகாரங்களை அது மேலும் பலப்படுத்தியது; பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் இந்திய சுதேசமன்னர்கள் போன்ற பிற் போக்காளர்களுக்குமிடையே உள்ள உறவை வளர்த்தது; இந்தியாவில் பிரிட்டிஷார் நடத்தி வந்த வர்த்தகம், தொழில், லேவாதேவி, கடல்வாணிபம் முதலியவைகளின் பழைய வல்லாண் மையை அப்படியே உறுதி செய்தது; இந்தியாவின் பொருளா தாரம், அயல்நாட்டு விவகாரம், ராணுவம் ஆகியவைகளை பிரிட்டி ஷாரின் கையிலேயே விட்டுவைத்தது; பிரிட்டிஷ்காரர்களின் மேலாதிக்கத்தில் நடந்து வந்த நிருவாகத்தை மாற்றவோ அதிலே தலையிடவோ இந்திய மக்களுக்கு எந்த உரிமையும் கிடைக்காத படியும் செய்தது."

அரசியல் அமைப்புச் சட்ட நுணுக்கங்களில் தேர்ந்தவரான கீத், இந்தச் சட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டதாவது: "கூட்டு

ஆட்சி அமைப்பின் பாகங்களாகக் குறிக்கப்பட்டுள்ளவை எல்லாம் ஒரேவிதமாக, ஒரே அளவாக இல்லை. எனவே, அவை களை ஒன்றுசேர்த்து வைப்பது சாதாரணமாக இயலாத காரியமே. பிரிட்டிஷ்காரர்கள் இதற்கு ஆதரவு அளித்தார்கள் என்றால், இவ்வாறான முட்டுக்கட்டை போடும் அம்சங்களை அமைத்தால் தான் பிரிட்டிஷ் இந்தியாவின் ஆட்சியில் கொண்டுவர முயலக் கூடிய தீவிர குடியாட்சி அம்சங்களைத் தடுக்க முடியுமென்று அவர்கள் நம்பியதே அதற்குக் காரணம். இந்திய மத்திய அரசிடம் பொறுப்பாட்சியை ஒப்படைப்பதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போகலாம் என்ற ஒரே நோக்கத்தில் தான் இந்தத் திட்டம் தயாரிக்கப்பட்டது என்று இந்தியர்கள் கருதியது முற்றிலும் தவறல்ல. தவிர, பாதுகாப்பையும் அயல்நாட்டு விவகாரத்தையும் கைவசம் வைத்துக்கொண்டு, கூட்டாட்சிக்குப் பொறுப்பாட்சி வழங்கி விட்டதாக (பிரிட்டிஷார்) பேசியதில் வெகுவாக அர்த்தமில்லை என்றே சொல்லலாம்.''

1936ல் காங்கிரசின் தலைவராக இருந்த ஜவஹர்லால் நேரு, இந்தச் சட்டத்தை ''ஒரு புதிய அடிமைச் சாசனம்'' என்று குறிப்பிட்டார். 1934 மே 3ல் இந்தியாவை ஒரு சுதந்திரநாடாக அமைப்பதற்குரிய அரசியல் நிர்ணய சபை ஒன்றை உண்டாக்க வேண்டும் என்று சுயராச்சியக் கட்சியின் மூலம் விடுவிக்கப் பட்ட கோரிக்கையை 1936 ஏப்ரலில் லக்னோவில் கூடிய காங்கிரஸ் ஒரு சுருக்கத் தீர்மானமாக நிறைவேற்றியது. வயது வந்தவர்களுக் கெல்லாம் வாக்குரிமை அல்லது அதற்குச் சமமான ஒரு தேர்தல் முறையில் அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் படவேண்டும் என்றும் அந்தத் தீர்மானம் கோரியது. இந்தக் கோரிக்கையை முன்வைத்தே செயல்புரியுமாறு, சட்டசபை களிலும் வெளியிலும் உள்ள தன் உறுப்பினர்களையும் காங்கிரஸ் கேட்டுக் கொண்டது.

இந்தியாச் சட்டத்தின்படி அமைந்த மாநில அரசாங்கத்தை 1937 ஏப்ரல் 1ந் தேதி அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்திருந்தது. அதற்கு ஏற்பவே, 1937 இளவேனில் (ஏப்ரல், மே) காலத்தில் மாநிலச் சட்டசபை

களுக்கான தேர்தலையும் நடத்தியது. தேர்தலில் போட்டியிடுவது என்றும், ஆனால் மாநில அரசாங்கங்களில் பங்கு கொள்வதில்லை என்றும் காங்கிரஸ் முடிவு செய்திருந்தது. முஸ்லிம் லீகும், ஜின்னாவின் தலைமையில் தேர்தல் களத்தில் இறங்கியது. காங்கிரஸ் தேர்தல் பிரசாரம், கிராமிய மக்களிடையே என்றும் இல்லாத பேரெழுச்சியை ஏற்படுத்தியது. அதன் விளைவாகக் காங்கிரசுக்கு மகத்தான வெற்றியும் கிடைத்தது. சென்னை, ஐக்கிய மாகாணம், மத்திய மாகாணம், பீகார், ஒரிசா ஆகிய ஐந்து மாநிலங்களிலும் காங்கிரசுக்குப் பெரும்பான்மை கிடைத்திருந்தது. பம்பாய், வங்காளம், அசாம், வடமேற்கு எல்லைப்புறம் ஆகிய மாநிலங்களில் (பெரும்பான்மை பெறாவிட்டாலும்) காங்கிரசே தனிப் பெரிய கட்சியாக வந்தது. சிந்துவிலும் பஞ்சாபிலும் அது சிறுபான்மை இடங்களை மட்டுமே பிடித்து இருந்தது. அதாவது, சுதந்திரம், சமுதாய முன்னேற்றம் ஆகிய வற்றுக்கும் நாடு வழங்கிய சரியான மக்கள் தீர்ப்பாக அமைந்தது தேர்தல் முடிவு.

இந்தத் தேர்தலில் பெரும்பான்மையான முஸ்லிம் வாக்குகளைக் காங்கிரஸ் பெறமுடியாமல் போனது ஒரு பெரிய இடையூறாகவே வந்து முளைத்தது. பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலும் முஸ்லிம் களுக்கு ஒதுக்கப்பட்ட தொகுதிகள் 482. இதில் 56 இடங்களுக்கு மட்டுமே போட்டியிட்ட காங்கிரஸ் 26 இடங்களில்தான் வெற்றி பெற்றது. இந்த வெற்றிகளில் பெரும்பான்மையானவை வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில்தான் கிடைத்தன. ஆனால், முஸ்லிம்கள் அனைவரின் பிரதிநிதித்துவ ஸ்தாபனம் என்ற பெருமை முஸ்லிம் லீகுக்கும் கிட்டவில்லை. குறிப்பாக, முஸ்லிம் கள் பெரும்பான்மையாக உள்ள வங்காளம், பஞ்சாப், சிந்து, வட மேற்கு எல்லைப்புறம் ஆகிய மாநிலங்களில் அதுமிகவும்குறைவான இடங்களையே பிடித்திருந்தது. இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள மாநிலங்களில் முஸ்லிம் லீக் பெருமளவு வெற்றிபெற்று இருந்தாலும், மற்ற மாநிலங்களில், முஸ்லிம் ஆதரவு பல சிறுசிறு மாநில முஸ்லிம் கட்சிகளிடையே பிரிந்துவிட்டது.

தேர்தலைத் தொடர்ந்து, அரசாங்கத்தில் பொறுப்பு ஏற்பதா வேண்டாமா என்பதைப் பற்றிக் காங்கிரசில் நீண்ட தர்க்கம்

ஏற்பட்டது. இறுதியாக, அரசாங்கத்தில் பங்கேற்பது என்று முடிவு செய்யப்பட்டது. அதன்படி, பிரிட்டிஷ் இந்தியாவின் பதினொரு மாநிலங்களுள், பம்பாய், சென்னை, மத்திய மாகாணம், ஐக்கிய மாகாணம், பீகார், ஒரிசா, வடமேற்கு எல்லைப்புறம் ஆகிய ஏழு மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி மந்திரிசபை அமைத்தது. ஆனாலும், மந்திரிசபை அமைப்பில் ஏற்பட்ட தகராறு காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே ஆழமான கசப்புணர்ச்சிகள் உருவாக வழிவகுத்துவிட்டது. ஐக்கிய மாகாணத்தில் முஸ்லிம் லீக் பலமான கட்சியாக இருந்ததால், அங்கே காங்கிரஸ் தன்னுடன் சேர்ந்து கூட்டணி அரசாங்கம் அமைக்கும் என்று முஸ்லிம் லீக் எதிர்பார்த்தது. ஆனால், காங்கிரஸ் கட்சிக்குக் கட்டுப்பட்டு இயங்கவும் சட்டசபையில் தனிக்கட்சி என்ற உரிமையை விட்டுக் கொடுக்கவும் இசைந்தால் மட்டுமே ஒன்றிரண்டு லீக் உறுப்பினர்களை அமைச்சரவையில் சேர்த்துக்கொள்வதாகக் காங்கிரஸ் தெரிவித்து விட்டது. முஸ்லிம் லீக் இதற்கு இணங்கவில்லை. இது முதலே முஸ்லிம் லீக் காங்கிரசை விட்டு விலகி விலகிச் செல்லத் தொடங்கியது. காங்கிரஸ் ஆட்சிபுரியும் மாநிலங்களில் ஆளும் கட்சியின் ஒத்துழைப்புடனேயே முஸ்லிம்கள் ஒடுக்கப்படுகிறார்கள் என்ற கடுமையான குற்றச்சாட்டுகளையும் அள்ளி வீசியது.

தேர்தல் முடிந்ததும், ஜவஹர்லால் நேருவின் திட்டப்படி, காங்கிரஸ் கட்சி முஸ்லிம் மக்களுடன் நெருங்கிய உறவு ஏற்படுத்திக்கொள்ள முயன்று வந்தது. இதுவும் ஜின்னா போன்ற முஸ்லிம் தலைவர்களிடையே கடுமையான சீற்றத்தை எழுப்பியது. அவர்களும், முஸ்லிம்களெல்லாம் ஒரே கொடியின் கீழ் ஒரே தலைமையின் கீழ் ஒன்று சேரவேண்டும் என்ற முழக்கத்தை முன்வைத்து இனவெறியைக் கிளப்பினார்கள். காங்கிரஸ் கட்சி கடைப்பிடித்த கொள்கையால் முஸ்லிம் சமுதாயத்தில் ஒருவிதமான இனச்செருக்கு உணர்ச்சியும் போராட்ட முனைப்பும் ஏற்பட்டன. வாசாலகமுடைய முஸ்லிம் தலைவர்களின் இடைவிடாத பிரசாரமும் அவைகளை வளர்த்து எழுப்பியது. அந்த இரண்டு குணங்களின் உருவகமாகக் கற்பிக்கப்பட்ட ஜின்னா விரைவிலேயே இஸ்லாமிய மக்களின் ஒரே தலைவராக நிமிர்ந்துவிட்டார்.

ஜவஹர்லால் நேருவின் தலைமையில் (1937 மார்ச்சில்) கூடிய காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களின் தேசியப் பேரவை, "1935 ஆம் ஆண்டு இந்தியாச் சட்டத்தை வாபஸ் பெற்று இந்திய மக்களே தங்கள் அரசியல் சட்டத்தை வகுத்துக்கொள்ள வழிவிட வேண்டும்" என்னும் தேசியத் தீர்மானத்தை உடனடியாக நிறைவேற்றுமாறு சட்டசபைகளைக் கேட்டுக்கொண்டது. இதற்காக அரசியல் நிர்ணய சபை ஒன்றை அமைக்க வேண்டுமென்று அரசாங்கத்தை அவர்கள் திட்டவட்டமாகக் கேட்டுக்கொள்ள வேண்டும் என்றும் அக்கோரிக்கை வற்புறுத்தியது. அதற்கு ஏற்ப, 1937 ஆகஸ்ட்–அக்டோபர் கூட்டத்தொடரில், காங்கிரஸ் வசமிருந்த ஏழு மாநிலச் சட்டசபைகளிலும் இந்தக் கோரிக்கை தீர்மானமாக நிறைவேற்றப் பட்டது.

மத்திய சட்டசபையின் எதிர்காலக் கூட்டத்தொடர் ஆரம்பமானபோது, சத்தியமூர்த்தி பின்கண்ட தீர்மானத்தை, செப்டம்பர் 17ல், சட்டசபையில் கொண்டுவந்தார்:

"1935 ஆம் ஆண்டு இந்தியாச்சட்டம் இந்திய மக்களின் கருத்தைக் கொஞ்சமும் பிரதிபலிப்பதாக இல்லை; யாருக்கும் திருப்தியளிப்பதாகவும் இல்லை. எனவே, அதை உடனேயே திரும்பப் பெற்றுக்கொண்டு, இந்தியாவுக்கு ஓர் அரசியல் சட்டத்தை வகுத்துத் தரக்கூடிய அரசியல் நிர்ணய சபை ஒன்றை, வயது வந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமை என்ற தேர்தல் முறையில் தெரிந்தெடுக்க வேண்டும் என்று இந்தச் சபை தீர்மானிக்கிறது. இந்த முடிவை இந்தியா மந்திரிக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் தெரிவிக்குமாறு கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொள்ளுகிறது."

தீர்மானத்தை முன்மொழிந்து பேசுகையில், "எதிர்க்கட்சியின் ஓர் உறுப்பினர் என்ற முறையில் நான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வரவில்லை; பிரிட்டிஷ் இந்தியாவின் 11 மாநிலங்களுள் 7 மாநிலங்களின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுள்ள இந்தியத் தேசியக் காங்கிரசின் பிரதிநிதி என்ற முறையிலேயே கொண்டு வருகிறேன்" என்று தெளிவுபடுத்தினார் சத்தியமூர்த்தி. யாரோ ஒரு பொறுப்பற்ற எதிர்க்கட்சி உறுப்பினர் கொண்டு வரவில்லை,

மாநிலங்களில் பொறுப்பு வாய்ந்த அரசாங்கமாக விளங்கும் ஒரு நிறுவனம் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறது என்று உணர்ந்தவே அவர் அப்படிச் செய்தார். இந்தத் தீர்மானம் பல மாநிலச் சட்டசபைகளால் நிறைவேற்றப்பட்டிருக்கிறது; அங்கெல்லாம் எந்தச் சிறுபான்மையினரும்,—குறிப்பாக முஸ்லிம் சிறுபான்மையினர்—"அரசியல் நிர்ணய சபை" தேவை என்ற கோரிக்கைக்கு எந்த மறுப்பும் தெரிவிக்கவில்லை என்பதையும் சத்தியமூர்த்தி சுட்டிக்காட்டினார். "அகிம்சையையே நடைமுறைக் கொள்கையாகக் கொண்டுள்ள காங்கிரஸ் அரசியல் நிர்ணய சபை கோருகிறது என்றால், இந்த நாட்டு மக்களின் உரிமைகள் பெருகி, மக்களே அத்தகையதொரு சபையை அமைக்கும் நிர்ப்பந்தத்தை அரசாங்கத்துக்கு உண்டாக்க வேண்டும் என்று அது கருதுகிறது என்பதே பொருள்" என்றும் அவர் விளக்கினார். அவர் மேலும் பேசுகையில், "அரசியல் நிர்ணய சபை" என்னும் தொடருக்கு எதிர்ப்புத் தெரிவித்த உறுப்பினர்களுக்குச் சமாதானம் கூறும் முறையில் பின்வருமாறு தொடர்ந்தார்:

"மாநாடுகள் கூட்டி, பேரரங்குகளை அமைத்து, தேவையில்லாத விவாதங்களிலும் நமக்குள்ளேயே சச்சரவுகளிலும் ஈடுபட்டு, "இந்த மக்கள் தங்கள் விவகாரங்களைத் தாமே கவனித்துக் கொள்ளத் தெரியாதவர்கள்" என்ற கருத்தையே அந்நியருக்கும் அரசாங்கத்துக்கும் உண்டாக்கினோம். இதுபோன்ற பயனற்ற மாநாடுகள், பயனற்ற பேரரங்குகள் இனி வேண்டாம். நம்மிடையே உள்ள மூன்றாவது நபர் நீக்கப்பட வேண்டும்; நம்முடைய (அ. நி.) சபையே நமது விவகாரங்களை முடிவு செய்ய வேண்டும்; அது பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைக் கட்டுப்படுத்துவதாகவும் இருக்கவேண்டும். இந்த உரிமைகளை இந்தச் சட்ட சபை வழங்கவேண்டும் என்பதே நமது கோரிக்கை. அரசியல் நிர்ணய சபை வேண்டும் என்று நாம் கேட்பதின் நோக்கம் இதுவே."

இதன் பிறகு, வகுப்புரிமைச் சிபாரிசைப் பற்றிய காங்கிரசின் கருத்தை விவரித்து, இந்தியாச் சட்டத்தை ஏன் ஏற்க முடியவில்லை என்பதற்கான காரணங்களையும் விளக்கினார் சத்தியமூர்த்தி.

ஜின்னு, சத்தியமூர்த்தியின் தீர்மானத்துக்கு ஒரு திருத்தம் கொண்டு வந்தார். அரசியல் நிர்ணய சபைக் கோரிக்கையை நீக்கி விட்டு, வகுப்புரிமைச் சிபாரிசில் கண்ட முறைப்படி தேர்ந் தெடுக்கப்பட்டவர்களின் பேரரங்கு அல்லது மாநாடு ஒன்றைக் கூட்டவேண்டும் என்று கோரியது அந்தத் திருத்தம். எல்லா வகுப்பினரின் ஒப்புதலோடும், முஸ்லிம்கள் மற்றும் வேறு சிறுபான்மையினரின் உரிமைகளும் நலன்களும் தகுந்தவாறு பாதுகாக்கப்பட வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குத் தெரிவிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார் ஜின்னு. 1936ல் லிபரல் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜெஹாங்கீர், ஜின்னுவின் கோரிக்கையை ஏற்றுக்கொண்டாலும், ஜின்னு குறிப்பிட்ட மாநாட்டில் எல்லாச் சிறுபான்மையினருக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் என்று ஒரு திருத்தம் கொண்டுவந்தார்.

சத்தியமூர்த்தியின் தீர்மானத்துக்கு மற்ருெரு திருத்தம் கொண்டுவந்த ஆனே, "1935 இந்தியாச் சட்டம் மட்டுமல்ல, வகுப்புரிமைச் சிபாரிசும் நாட்டுமக்களின் கருத்துக்கு எதிரானதே; ஆகையால் இரண்டுமே கைவிடப்பட வேண்டும்" என்று வற்புறுத்தினுர். ஆலோசனையில் உள்ள அரசியல் நிர்ணய சபை இனச்சார்புகள் அற்ற தேர்தல் முறையில் தெரிந்தெடுக்கப்படும் என்று திட்டவட்டமாகக் குறிப்பிட வேண்டும் என்றும் ஆனே கேட்டுக்கொண்டார்.

இந்தியாவின் அப்போதைய அரசியல் போக்குகளைத் தெளிவாகக் காட்டுகிற இந்தத் தீர்மானங்கள் முன்மொழியப் பட்டதுமே, அரசியல் நிர்ணய சபைக் கோரிக்கையைப் பற்றி பொதுவான விவாதத்துக்குக் களம் தயாராகி விட்டது.

மௌலானு ஜஃபர் அலி கான் ஜின்னுவை ஆதரித்துப் பேசினுர்: "என் காங்கிரஸ் நண்பர்கள் விடுதலையின் பேரால் நடத்திவரும் புரட்சிகளின் தரத்தை உயர்த்திக் கொள்வார்களானுல், அவர் களோடு சேர்ந்து கொள்வதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. அதேபோல், முழுச் சுதந்திரமே நோக்கமாக அவர்கள் பிரிட்டிஷ் காரர்களை எதிர்த்தும் "படை" திரட்டுவார்களானுல், அந்தப்

படையணியின் முன்னணியில் முதல் வீரனாக நான் நிற்பேன்! ஆனால், இந்தச் சபையில் நிகழ்த்தும் பேச்சுக்களின் மூலமே அவர்கள் நாட்டுக்குச் சுதந்திரம் பெற விரும்புவார்களானால், இன்னும் ஆயிரம் ஆண்டுக்காலம் அவர்கள் இதையேதான் நடத்திக் கொண்டிருக்கப் போகிறார்கள். இதிலே இவ்வளவு மெதுவாகப் போகிற அவர்கள், முஸ்லிம்களோடு ஒரு இணக்கமான ஒப்பந்தத்துக்கு வருவது பற்றியும் இங்கேயே பேசினால் என்ன?'' இவ்வாறு காங்கிரஸ்காரர்களைக் கேட்ட மௌலானா, ''எங்களைப் பொறுத்த வரை முஸ்லிம்களுக்கு வேண்டியவைகளை ஜின்னா ஒருவர்தான் செய்ய முடியும் என்று திடமாக நம்புகிறோம்'' என்றார்.

மௌலானா சவுக்கத் அலி பேசுகையில், இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே இணக்கத்தை ஏற்படுத்த அவர் மேற்கொண்ட அரிய முயற்சிகளை விவரித்து, ''ஆனாலும் எனக்கு வெற்றி கிட்டவில்லை'' என்று சொன்னார். ''முன்பு காந்தி அடிகளின் தலைமையில் துணிவாகப் பணியாற்றினேன்; இப்போது ஜின்னாவின் தலைமையில் தொண்டாற்றுவதில் பெருமைப்படுகிறேன்'' என்றும் கூறினார். ''இந்திய முஸ்லிம்களுக்குள்ளேயே நிதானபுத்தியுடைய ஒரே மனிதர் ஜின்னா; எல்லாத் தரப்பினருக்கும் நியாயம் கிடைக்க வேண்டுமென்று உழைத்து வருபவரும் அவரே. அவர் கண்டிப்புக்காரர். ஆகவே, முஸ்லிம் நலன்களைப் பேணக் கூடியவர் அவர் ஒருவரே'' என்று விதந்துரைத்தார் மௌலானா அலி.

ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த முகம்மது யாமின் கான், ''காங்கிரஸ்காரர்கள், தாங்கள் பெரும்பான்மையாக உள்ள மாநிலங்களில் சிறுபான்மையினரிடம் இன்னும் கொஞ்சம் தாராளமாக நடந்து கொண்டிருக்க வேண்டும்'' என்று குறிப்பிட்டார். வகுப்புவாத உணர்ச்சியும் வர்க்க உணர்ச்சியும் கலந்த வேகத்தில், ''தனிப் பெரிய சிறுபான்மையினராக உள்ள முஸ்லிம்களைக் காங்கிரஸ்காரர்கள் அடித்து வெளியேற்றுகிறார்கள்'' என்றும் குற்றம் சாட்டினார் அவர். மேலும் பேசுகையில் அவர் குறிப்பிட்டதாவது:

" மற்ருெரு சிறுபான்மை வகுப்பான ஜமீன்தார்களையும் இந்தக் காங்கிரஸ்காரர்கள் கொடுமைப்படுத்துகிருர்கள். என்னுடைய மாநிலத்தில் சாதிக் கட்சிகள் சில இருந்தாலும், காங்கிரசும் ஜமீன்தார்களின் கட்சியுமே இரண்டு முக்கியமான கட்சிகள். அங்கே ஆட்சிக்கு வந்த காங்கிரஸ்காரர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? நிலவரி முழுவதையும் அவர்கள் வசூலித்துக் கொண்டார்கள். அதே சமயம், குத்தகை வசூலிக்கக் கூடாது என்று (ஜமீன்தார்களை)த் தடுத்துவிட்டார்கள்! ஜமீன்தார்கள் நிலவரி கட்டுவதற்கு, அவர்களுக்குப் பணம் எங்கே இருந்து வரும்?"

இந்தக் கேள்வியை எழுப்பிக் கொண்டு, " இப்படிப்பட்ட காங்கிரஸ்காரர்களின் அரசியல் நிர்ணய சபை ஏற்பட்டால் சிறுபான்மையினரின் நிலைமை என்ன ஆகும் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்" என்று சபையை எச்சரித்தார் யாமின் கான். அவரே ஒரு ஜமீன்தார்; பிரிட்டிஷ்காரரின் தயவு இல்லாவிட்டால் அவருடைய நிலை என்ன ஆகும், பாவம்? " அரசியல் நிர்ணய சபை ஏற்பட்டால், பாதுகாப்பு உத்தரவாதம் எதுவும் இராது. சத்தியமூர்த்தி சொல்லுகிற அ. நி. சபை எப்படி இருக்கும்? இப்போது உள்ள சட்டசபையில் அரசாங்கப் பகுதியை நீக்கிவிட்டால் எப்படி இருக்குமோ, அப்படித்தான் இருக்கும் அந்தச் சபை. அதிலே (எங்களைப் போன்ற) சிறு பான்மையினரின் குரலுக்கு இடமே இராது" என்று மீண்டும் அங்கலாய்த்தார் அவர். "(ஜமீன்தார்களையும் உள்ளிட்ட) சிறுபான்மையினரோடு இணங்கிப் போக ஆயத்தமாக இருப்ப தாகக் காங்கிரஸ் தன் செயல்கள் மூலம் மெய்ப்பித்தாலல்லாமல் நாங்கள் அதனேடு சேரப் போவதில்லை; அது மட்டு மல்ல, காங்கிரசின் நடவடிக்கைகளை முழு மூச்சாக எதிர்க்கவும் தயங்க மாட்டோம்!" என்று முழங்கிய யாமின் கான், காங்கிரஸ் தீர்மானத்தையும் அதன் மீது வந்த திருத்தங்களையும் ஒரு மொத்தமாக எதிர்த்தார்.

வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைச் சேர்ந்த அப்துல் கையூம் காங்கிரஸ் தீர்மானத்தை ஆதரித்தும், முஸ்லிம் வகுப்பு வாதிகளைக் கடுமையாகத் தாக்கியும் பேசினர் :

"முஸ்லிம்களாகிய நாங்கள் இந்தியர்கள்; முழு இந்தியர்கள். இந்தியா ஒரே தேசீய இனம் என்பதே எங்கள் கொள்கை. எனவே, எங்கள் இந்து சகோதரர்களுடன் இணங்கி இனம் பொருந்தி வாழ்வதையே நாங்கள் விரும்புகிறோம். எதிர் காலத்தில் இந்தியா அடையப் போகும் மகோன்னத நிலை இப்போதே எங்களுக்குப் புலப்படுகிறது; அதைப் பங்குபோடவும் அதற்கான ஒப்பந்தங்களையே வற்புறுத்தவும் கச்சை கட்டிக் கொண்டு திரிகின்றவர்களுக்கு நாங்கள் பணிந்து கொடுக்கப் போவதில்லை. அதுவும், அத்தகைய பிரிவினை அந்நியராலேயே செய்யப்படும் என்னும் போது அந்தத் தீமைக்கு நாங்கள் இணங்கவே முடியாது!" என்று அறை கூவினார் கையூம்.

எல்லாத் தொகுதி இந்தியருக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கக் கூடிய அரசியல் நிர்ணய சபை ஒன்று அமைக்கப்படுவதை அவர் மிகுந்த உற்சாகத்தோடு வரவேற்றார். இந்த நாட்டு உழைப்பாளி களான லட்சோப லட்சம் மக்களின் பிரதிநிதிகள் கூடிக் கலந்து பேசி ஒரு அரசியல் சட்டத்தை உருவாக்கினால், அது, இந்த நாட்டு மக்களில் யாருக்கும் எந்தத் தீங்கையும் விளைவிக்காது என்று உறுதி கூறினார் கையூம்.

கல்கத்தாவைச் சேர்ந்த பண்டித லட்சுமி காந்த் மைத்ரா, ஆனேயின் திருத்தத்தை ஆதரித்து ஜின்னாவின் திருத்தத்தைக் கண்டித்தார். சத்தியமூர்த்தியின் தீர்மானம் மிக நல்ல நோக்கத் தோடு கொண்டுவரப்பட்டுள்ளது; அவர் சுட்டிக்காட்டிய அரசியல் நிர்ணய சபையின் நோக்கமும் சிறந்ததே. ஆனால், அவர் இதைத் தவறான சமயத்தில் கொண்டு வந்துவிட்டார். பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு பிற்போக்குத்தனமான அரசியல் சட்டத்தை இந்தியாவின் மீது திணித்துள்ளது. இதை எதிர்த்து, இந்தியர்கள் தங்கள் திட்டத்தை அதிகார வர்க்கத்தின் மீது திணிக்க வேண்டு மானால், அதற்குத் தேவையான சக்தியை நமக்குப் பின்னால் திரட்ட வேண்டும்; உலகின் வேறு எந்தச் சக்திக்கும் ஈடு கொடுக்கக் கூடிய சக்தியாக அது இருக்க வேண்டும். வகுப்புரிமைச் சிபாரிசு, தனித்தொகுதி என்பவைகளின் பேரால் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு கொடும் சூழ்ச்சியை இந்தியாவின்

மீது பரப்பியிருக்கிறது. காங்கிரசே, இதை "அறிவுக்குப் பொருந்தாதது என்றும் தேசீய விரோத நடவடிக்கை" என்றும் கண்டித்திருக்கிறது. "நமது கருத்தில் நமக்கு மெய்ம்மையும் துணிவும் இருக்குமானால், நாம், துணிவாக நிமிர்ந்தெழுந்து நின்று, இந்தியாவின் எதிர்கால அரசியல் திட்டத்தில் வகுப்புரிமைக்கும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்துக்கும் இடமே இருக்கக் கூடாது என்று அடித்துச் சொல்லவேண்டும்!" என்றார் மைத்ரா.

வகுப்புரிமைச் சிபாரிசு நிராகரிக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்திய சர்தார் சந்த் சிங், வகுப்புரிமைச் சிபாரிசுகளின் அடிப்படையிலேயே அரசியல் நிர்ணய சபை அமைக்கப்படுமானால், சீக்கியர்கள் அதனோடு எந்த வகையிலும் தங்களைத் தொடர்பு படுத்திக் கொள்ளமாட்டார்கள் என்றார்.

இவ்வாறாக, இந்திய அரசியலில் ஏற்பட்டு வந்த பிளவுகளை இந்த விவாதம் தெளிவாக எதிரொலித்தது. விவாதம் முடியு முன்பே சபை நடவடிக்கை ஒத்திவைக்கப்பட்டது. இதே விவாதம், பின்னர் 1938ஆம் ஆண்டின் வரவு செலவுத் திட்டத் தொடரிலும் தலைதூக்கியது. இப்போது, அநேகமாக அந்தத் தீர்மானம் நிறைவேறுவதற்கு வாய்ப்பு இல்லை என்று விளங்கி விட்டது. எனவே, 1938 பிப்ரவரி 4ஆம் தேதியன்று, ஆஸஃப் அலி தீர்மானத்தைப் பற்றிய விவாதத்தைக் கால வரையறையின்றி ஒத்திப் போடலாம் என்று ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். "எவ்வளவு விரைந்த அரசியல் நடவடிக்கை" என்று ஏளனமாகக் குறிப்பிட்டவாறே, அரசாங்கக் கட்சித் தலைவரான சர்க்கார் அதற்கு இணங்கினார். அதன் பேரில் அதைப் பற்றிய விவாதத்தைக் காலவரையறையின்றி ஒத்தி வைப்பது என்று சபை முடிவு செய்தது; அரசாங்கமும் நிம்மதிப் பெருமூச்சு விட்டது.

### அடக்குமுறைக்கு எதிர்ப்பு:

சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தப்பட்டதும் 1934 ஜூனில் அரசாங்கம் காங்கிரசின் மீது விதிக்கப்பட்டிருந்த தடையை நீக்கியது. ஆனாலும், அரசாங்கம் தன்னுடைய அடக்குமுறைக் கொள்கையைக் கைவிடவில்லை. வடமேற்கு எல்லைப்புற

மாகாணத்தின் (செஞ்சட்டைப்படை என்னும்) குதாய் கித்மத்கார் மற்றும் பல இளைஞர் இயக்கங்களின் மீதும் விவசாய நிறுவனங்களின் மீதும் விதிக்கப்பட்டிருந்த தடை இன்னும் நீக்கப்படவில்லை. 1934 ஜூலையில் இந்தியக் கம்யூனிஸ்டு கட்சியும் சட்ட விரோதமாக்கப்பட்டது. காங்கிரஸ்காரர்களைப் பொறுத்த அளவில், ஜவஹர்லால் நேரு, சுபாஷ் சந்திர போஸ் ஆகியவர்களின் மீதே அரசாங்க அடக்குமுறை குறி வைத்தது. மத்திய சட்ட சபை உறுப்பினர்கள், அடக்குமுறைக் கொள்கையை கைவிடுமாறு பல சமயங்களில் அரசாங்கத்தை வற்புறுத்தினார்கள்.

1935 பிப்ரவரி 5ஆம் தேதி பி. தாஸ் சட்டசபையில் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். அந்தத் தீர்மானம், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலுள்ள குதாய் கித்மத்கார் (செஞ்சட்டைப்படை) மீது உள்ள தடையை உடனடியாக நீக்க வேண்டும் அல்லது நீக்குவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளச் செய்ய வேண்டும் என்று கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்வதாக அமைந்தது. எல்லைக்காந்தி அப்துல் கஃபார் கான் தலைமையில் குதாய் கித்மத்கார் நடத்தியுள்ள இயக்கங்கள் எப்போதும் அமைதியாகவே நடந்துள்ளன என்றும், இருந்த போதிலும் அரசாங்கம் அவர்களைச் சந்தேகக் கண் கொண்டே பார்த்து அவர்கள் மீது அடக்குமுறைகளை ஏவிய வண்ணமாக இருந்திருக்கிறது என்றும் எடுத்துக் காட்டினார் தாஸ். அவர் மேலும் பேசுகையில், இந்த (செஞ்சட்டைப்படை) நிறுவனம் மேற்கொண்டு வந்துள்ள நடவடிக்கைகளாலேதான் அண்மையில் அரசியல் சீர்திருத்தங்களை எல்லைப்புறத்துக்கும் விஸ்தரிக்க முடிந்தது என்று சுட்டிக்காட்டி, அதன் மீது உள்ள தடையை நீக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார்.

தேசாய், பானர்ஜி, அப்துல் மதீன் சௌதுரி, ஷெர்வானி, சவுக்கத் அலி கான் மற்றும் பலர் தாஸின் தீர்மானத்தை ஆதரித்தார்கள். ஃபஸ்லுல் ஹக், தீர்மானத்தைக் கொள்கையளவில் ஆதரித்தார். பெரிய அளவில் நடைபெறும் எந்த இயக்கமும் முழுக்க முழுக்க அகிம்சை நெறியிலேயே செயல்பட முடியாது என்ற (அரசாங்கத் தரப்புக்) குற்றச்சாட்டை ஜின்னா

வன்மையாக மறுத்தார் ஆனால், அரசாங்கத்தார் தாங்கள் முட்டாள்தனமான தவறுகள் ஏதும் செய்துவிடவில்லை என்று சொல்லுவதையும் தான் ஏற்க முடியாது என்று மடக்கினார் அவர். அத்துடன், "எல்லைப்புறத்தில் அமைதியை நிலைநாட்டி அங்கே அரசியல் விதிப்படி ஆட்சியை நடத்துங்கள் ; அது மட்டுமல்ல,— இந்தச் சபையில் வெளியிடப்படும் இந்தியர்களின் உணர்ச்சிக்கும் மதிப்புக் கொடுங்கள்" என்றும் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார், ஜின்னா.

எல்லைப்புற மாகாணத்திலிருந்து முதன் முதலாகச் சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த காங்கிரஸ் உறுப்பினர் டாக்டர் கான் சாகிப் தீர்மானத்தை ஆதரித்துப் பேச எழுந்ததுமே சபையில் உற்சாக ஆரவாரம் கிளம்பியது. பிரிட்டிஷ் படை வீரர்கள் அந்த மாகாண மக்களுக்கு இழைத்துவந்த காட்டு மிராண்டித்தனமான கொடுமைகளை அவர் உருக்கமாக விவரித்தார். எல்லைப்புற மாகாணம் ஒரு "வெடி மருந்துச்சாலை" என்றும் ஆகவே அங்கே "புகை பிடிக்கும் உரிமையை வழங்க முடியாது" என்றும் சைமன் குழு, தன் அறிக்கையில் குறிப்பிட்டிருந்தது. அதைச் சுட்டிக்காட்டி, "அந்த வெடி மருந்துச் சாலையை அமைதி தவழும் ஓர் இல்லமாக மாற்றுவதற் காகத்தான் குதாய் கித்மத்கார் தொடங்கப்பட்டது" என்று அவர் அரசாங்கத்துக்கு எடுத்துரைத்த போது சபையோர் கை தட்டி ஆரவாரம் செய்தார்கள். குதாய் கித்மத்கார் எப்போதும் பணிவும் அகிம்சை நெறியும் இணைந்த முறையிலேயே தன்னால் ஆன தொண்டைச் செய்து வரும் என்று உறுதி கூறித் தம்முடைய உரையை முடித்தார் டாக்டர் கான் சாகிப்.

விவாதத்தின் முடிவில் நடந்த ஓட்டெடுப்பில் எதிர்க்கட்சியினர் எல்லோரும் தீர்மானத்துக்கு ஆதரவாக வாக்களித்தார்கள். தாஸின் தீர்மானம் 74க்கு 46 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

உள்துறைச் செலவினங்களுக்கான கோரிக்கை மார்ச் 8ல் சட்ட சபைக்கு வந்தபோது, அதில் 100 ரூபாய் குறைக்க வேண்டும் என்ற வெட்டுத் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார் ஆனே.

அப்போதும் அரசாங்கத்தின் அடக்கு முறை பற்றிய பிரச்சினை கிளப்பப்பட்டது. தேவையே இல்லாத சமயத்திலும் அரசாங்கம் அடக்குமுறைகளை அவிழ்த்து விடுவதைக் கண்டிப்பதற்காகவே வெட்டுத் தீர்மானம் கொண்டு வந்ததாக ஆனே குறிப்பிட்டார். ஆக்ராவைச் சேர்ந்த பண்டித ஸ்ரீ கிருஷ்ண தத்தா பலிவால் இந்த வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார். அமெரிக்கா, தென்னாப்பிரிக்கா, அயர்லாந்து, ரஷ்யா போன்ற இடங்களி லெல்லாம் அடக்குமுறை தோல்வியே கண்டிருக்கிறது; இந்தியா விலும் அது வெற்றி பெறப் போவதில்லை என்று அரசாங்கத்தை எச்சரித்தார் பலிவால். அவர் மேலும் பேசுகையில் " ஹிட்லரின் பழுப்புச் சட்டைக்காரரது கொடுமை வங்காளத்தில் பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் கட்டவிழ்த்து விட்டுள்ள வெள்ளையரது வெறிக் கொடுமைக்கு உறைபோடக் கூடப் போதாது!" என்று எடுத்துரைத்தார்.

பீகாரைச் சேர்ந்த ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா, அவருடைய மாவட்டத்தில் அரசாங்கம் விவசாயிகளுக்கு இழைத்த கொடுமைகளை விவரித்தார். இந்தியாவில் நிலைமை மாறுமலே இருந்தாலும் கூட, சட்ட மறுப்பு இயக்கத்தைக் காங்கிரஸ் நிறுத்தி வைக்காமலே இருந்தாலும் கூட, இந்திய அரசாங்கம் இவ்வளவு அநியாயமான அடக்குமுறைகளைக் கையாண்டிருக்கவே கூடாது என்றார் அவர். மக்களின் கருத்துக்குச் செவியே சாய்க்காத கல்நெஞ்ச அரசாங்கம் இது என்று கண்டித்து ஆனேயின் தீர்மானத்தை ஆதரித்தார் சின்ஹா. தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு, 63க்கு 58 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

வேறு பல சமயங்களிலும் அடக்குமுறை பற்றிய பிரச்சினையின் மீது அரசாங்கம் தோற்கடிக்கப்பட்டது. 1936 மார்ச் 23ல் சுபாஷ் சந்திர போஸுக்கு விதிக்கப்பட்ட தடையை நீக்க வேண்டுமென்று நீலகண்ட தாஸ் கொண்டுவந்த தீர்மானத்தில் அரசாங்கம் 62க்கு 59 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோற் கடிக்கப்பட்டது. 1937 ஆகஸ்ட் 25ல் அந்தமான் தீவில் (சிறை வைக்கப்பட்டிருந்த) அரசியல் கைதிகளின் உண்ணாவிரதத்தைப் பற்றி விவாதிப்பதற்காகச் சபை நடவடிக்கைகளை ஒத்தி வைக்கக்

கோரி சத்தியமூர்த்தி கொண்டு வந்த தீர்மானத்தில் மீண்டும், 62க்கு 55 என்ற வாக்கு வித்தியாசத்தில் அரசாங்கம் தோற்கடிக்கப்பட்டது.

## அயல்நாடுகளில் வாழும் இந்தியர்பால் பரிவு :

வெளிநாடுகளில் வாழும் இந்தியர்களுக்கு அந்நாடுகளில் இழைக்கப்படும் கொடுமை, இந்தியாவில் சட்டசபைக்கு உள்ளேயும் வெளியேயும் எழுந்த தேசீயக் கிளர்ச்சிகளுக்குரிய காரணங்களுள் ஒன்ருகத்தான் எப்போதும் இருந்து வந்திருக்கிறது. தொடக்க காலங்களில், இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஒத்துழைப்பைப் பெற வேண்டும் என்று சீனிவாச சாஸ்திரி வற்புறுத்தி வந்ததன் பலனுக, கென்யாவில் இந்தியர்களிடம் காட்டப்பட்ட பாரபட்சம் ஒருவாறு முடிவுக்கு வந்தது.

ஐந்தாவது சட்டசபையிலும் வெளிநாட்டு இந்தியர் பிரச்சினை அவ்வப்போது விவாதத்துக்கு வரத்தான் செய்தது. 1935 செப்டம்பர் 18ல் சான்ஸிபார் இந்தியர் நிலைமையைப் பற்றி கோவிந்த வல்லப பந்த் சட்டசபையில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். சான்ஸிபாரில் குடியேறியுள்ள இந்தியரின் நலனைப் பாதுகாக்கும் நடவடிக்கைகளை உடனடியாக மேற்கொள்ளுமாறு கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொள்ளும் அந்தத் தீர்மானத்தைச் சட்டசபை நிறைவேற்றி வைத்தது. 1937 ஆகஸ்ட் 23ல் மேற்குறித்த தீர்மானத்தின் மீது உரிய நடவடிக்கை எடுக்கவில்லை என்று அரசாங்கத்தைக் கண்டிக்கும் முகமாக ஒத்திவைப்புத் தீர்மானம் ஒன்றை சத்தியமூர்த்தி கொண்டுவந்தார். தீர்மானத்தின்மீது காரசாரமான விவாதம் நடந்தாலும், அது 66க்கு 25 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது. 1937 மார்ச் 8ல் கல்வி, சுகாதாரம் மற்றும் நிலவரி இலாகா மானியக் கோரிக்கை சட்டசபையில் வந்தபோது, வெளிநாடுகளில் வாழும் இந்தியர் நலனைப் பாதுகாக்கத் தவறிய அரசாங்கத்தைக் கண்டிப்பதற்காகவே, அந்த மானியத்தில் 100 ரூபாய் குறைக்கக் கோரும் வெட்டுத் தீர்மானம் ஒன்று மோகன்லால் சாக்சேனுவால் கொண்டு வரப்பட்டது. தீர்மானத்தைச் சட்டசபை நிறைவேற்றியது.

பர்மா இந்தியர் பிரச்சினையை விவாதிப்பதற்காகச் சபை நடவடிக்கைகளை ஒத்திவைக்கக் கோரி 1938 செப்டம்பர் 5ல் ஸியாவுதீன் அகமது கொணர்ந்த தீர்மானத்தையும் சட்டசபை நிறைவேற்றியது. கென்யா மேட்டுநிலப் பிராந்தியங்களில் புகுவதிலிருந்து இந்தியர்களுக்கு அனுமதி மறுக்கப்பட்டு வந்ததாக உள்ள பிரச்சினையின் மீது அப்துல் கையூம், 1939 மார்ச் 7ல் கொண்டுவந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தையும் சட்டசபை நிறைவேற்றி வைத்தது. அடக்குமுறைக் கண்டனத்தை ஆதரித்தது போலவே, அயல் நாடுகளில் வாழும் இந்தியர்களின் பிரச்சினை சட்டசபையில் வந்த போதெல்லாம் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்களில் பெரும்பாலோர் அரசாங்கத்தை எதிர்த்தே வாக்களித்தார்கள்.

## நிதி மற்றும் பொருளாதார விவகாரங்களில் மோதல்

### வரவு செலவுத் திட்டம் நிராகரிக்கப்பட்டது :

நிதி மற்றும் பொருளாதார விவகாரங்களின் மீது நடந்த விவாதங்களில், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் இந்தியத் தேசியமும் கடுமையாக மோதிக் கொண்ட காட்சி, தெளிவாகக் காணக் கூடியதாக இருந்தது. 1935க்கும் 1939க்கும் இடையில் நிதித்துறை உறுப்பினர் சர் ஜேம்ஸ் க்ரிக் கொண்டு வந்த ஐந்து வரவு செலவுத் திட்டங்களையும் சட்டசபை நிராகரித்தது. சுயராச்சியக் கட்சியார் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த இரண்டாவது மூன்றாவது சட்டசபைகளில் நடந்தது போலவே, இப்போதும் ஒவ்வொரு முறையும் கவர்னர் ஜெனரல் தமது விசேஷ அதிகாரத்தைப் பயன்படுத்தித்தான் வரவு செலவுத் திட்டத்தை உறுதி செய்ய வேண்டி வந்தது. குறிப்பாக, இந்தச் சட்ட சபையிலேதான், கவர்னர் ஜெனரல் தமது தனி அதிகாரத்தை அடிக்கடி பயன்படுத்த வேண்டியிருந்தது. கூப்லண்ட் என்பவர் குறிப்பிட்டிருப்பது போல, " முன்பு எப்போதையும் விட இந்தச் (5 வது) சட்டசபையிலேதான் தேசீய எதிர்க் கட்சியானது அரசாங்கத்தை மிகுந்த நெருக்கடிக்குள்ளாக்கியது. 1921க்கும் 1940க்கும் இடைப்பட்ட (இருபது ஆண்டுக்) காலத்தில் கவர்னர்

ஜெனரல் தம்முடைய விசேஷ அதிகாரத்தை 14 தடவை பயன் படுத்தினர்; அதில் 1935க்குப் பிறகு மட்டுமே எட்டுத் தடவை அந்த அதிகாரத்தைப் பயன்படுத்தியிருந்தார்!"

## இந்திய பிரிட்டிஷ் வியாபார ஒப்பந்தம் நிராகரிக்கப்பட்டது:

வரவு செலவுத் திட்டங்கள் தவிரவும் வேறொரு முக்கியமான விவகாரத்திலும் கவர்னர் ஜெனரல் தம்முடைய தனி அதிகாரத்தைப் பிரயோகிக்க வேண்டி ஏற்பட்டது. அதுதான், 1935 ஆம் ஆண்டில் ஏற்பட்ட இந்திய பிரிட்டிஷ் வியாபார ஒப்பந்தம். இந்திய அரசாங்கம், 1927 ஆம் ஆண்டு முதலே, பிரிட்டிஷ் நலன்களைப் பேணும் நோக்குடனேயே சுங்கவரித் திட்டத்தை வகுத்து வரத் தொடங்கியது. இந்தியச் சுங்கவரி முறை, இந்தியா மற்றும் பிறநாட்டுப் பொருள்களுக்கு இல்லாத விற்பனை வாய்ப்பை பிரிட்டிஷ் பொருள்களுக்கு ஏற்படுத்தித் தரும் விதமாகவே செயல்பட்டு வந்தது. இந்த விதமான தந்திரத் திட்டத்தின் உச்சகட்டம்தான் ஆட்டவா வியாபார ஒப்பந்தத்தின் கீழ் பிரிட்டிஷ் முன்னுரிமைக் கொள்கையாக உருக்கொண்டது. கடுமையான எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் இந்தத் திட்டம் இந்தியாவின் மீது திணிக்கப்பட்ட விவரத்தை முன்பே பார்த்தோம்.

1935ல் புதிய சட்டசபை தொடங்க இருந்த சமயத்தில் இந்திய அரசாங்கம் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது. பிரிட்டிஷ் முன்னுரிமையை மேலும் விரிவுபடுத்தும் முறையில் மேற்படி ஆட்டவா வியாபார ஒப்பந்தத்தைப் புதுக்கித் திருத்தி அமைத்ததே இந்தப் புதிய ஒப்பந்தம். எனவே, இந்திய அரசியலாளரும் வணிகர்களும் இந்த ஏகாதிபத்தியத் திணிப்பை எதிர்க்க அணிதிரண்டார்கள்.

1935 ஜனவரி 29ஆம் தேதியன்று, ஜனவரி 9ல் கையெழுத்தான மேற்படி (வியாபார) ஒப்பந்தத்தை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளலாம் என்ற தீர்மானத்தை வணிகத்துறை உறுப்பினரான சர் ஜோசப் போர் சட்டசபையில் கொண்டுவந்தார். பாதுகாக்கப்பட்ட பொருள்கள் எவை என்பது பற்றித் தனது

நிலைமையை விரைவிலேயே தெளிவுபடுத்துவதாக ஆட்டவா ஒப்பந்தத்தில் குறிப்பாகவும் பின்னர் வெளிப்படையாகவும், இந்திய அரசாங்கம் உறுதியளித்திருந்தது. அந்த உறுதிமொழியே இந்த ஒப்பந்தத்தின் மூலம் நிறைவேற்றி வைக்கப்படுகிறது என்று விளக்கினார் வணிகத்துறை உறுப்பினர். அரசாங்கத்தைப் பற்றி ஐயப்பாடோ தவறான எண்ணமோ ஏற்படக் கூடாது என்றே இந்த (ஒப்பந்தம்) நடவடிக்கை மேற்கொள்ளப் பட்டதாகவும் அவர் தெரிவித்தார்.

அவருடைய விளக்கம் முடிந்த உடனேயே, வெங்கடாசலம் செட்டி "இந்த ஒப்பந்தத்தைச் சட்டசபை ஏற்றுக் கொள்ள வில்லை; எனவே, இதை இந்திய அரசாங்கம் உடனடியாக ரத்துச் செய்யவேண்டும்" என்ற திருத்தம் ஒன்றைக் கொண்டுவந்தார். பஞ்சாபைச் சேர்ந்த கே. எல். கௌபாவும், இந்த ஒப்பந்தம் இந்தியாவுக்குப் பாதகமானது என்று கூறி இது போன்றதொரு தீர்மானம் கொணர்ந்தார்.

ஆட்டவா ஒப்பந்தத்தைத் தயாரித்தவர்களிலே ஆர். கே. சண்முகம் செட்டியும் ஒருவர். அந்த ஒப்பந்தத்தையே தேர்தல் பிரச்சினையாக்கி வணிகர் தொகுதியில் போட்டியிட்டு, அவரைத் தோற்கடித்தார் வெங்கடாசலம் செட்டியார். ஆகவே வணிகர்கள் ஆட்டவா ஒப்பந்தத்தை நிராகரித்து விட்டார்கள் என்பது தெளிவு. இதைச் சுட்டிக்காட்டி, ஆட்டவா ஒப்பந்தத்தின் மறு வடிவமாக இப்போது வந்துள்ள ஒப்பந்தத்தையும் மக்கள் ஏற்கமாட்டார்கள் என்றும் அதை உடனேயே ரத்துச் செய்ய வேண்டும் என்று வெங்கடாசலம் செட்டி கேட்டுக்கொண்டார். தனது தொழில்களை வளர்த்துக் கொள்வதற்கு இந்தியாவுக்கு உள்ள உரிமை அனைத்தையும் பறிக்கும் ஒப்பந்தம் இது என்றும் அவர் சாடினார்.

மார்வாரி (இந்திய வணிக)க் கழகத்தின் பிரதிநிதியான பாபு பைஜ்நாத் பஜோரியாவும் ஒப்பந்தத்தைக் கண்டித்துப் பேசினார்: "பிரிட்டிஷ் வணிக வர்க்கமும் மன்னர்பிரானின் அரசாங்கமும் ஒன்று சேர்ந்து நிற்கும்போது இந்திய அரசாங்கம் அதை மீறி ஒன்றும் செய்ய முடியாது என்பதைத்தான் இந்த ஒப்பந்தம்

காட்டுகிறது" என்று கூறிய பஜோரியா, பிரிட்டிஷ் வணிக வர்க்கத்துக்கு அந்த ஒப்பந்தத்தில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளைக் கடுமையாகக் கண்டித்தார். இந்தியச் சுங்கவரி போர்டு தனது திட்டங்களை மறு பரிசீலனை செய்யும்போதெல்லாம் பிரிட்டிஷ் வணிகர்களும் வாக்குமூலம் அளிக்க வாய்ப்பளிக்கப் பட்டிருப்பது பெரிய தவறு என்று அவர் சுட்டிக்காட்டினார்.

இந்திய வணிகர்களின் சங்கம் மற்றும் அவர்களின் சபையின் பிரதிநிதியான மதுரதாஸ் விசான்ஜி, ஒப்பந்தத்தை எதிர்த்துப் பேசுகையில், "இந்த ஒப்பந்தத்தில் உள்ள பல ஏற்பாடுகள் மீண்டும் உள்நாட்டுச் சுங்க (கலால்) வரி விதிக்க வேண்டிய கட்டாயத்தை உண்டாக்கும்; அதனால் இந்தியத் தொழில் உற்பத்தியே வெகுவாகப் பாதிக்கப்படும்" என்றார். "இந்தியச் சுங்கவரி போர்டு பிரிட்டிஷ் வணிக வர்க்கத்தினரைக் கலந்து ஆலோசித்துத்தான் சுங்கவரித் திட்டத்தை வகுத்துக் கொள்ள வேண்டும் என்று ஒப்பந்தத்தில் விதிக்கப்பட்டுள்ளது. இங்கே வியாபாரத்தில் போட்டியிடுகிறவர்களில் முக்கியமானவர்கள் பிரிட்டிஷ் வணிகர்கள். அவர்களுடைய போட்டியைக் குறைப்பதற்கு அவர்களிடமே, ஆலோசனை கேட்கவேண்டும் என்பது எந்த அறிவாளியின் யோசனையோ தெரியவில்லை!" என்று குத்திக் காட்டினார் மதுரதாஸ்.

ஒப்பந்தத்தின் விதிகளை ஒவ்வொன்றாக ஆராய்ந்த எதிர்க் கட்சித் தலைவர் தேசாய், "இது ஒரு ஒப்பந்தமே அல்ல" என்றார். "சம்பந்தப்பட்ட இருசாராரின் நலனுக்கும் உகந்ததைத்தான் நாம் ஒப்பந்தம் என்கிறோம்; பிரிட்டிஷ் வணிக நலன்களுக்கு மட்டுமே உகந்ததாகிய இதை ஒருதலைச் சார்பான ஒப்பந்தம் என்று வேண்டுமானால் சொல்லலாமே தவிர, நியாயமான ஒப்பந்தமென்று சொல்ல முடியாது" என்று எடுத்துரைத்த தேசாய், வெங்கடாசலம் செட்டியின் திருத்தத்தை ஆதரித்து, "இந்த ஒப்பந்தத்தை உடனேயே கிழித்தெறியுங்கள்" என்று அரசாங்கத்துக்கு அறிவுறுத்தினார்.

பந்த் பேசுகையில், ஆட்டவா ஒப்பந்தத்தில் வழங்கப்பட்டுள்ள சாம்ராச்சிய (பிரிட்டிஷ்) முன்னுரிமையால் இந்தியாவுக்கு எந்தப்



ரபி அகமது கித்வாய்



எஸ். ஸ்ரீநிவாச அய்யங்கார்



திருமதி ராதாபாய் சுப்பராயன்

அரசினர் மனை, கல்கத்தா : 1912 வரை கவுன்சிலின் குளிர்காலக் கூட்டத்தொடர்கள் நடந்த இடம்



பயனும் இல்லை என்றார். "இந்த ஒப்பந்தத்தின் மூலம் இங்கிலாந்துக்கு இந்திய ஏற்றுமதி அதிகரித்திருக்கிறது என்கிறார்கள். ஆனால், மற்றப் பொருள்களின் ஏற்றுமதி 50 சதவீதம் அதிகரித்திருக்கும் போது, முன்னுரிமைப் பொருள்களின் ஏற்றுமதி சுமார் 20 சதவீதம்தான் அதிகரித்திருக்கிறது. இது எதைக் காட்டுகிறது? இந்திய ஏற்றுமதி வளர்ச்சிக்கும் முன்னுரிமைத் திட்டத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதைத்தானே காட்டுகிறது? 1935 ஆம் ஆண்டின் இந்திய பிரிட்டிஷ் ஒப்பந்தத்தை எடுத்துக் கொண்டால், தங்கள் பிரச்சினைகளை எடுத்துரைத்து அவைகளுக்காக வாதாட பிரிட்டிஷ் வணிக வர்க்கத்துக்கு இதிலே உரிமை வழங்கப்பட்டிருக்கிறது. பிரிட்டிஷ்காரருக்கு இவ்வளவு செய்தவர்கள், இந்த ஒப்பந்தத்தை உருவாக்கியபோது, தங்கள் கருத்தை எடுத்துச் சொல்லக்கூட இந்திய வணிகர்களுக்கு வாய்ப்புத் தரவில்லை என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இந்திய அரசாங்கம் பிரிட்டிஷ் நலன்களுக்குப் பணிந்து கொடுக்கும் அடிமையாகத்தான் இருக்கிறது என்பதைக் காட்ட இது ஒன்றே போதுமானது" என்றார் பந்த்.

ஜின்னாவும் ஒப்பந்தத்தை எதிர்த்தார். "இங்கிலாந்து மட்டும்தான் இந்தியப் பொருள்களை வாங்குகிறது என்பதில்லை; (வேறு பல நாடுகளுக்கும் நாம் ஏற்றுமதி செய்கிறோம்) அப்படியிருக்கையில் இப்படி ஒரு ஒப்பந்தம் செய்து கொள்வதால், ஜெர்மனி, இத்தாலி, பிரான்ஸ் போன்ற நாடுகளுடன் நடைபெறும் இந்திய வர்த்தகம் பெரிதும் பாதிக்கப்படும்" என்றார் அவர்.

விவாதம் இரண்டுநாள் தொடர்ந்து நடைபெற்றது. பி. என். பானர்ஜி, பி. தாஸ், அகில் சந்திர தத்தா, முன்ஷி ஈஸ்வர் சரண், சர்தார் மங்கல் சிங், முகம்மது நௌமன், ஸேத் கோவிந்ததாஸ், என். எம். ஜோஷி முதலான பல உறுப்பினர்கள் ஒப்பந்தத்தைக் கண்டித்துப் பேசினார்கள். கடைசியாக, இந்த ஒப்பந்தத்தை ரத்துச் செய்யவேண்டும் என்று கோரி, கௌபா கொண்டுவந்த தீர்மானம் 66க்கு 58 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. இந்திய அரசாங்கம் தோற்கடிக்கப்பட்டாலும், வழக்கம்போல், கவர்னர் ஜெனரலின் சிறப்பு அதிகாரத்தைக் கொண்டு, ஒப்பந்தத்தை உறுதி செய்து கொண்டது.

1936 மார்ச்சில், ஆட்டவா ஒப்பந்தத்தை ரத்துச்செய்ய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று அரசாங்கத்துக்குச் சிபாரிசு செய்யும் தீர்மானம ஒன்றை ஜின்னு கொண்டுவந்தார். இங்கிலாந்து மற்றும் இதர முக்கியமான நாடுகளுடன் இந்தியா தனித்தனியே வியாபார ஒப்பந்தங்கள் செய்து கொள்ள வேண்டும் என்றும் கோரிய அந்தத் தீர்மானத்தைச் சட்டசபை நிறைவேற்றியது. இதைத் தொடர்ந்து நீண்ட பேச்சு வார்த்தை நடந்து, 1939 மார்ச்சில் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. இதைக் குறித்து ஜின்னு மேற்கொண்ட நிலை மிகவும் வேடிக்கையாக இருந்தது.

"ஆட்டவா ஒப்பந்தத்தைவிட இந்த ஒப்பந்தம் மிகவும் முன்னேற்றமானது என்பதே முஸ்லிம் லீகின் கருத்து. ஆனாலும், இதிலே எங்கள் நலன் என்பது மிகவும் சொற்பமே. அந்தச் சொற்ப நலனையும் நாங்கள் ஏற்கெனவே தியாகம் செய்தாகிவிட்டது. இதன் மூலம் 95 சதவீத நன்மைகளை அனுபவிக்கப் போகிறவர்களே, இந்த ஒப்பந்தம் வேண்டாம் என்கிறார்கள். அவர்கள்மீது அதைத் திணிப்பதற்கு நாங்களும் ஏன் உடந்தையாக இருக்கவேண்டும்? எங்களைப் பொறுத்தவரை, அவர்களைவிட அரசாங்கம் ஒன்றும் உயர்ந்ததல்ல. எனவே, எங்கள் கட்சியின் நிலை இதுதான்: உங்களுக்குள்ளேயே இந்த விவகாரத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள்; உங்களுக்கு எங்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொண்டு, இதிலே நடுநிலை வகிக்கவே நாங்கள் விரும்புகிறோம்" என்று பேசினார் ஜின்னு!

ஜின்னு நடுநிலை வகித்தபோதிலும், சட்டசபை, 59க்கு 47 என்ற வாக்கு வித்தியாசத்தில் ஒப்பந்தத்தை நிராகரித்தது. ஆனாலும், இதனால் பெரிய மாறுதல் எதுவும் நிகழ்ந்துவிடவில்லை. அரசாங்கம், கவர்னர் ஜெனரலின் தனி அதிகாரத்தைக் கொண்டு சட்டசபை முடிவை ஒதுக்கிவிட்டு ஒப்பந்தத்தின் முக்கிய விதிகளை நடைமுறைப் படுத்தப் புறப்பட்டுவிட்டது.

ஜின்னுவின் நடுநிலைப்போக்கு எளிதில் புரிந்துகொள்ளக் கூடியதாக இல்லை. லின்லித்கோ பிரபுவின் வரலாறு அவருடைய மகனாலேயே எழுதப்பட்டுள்ளது. அதிலே, ஜின்னுவின் போக்கை

விளக்க முயன்றிருக்கிருர் ஆசிரியர். இந்தியாவுடனை ஒரு புதிய (இந்திய பிரிட்டிஷ்) வியாபார ஒப்பந்தத்தின் மீது வாக்கெடுப்பு நடந்தபோது, முஸ்லிம்கள் வாக்களிப்பில் கலந்துகொள்ளக் கூடாது என்று ஜின்ஞ வற்புறுத்திஞர். இதை நிராகரித்தால் தம்முடைய பதவியையே ராஜிஞமாச் செய்துவிடுவதாக அவர் பயமுறுத்தியதால், முஸ்லிம் உறுப்பினர்கள் அவர் கருத்துக்கு இணங்க வேண்டியதாயிற்று. இது அரசாங்கத்துக்கு பெரிய தோல்வியாக முடிந்தது. ஜின்ஞ மேற்கொண்ட நிலே லின்லித்கோ வுக்குப் பெரிதும் வியப்பாக இருந்தது. நாடெங்கும் உள்ள பல முஸ்லிம் தலேவர்களும் ஜின்ஞவைக் கடுமையாகக் கண்டித்தார்கள். ஓர் ஆண்டுக் காலத்துக்கு அரசாங்கத்தையோ (காங்கிரஸ்) எதிர்க்கட்சியையோ ஆதரிக்காமல் இருந்து பார்க்கவேண்டும் என்று ஜின்ஞ விரும்பியதாகப் பிறகு வைசிராய்க்குத் தெரிய வந்தது. அப்படி இருந்தால்தான் இரண்டு தரப்பினரும் முஸ்லிம் ஆதரவின் முக்கியத்துவத்தை உணர்ந்து அதைத் தேடிக்கொள்ள முனேவார்கள் என்று அவர் எதிர்பார்த்ததாகவும் தெரிந்தது.

### பிரிட்டிஷ் துணிகளின் மீது வரிக் குறைப்புக்கு எதிர்ப்பு:

இதற்கிடையில், 1936 செப்டம்பரில் வேறொரு சுவையான விவாதமும் சட்டசபையில் நடைபெற்றது. இந்திய அரசாங்கம் சட்டசபையைக் கலந்து ஆலோசிக்காமலே, பிரிட்டிஷ் துணிகளுக்கு 5 சதவீத வரிச்சலுகை வழங்கி விட்டது.

இதைப் பற்றி விவாதிப்பதற்காகச் சட்டசபை நடவடிக்கைகளே ஒத்திவைக்க வேண்டும் என்று தி. சு. அவிஞசிலிங்கம் செட்டியார் ஒரு தீர்மானம் கொண்டுவந்தார். "இந்தியத் துணி உற்பத்தித் தொழிலுக்குப் பெரும் தீங்கு விளேவிக்கிறது என்பதோடு, இந்தச் சலுகை அறிவிப்பு, இந்தச் சபையில் வழங்கப்பட்ட உறுதி மொழிகளேயும் உத்தரவாதங்களேயும் காற்றிலே பறக்கவிட்டு விட்டது!" என்று குற்றம் சாட்டிஞர் செட்டியார். தீர் மானத்தை ஆதரித்துப் பேசிய கிருஷ்ண காந்த் மாளவியா, "நிரந்தரமான சுங்கவரிக் கழகம் ஒன்று இருக்கவேண்டும் என்றும் அதன் சிபாரிசுகளின் பேரில் மட்டும்தான் அரசாங்கம் நட

வடிக்கை எடுக்க வேண்டும் என்றும் நாங்கள் கேட்டுக் கொண்டது உண்மைதான். ஆனால், ஒரு தாற்காலிக கழகத்தை நியமித்து வைத்துக்கொண்டு, சட்டசபையைக் கலந்துகொள்ளாமல் நீங்களே நடவடிக்கை எடுத்துக் கொள்ளுங்கள் என்று நாங்கள் சொன்ன தில்லையே!" என்று குத்திக் காட்டினார். இந்திய மக்களைவிட ஆங்கில மக்களின் மீதே இந்த அரசாங்கம் அதிகமான அக்கறை காட்டுவது கண்டிக்கத் தக்கது என்றும் சாடினார் கிருஷ்ண காந்த்.

பந்த் பேசுகையில், "இரண்டு ஆண்டுகளுக்கு முன், 'ஆக மொத்தம்' பொருள் மதிப்பில் 25 சதவீதம் விதிக்கப்பட்ட வரியை 20 சதவீதமாகக் குறைக்க வேண்டும் என்று அரைகுறை யாய்க் கைவிடப்பட்ட இந்திய பிரிட்டிஷ் ஒப்பந்தம் முடிவு சொல்லியிருந்தது; இந்தத் தாற்காலிகச் சுங்க வரிக் கழகமும் அதே முடிவுக்கு வந்திருப்பது வியப்பாகத்தான் இருக்கிறது" என்று குறிப்பிட்டார். இந்தத் தாற்காலிகக் கழகம் நியமிப்பதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே அது இன்ன முடிவுக்குத்தான் வரும் என்று சொல்லி வைத்து விட்டது சந்தேகத்துக்கு இடமாக மட்டுமல்ல, மிகவும் ஆச்சரியமாகவும் இருக்கிறது. இது நிச்சய மாக யட்சிணி வேலைதான்!" என்று கிண்டல் பண்ணினார் பந்த்.

ஆனாலும், சுங்கவரி குறைக்கப்பட்டதால் நுகர் பொருள்களின் விலை குறையும் என்று எடுத்துக்கூறி, ஸியாவுதீன் கான் அகமது அரசாங்கத்தை ஆதரித்தார். இந்த வரிக்குறைப்பு இந்தியத் தொழில்களைப் பாதிக்க மாட்டாது என்றும் அவர் கருத்துத் தெரிவித்தார். கஸ்னவியும், கண்டனத்துக்குரியதாக இதிலே அரசாங்கம் ஒன்றும் செய்துவிடவில்லை என்றார்.

ஜோஷி, அவிநாசிலிங்கத்தின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார். இந்த வரிக்குறைப்பைப் பற்றி பம்பாய் ஆலை அதிபர்கள் அவ்வளவாக அலட்டிக் கொள்ளாததன் உள் அந்தரங்கத்தையும் அவர் பிட்டுக் காட்டினார்: "தங்கள் மில் தொழிலாளர்களின் சம்பளத்தை எவ்வளவு வேண்டுமானாலும் குறைக்க ஆலை அதிபர் களுக்கு வசதி இருக்கும்போது பிரிட்டிஷ் பொருள்களின் மீது 5 சதவீத வரி குறைக்கப்படுவதைப் பற்றி அவர்கள் ஏன்

கவலைப்படப் போகிறார்கள்?" என்று கேட்டார் அவர். இப்போதே சில ஆலை அதிபர்கள் இந்தத் தொனியில் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்றும் அவர் எச்சரித்தார். மேலும், 5 சதவீத வரிக்குறைப்பினால் இங்கே பிரிட்டிஷ் பொருள்களின் விலை குறைந்துவிடப் போவதில்லை, ஆங்கிலேயர்கள் கெட்டிக்கார வியாபாரிகள்; ஜப்பானியப் பொருள்களின் மீது அதிகமான வரியே அமுலில் இருக்கும்போது, தங்கள் பொருளை எப்படி அதிகமான விலைக்கு விற்பது என்பது அவர்களுக்கு (ஆங்கில வியாபாரிகளுக்கு)த் தெரியாதா என்ன? எனவே, பிரிட்டிஷ் பொருள்களின் மீது 5 சதவீத வரியைக் குறைத்து விடுவதால் நுகர்வோர் நலன் பேணப்படும் என்பதில் அர்த்தமே இல்லை என்று விளக்கினார் ஜோஷி.

வாணிகத்துறை உறுப்பினரான சர் முகம்மது ஜஃப்ருல்லா கான் அரசாங்கத்தின் நடவடிக்கையை ஆதரித்து வாதிட்டார். இந்தத் தீர்மானத்தின் மீதான விவாதத்துக்கு ஒதுக்கப்பட்ட நேரம் அநேகமாக முடிந்து கொண்டிருந்தது. எனவே, ஆஸஃப் அலி குறுக்கிட்டு, விவாதத்தை இத்துடன் முடித்துக்கொண்டு கேள்விகள் கேட்க உறுப்பினர்களை அனுமதிக்கலாம் என்று சபைத் தலைவரைக் கேட்டுக்கொண்டார். தலைவர் அதற்கு இணங்கவில்லை. நிதித்துறை உறுப்பினர் இதன் மீது பேச விருப்பம் தெரிவித்துள்ளார் என்றும் அவருடைய துறையும் இந்த விவகாரத்தோடு நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதால் அவருக்கு அனுமதி மறுப்பது சரியில்லை என்றும் அவர் தெரிவித்தார். தேசாயும் ரங்காவும் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார்கள். "ஏற்கெனவே வாணிகத்துறை உறுப்பினர் இதன் மீது பேசியுள்ளார். நிதித்துறை உறுப்பினர் முன்பே சொல்லியிருந்தால் அவரையும் பேச அனுமதித்திருக்கலாம். அதைவிட்டு, இப்போது திடீரென அவர் பேச விரும்புவது நேரத்தைக் கடத்த மேற்கொள்ளும் தந்திரமே தவிர வேறில்லை" என்று சுட்டிக்காட்டினர் அவர்கள். ஆனாலும், விவாதத்தை முடித்துவிடத் தலைவர் அனுமதிக்கவில்லை. அதன் பேரில், காங்கிரஸ் மற்றும் தேசியக் கட்சி உறுப்பினர்களும் சுயேச்சைக்

கட்சியின் சில உறுப்பினர்களும், "வெட்கம்! வெட்கம்!" என்று சத்தமிட்டுக் கொண்டு சபையை விட்டு வெளியேறினார்கள்.

இதைக் கவனித்த நிதித்துறை உறுப்பினர் பெரிய தத்துவ விசாரணையிலேயே இறங்கி விட்டார்: "காங்கிரஸ் தலைவர் ஜவஹர்லால் நேரு சோஷலிசத்தை வலியுறுத்திப் பேசி வருகிறார்; இதனால் பெரிய தொழில் அதிபர்கள் மிகவும் பயந்துபோய் இருக்கிறார்கள். காங்கிரசில் நடுநாயகமாக உள்ள வலதுசாரிகளோ, இதுவரை தங்கள் போராட்டங்களுக்கு உறுதுணையாக இருந்து வந்துள்ளவர் (தொழிலதிபர்)கள் நேருவின் பேச்சுக்களால் நிலைகுலைந்து போய்விடாமல் அந்தப் பேச்சுக்களின் விளைவை மட்டுப்படுத்த முனைகிறார்கள். காங்கிரஸ் கட்சி சுங்க வரியை உயர்த்த வேண்டும் என்று கூப்பாடு போடுவதற்கு இதுவே காரணம்" என்று தம்முடைய தத்துவ விசாரணையை முடித்தார் நிதித்துறை உறுப்பினர்.

## ராணுவத்தை இந்தியமயமாக்கக் கோரிக்கை :

இந்திய ராணுவத்தை இந்தியமயமாக்க வேண்டும் என்று தேசியவாதிகள், நெடுகவே கோரிவந்தார்கள். 1926ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட இந்திய ஸான்ட்ஹர்ஸ்ட் கமிட்டியும், இந்திய மயமாக்கும் திட்டம் போதிய வேகத்தில் செயல்பட்டிருக்கிறதா அது இன்னும் விரைவுபடுத்தப்பட வேண்டுமா என்பதைக் கண்டறிவதற்காக 1938ல் ஒரு விசாரணை நடத்த வேண்டும் என்று ஏகமனதாக ஒப்புக் கொண்டிருந்தது. இந்தச் சிபாரிசைச் செயற்படுத்தும் திட்டம் ஒன்றை வகுப்பதற்காக, தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும் மற்றவர்களுமான சட்டசபை உறுப்பினர்களைக் கொண்ட குழு ஒன்றை நியமிக்க ஏற்பாடு செய்யுமாறு கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானம் ஒன்றை சவுக்கத் அலி 1938 செப்டம்பர் 2ல் சட்டசபையில் கொணர்ந்தார். அவினாசிலிங்கம் செட்டியார் இந்தத் தீர்மானத்துக்கு ஒரு திருத்தம் கொண்டு வந்தார். இது சம்பந்தமான நடவடிக்கைகள் உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டும் என்றும் இந்தக் குழு உறுப்பினர்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட (சட்டசபை) பிரதிநிதிகளே

அதிகமாக இருக்க வேண்டும் என்றும் இந்தத் திருத்தம் வற்புறுத்தியது.

மத்திய சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் பெண் உறுப்பினரான திருமதி ராதாபாய் சுப்பராயன் இந்தத் தீர்மானத்தின் மீது பேசுகையில், அரசாங்கமே முந்திக்கொண்டு பரிசீலனைக் குழுவை நியமித்திருக்க வேண்டும் என்றும் ஸான்ட்ஹர்ஸ்ட் கமிட்டி சிபாரிசுகளை அரசாங்கம் ஆர்வத்தோடு நிறைவேற்ற முனைந்திருக்குமானால் ராணுவம், நிருவாகம், பாதுகாப்பு போன்றவை தொடர்பாக அரசாங்கத்தின் மீது மக்களுக்கு இருந்துவரும் சந்தேகம் எவ்வளவோ நீங்கியிருக்கும் என்றும் எடுத்துரைத்தார். இந்திய ராணுவ வீரர்களின் வாழ்க்கைமுறை இந்நாட்டுப் பழக்கவழக்கங்களோடு பொருந்தியதாக இல்லை என்றும் ராணுவத்தில் உள்ள இந்திய அதிகாரிகளுக்கு வழங்கப்படும் ஊதியமும் படிகளும் அவர்களின் குறைந்த தேவைக்குக் கூடப் போதவில்லை என்றும் சுட்டிக்காட்டினார் ராதாபாய்.

அசாமைச் சேர்ந்த குலாதர் சாலிஹா, 1922 முதல் அமுலில் இருந்து வரும் இந்தியமயத் திட்டத்தின் வரலாற்றை விவரித்து, இதில் ஏற்படும் முன்னேற்றத்தின் வேகம் திருப்திகரமானதாக இல்லை என்று எடுத்துக்காட்டினார். டேரா டூனில் மட்டும் ஒரே ஒரு ராணுவப் பள்ளியை வைத்திருந்தால் போதாது; நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் அத்தகைய பள்ளிகள் ஏற்பட வேண்டும் என்றும் சாலிஹா வற்புறுத்தினார். மன்னர் கமிஷன் அதிகாரிகள், இந்தியக் கமிஷன் அதிகாரிகள், வைசிராய்க் கமிஷன் அதிகாரிகள் என்ற மூன்று வகுப்பாக இந்திய ராணுவ அதிகாரிகள் பிரிக்கப்பட்டிருந்தார்கள். இதைச் சுட்டிக்காட்டி, ராணுவத்தில் இது போன்ற "சாதிப் பிரிவினை" இருப்பதால் இந்திய ராணுவ அதிகாரிகளிடையே தாழ்வுமனப்பான்மை உண்டாகிறது என்றும் இதனாலேயே பல இந்தியர்கள் ராணுவப் பள்ளிக்கூடத்தில் சேரத் தயங்குகிறார்கள் என்றும் பம்பாயைச் சேர்ந்த ஜி. வி. தேஷ்முக் புகார்கூறினார்.

விவாதத்தில் குறுக்கிட்டுப் பேசிய தேசாய், இந்திய ராணுவத்திலுள்ள பிரிட்டிஷ்காரர்கள் அதிலுள்ள இந்திய அதிகாரிகளிடம் நடந்துகொள்ளும் விதம், இந்தியர்கள் ராணுவத்தில் சேர

வொட்டாது தடுப்பதாகவும் ஏற்கனவே சேர்ந்தவர்களை விலகி ஓடச் செய்வதாகவுமே இருக்கிறது என்று சாடினார். இந்திய அதிகாரிகளுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் கிடைக்கின்ற சம்பளம், ஓய்வு ஊதியம் ஆகியவற்றில் பெரிய ஏற்றத்தாழ்வு இருந்து வருகிறது. இதனால், இந்திய அதிகாரிகள், ஆங்கிலேய அதிகாரிகளுடன் சம அந்தஸ்தில் வாழ தங்கள் வரவுக்கு அப்பாலும் டாம்பீகச் செலவினங்களில் ஈடுபட வேண்டியுள்ளது. இந்த வழியைப் பின்பற்றி யாரோ சிலர் முன்னுக்கு வரலாம் என்றாலும், இந்திய ராணுவத்திலுள்ள பிரிட்டிஷ் அதிகாரிகளை எல்லாம் அகற்றுவதே இந்தத் தொல்லையை ஒழிப்பதற்கான சரியான வழி. இன்னும் பதினைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே, இந்திய ராணுவம் முழுதும் இந்திய அதிகாரிகளையே கொண்டதாக மாற்றப்பட வேண்டும் என்று வற்புறுத்தினார் தேசாய்.

முடிவில், சவுக்கத் அலியின் தீர்மானம், செட்டியார் கொண்டு வந்த திருத்தத்துடன் சபையில் நிறைவேறியது.

இந்த விவகாரம் இத்துடன் முடியவில்லை. வரவுசெலவுத் திட்டத்தின் மீதான விவாதம், கேள்விகள், தீர்மானங்கள் முதலிய பல வழிகளிலும், உறுப்பினர்கள் தொடர்ந்து இதை வற்புறுத்தியே வந்தார்கள். 1939 மார்ச் 14ல் சர்தார் சந்த் சிங், இது பற்றிய வெட்டுத் தீர்மானம் ஒன்றைக் கொணர்ந்தார். பின்னர், அதையே, இந்திய அரசாங்கத்தின் பாதுகாப்புத் துறையைக் கண்டிக்கும் கண்டனத் தீர்மானமாக மாற்றினார். அந்தத் தீர்மானம் 57க்கு 46 என்ற வாக்கு வித்தியாசத்தில் சபையில் நிறைவேற்றப்பட்டது.

பாதுகாப்புத்துறை மற்றும் வெளி விவகாரத் துறையின் நிருவாகத்தில் எந்த வகையிலும் தலையிட முடியாமல் இந்தியர்களைத் தடுத்து வைத்திருந்தது அரசாங்கம். இந்திய உறுப்பினர்களுக்கு எப்போதுமே வேதனை தந்து கொண்டிருந்த விவகாரம் இது. ஜவஹர்லால் நேருவின் கொள்கைகளால் எழுச்சி கொண்ட காங்கிரஸ்காரர்கள், இந்தியச் சுதந்திரப் போராட்டத்தை, ஏகாதிபத்திய அடக்குமுறைக்கு எதிராக ஒடுக்கப்பட்ட மக்கள் நடத்தும் போராட்டத்துடன் இணைத்தே கருதி வந்ததால்,

இந்த விதமான ஒரு ஒதுக்கிவைப்பு அவர்களுக்கு மிகுந்த வேதனையைத் தந்தது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஒரு கூருக நின்றே, இந்திய அரசாங்கம் மேற்கொண்டு வந்த நடவடிக்கைகளைக் காங்கிரஸ்காரர்களால் அறவே ஏற்க முடியவில்லை; ஆனாலும் அவைகளைச் சட்டசபையில் பேசுவதற்கும் அவர்களுக்கு உரிமை தரப்படவில்லை.

1937ல் சீனாவின் மீது ஜப்பான் படையெடுத்தபோது, அந்த ஆக்கிரமிப்பை முறியடிக்க உதவி செய்யும்படி சீனா இந்திய அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டது. இது பற்றிச் சட்டசபையின் கருத்து என்ன என்பதைக் கேட்டறியக் கூட அரசாங்கம் மறுத்துவிட்டது. அரசாங்கத்தின் இந்தப் போக்கைப் பற்றி விவாதிப்பதற்காகச் சபை நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டும் என்ற தீர்மானம் ஒன்றைச் சத்தியமூர்த்தி செப்டம்பர் 3 ஆம் தேதி கொண்டுவந்தார். இந்தத் தீர்மானம் நிராகரிக்கப் பட்டு விட்டது. இதற்குச் சரியாக ஓர் ஆண்டுக்கு முன்பு, அபிசீனியாவைத் தாக்குவதற்கு இத்தாலி ஆயத்தம் செய்து கொண்டிருந்த நேரத்தில், இந்தியத் துருப்புகளை அபிசீனியாவுக்கு அனுப்புவதைப் பற்றிச் சபை விவாதிக்க வேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றை நீலகண்ட தாஸ் கொணர்ந்தார். ஆனால், அந்தத் தீர்மானம் முழுமையாக ஏற்கப்படவில்லை; சபையில் விவாதிப்பதற்கு உரிமையுள்ள அம்சங்களை மட்டும் அளாவியதாகத் தீர்மானத்தைச் சுருக்கிக் கொள்ளுமாறு அவருக்குச் சொல்லப்பட்டது. எனவே, விவாதமும் மிகமிகக் குறுகிய அளவுக்குச் சுருங்கிவிட்டது.

இந்தத் திக்குமுக்காடலில்தான், தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் இந்த விவகாரங்களின் மீது சட்டசபையின் பிடி சிறிதாவது இருக்க வேண்டும் என்ற திசையில் முயற்சிகளை மேற்கொண்டார்கள். 1938 பிப்ரவரி 4ல், காட்கில் இது சம்பந்தமான தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார். அந்தத் தீர்மானம், சட்டசபை இந்திய ராணுவத்தோடு தொடர்புறவு கொண்டிருக்கும் வகையில் இந்திய ராணுவ நிரந்தரக் குழு ஒன்றைத் தேர்ந்தெடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொண்டது. இக்காலத்தில் யுத்தம் என்பது

நாட்டின் ஒருமைப்பாடு, தொழில் மற்றும் விவசாய உற்பத்திகள் முதலியவைகளையே பெரிதும் சார்ந்திருப்பதால், மக்களுக்கும் ராணுவத்துக்கும் இடையே நெருங்கிய ஒத்துழைப்பு நிலவ வேண்டியது அவசியம். இந்தக் குழு அந்த நோக்கத்தை நிறை வேற்றி வைக்கும் என்று விளக்கினார் காட்கில்.

இந்த நாட்டின் மக்களுக்கும் ராணுவத்துக்கும் இடையே உறவே இல்லை என்று கண்டித்து, தீர்மானத்தை ஆதரித்தார் கே. சந்தானம். " ராணுவத்தை இந்தியமயமாக்குவது மட்டுமே போதாது; அது யார் யாரைக் கொண்டதாக இருந்தாலும், இந்த ராணுவம் இந்திய மக்களின் ராணுவம், இது இந்திய மக்களைப் பாதுகாக்கும் ராணுவம் என்று நாட்டு மக்கள் உணரும் விதமாக நாம் அதைத் திருத்தியாக வேண்டும். இந்த வகையில், இந்த நிரந்தரக் குழு ஓரளவாவது உதவியாக இருக்க முடியும் என்றே நம்புகிறேன் " என்றார் சந்தானம்.

அடுத்துப் பேசிய அப்துல் கையூம், இந்திய மக்கள் தங்கள் நாட்டு ராணுவத்தையும் அயல்நாட்டு விவகாரங்களையும் கண் காணிப்பது என்று முடிவு செய்து விட்டார்கள் என்று எடுத்துரைத்து, அரசாங்கம் என்னதான் பொறுப்பற்றதாக இருந்தாலும், அது இனிமேலும் மக்களின் கருத்தைப் புறக் கணிக்க முடியாது என்று எச்சரித்தார். காட்கில் கொண்டு வந்துள்ள இந்த மிதமான தீர்மானத்தைக் கூட ஏற்றுக்கொள்ள அரசாங்கத்துக்கு மனமில்லையே என்று வாட்டம் தெரிவித்தார் திருமல் ராவ். முகம்மது அஸ்ஹர் அலியும் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார்.

பிப்ரவரி 15ல் இந்தத் தீர்மானத்தின் மீது மீண்டும் விவாதம் தொடங்கியபோது, ஆஸஃப் அலி, அந்தக் குழுவின் பணிகளை விளக்கித் தெளிவுபடுத்தும் திருத்தம் ஒன்றைக் கொண்டு வந்தார். அந்தத் திருத்தத்தில் அவர் கோரியதாவது: கவர்னர் ஜெனரல் அவ்வப்போது கேட்டுக் கொள்ளும் விவகாரங்களில் ஆலோசனை வழங்குவதும் இந்தக் குழுவின் பணிகளுள் ஒன்றாகச் சேர்க்கப் படுதல் வேண்டும். அவ்வாறு கவர்னர் ஜெனரல் ஆலோசனை கலைக்கும் விவகாரங்களுள் (அ) இந்தியப் படைகளை வெளிநாடு

களுக்கு அனுப்புதல், (ஆ) கூடுதல் செலவினங்கள் ஏற்படக்கூடிய புதிய திட்டங்கள், (இ) ராணுவத்தை இந்திய மயமாக்குதல் ஆகியவைகளும் உட்பட்டவையாக இருக்க வேண்டும்.

பஜோரியா, வெங்கடாசலம் செட்டி, ஆனே ஆகியோர் மூலத் தீர்மானத்தையும் அதன் மீது ஆசஃப் அலி கொணர்ந்த திருத்தத்தையும் ஆதரித்தார்கள். இந்தத் தீர்மானம் அரசியல் சட்டத்துக்குப் புறம்பானது என்று பாதுகாப்புத் துறைச் செயலாளர் கூறியதை முகம்மது யாமின் கான் வன்மையாக எதிர்த்தார். "இப்போதுள்ள அரசியல் சட்டத்தின் கீழ் இப்படி ஒரு கமிட்டியை நியமிக்கவே முடியாது என்பது முற்றிலும் தவறு. அனுபவ ரீதியாகப் பார்த்தால் கூட, ராணுவ விவகாரங் களில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைப் பிரதிநிதிகளைக் கலந்து ஆலோசிக்க முடியாது என்பது சரியாக இல்லை" என்றார் அவர். எனவே, தீர்மானம் எல்லோரும் ஏற்கத் தக்கதாகவே அமைந்துள்ளது என்று அவர் வற்புறுத்தினார். திருத்தத்துடன் கூடிய தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு, 53க்கு 45 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது.

### ரெயில்வேக்களின் மீது அக்கறை :

சட்டசபை உறுப்பினர்கள் அதிகமாக அக்கறை காட்டி வந்த துறைகளில் ரெயில்வேயும் ஒன்று. பண்டித இருதய நாத் குன்ஸ்ரூ இந்தத் துறையைப் பற்றிய விவகாரங்களில் அதிகமான அக்கறை காட்டி வந்தார். ரெயில்வே வரவு செலவுத் திட்டம் விவாதத்துக்கு வந்தபோதெல்லாம் ரெயில்வே நிருவாகத்தை இந்தியமயமாக்குதல், மூன்றும் வகுப்புப் பிரயாணிகளின் வசதிகளை அதிகரித்தல், இந்தியாவிலேயே ரெயில்வே தளவாடங்களை வாங்குதல் முதலான பிரச்சினைகளைப் பற்றி உறுப்பினர்கள் பலமுறை எடுத்துச் சொன்னார்கள்.

ஐந்தாவது சட்டசபையிலும் இவைகளைப் பற்றிப் பரவலான அக்கறை காட்டப்பட்டது. குறிப்பாக இந்தியாவிலேயே ரெயில் எஞ்சின்கள் தயாரிக்கப்பட வேண்டும் என்பது முக்கியப் பிரச்சினையாக எடுத்துரைக்கப்பட்டது. ஐந்தாவது சட்ட

சபையின் முதலாவது (1935) ரெயில்வே வரவு செலவுத் திட்ட விவாதத்தின் போதே, இதுபற்றிய தேசீயக் கோரிக்கையை அரசாங்கம் புறக்கணித்து வருகிறது என்று குற்றஞ் சாட்டினார் வி. வி. கிரி. 1918 லிருந்தே இந்திய மக்கள் இங்கேயே ரெயில் எஞ்சின்களைத் தயாரிக்க வேண்டும் என்று கோரிக்கை விட்டு வந்திருக்கிறார்கள். இந்தச் சட்ட சபையும் அதை வற்புறுத்தியுள்ளது. ஆனாலும், அரசாங்கம், 'இது அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது' என்ற பதிலையே சொல்லிக் கொண்டு வருகிறது என்றார் அவர். மேலும் பேசுகையில், "1934ல் கூட அதே பதிலைத்தான் அரசாங்கம் சொல்லிற்று. எங்கள் சொந்தத் தேசீய அரசாங்கம் பதவியில் இருந்து, இது போன்ற பதிலை அது சொல்லியிருக்குமானால் அடுத்த நாளே அது வெளியேற்றப் பட்டிருக்கும்!" என்றார் கிரி.

1938 செப்டம்பர் 24ல் ரெயில்வே தண்டவாளம் போடுவது சம்பந்தமான மானியக் கோரிக்கை வந்தபோது, அதில் குறைப்புக் கோரித் தீர்மானம் கொண்டு வந்த கே. சந்தானம் இதே பிரச்சினையை மீண்டும் கிளப்பினார். இந்தியாவில் இரண்டு ரெயில் எஞ்சின் தொழிற்சாலைகளை அமைப்பதற்கு வேண்டிய எல்லா வசதிகளும் இருக்கின்றன என்று புள்ளி விவரங்களோடு எடுத்துரைத்தார் சந்தானம். இனிமேலும் மக்களின் கருத்தை எதிர்த்து நிற்க வேண்டாம் என்றும் அவர் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டார். தேசாய், ஆனே, பஜோரியா முதலான பல உறுப்பினர்கள் சந்தானத்தின் தீர்மானத்தை ஆதரித்தார்கள்; தீர்மானமும் வெற்றி பெற்றது. என்றாலும், அரசாங்கம், ரெயில் எஞ்சின் உற்பத்தியைத் தொடங்கவில்லை.

1939 பிப்ரவரி 20ல் ரெயில்வே மானியக் கோரிக்கையில் குறைப்புச் செய்யவேண்டும் என்று தீர்மானம் கொண்டு வந்த மோகன்லால் சாக்சேனா, பொது மக்களின் கருத்தையும் சட்ட சபையின் கருத்தையும் அரசாங்கம் மதிக்கவில்லை என்று குற்றஞ் சாட்டினார். பிரிட்டிஷ் வாணிபம் பாதிக்கப்படும் என்பதாலேயே அரசாங்கம் இந்தியாவில் ரெயில் எஞ்சின் உற்பத்தியைத் தொடங்கவில்லை என்றும் அரசாங்கத்தை மடக்கினார் அவர்.

இந்த முறையும் தீர்மானம் வெற்றி பெற்றது. இந்த (1939 ஆம்) ஆண்டின் ரெயில்வே வரவு செலவுத் திட்ட விவாதத்தின் போது, ரெயில்வே ஊழியர்கள் மற்றும் மூன்றும் வகுப்புப் பிரயாணி களுக்கு இருந்து வந்த சங்கடங்களைப் பல உறுப்பினர்கள் எடுத்துச் சொன்னார்கள். திருமல் ராவ் மூன்றும் வகுப்புப் பிரயாணிகளுக்குச் செய்து கொடுக்கவேண்டிய வசதிகளைப்பற்றிப் பேசினார். ராதாபாய் சுப்பராயன் ரெயில் நிலையங்களில் விற்கப் படும் உணவுப் பண்டங்களின் தரத்தை எடுத்துச் சொன்னார். ரங்கா ரெயில்வேத் தொழிலாளர் சங்கங்களைப் பற்றிப் பேசினார். சில விரைவு வண்டிகளில் மூன்றும் வகுப்பு இல்லாமல் செய்து விட்டதற்காக அரசாங்கத்தைக் கண்டித்த என். எம். ஜோஷி. "அரசாங்கம் விரைவு ரெயில்களை விட்டிருப்பது பணக்காரர் களுக்காகவா, ஏழைகளுக்காகவா?" என்று கேட்டார்.

ரெயில்வேயைப் பற்றிய காரசாரமான விவாதங்களில் ஒன்று 1937 பிப்ரவரி 24ல் நடைபெற்றது. அரசாங்கம் நடத்தி வந்த இந்திய ரெயில்வேயின் பொருளாதார நிலையைப் பரிசீலனை செய்து அதன் பொருளாதார அபிவிருத்திக்குரிய வழிவகைகளைச் சிபாரிசு செய்யுமாறு வெட்ஜ்வுட் குழுவை அரசாங்கம் நியமித் திருந்தது. இதிலே எல்லா உறுப்பினர்களும் வெள்ளையர்கள்; ஒருவர் தென்னுப்பிரிக்காவைச் சேர்ந்த வெள்ளையர். இதைப் பற்றிய பிரச்சினையை தர்பங்காவைச் சேர்ந்த சத்திய நாராயண சின்ஹா சட்டசபையில் எழுப்பினார். சத்தியமூர்த்தி, பி. தாஸ், ஜெஹாங்கீர், ஆனே, கஸ்னவி, அஸ்ஹர் அலி, யாமின் கான் ஆகிய பலர், இந்தக் குழுவில் ஒரு இந்தியர் கூட நியமிக்கப் படாததை எடுத்துக்காட்டி அரசாங்கத்தைக் கண்டித்தார்கள்.

"முதலில் ரெயில்வேத்துறை உறுப்பினர், ரெயில்வே நிதிக் கமிஷனர், ரெயில்வே போர்டு மற்றும் இவர்களின் உதவியாளர் களையும் அதிகாரிகளையும் குப்பைத் தொட்டியில் தள்ளுங்கள். புதிய புதிய தொழில் நுட்பத் தேர்ச்சியாளர்கள் இல்லாமல் வேலை செய்ய முடியாத இவர்களுக்கெல்லாம் இங்கே என்ன வேலை? அப்புறம் இந்தப் புதிய தொழில் நுட்பத் தேர்ச்சியாளர்களையே அவர்களின் இடத்தில் வேலைக்கு நியமிப்போம். ஏற்கெனவே

சுமை தாங்கமுடியாமல் திணறும் இந்திய மக்களின்மீது, கூடுதல் ஆட்களை ஏன் திணிக்க வேண்டும்? இருப்பவர்களை வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டே இந்தப் புதியவர்களை நியமிப்போம்" என்று கிண்டலாகப் பேசினார் டாக்டர் பகவான் தாஸ்.

இறுதியாக, சத்திய நாராயண சின்ஹாவின் தீர்மானம் வெற்றி பெற்றது.

## தொழிலாளர்நலச் சட்டங்களுக்காகப் போராட்டம்:

ஐந்தாவது சட்டசபையில், தொழிலாளர்நலச் சட்டங்களில் உறுப்பினர்கள் மிகுந்த ஈடுபாடு காட்டினார்கள். ஜெனிவாவில் நடந்த அனைத்துலகத் தொழிலாளர் மாநாடு, தொழிலாளர் நல ஆலோசனைகள் பலவற்றை வழங்கியிருந்தது. அவைகளை ஏற்று நடத்தும் விதமாக இங்கே, வேலையில்லாத் திண்டாட்ட ஒழிப்பு சம்பந்தமான பல திட்டங்களை இந்தியச் சட்டசபை சிபாரிசு செய்தது. அரசாங்கத்தின் கொள்கைக்கே எதிரான இந்த நடவடிக்கைகளுக்கெல்லாம் கிரி, ஜோஷி, ரங்கா, மோகன்லால் சாக்சேனா போன்ற உறுப்பினர்களே பெருமளவு காரணமாக இருந்தார்கள். ஆனாலும், இவைகளை உள்ளடக்கிய திருத்தப்பட்ட தீர்மானம் ஒன்று 1931 பிப்ரவரி 21ல் வந்தபோது, ஒரே வாக்கு வித்தியாசத்தில், அதை அரசாங்கம் தோற்கடித்து விட்டது. இந்தியச் சுரங்கங்களில், தொழிலாளர்கள் நாள் ஒன்றுக்கு 9 மணி நேரம் வேலை செய்யவேண்டும் என்று இந்திய அரசாங்கம் விரும்பியது. 1935 ஆம் ஆண்டின் இந்தியச் சுரங்கங்கள் (திருத்த) மசோதாவின் மீது பேசுகையில் மேற்கண்ட உறுப்பினர்கள், உலகத் தொழிலாளர் நல நிறுவனம் சிபாரிசு செய்துள்ளதுபோல், நாள் ஒன்றுக்கு ஏழே முக்கால் மணி நேரம் மட்டுமே சுரங்கத்தில் தொழிலாளர்கள் வேலை செய்யவேண்டும் என்று நிர்ணயிக்கும்படி அரசாங்கத்தை வற்புறுத்தினார்கள்.

1935 பிப்ரவரி 13ல் அரசாங்கம் ஊதியம் வழங்கும் முறை மசோதாவைக் கொண்டுவந்த போதும் பல உறுப்பினர்கள் தொழிலாளர்களுக்கு அதிகச் சம்பளம் கிடைக்க வேண்டுமென்று

வற்புறுத்தினார்கள். பல தொழிலகங்களில் தொழிலாளர்களுக்கு ஊதியம் வழங்கும் முறையை ஒழுங்குபடுத்துவதே அந்த மசோதாவின் நோக்கம். அதைப் பரிசீலனை செய்யப் பொறுக்குக் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. கிரியும் அதில் ஓர் உறுப்பினர். பொறுக்குக் குழு சிபாரிசு செய்த விதமாக மசோதா மீண்டும் சபையில் விவாதிக்கப்பட்ட போது ஜோஷி பல திருத்தங்களைக் கொண்டு வந்தார். இந்த மசோதா எல்லாத் தொழில்களிலும் உள்ள எல்லாத் தொழிலாளர்களுக்கும் உரியதாக அமுல் நடத்தப்பட வேண்டும் என்றும், மாதம் ஒருமுறை சம்பளம் கொடுப்பதற்குப் பதிலாகத், தொழிலாளர்களுக்குப் பதினைந்து நாளைக்கு ஒருமுறை சம்பளம் கொடுக்கப்பட வேண்டும் என்றும் அவர் கோரினார். தொழிலாளர் நல போர்டுகளில் தொழிலாளருக்கும் பிரதிநிதித்துவம் வேண்டும் என்றும் தொழிற்சங்க நிருவாகி ஒருவர் தொழிலாளர் சார்பில் இந்த போர்டுகளில் இடம் பெற வேண்டும் என்றும் ஜோஷி வற்புறுத்தினார். இந்தத் திருத்தங்களைக் கிரியும் ஆதரித்தார். குறிப்பாக, இந்தியாவில் தொழிற்சங்க வளர்ச்சிக்கு உதவியாக இருக்குமென்பதால் ஜோஷியின் கடைசித் திருத்தத்துக்கு உற்சாகமான ஆதரவு தந்தார் கிரி.

1936 பிப்ரவரி 10ல் அரசாங்கம் ஒரு திருத்தம் கொண்டு வந்தது. பத்து அல்லது பத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் "ஒன்று கூடிக் கொண்டு" முன்னறிவிப்பு இன்றியும் "தகுந்த காரணம் இன்றியும்" வேலைக்கு வராமல் இருப்பார்களானால், அவர்களின் ஊதியத்தில் 13 நாள் சம்பளம் வரை பிடித்துக் கொள்ளலாம் என்பது அந்தத் திருத்தம். சட்டசபையில் இதன் மீது கடுமையான வாக்குவாதம் நடந்தது.

நியாயமான திடீர் வேலை நிறுத்தங்கள் நடக்க முடியாதபடியும் அவைகளைச் சட்ட விரோதமாகவும் செய்கிறது என்று கூறி இந்தத் திருத்தத்தை எதிர்த்தார் கிரி. கிரி ஒரு தொழிற்சங்க வாதியே யானாலும், அரசியல் நோக்குடன் நடத்தப்படும் (தொழிலாளர்) வேலை நிறுத்தங்களை அவர் ஆதரிப்பதில்லை. இதுவகையில், எஸ். ஏ. டாங்கே, எஸ். எஸ். மிராஜ்கர் போன்ற கம்யூனிஸ்ட் தொழிற்சங்கவாதிகளோடு அவருக்கு மிகுதியான

கருத்து வேற்றுமை இருந்தது. ஆனால், இந்தத் திருத்தம் தொழிலாளர்களின் அடிப்படை உரிமையான வேலை நிறுத்த உரிமையையே அடியோடு சாய்ப்பதாக இருந்ததால் அதை எதிர்த்தார் கிரி. "வேலை நிறுத்த உரிமை என்பது, வாழவும் வேலை செய்யவும் ஒருவருக்குள்ள உரிமை போன்ற அடிப்படை உரிமை; அந்த உரிமையை எந்த நிலையிலும் தொழிலாளர்கள் விட்டுக் கொடுக்கமாட்டார்கள்!" என்று முழங்கினார் அவர்.

ஜோஷி, அனந்தசயனம் அய்யங்கார், ரங்கா ஆகியோரும் திருத்தத்தைக் கடுமையாக எதிர்த்தார்கள். கொள்கை அளவில் பார்த்தாலும் இதனால் விளையக் கூடிய பயனைக் கொண்டு கவனித்தாலும் இது ஏற்கக் கூடியதாக இல்லை என்று கூறிய அய்யங்கார், "ஒருவன் உழைத்துச் சம்பாதித்த ஊதியத்தை அவனுடைய எசமானன் மனம்போன போக்கில் பறித்துக்கொள்ள அனுமதிக்க முடியாது" என்று வலியுறுத்தினார்.

"வேலைக்கு வைத்திருப்பவரும் தொழிலாளர்களும் ஒருவரோடு ஒருவர் இணக்கமாக நடந்துகொள்ள வேண்டும் என்று ஆலோசனை சொல்லப்படுகிறது. தொழிலாளர்களைப் படுபாதாளத்தில் தள்ளிப் போட்டுவிட்டு அவர்கள் முதலாளிகளோடு சமமாக இணங்கி இருக்க வேண்டும் என்றால் எப்படி?" என்று கேட்டார் ரங்கா. அரசாங்கமும் முதலாளிகளும் சேர்ந்து கொண்டு தொழிலாளர் நலன்களைப் பறிக்கிறார்கள் என்றும் அவர் குற்றம் சாட்டினார்.

அரசாங்கத்தின் திருத்தத் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு, 65க்கு 44 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. மசோதாவும் இந்தத் திருத்தத்துடன், வாக்கெடுப்பு இல்லாமலே சபையில் ஏற்கப்பட்டது. ஆனாலும், அதற்கு முன்பே, கிரி காங்கிரஸ் கட்சியின் சார்பிலும் ரங்கா தனிப்பட்ட முறையிலும் மசோதாவிலும் திருத்தங்களிலும் உள்ள பாதகமான அம்சங்களைப் பற்றிய தமது எதிர்ப்பைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

1936 அக்டோபர் 13ல் தொழில் தகராறுகள் (திருத்த) மசோதா சபையில் தாக்கல் செய்யப்பட்ட போதும், தொழிலாளர்களுக்கு உள்ள வேலை நிறுத்த உரிமையைப் பற்றிய மற்றொரு

விவாதம் எழுந்தது. தொழிலாளர் நலனுக்கு உகந்தவைகளாக மசோதாவில் இடம் பெற்றிருந்த சில அம்சங்களை வரவேற்ற ஜோஷி, வேலை நிறுத்தத்தைச் சட்டவிரோதமானதென்று அறிவிக்கும் நோக்குடைய (மசோதாவின்) எட்டாவது விதியைக் கடுமையாக எதிர்த்தார். தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட தொழில் நிருவாகத்தோடு உள்ள தகராறுகளுக்காக இல்லாமல், அரசாங்கத்தைப் பணியவைக்கும் நோக்கத்தோடேயே பொது மக்களுக்குத் தொடர்ந்த தொல்லைகளை ஏற்படுத்தும் விதமாக மேற்கொள்ளப்படும் வேலைநிறுத்தங்களைச் சட்டத்துக்குப் புறம்பானவை என்றும் அறிவிக்க வேண்டும் என்பதே அந்த விதி. இந்த விதி, மூல மசோதாவில் உள்ளதைவிட, திருந்திய மசோதாவில் மிகவும் கடுமையானதாக உள்ளது என்றார் ஜோஷி. ஆனால், வேலை கொடுப்போரின் (முதலாளிகளின்) தூதுக் குழுவுக்கு ஆலோசகராக ஜெனிவா மாநாட்டுக்குச் சென்றிருந்த பி. தாஸ், புதிய விதி பழைய (மசோதா) விதியைவிடச் சிறந்தது என்று சொல்லிக்கொண்டார். கற்பனையான மனத்தாங்கல்களுக்காக எல்லாம் தொழிலாளர்கள் திடீர் வேலைநிறுத்தங்களில் ஈடுபடக் கூடாது என்று அவர் தொழிலாளர்களுக்கும் அறிவுரை கூறினார். வங்காளத்தைச் சேர்ந்த ஐரோப்பியர்களின் பிரதிநிதியான ஜி. மார்கன் ஒரு வேலைநிறுத்தத்தைச் சுலபமாகச் சட்டத்துக்குப் புறம்பானது என்று அறிவிக்க முடியாதபடி இந்தப் புதியவிதி நீதிமன்றத்தை வெகுவாகக் கட்டுப்படுத்துகிறது, ஆகையால் முந்திய விதியைவிட இந்த விதி தொழிலாளர்களுக்குச் சாதகமானதே என்று வாதித்தார்.

இந்தியத் தொழில் தகராறுகளின் வரலாற்றை விவரித்த கிரி, '1929ல் நிறைவேற்றப்பட்ட தொழில் தகராறுகள் சட்டம் மலையைக் கெல்லிப் பிடித்த சுண்டெலிதான்' என்றார். இந்தச் (சுண்டெலிச்) சட்டத்திலுள்ள சமாதான வழிமுறைகளைக் கூட, இந்திய அரசாங்கம் இதுவரை ஐந்தே ஐந்து முறைதான் பயன்படுத்தியிருக்கிறது என்று குறைப்பட்டார் அவர். அரசாங்கத்தின் இந்த நடைமுறையைக் கவனித்த பிறகு, அரசாங்கத்தின் நல்லெண்ணத்தின் மீதே தொழிலாளர்கள் நம்பிக்கை இழந்து போனார்கள். இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டதே

தொழிலாளர் வேலை நிறுத்தங்களை முறியடிப்பதற்குத்தான் என்றே தொழிற்சங்கங்கள் முடிவுக்கு வந்துள்ளன என்றும் விவரித்தார் கிரி. அவர் மேலும் பேசுகையில் கூறியதாவது:

"தொழிலாளர்களுக்கு அபராதத் தண்டனை விதிப்பதற்கு நாங்கள் ஒப்புக்கொள்ளவே முடியாது. தொழிலாளர்களின் சார்பிலே நான் தெரிவிக்க விரும்புவது என்னவென்றால், வேலை நிறுத்தம் என்னும் ஆயுதம் தொழிலாளர்களுக்குக் கிடைத்து உள்ள இயற்கையான உரிமை. அதை வேறு எந்தப் பொருளோடும் நாங்கள் பண்டமாற்றுச் செய்து கொள்ள முடியாது. எனவே, எந்தவிதமான அபராதத் தண்டனைக்கும் தொழிலாளர் இணங்கமாட்டார்கள் (உற்சாக ஆரவாரம்). அரசியல் வேலை நிறுத்தங்களில் தொழிலாளர்கள் ஈடுபடுவதைத் தடுப்பதே அரசாங்கத்தின் நோக்கம் என்று கருதுகிறேன். அதைப் பற்றியும், தொழிலாளர்களின் கருத்தை நான் இங்கே சொல்லியாக வேண்டும். தொழிலாளர்களைப் பொறுத்த அளவில், அவர்கள் முதலில் இந்த நாட்டின் குடிமக்கள்; அதன் பிறகே அவர்கள் தொழிலாளர்கள். (உற்சாக ஆரவாரம்). நாளை, இந்த நாட்டில் அரசியல் எழுச்சி ஒன்று உண்டாகுமானால்,—அரசாங்கம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், — தொழிலாளர்கள் அந்த அரசியல் வேலை நிறுத்தத்தில் நிச்சயமாகப் பங்கு கொள்வார்கள்!" (உற்சாக ஆரவாரம்).

தொழில் தகராறுகள் சட்டத்தைத் திருத்துவதில் ஈடுபட்டிருந்த அரசாங்கத்துக்குச் சில ஆலோசனைகளையும் தெரிவித்தார் கிரி:

(1) "தொழில் தகராறு என்பது பதிவு பெற்ற எந்த ஒரு தொழிற்சங்கத்துக்கும் வேலை கொடுப்பவருக்கும் இடையே உள்ள எந்தத் தகராறையும் உள்ளடக்கியதாகவே இருக்கவேண்டும். இப்படி விதி செய்தால்தான் தொழிற்சங்கமும் தகராறில் ஒரு கட்சியே என்ற சட்டப்படியான உரிமை அதற்குக் கிடைக்கும்."

(2) "தகராறுக்கு அடிப்படையான தோதுக்கள் இருக்கின்றன என்று மெய்ப்பிக்கப்பட்டால்,—தகராறு ஏற்பட்ட

பின்போ தகராறு ஏற்படக் கூடிய சூழ்நிலையிலோ,—இரண்டு கட்சியில் ஒன்று விரும்பினுல், தகராறு ஒரு போர்டு அல்லது நீதிமன்றத்துக்கு இயல்பாகவே அனுப்பப் படலாம் என்ற உரிமை இருக்கவேண்டும்.''

இறுதியாக, இந்த மசோதா பொதுமக்களின் கருத்தை அறிவதற்கு அனுப்பப்பட வேண்டும் என்று சபை தீர்மானம் நிறைவேற்றியது.

அரசாங்க உதவிபெறும் தொழில் நிறுவனங்களில் பணிபுரியும் தொழிலாளர்களின் நலனைக் குறித்து ஸ்ரீ பிரகாசா தனி அக்கறை காட்டினுர். 1938 பிப்ரவரி 4ல் ஸ்ரீ பிரகாசா ஒரு தீர்மானம் கொண்டுவந்தார்.

(1) இந்த நிறுவனங்களின் உயர்தர மற்றும் ஏனைய ஊழியர் களில் ஒரு குறிப்பிட்ட விகிதத்துக்கு மேற்பட்டவர்கள் இந்தியர்களாகவே அமர்த்தப்பட வேண்டும்.

(2) அவ்வாறு நியமனம் பெறும் இந்தியர்களுக்குப் போதிய ஊதியம் வழங்குவதோடு அவர்களை நியாயமான முறை யிலும் நடத்த வேண்டும்.

இந்த இரண்டும் நடைபெறும் விதத்தில் இந்திய அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கவர்னர் ஜெனரலைக் கேட்டுக்கொண்டது தீர்மானம். இதை ஆதரித்துப் பேசிய ஜோஷி, அரசாங்கம் உதவியளித்து வரும் தொழில்கள் (அந்த உதவிக்கான) நிபந்தனைகளின்படி நடைபெறுகின்றனவா என்பதைக் கவனித்துவர நெறியாளர்களையும் கண்காணிப்பாளர் களையும் நியமிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். வெங்கடாசலம் செட்டி, ரங்கா, ஆனே, ஜெளமன் ஆகியோரும் தீர்மானத்தை ஆதரித்தார்கள். ஜெஹாங்கீர் மட்டும், இந்தத் தீர்மானத்தைப் பற்றி மேலும் விவாதம் தேவை இல்லை என்ருர். ஆனுலும், வாக்கெடுப்பு இல்லாமலே தீர்மானம் சபையில் நிறைவேறியது.

**சட்டசபைக்கு வெளியில் அரசியல்:**

ஜவஹர்லால் நேருவின் தலைமையில் (1936 டிசம்பரில்) ஃபைஸ்பூரில் கூடிய காங்கிரஸ், "இந்த அரசியல் சட்டத்துக்கு (இந்தியாச் சட்டத்துக்கு) உட்படுவதோ அதனோடு ஒத்துழைப்பதோ நமது நோக்கமல்ல; சட்டசபைக்கு உள்ளேயும் வெளியேயும் அதை நேருக்கு நேரே எதிர்த்து அதை ஒழித்து விடுவதே நம்முடைய நோக்கம்" என்று அறிவித்தது. எனவே, மாநிலச் சட்டசபைத் தேர்தலின் முடிவுகள் வெளியிடப்பட்ட போது, அமைச்சுப் பொறுப்பை ஏற்பதா வேண்டாமா என்பது காங்கிரசுக்குப் பெரிய பிரச்சினையாகி விட்டது. 1937 மார்ச் மாதத்தில், ஆட்சிப் பொறுப்பை ஏற்கக்கூடாது என்று கோரி இடதுசாரியினர் வெளியிட்ட ஆலோசனையை அகில இந்தியக் காங்கிரஸ் நிராகரித்தது. அமைச்சர்கள் சட்டத்துக்கு உட்பட்ட முறையில் செயல் புரிவதைத் தடுக்கும் விதமாக கவர்னர்களும் கவர்னர் ஜெனரலும் தங்கள் தனி அதிகாரத்தைப் பயன்படுத்த மாட்டார்கள் என்று அரசாங்கம் உறுதி வழங்குமானால், காங்கிரஸ் கட்சி ஆட்சிப் பொறுப்பை ஏற்கலாம் என்றும் அது முடிவு செய்தது. இதைத் தொடர்ந்து, ஏழு மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி மந்திரி சபை அமைத்தது.

தொடக்கத்தில், சிவில் உரிமைகள் மற்றும் விவசாய அபிவிருத்தி சம்பந்தப்பட்ட சில சட்டங்களைக் காங்கிரஸ் மந்திரி சபைகள் நிறைவேற்றின. ஆனாலும், காலப் போக்கில்,—கூப்லண்டு குறிப்பிட்டது போல,—அரசியல் சட்டத்தை நேருக்கு நேர் மோதி ஒழிப்பது என்ற திட்டத்தையே காங்கிரஸ் மந்திரி சபைகள் அநேகமாக மறந்துவிட்டன! இதனால், காங்கிரசில் உள்ள இடதுசாரிகளுக்கும் வலதுசாரிகளுக்கும் இடையில் நிலவிய பூசல் மிகுதியாயிற்று. அதன் விளைவாக, காங்கிரசின் புதிய தலைவராகத் தேர்வு பெற்றிருந்த சுபாஷ் சந்திர போஸ், 1939 ஏப்ரலில் பதவி விலக வேண்டியது ஆயிற்று.

ஐரோப்பாவில் யுத்த மேகங்கள் சூழ்ந்து கொண்டிருந்த நேரத்தில், இங்கே காங்கிரஸ்காரர்களிடையே ஏற்பட்ட பிளவு இந்திய அரசியல் சிக்கல்களுக்கு ஒரு புதிய திருப்பத்தைக்

கொடுத்தது. காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையே நிலவிய பிளவு விரிவடைந்தது அதன் மற்ருெரு திருப்பத்துக்குக் காரணமாயிற்று. சில மாநிலங்களில் காங்கிரஸ் மந்திரிசபை அமைத்ததிலிருந்தே, ஜின்ஞவும் மற்ற வகுப்புவாத முஸ்லிம் தலைவர்களும், அங்கெல்லாம் முஸ்லிம்கள் தொல்லைகளுக்கு உள்ளாக்கப்படுவதாகக் கடுமையாகப் புகார் கூறி வந்தார்கள். கிளெண்டேவன் எழுதியிருப்பது போல, (கவர்னர் ஜெனரல்) லின்லித்கோ பிரபுவே, முஸ்லிம்கள் துன்புறுத்தப்பட்டதாக எந்தச் செய்தியும் இல்லை என்று ஜின்ஞவிடம் தெரிவித்தார். ஆனாலும், (முஸ்லிம்கள் காங்கிரஸ் ஆட்சியில் துன்புறுத்தப்படு கிருர்கள் என்னும்) அந்த விவகாரமே ஜின்ஞவுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இணைந்து செயற்பட ஒரு மேடையாக அமைந்தது.

1938ல் நேருவுக்கும் ஜின்ஞவுக்கும் இடையே நிகழ்ந்த கடிதப் போக்குவரத்தும் (காங்கிரஸ் – லீக்) பிளவைச் சரிசெய்ய முடிய வில்லை. உண்மையில் அந்தப் பிளவு, அதன் பிறகு விரிவடையவே செய்தது. "காங்கிரஸ் முஸ்லிம் லீகைத் தனக்குச் சமமாக ஏற்றுக்கொண்டு இந்து–முஸ்லிம் விவகாரம் பற்றிய பேச்சு வார்த்தைகளில் ஈடுபடத் தயாராக இல்லை என்ருல், நாங்கள் எங்கள் பலத்தையே நம்பிக் காத்திருப்பதைத் தவிர வேறு வழி யில்லை" என்று அச்சுறுத்தும் விதமாக, ஏப்ரல் 12ல் நேருவுக்குக் கடிதம் எழுதினுர் ஜின்ஞ. காங்கிரஸ் இந்த நிபந்தனையை ஏற்க முடியவில்லை.

காங்கிரஸ் இங்கே ஓர் இந்து ராச்சியத்தை நிர்மாணிக்கவே விழைகிறது என்றும், மத்திய சட்டசபையில் தனிப்பெரும் பான்மை கிடைத்தால் அரசியல் சட்டத்தின்படி மத்திய ஆட்சியை ஏற்று நடத்தத் தொடங்கிவிடும் என்றும் இப்போது லீக் திட்ட வட்டமாக நம்பத் தொடங்கிவிட்டது. இதற்கு ஏற்றவிதமாகவே, சுதேச சமஸ்தான ஆட்சியைக் குடியரசுப் பாணியில் நடத்த வேண்டும் என்பதில் காங்கிரஸ் அக்கறை காட்டி வருகிறது என்றும் முஸ்லிம் வகுப்புவாதத் தலைவர்கள் எண்ணினுர்கள். அதன் மூலம் சுதேச சமஸ்தானங்களின் பிரதிநிதிகளாகவும் காங்கிரஸ்காரர்களையே தேர்ந்தெடுக்கச் செய்துவிடலாம் என்பதே காங்கிரசின் திட்டம் என்றும் லீகர்கள் நினைக்கலானுர்கள்.

"மத்திய சட்டசபையில் சுதேச சமஸ்தானப் பிரதிநிதிகள் மன்னர்களால் நியமிக்கப்படுவதற்குப் பதிலாக (அங்குள்ள) மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்று (காங்கிரஸ்) வற்புறுத்திய உடனேயே அதன் சூது வெளிப்பட்டு விட்டது. இப்படி, சமஸ்தானப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவது என்று ஆரம்பித்தால் மத்திய சட்ட சபையில் முஸ்லிம்களின் பிரதிநிதித்துவம் குறைந்து போகும்; காங்கிரசைத் தட்டிக் கேட்கும் வலிமை அதன் பிறகு முஸ்லிம் லீகுக்கு இருக்கவே இருக்காது" என்று லின்லித்கோவிடம் கூறியுள்ளார் ஆகா கான். இந்த விதமாக வாதம் புரிந்த இவர் ஒரு காலத்தில் கூட்டாட்சி முறையை முழுமூச்சாக ஆதரித்தவர் என்பது குறிப்பிடத்தக்கது!

இந்த அச்சத்திலேயே, முஸ்லிம் லீக் அரசியல் சட்டத்தின் கூட்டாட்சிப் பகுதியை எதிர்ப்பதில் தீவிரம் காட்டி வரலாயிற்று. மாறிவிட்ட இந்தச் சூழ்நிலையில், சுதேச மன்னர்களும் இப்போது கூட்டாட்சி அமைப்பில் சேர மிகவும் தயங்கினார்கள். இவைகளின் மொத்த விளைவு என்னவென்றால், 1939 செப்டம்பரில் இரண்டாவது உலகப்போர் தொடங்கிய சமயத்தில் வைசிராய் மிகமிக முயன்று பார்த்தும், அகில இந்தியக் கூட்டாட்சியை அமைக்கவே முடியவில்லை.

ஐரோப்பிய வானத்தில் போர் மேகங்கள் எழுந்து படர்ந்தன. 1939 மார்ச்சில் திரிபுராவில் கூடிய காங்கிரஸ், பிரிட்டிஷ் வெளிநாட்டுக் கொள்கையை நிராகரித்தது. (பிரிட்டனின்) மியூனிக் ஒப்பந்தத்தையும், ஆங்கிலோ இத்தாலிய ஒப்பந்தத்தையும், ஸ்பெயினில் ஃபிராங்கோ தலைமையில் அமைந்த ஆட்சியை பிரிட்டன் அங்கீகரித்ததையும் (ஆங்கிலேய வெளிநாட்டுக் கொள்கையின் பிழையான விளைவுகளாகக் கொண்டு) காங்கிரஸ் நிராகரித்தது. ஆங்கில வெளிநாட்டுக் கொள்கையைத் "திட்டமிட்ட ஜனநாயகக்கொலை" என்றும் அது கண்டித்தது. பிரிட்டிஷ் கொள்கை ஃபாசிஸத்தை ஆதரிப்பதாக உள்ளது என்றும் எனவே காங்கிரஸ் அதனோடு தன்னைத் தொடர்புபடுத்திக் கொள்ள முடியாது என்றும் அறிவித்தது.

இந்திய மக்களின் விருப்பத்துக்கு எதிராக (அரசாங்கம்) இந்தியாவைப் போரில் ஈடுபடுத்துவதையும் இந்தியத் தளவாட உபகரணங்களைப் போரில் பயன்படுத்துவதையும் முழுமூச்சாக எதிர்ப்பது என்றும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி (ஏப்ரலில்) முடிவு செய்தது. ஆகஸ்டு மாதத்தில் கூடிய காங்கிரஸ் செயற்குழு, இந்திய மக்களின் ஒப்புதலைப் பெறுமல் எகிப்துக்கும் சிங்கப்பூருக்கும் இந்தியப் படைகள் அனுப்பப் பட்டிருப்பதை வன்மையாகக் கண்டித்தது. இந்திய அரசாங்கம் மத்திய சட்டசபையை மேலும் ஓராண்டுக்கு நீடித்துக் கொண்டதையும் காங்கிரஸ் கண்டித்தது. இவைகளுக்கெல்லாம் எதிர்ப்புத் தெரிவிக்கும் விதமாக, காங்கிரஸ் (சட்டசபை) உறுப்பினர் யாரும் நீடிக்கப்பட்ட அந்தச் சட்டசபையின் அடுத்த கூட்டத்தொடருக்குப் போகக் கூடாது என்றும் தடுத்தது. அரசாங்கத்தின் போர் ஆயத்தங்களுக்கு எந்த விதத்திலும் உதவி செய்ய வேண்டாமென்று மாநில அரசாங்கங்களையும் காங்கிரஸ் கேட்டுக் கொண்டது.

## சட்டசபைப் பகிஷ்காரம் :

மத்திய சட்டசபையின் கூதிர்காலக் கூட்டத்தொடர் ஆகஸ்ட் 30ல் ஆரம்பமான போது காங்கிரஸ் உறுப்பினர் ஒருவரும் சபைக்கு வரவில்லை. செப்டம்பர் 3ல் ஐரோப்பாவில் போர் வெடித்தது ; பிரிட்டன் ஜெர்மனியின் மீது போர்ப் பிரகடனம் செய்தது. சிலமணி நேரத்திலேயே வைசிராய், இந்தியாவும் போரில் சம்பந்தப்பட்டுவிட்டதாக அறிவித்தார். அப்போது சட்டசபை நடந்து கொண்டிருந்தும், வைசிராய், இந்த அறிவிப்பைச் செய்யுமுன் சபையைக் கலந்து ஆலோசிக்கவில்லை. இந்தியத் தலைவர்களிடம் கூட அவர் இதுபற்றிக் கலந்து பேச வில்லை. இந்த அறிவிப்புடனேயே இந்தியப் பாதுகாப்பு அவசரச் சட்டமும் பிறப்பிக்கப்பட்டது.

சட்டத்துறை உறுப்பினர் முகம்மது ஜாஃபருல்லா கான் செப்டம்பர் 5ல் இந்தியப் பாதுகாப்பு மசோதாவைச் சபையில் தாக்கல் செய்தார். இந்தியப் பாதுகாப்பு, பொதுமக்களின் பாதுகாப்பு, மக்கள்நலன், சில குற்றங்களைப் பற்றிய விசாரணை

ஆகியவைகளுக்கான தனி அதிகாரங்களை (அரசாங்கத்துக்கு) வழங்கியது இந்த மசோதா. ஏற்கெனவே பிரகடனப்படுத்தப் பட்ட அவசரச் சட்டத்தின் கடுமையான நடவடிக்கைகள் அனைத்தையும் தன்னுள் கொண்டிருந்தது மசோதா. ஜோஷி, சந்த் சிங், பானர்ஜி போன்ற உறுப்பினர்கள் மசோதாவில் குறிக்கப்பட்ட சில கடுமையான நடவடிக்கைகளுக்கு எதிர்ப்புத் தெரிவித்தார்கள். ஆயினும், யாமின் கான் போன்ற உறுப்பி னர்கள் மசோதாவை முழுமையாக ஆதரித்தார்கள். வாக்கெடுப்பு இல்லாமலே, சபை, இந்தியப் பாதுகாப்பு மசோதாவை நிறை வேற்றியது.

இங்கே இதெல்லாம் நடந்து கொண்டிருக்கையிலேயே, இந்திய வரலாற்றில் ஒரு பெரிய திருப்பம் உதயமாகி விட்டது.

அத்தியாயம் 7

# உலகப்போரும் சட்டசபையும் (1939-1945)

**போரும் இந்திய அரசியலும் :**

இந்தியத் தலைவர்களையும் மத்திய சட்டசபையையும் கலந்து கொள்ளாமலே, 1939 செப்டம்பர் 3ல் இந்தியா ஜெர்மனியோடு போரில் இறங்கியிருப்பதாக வைசிராய் அறிவித்தது இந்தியா முழுவதிலும் பெரிய எதிர்ப்பைக் கிளப்பியது. தமது தவறுக்கு மாற்றுத் தேடுபவர் போல, வைசிராய், அவசரம் அவசரமாகக் காந்தியடிகளையும் மற்ற இந்தியத் தலைவர்களையும் கலந்து பேசுவதற்காக தில்லிக்கு அழைத்தார். காந்தியடிகள், தனிப்பட்ட முறையில், செப்டம்பர் 4ல் வைசிராயைச் சந்தித்தார்; மனிதாபிமான நோக்கில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் ஆதரவும் தெரிவித்தார். ஆனாலும், வைசிராயைச் சந்தித்த காந்தியடிகள் "வெறுங்கையோடுதான்" திரும்பி வந்தார்; "வெளிப்படையாகவோ ரகசியமாகவோ அவர் (வைசிராயுடன்) எந்த உடன்படிக்கையும் செய்து கொள்ளவில்லை". என்றாலும், இந்தச் சந்திப்பின் போது, "இந்திய வகுப்புவாதத்துக்கெல்லாம் பிரிட்டன் பிழையே காரணம்" என்று வைசிராயிடம் சுட்டிக் காட்ட அவர் தவறவில்லை.

அதே நாளில் ஜின்னாவையும் சந்தித்தார் வைசிராய். "ஜின்னாவுக்கு அதிகமான முக்கியத்துவத்தைக் கொடுத்துவிடக் கூடாது" என்றும் அவரை மேலும் சிக்கலான பேர்வழியாக்கி விடக் கூடாது என்றும் பஞ்சாப் முதல்வர் சிகந்தர் ஹயாத் கான், முன் கூட்டியே வைசிராயை எச்சரித்தார். இருப்பினும், வைசிராய் முஸ்லிம் தலைவர்களிடையே ஒற்றுமையை உண்டாக்குவதற்குத் தம்மால் ஆனதைச் செய்யவேண்டும் என்று அவர் முடிவு செய்திருந்ததால் ஜின்னாவிடம் மிகுந்த "பொறுமை"

யுடனேயே நடந்துகொண்டார். காந்தியடிகளிடம் தெரிவித்தது போலவே, போர் நிலைமையைக் கருதி 1935 ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தை அமுல்படுத்தும் முயற்சியைத் தள்ளிவைக்க நேர்ந்தது, என்று ஜின்னாவிடமும் தெரிவித்தார் வைசிராய். "என்னுடைய கையைப் பலப்படுத்துங்கள்; என் தோழர்களிடம் நான் சென்று சொல்லத் தக்கதாக ஏதாவது செய்யுங்கள்" என்று வைசிராயைக் கேட்டுக் கொண்டார் ஜின்னா. "காங்கிரஸ் மந்திரி சபைகளை (ஆட்சிகளை) வெளியேற்றச் சொல்லுகிறீர்களா?" என்று கேட்டார் வைசிராய். "ஆம்! உடனேயே அவர்களை வெளியேற்றுங்கள்! அப்படிச் செய்தால்தான் அவர்களுக்குப் புத்தி வரும்" என்று படபடத்தார் ஜின்னா. சிறிது காலத்துக்கு முன்புதான், இந்தியா ஜனநாயக முறையில் சுதந்திரம் பெற முடியாது என்று பேசியிருந்தார் ஜின்னா. அதைக் குறிப்பிட்டு, "ஜனநாயக முறையில் சுதந்திரம் வராது என்றால் வேறு எப்படி இந்தியா விடுதலை பெறும் என்று நினைக்கிறீர்கள்?" என்று வைசிராய் கேட்டதற்கு, "பிரிவினை" என்று ஒரே வார்த்தையில் பதில் இறுத்தார் ஜின்னா. தம்முடைய வகுப்புவாதப் பிரிவினைக் கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்வதற்காக ஜின்னா பிரிட்டிஷாரோடு நெருங்கிவரத் தொடங்கி விட்டதை இந்த முதல் சந்திப்பே புலப்படுத்தி விட்டது. பிரிட்டிஷ்காரர்களும், இதுவகையில் ஜின்னாவுக்கு உதவி செய்யவே ஆர்வம் கொண்டிருந்தனர் என்பது, ஒரு மாதத்துக்குப் பின் நடந்த வைசிராய்—ஜின்னா இரண்டாவது சந்திப்பில் வெட்டவெளிச்சமாகி விட்டது. இது பற்றி லின்லித்கோ இந்திய வைசிராயாக இருந்த காலம் பற்றி எழுதிய புத்தகத்தில், கிளெண்டேவன் குறிப்பிட்டுள்ளார்:

அக்டோபர் 5ல் ஜின்னாவைச் சந்தித்த வைசிராய், அவர் (ஜின்னா) இப்போது முன்னைவிட இணக்கமாகவும் ஒத்துழைப்பு நோக்குடையவராகவும் மாறியிருப்பதைக் கண்டுகொண்டார். முஸ்லிம்களை ஒன்று சேர்ப்பதில் தமக்கு அளித்த உதவிகளுக்காக ஜின்னா நன்றி தெரிவித்துக் கொண்டபோது, முஸ்லிம்களின் கருத்தோட்டம் தகுந்த முறையிலும் முழுமையாகவும் வெளியிடப்

பட வேண்டியது பொது நலனுக்கு மிக மிக அவசியம் என்று நயமாகக் கூறினர் வைசிராய் லின்லித்கோ.

பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லிம் லீக் மிகவும் பலவீன மாகவே இருந்தது என்பது 1937 தேர்தலில் தெளிவாகத் தெரிந்தது. அந்த இரண்டு பகுதிகளிலும் முஸ்லிம் லீகை பலப் படுத்துவதற்கு வைசிராய் உதவி வந்தார் என்பதே மேற்கண்ட நிகழ்ச்சியிலிருந்து தெரிய வருகிறது.

இதற்கிடையில், செப்டம்பர் 14ல் கூடிய காங்கிரஸ் செயற்குழு, போலந்தில் நாஜிகள் நடத்திய ஆக்கிரமிப்பைக் கண்டித்து, அதை (ஆக்கிரமிப்பை) எதிர்த்து நின்றவர்களுக்கு ஆதரவு தெரி வித்தது. "ஜனநாயகத்தை உறுதிப்படுத்தவும் பரப்பவும்தான் பிரிட்டன் போராடுகிறது என்ருல், முதலில் அதன் ஆளுகைக்கு உட்பட்ட பகுதிகளில் ஏகாதிபத்தியத்தை ஒழிக்க வேண்டும்; வெளியார் தலையீடு எதுவும் இல்லாமல் அரசியல் நிர்ணய சபை மூலம் இந்தியர்கள் தங்கள் அரசியல் சட்டத்தை வகுத்துக் கொள்ளும் உரிமையை அவர்களுக்கு வழங்கி இங்கே குடியாட்சியை நிறுவ வேண்டும்" என்றும் காங்கிரஸ் செயற்குழு அறைகூவியது. "சுதந்திர இந்தியா, ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிராகவும் பொருளாதார ஒத்துழைப்புக்கும் மற்றச் சுதந்திர நாடுகளோடு கைகோத்து நிற்கும்" என்றும் அது அறிவித்தது. "குடியாட்சி, ஏகாதிபத்தியம் என்பவைகளைப் பொறுத்த வரையில், இந்தப் போரில், பிரிட்டன் எதை ஆதரிக்கப் போகிறது என்பதைத் திட்டவட்டமாக அறிவிக்க வேண்டும். குறிப்பாக, இதன் விளைவாக பிரிட்டனின் இந்தியக் கொள்கை எந்த வடிவம் எடுக்கப் போகிறது என்பதையும் அவர்கள் தெரிவித்துவிட வேண்டும்" என்று செயற்குழு கேட்டுக் கொண்டது. "பிரிட்டன் தனது போர் நோக்கம் பற்றிய விளக்கத்தைத் தந்த பிறகே பிரிட்டனுடன் போரில் ஒத்துழைக்கலாமா வேண்டாமா என்பதை முடிவு செய்யலாம்" என்ற தீர்மானத்துடன் செயற்குழு தனது இறுதி முடிவை ஒத்திப் போட்டது.

அக்டோபர் 17ல் வைசிராய் ஓர் அறிக்கை வெளியிட்டார். அந்த அறிக்கை, பிரிட்டனின் போர் நோக்கம் பற்றித் திட்டவட்டமாக எதுவும் சொல்லவில்லை; பெரும்போக்காகவே சில விவரங்களைத் தந்தது. "ஆக்கிரமிப்பை அடக்கி உலகில் அமைதியை நிலை நாட்டவே பிரிட்டன் போராடுகிறது. இந்தியாவைப் பொறுத்த வரை, பிரிட்டிஷ் சாம்ராச்சியத்துக்கு உட்பட்ட டொமினியன்களில் ஒன்றாக இந்தியா நிலை பெறும் வகையில் இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் இடையிலான ஒத்துழைப்பைப் பெருக்குவதே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கம். போர் முடிந்ததும், 1935 ஆம் ஆண்டு இந்தியாச் சட்டத்தில் தேவையான திருத்தங்களைச் செய்யவே பிரிட்டன் விரும்புகிறது. இந்தத் திருத்தங்கள் இந்தியாவிலுள்ள பல்வேறு வகுப்பினர், கட்சிகள், சுதேச மன்னர்கள் ஆகிய அனைவருக்கும் ஏற்கத் தக்கவைகளாக இருக்க வேண்டுமாகையால், (போர் முடிந்ததும்) இவர்கள் அனைவரின் பிரதிநிதிகளுடனும் பேச்சு வார்த்தைகள் நடத்த பிரிட்டன் மிகவும் ஆவலாக இருக்கிறது. இப்போதைக்கு மேற்கண்டவர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்றை வைசிராய் நியமிப்பார்; இந்த ஆலோசனைக் குழு போருக்கு ஆதரவாக இந்திய மக்களின் கருத்தைத் திரட்டும்."

இந்த அறிக்கையை ஆராய்ந்த காங்கிரஸ் செயற்குழு, இது "கொஞ்சமும் திருப்தியளிக்கவில்லை" என்று கருத்துத் தெரிவித்தது. மேலும், "இந்த நிலையில் நாம் பிரிட்டனுக்கு ஆதரவு கொடுத்தால் அது ஏகாதிபத்தியத்துக்கு அளிக்கும் ஆதரவாகவே முடியுமாதலால், நாம் பிரிட்டனுக்கு ஆதரவு தருவதற்கில்லை" என்றும் அறிவித்தது. இந்த நடவடிக்கையின் முதல்படியாக, காங்கிரஸ் அமைச்சவைகளை எல்லாம் பதவி விலகுமாறு காங்கிரஸ் பணித்தது. இதற்கு ஏற்ப, அக்டோபரிலும் நவம்பரிலுமாக, எல்லாக் காங்கிரஸ் மந்திரி சபைகளும் ராஜினாமாச் செய்தன. இந்த நிகழ்ச்சி முஸ்லிம் லீகுக்குப் பெரிய ஆனந்தத்தையளித்தது. ஜின்னாவின் அறிவிப்புக்கிணங்க, நாடெங்கும் உள்ள முஸ்லிம் லீகினர் டிசம்பர் 22 ஆம் தேதியை "விமோசன தின"மாகக் கொண்டாடி மகிழ்ந்தார்கள்!

**போர் நோக்கங்கள் :**
**சட்டசபையில் விவாதம் :**

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் போர் நோக்கங்களைப் பற்றிய ஒரு விவாதம் 1940 மார்ச் 11ல் சட்டசபையில் நடைபெற்றது. காங்கிரசின் கட்டளைப்படி, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்கள் சட்டசபைக்கு வரவில்லை. நிருவாகக் கவுன்சிலின் செலவினங்களுக்கான கோரிக்கை சட்டசபையில் வந்தபோது, எம். எஸ். ஆனே வெட்டுத் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார். பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவித்துள்ள போர் நோக்கங்களைப் பொறுத்த அளவில் இந்திய அரசாங்கம் எப்படி நடந்துகொள்ளப் போகிறது என்பதை விவாதிக்க வேண்டும் என்று கோரியது அந்தத் தீர்மானம்.

தீர்மானத்தை விளக்கிப் பேசுகையில், இந்திய அரசாங்கம், இதுவரையில் இதுபற்றிய அதிகார பூர்வமான அறிக்கை எதையும் சட்டசபையில் வெளியிடவில்லை என்றும், செப்டம்பர் 3 ஆம் தேதி வைசிராய் வெளியிட்ட அறிக்கை பரவலான அதிருப்தியையே ஏற்படுத்தி உள்ளது என்றும் சுட்டிக்காட்டினார் ஆனே. இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையிலுள்ள உறவு உடனடியாக மறு பரிசீலனை செய்யப்பட வேண்டும் என்றே மக்கள் விரும்புகிறார்கள். காரணம், சுயநிர்ணய உரிமையே இந்தியாவின் கொள்கை. இப்போது ஏற்பட்டுள்ள நிலையில், போரின் நோக்கங்களாக பிரிட்டன் அறிவித்துள்ளவை இந்தியாவைக் கட்டுப்படுத்துகின்றனவா என்பதே கேள்வி. அவை இந்தியாவைக் கட்டுப்படுத்த மாட்டா என்றால், போரைப் பற்றியே இந்திய மக்களுக்கு அக்கறை இல்லை. இந்த நிலைமை உடனடியாகத் தெளிவுபடுத்தப்பட வேண்டும் என்றார் ஆனே. அவர் மேலும் பேசுகையில், 1935 ஆம் ஆண்டு இந்தியாச் சட்டத்தில் இந்தியா ஒன்றுபட்ட நாடாக இருக்க வேண்டும் என்பதை பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக் கொண்டிருக்கிறது; அப்படி இருந்தும், வகுப்புரிமைச் சிபாரிசுகளின் பேரால் இங்கே புதிய அரசியல் குழுக்களை உண்டாக்க (நாட்டைத் துண்டாட) முயற்சி நடைபெறுகிறது. மேற்படிச் சட்டத்தில் ஒப்புக் கொள்ளப்பட்ட கொள்கைக்கே இது முற்றிலும் முரணானது

என்பதை அரசாங்கம் உணர வேண்டும் என்று எடுத்துரைத்தார். அதில் சந்திர தத்தா, பி. என். பானர்ஜி, கிருஷ்ண காந்த் மாளவியா ஆகியோர் ஆனேயின் தீர்மானத்தை ஆதரித்தனர். யுத்தப் பொறுப்பில் பங்கு கொள்ளுமாறு இந்தியாவை வற்புறுத்துவதற்கு முன்பாக, இந்தியா சுதந்திர நாடா இல்லையா என்பது தெரிந்தாக வேண்டும், என்றார் மாளவியா.

முஸ்லிம் லீகின் சார்பில் பேசிய யாமின் கான் (ஆனேயின்) வெட்டுத் தீர்மானத்தை எதிர்த்தார். "ஐரோப்பாவில் ஆக்கிரமிப்பு நடந்து விட்டிருக்கிற இந்த நேரத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் வீணுகக் காலம் கடத்திக்கொண்டிருக்க முடியாது (அதாவது, இந்தியாவைக் கலந்து கொண்டு முடிவு செய்யலாம் என்று இருக்க முடியாது). ஏதாவது ஒரு நொண்டிச்சாக்கை வைத்துக்கொண்டு சபைக்கு வராமல் இருக்கலாம் என்று காத்திருக்கிறவர்களே, இந்தியாவைக் கலந்து ஆலோசிக்கவில்லை என்று கதை விடுகிறார்கள்" என்றார் யாமின். காங்கிரஸ்காரர்கள் கோரி வரும் சுயநிர்ணய உரிமை என்றைக்குமே முழுமையான சுய நிர்ணய உரிமையாக இருக்க முடியாது என்று கூறிய யாமின் கான் அதற்குரிய காரணங்களையும் விவரித்தார்: "காங்கிரஸ்காரர்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பதால், அவர்கள் சொல்கிற படியே பிரிட்டிஷ் அரசாங்கமும் (இங்குள்ள) சிறுபான்மையினரும் ஆடவேண்டும் என்றே அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். முஸ்லிம்கள் எண்ணிக்கையில் குறைவானவர்களாக இருக்கலாம். ஆனால், அதற்காக, அரசியலிலும் தாங்கள் சிறுபான்மையினர் என்பதை முஸ்லிம்கள் ஒருநாளும் ஏற்கப் போவதில்லை!" என்றார் அவர்.

யாமின் கானின் விவாதத்தை அப்படியே ஏற்று வழி மொழிந்தார் சர் சையது ரஸா அலி. காங்கிரஸ் தேசியக் கட்சி உறுப்பினர்கள் காங்கிரஸ் உதிர்த்த வார்த்தைகளையே கிளிப் பிள்ளைபோல திரும்பத் திரும்ப மிழற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்று கிண்டல் பண்ணிய அலி, அரசாங்கத்தார் காங்கிரசோடு சமரசம் பண்ணிக்கொண்டு முஸ்லிம்களை அந்தரத்தில் விட்டாலும் விட்டு விடுவார்கள் என்று அச்சம் தெரிவித்தார். "காங்கிரசின்

அரசியல் நிர்ணய சபைக் கோரிக்கைக்கு விட்டுக்கொடுத்துக் காங்கிரசோடு சமாதானம் செய்துகொள்ள அரசாங்கம் முனையுமானால், முஸ்லிம்களாகிய நாங்கள், காங்கிரஸ், தேசியக் காங்கிரஸ், இந்த அரசாங்கம் ஆகிய மூன்றையுமே எதிர்ப்போம்; எங்கள் முழுப்பலத்தோடு எதிர்த்து நிற்போம்!'' என்று ஓர் எச்சரிக்கையும் விட்டார் ரஸா அலி.

இப்போது இரண்டு பக்கங்களின் நிலைமையும் தெளிவாகி விட்டது. ஓட்டுக்கு விடப்பட்ட ஆனேயின் (வெட்டுத்) தீர்மானம் 10க்கு 54 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோல்வி யடைந்தது.

**பாகிஸ்தான் கோரிக்கை:**

விரைவிலேயே, மார்ச் 19, 20ல் ராம்கரில் கூடிய காங்கிரஸ், யுத்த முயற்சிகளுக்கு ஆதரவு தர இயலாது என்று அறிவித்தது. பிரிட்டிஷ் அரசாங்கம் யுத்த நோக்கங்களை விவரித்து வெளியிட்ட அறிக்கை திருப்தியளிக்காததால் இவ்வாறு முடிவு செய்தது காங்கிரஸ். கூடவே, இந்தியாவுக்குச் சுதந்திரம், அரசியல் நிர்ணய சபை என்னும் கோரிக்கைகளையும் மீண்டும் காங்கிரஸ் வலியுறுத்தியது. மீண்டும் சத்தியாக்கிரக இயக்கத்துக்குத் தயாராகுமாறு காங்கிரஸ் கமிட்டிகளைக் கேட்டுக் கொண்டதோடு, அந்த இயக்கத்தின் தலைவராகக் காந்தியடிகளையும் நியமித்தது.

முஸ்லிம் லீகும் மார்ச் 20ல் லாகூரில் கூடித் தன்னுடைய முடிவுகளை வெளியிட்டது. ''பூகோள அடிப்படையில் தொடர்ந்தமைந்துள்ள பகுதிகள் ஏற்ற முறையில் எல்லைகள் சரி செய்யப்பட்டு தனியாகப் பிரிந்து அமைக்கப்பட வேண்டும். இவை, உதாரணமாக வடமேற்கிலும் கிழக்கிலும் முஸ்லிம்கள் பெரும்பான்மையாக உள்ள பகுதிகள், புதிய தனித்தனி மாநிலங்களாகச் சீரமைக்கப்பட்டு இணைக்கப்பட வேண்டும். இந்த இணைப்பில் உள்ள மாநிலங்கள் ஒவ்வொன்றும் சுயாட்சி உரிமை உடையவையாக அமைய வேண்டும். இந்த அடிப்படையில் அரசியல் அமைப்புத் திட்டம் திருத்தி அமைக்கப்படாவிட்டால் அதை ஏற்க முடியாது'' என்று தீர்மானித்து அறிவித்தது முஸ்லிம் லீக்.

**காங்கிரஸ் வழங்கிய தீர்வு :**

மூன்று மாதங்கள் கழித்து, ஜூலை மாதத்தில், இந்திய அரசியலில் விழுந்துவிட்ட இந்த முடிச்சை அவிழ்ப்பதற்கு இரண்டு நிபந்தனைகளைத் தெரிவித்தது காங்கிரஸ். "இந்தியாவுக்கு முழுச் சுதந்திரம் வழங்குவதாக உடனடியாகவும் திட்டவட்டமாகவும் பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவிக்கவேண்டும். இந்த அறிவிப்பை உறுதி செய்யும் வகையில் ஒரு தாற்காலிக அரசாங்கத்தையும் நிறுவ வேண்டும். இப்படி அமைக்கப்படுவது தாற்காலிக அரசாங்கமே யானாலும், அது, சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட எல்லாக் கட்சியினருக்கும் பிரதிநிதித்துவம் வழங்குவதாகவும் மாநிலங்களில் உள்ள அரசாங்கங்களின் ஒத்துழைப்பைப் பெறக்கூடியதாகவும் இருக்கவேண்டும். இந்த ஆலோசனைகள் ஏற்றுக் கொள்ளப்படுமானால் காங்கிரஸ் இந்தியப் பாதுகாப்பு முயற்சிகளில் முழுமையாக ஒத்துழைக்கும்" என்று தெரிவித்தது. ஜூலை கடைசியில் பூனாவில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியும் இந்த முடிவை ஏற்று உறுதி செய்தது.

**வைசிராயின் ஆகஸ்டு அறிக்கை :**

யுத்த நிலைமை மேலும் சீர்கேடு அடைந்துகொண்டு வந்ததால், வைசிராய், *1940* ஆகஸ்டு *8* ஆம் தேதி மற்றோர் அறிக்கை வெளியிட்டார். "போர் முடிந்ததும், எந்த விதமான காலதாமதமும் இல்லாமல் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியத் தேசீய வாழ்வின் எல்லா அம்சங்களையும் பிரதிபலிக்கும் வகையில் ஒரு குழுவை நியமிக்கும் ; அந்தக் குழுவே புதிய அரசியல் சட்டத்தை உருவாக்கும்" என்று தெரிவித்தது அந்த அறிக்கை. இது, அரசியல் நிர்ணய சபை வேண்டும் என்ற காங்கிரஸின் கோரிக்கைக்கு அளிக்கப்பட்ட பதிலே என்பது தெளிவு. ஆனாலும், இந்த அறிக்கை, அதிகார மாற்றத்தைப் பற்றி முக்கியமானதொரு நிபந்தனையையும் விதித்தது : "இந்தியத் தேசீய வாழ்வின் ஏதாவதொரு சக்தி வாய்ந்த முக்கியமான பிரிவு இதை (அதிகார மாற்றத்தை) எதிர்க்குமானால், எந்த அமைப்புடைய அரசாங்கத்தின் கையிலும் பிரிட்டிஷ் அரசாங்கம் அதிகாரத்தை ஒப்படைக்க இயலாது. புதிய அரசாங்கத்தை ஏற்குமாறு

அத்தகைய சக்தி வாய்ந்த பிரிவுகளை வற்புறுத்துவதற்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் தயாராக இருக்கமுடியாது" என்பதே அந்த நிபந்தனை. "எங்கள் ஒப்புதல் இல்லாமல் இங்கே எந்த அரசியல் சட்டமும் உருவாகக் கூடாது" என்று முஸ்லிம் லீக் விதித்த நிபந்தனையை அப்படியே ஏற்றுக்கொள்ளும் நிபந்தனை இது.

வைசிராயின் அறிக்கையில் வேறு சில செய்திகளும் சொல்லப் பட்டிருந்தன: "இந்திய அரசியல் கட்சிகளிடையே உள்ள பிளவைக் கருதி, கவர்னர் ஜெனரலின் நிருவாகக் கவுன்சிலை விரிவுபடுத்துவதை இன்னும் தள்ளிப்போட வேண்டியதில்லை என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கருதுகிறது. எனவே, பல தொகுதியினருக்கும் பிரதிநிதித்துவம் வழங்கும் வகையில் சில இந்தியர்களை உறுப்பினர்களாக நியமித்து நிருவாகக் கவுன்சிலை விரிவுபடுத்த பிரிட்டிஷ் அரசாங்கம் எனக்கு (வைசிராய்க்கு) அதிகாரம் வழங்கியிருக்கிறது; இந்தியத் தேசீய வாழ்வின் பல்வேறு தொகுதியினர் மற்றும் சுதேச மன்னர்களின் பிரதி நிதிகளைக் கொண்ட யுத்த ஆலோசனைக் குழு ஒன்றை நியமித்துக் கொள்ளவும் எனக்கு உரிமை வழங்கப்பட்டிருக் கிறது" என்றும் அந்த அறிக்கையில் குறிப்பிட்டிருந்தார் வைசிராய்.

வைசிராயின் இந்த அறிக்கையைக் காங்கிரஸ் ஏற்க முடியாது என்பது கண்கூடு. தன்னுடைய ஒப்புதல் இல்லாமல் இங்கே அரசியல் சட்டம் உருவாக முடியாது என்பதில் முஸ்லிம் லீக் மகிழ்ச்சி கொண்டது. ஆனாலும், "அந்தச் செய்தி பெரும் போக்காகச் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, நாட்டுப் பிரிவினை வெளிப்படையாக ஒப்புக்கொள்ளப்படவில்லையே" என்பது முஸ்லிம் லீகுக்கு ஒரு குறையாகவே இருந்தது. காங்கிரஸ், தனது தீர்மானத்தின் படியே, காந்தியடிகளின் தலைமையில் தனி நபர் சட்டமறுப்பு இயக்கத்தை அக்டோபர் 17ல் தொடங்கியது.

### சட்டசபையில் ஜின்னாவின் புதிய தோரணை:

இந்தப் பின்னணியிலேதான் நவம்பர் மாதத்தில் சட்டசபையில் ஒரு முக்கியமான விவாதம் நிகழ்ந்தது. காங்கிரஸ் உறுப்பினர்கள்,

செயற்குழுவின் அனுமதியின் பேரில் நிதி மசோதாவை நிராகரிப்பதற்காகச் சபைக்கு வந்திருந்தார்கள். இப்போதெல்லாம் சட்ட சபை நடவடிக்கைகளில் அவ்வளவாக அக்கறை காட்டாத ஜின்னுவும் வந்திருந்தார்.

மசோதாவின் மீதான தாக்குதலைச் சத்தியமூர்த்தி தொடங்கி வைத்தார்: "இங்கே எல்லாம் சரியாகத்தான் நடந்து வருகிறது என்று இந்த நாட்டு மக்கள் உலகோரிடம் சொல்ல வேண்டும் என்று இந்த அரசாங்கம் எதிர்பார்க்கிறது. ஆனால், இந்தியாவை யுத்தத்தில் சம்பந்தப்படுத்துவதற்கு முன்னால், இந்த அரசாங்கம் இந்த நாட்டு மக்களையும் கலந்து ஆலோசிக்கவில்லை; (அவர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட) இந்தச் சபையின் கருத்தையும் தெரிந்து கொள்ள விரும்பவில்லை...நாங்கள் கோரியது என்ன? நாங்கள் யுத்தத்தில் உதவி செய்யவேண்டுமானால், இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்குகிறோம் என்று (பிரிட்டிஷ் அரசாங்கம்) இங்கேயே இப்பொழுதே அறிவிக்க வேண்டும்; யுத்தம் முடிந்ததும் எல்லாக் கட்சிகளின் பிரதிநிதிகளையும் கொண்ட தேசீய அரசாங்கம் ஒன்றை அமைத்து வந்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும் என்றுதானே கேட்டோம்? அதற்குக் கிடைத்த பதில் என்ன? ஏளனம் கலந்த ஒரு 'இல்லை' தானே எங்களுக்குக் கிடைத்த பதில்!... இந்தியா பல பிளவுகளைக் கொண்டதாக இருப்பதால் அரசாங்கப் பொறுப்பை இந்தியர்களிடம் ஒப்படைக்க முடியாது என்கிறீர்கள். ஆனால் உண்மை என்ன? நீங்களே புண்ணில் விழுகிற ஈ போல, எங்கள் ரணங்களை ஆறாமல் உயிர்ப்பித்து, எங்களைப் பிரித்து வைக்கிறீர்கள்! நீங்கள் ஒதுங்கியிருந்தால், உங்களால் ஏற்படும் தொல்லை மட்டும் இல்லாமலிருந்தால்,—எங்கள் பிரச்சினைகளை நாங்களே தீர்த்துக்கொள்வோம்!" என்று பொரிந்து தள்ளினார் சத்தியமூர்த்தி.

ஸ்ரீ பிரகாசா பேசுகையில் "எங்களுக்கும் இந்த யுத்தத்துக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை" என்றார். "எதிர்வரிசையில் உள்ள நண்பர்கள் வலிமை வாய்ந்தவர்கள். அவர்கள் எங்களை கசக்கிப் பிழியவும் குருதி கொட்டவும் இன்னும் என்னென்ன வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால், எங்கள் இதயத்தை

மட்டும் அவர்கள் பெறவே முடியாது!'' என்றார் அவர். கோபமும் ஏளனமும் கலந்த குரலில், ''எங்கள் இனிய தோழர்களான பலிவால், ரங்கா, ஜவஹர்லால் நேரு போன்றவர்களைச் சிறையில் அடைத்து வைத்துக்கொண்டு, யாரோடோ சண்டை போட எங்கள் உதவியையா கேட்கிறீர்கள்!'' என்று அவர் அரசாங்கத்தைக் கேட்டபோது, சபையினர், 'வெட்கம்! வெட்கம்!' என்று ஆரவாரம் செய்தார்கள்.

காங்கிரஸ்காரர்கள் நாஜிகளுக்கோ பாஸிஸ்டுகளுக்கோ நண்பர்களல்ல என்று அரசாங்கத்துக்குச் சொல்லிக்கொண்டே ஆஸப் அலி, அவர்கள் நாஜிசத்தை வெறுப்பதைப் போலவே ஏகாதிபத்தியத்தையும் வெறுக்கிறார்கள் என்று தெரிவித்தார். ''கடந்த யுத்தத்தில் நாங்கள் உங்களுக்கு (பிரிட்டிஷாருக்கு) உதவி செய்தோம். அதற்கு நீங்கள் செலுத்திய நன்றி என்ன? ஜாலியன்வாலாபாக்கில் ரத்தவெள்ளம் பெருக்கெடுத்து ஓடச் செய்தீர்கள். நாடெங்கும் இப்படியே ரத்த ஆறு ஓடச்செய்தீர்கள். இந்த அனுபவம் இருப்பதாலேதான், (இப்போது), யுத்தம் முடிந்ததும் இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்கப்படுமா மாட்டாதா என்பதை இங்கேயே அறிவித்துவிடச் சொல்லுகிறோம். இந்தியா உற்சாகமாக உங்களுக்கு உதவ வேண்டுமானால் இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்கிவிட்டதாக அறிவியுங்கள்; எங்கள் சுதந்திரத்தையும் உங்கள் சுதந்திரத்தையும் காப்பாற்றத் தீரப்போர் புரிகிறோம். அப்படி ஓர் உறுதியை வழங்காமல் இந்தியாவிலிருந்து ஒரு காசு அல்லது ஒரு மனிதனைக் கூடக் கேட்க உங்களுக்கு எந்த உரிமையும் கிடையாது!'' என்று முழங்கினார் ஆஸப் அலி.

சந்தானம் பேசும்போது, யுத்த நெருக்கடி ஏற்பட்டிருக்கும் தருணத்திலே கூட அரசாங்கம் இந்தியத் தொழில்களைப் புறக்கணிக்கிறது என்று குற்றஞ்சாட்டினார். அரசாங்கத்தின் நிதிக்கொள்கையை அலசி ஆராய்ந்த சந்தானம், யுத்தம் முடிந்ததும் இங்கிலாந்து தனது ஸ்டெர்லிங் நாணயத்தின் மதிப்பைக் குறைக்க வேண்டி வரும் என்று எச்சரித்தார்: ''நமது நிதி நிலைமை படுமோசமாகப் போகவேண்டும்—பாங்க் ஆஃப்

இங்கிலாந்தின் கட்டளைகளுக்குத் தாஸானு தாஸர்களாகப் பணிந்து போகுமளவு அதல பாதாளத்தை அது எட்ட வேண்டும் —இதுவே அவர்கள் விருப்பம். நமது பொருளாதாரம் முழுக்க முழுக்க அவர்களைச் சார்ந்திருக்குமாறு பார்த்துக் கொள்ளவே இந்த யுத்தத்தை அவர்கள் (பிரிட்டிஷார்) பயன்படுத்திக் கொள்ள முனைகிறார்கள். உண்மையில், யுத்தம் முடிந்ததும் நமது பொருளாதாரம் அவர்கள் காலில் சாட்டாங்கமாக விழ வேண்டும் என்பதே அவர்களின் திட்டம்!'' என்று சாடினார் சந்தானம்.

யுத்தம் முடிந்ததும் இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்கப்படும் என்று உறுதியளிக்கப் படுவதோடு, ஆங்கிலேயர்களும் அதில் உண்மையான ஈடுபாடு காட்டுவார்களானால் இந்திய மக்கள் அனை வரும் (தொழிலாளர்களும்) அவர்களோடு ஒத்துழைப்பார்கள் என்பது திண்ணம் என்றார் என். எம். ஜோஷி.

விவாதத்தின் ஐந்தாவது நாள், புலாபாய் தேசாய் குறுக்கிட்டு இந்தியாவின் மீது யுத்தத்தைத் திணித்ததற்காக அரசாங்கத்தை வன்மையாகக் கண்டித்ததோடு, அது தொடர்பாகக் காங்கிரசின் நிலை என்ன என்பதையும் தெளிவுபடுத்தினார்: ''இப்போது உள்ள தனது காலனி ஆதிக்கத்தையும் ஏகாதிபத்தியத்தையும் நிலை நிறுத்திக் கொள்ளத்தான் பிரிட்டன் யுத்தத்தில் ஈடுபட்டிருக் கிறது என்றால், இந்தியாவுக்கும் இந்த யுத்தத்துக்கும் எந்தவித மான சம்பந்தமும் இல்லை. ஆனால், குடியாட்சிப் பண்பையும் குடியாட்சியின் மீது எழுந்த உலக அமைப்புக்களையும் காக்கவே இந்த யுத்தம் என்றால் இந்தியாவுக்கு அதில் மிகுந்த அக்கறை உண்டு'' என்று விளக்கிய தேசாய், யுத்த நோக்கம் பற்றி அறிவிக்க வேண்டும் என்ற காங்கிரசின் கோரிக்கைக்கு அரசாங்கம் இதுவரை திருப்திகரமான பதிலேதரவில்லை என்று குற்றஞ்சாட்டினார். ''அநாகரிக சக்திகளை எதிர்த்து நாகரிக சக்திகள் நடத்துகின்ற போராட்டம் இது என்று சொல்லப் படுகிறது; இந்தியாவை நிரந்தர அடிமைநாடாக வைத்திருப்பது தான் நாகரிகம் என்றால், அதை நான் நாகரிகம் என்று ஏற்றுக் கொள்ளத் தயாரில்லை'' என்றார் தேசாய். ''ஜனநாயக முறை களைத் தாம் போற்றுவதாக பிரிட்டிஷார் கூறிக்கொள்வது

வெறும் வெளிவேஷம்'' என்று அவர் தொடர்ந்து கூறிவிட்டு ''அரசாங்கம் இப்போது உள்ள போக்கைத்தான் தொடர்ந்து கடைப்பிடிக்கப் போகிறது என்ருல், இந்தியாவுக்கும் யுத்தத்துக்கும் உள்ள தொடர்பைக் கணித்துப் பார்க்கும் இத்தகைய முயற்சிக்கு நாங்கள் அடையாள ஒத்துழைப்புக்கூடத் தரப்போவதில்லே. உங்களோடு சேர்ந்து நாங்கள் சண்டை போடுவதாக இருந்தால் உங்களுக்குச் சமமான தோழர்களாக நின்று சண்டை போடுவோமே தவிர,—எங்கள் ஆற்றல் மிகச் சிறியதாகவே இருந்தாலும்,—ஒருவரின் கைக்கருவிகளாக நாங்கள் போர்க்களத்துக்குப் போகமாட்டோம்!'' என்று முடித்தார்.

மசோதாவை எதிர்த்துப் பேசிய ஆனே, 1935 ஆம் ஆண்டின் இந்தியாச் சட்டத்தைத் திருத்திஞல்தான் இந்த விவகாரத்தில் சட்டசபை ஏதாவது நடவடிக்கை எடுக்கமுடியும் என்று கூறிஞர். யுத்தச் செலவுக்குச் சட்டசபை பணம் (மானியம்) அனுமதிக்க வேண்டுமாஞல் முதலில் எந்தெந்தச் செலவுகளுக்குப் பணம் அனுமதிக்கப்போகிரும் என்பதைப் பற்றிச் சபை திட்டவட்டமாக முடிவு செய்ய வேண்டும். யுத்தம் சம்பந்தப்பட்ட செலவினங்களே அப்படி முடிவு செய்யவும் அதைப் பற்றி விவாதிக்கவும் இந்தியாச் சட்டம் (1935) சட்டசபைக்கு உரிமை வழங்கவில்லே. ஆதலால், முதலாவதாக அந்தச் சட்டத்தைத் திருத்தி இந்தச் சபைக்கு உரிமை வழங்க அரசாங்கம் முன்வரவேண்டும் என்று விளக்கிஞர் அவர். அரசாங்கம் (ஜெர்மனியுடன்) யுத்தத்தில் ஈடுபடுவதாக அறிவிப்பதற்கு முன்பாகச் சட்டசபையைக் கலந்து ஆலோசித்திருக்க வேண்டும் என்று வாதாடிய ஆனே, அப்படிச் செய்யாதது நம்பிக்கைத் துரோகமாகும் என்று கண்டித்தார்.

அடுத்துப் பேசிய ஜின்ஞ, யுத்தம் மற்றும் அரசியல் சட்டச் சிக்கல் பற்றிய முஸ்லிம் லீகின் கருத்தை விளக்கிஞர். முஸ்லிம் லீகைப் பொறுத்தவரை, அது எப்போதுமே அரசாங்கத்தின் நடைமுறைக்கு முட்டுக்கட்டை போட்டதில்லே; இதைத்தான் உறுதியாகக் கூறமுடியும், என்ருர் அவர். அதாவது, அரசாங்கம் முன்னேற்றமான நடவடிக்கைகளே மேற்கொண்ட போதெல்லாம் அவர் (ஜின்ஞ) அதனேடு ஒத்துழைத்து வந்திருப்பதாகவும்

காந்தியடிகளே அதைப் புறக்கணித்து வந்திருக்கிறார் என்பதாகவும் அவர் கருதினார்.

"பாகிஸ்தான் அடைவதுதான் எங்கள் ஒரே லட்சியம்; அதற்காகப் போராடவும் உயிர்விடவும் நாங்கள் தயாராக இருக்கிறோம். இதைப் பற்றி உங்களில் யாருக்கும் சிறிதளவு சந்தேகமும் வேண்டியதில்லை. ஆனால், எங்களுக்குப் பாகிஸ்தான் தருவதாக உறுதியளித்தால்தான் நாங்கள் உங்களுக்கு ஆதரவு அளிப்போம் என்று நாங்கள் என்றைக்குமே சொன்னதில்லை. என் நண்பர் தேசாய் முழக்குகிறாரே ஜனநாயகம், அது எப்போதோ செத்துப் போய்விட்டது. நாங்கள் (முஸ்லிம்கள்) எண்ணிக்கையில் குறைந்தவர்களாக இருக்கலாம்; குறைவாகத்தான் இருக்கிறோம். ஆனால், நாங்கள் நினைத்தால், காங்கிரஸ்காரர்கள் தருகின்ற தொல்லைகளை விட அதிகமான தொல்லைகளை உங்களுக்கு (அரசாங்கத்துக்கு)த் தரமுடியும். ஆனால் நாங்கள் அப்படிச் செய்ய விரும்பவில்லை. நான் உங்களைப் பயமுறுத்துவதாக நினைக்க வேண்டாம்; உண்மைநிலை உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காகவே சொல்கிறேன். இப்போது புரியாவிட்டாலும், நாளடைவில் நீங்கள் இதைப் புரிந்து கொள்ளத்தான் போகிறீர்கள். இப்போதும், வழக்கம் போலவே, நாங்கள் அரசாங்கத்துக்குத் தொல்லை கொடுக்க விரும்பவில்லை. எதிர் காலம்?...அதைப் பற்றி இப்போது பேச வேண்டாம். இப்போதைக்கு அரசாங்கத்தைப் பொறுத்தவரை முஸ்லிம் லீகின் நிலை தெளிவாகி இருக்குமென்றே நம்புகிறேன்" என்று விவரித்தார் ஜின்னா.

அடுத்து, காங்கிரசின் கோரிக்கையான அரசியல் நிர்ணய சபையை அலசிய ஜின்னா, "இன்னமும், காங்கிரஸ்தான் இந்தியா என்றே காங்கிரஸ்காரர்கள் தங்கள் அடிமனதில் கருதிக் கொண்டு இருக்கிறார்கள்" என்றார். "காங்கிரஸ் தலைவர்களிடம் யாவரும் ஏற்கத் தக்கதும் காரிய சாத்தியமானதுமான திட்டங்கள் இருந்தால், அவர்கள் ஏன், நேரான, சீரான, முறையான நடைமுறைகளைப் பின்பற்றக் கூடாது?" என்று அவர் கேட்டார். "பிரிட்டிஷ் அரசாங்கம் ஒரு தேசீய அரசாங்கம் அமைக்கச் சம்மதிக்குமானால்,

முஸ்லிம் லீகே பிரதமரை நியமிக்கவும் அந்தப் பிரதமரின் விருப்பம் போலவே தேசீய அரசாங்கம் அமைக்கவும் காங்கிரஸ் தலைவர்களை நான் சரிக்கட்டுகிறேன்'' என்று திரு. இராஜ கோபாலாச்சாரியார் ஒரு பெருந் தன்மையான அறிவிப்பு விடுத் திருந்தார். அதைக் குறிப்பிட்டு, ''மதிப்புக்குரிய என் நண்பர் களைக் கேட்கிறேன்: திரு. ராஜகோபாலாச்சாரியார் எதிர்காலப் பிரதமராக வரக்கூடிய என்னை அழைத்து ஏன் பேசக் கூடாது? ஏன் (அவர்) **''டெய்லி ஹெரால்டு''** பத்திரிகைக்கு எழுதிக் கொண்டிருக்கிறார்?'' என்று வினவினார் ஜின்னா.

இறுதியாக வைசிராயின் அறிவிப்பையும் காங்கிரசின் தேசீய மத்திய அரசாங்கக் கோரிக்கையையும் பற்றிக் கருத்துத் தெரிவித்த ஜின்னா ''ஜனநாயகம், தேசீய அரசாங்கம்,—ஜனநாயகம், தேசீய அரசாங்கம் என்று இரண்டே இரண்டு சங்கதிகளைத்தாம் பேசிக் கொண்டிருந்தார் திரு. தேசாய். இந்த இரண்டினாலும் என்ன உபயோகம் (என்று அவர் நினைத்துப் பார்த்ததுண்டா?). அவர் கோரும் தேசீய அரசாங்கத்தில் எந்த மந்திரிசபை இருந்தால்தான் என்ன? புலாபாய் தேசாய் (கட்சி)க்குத்தான் சட்டசபையில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை இருக்கப் போகிறது. காங்கிரசின் ஆணைக்கும் முடிவுகளுக்கும் கட்டுப்படாத ஒருவர் அந்த மந்திரிசபையில் இருந்தால் அவருடைய நிலைமை எப்படி இருக்கும்? அவருக்கு என்னுடைய ஆழ்ந்த அனுதாபங்கள்!'' என்று முடித்தார்.

கடைசியாக அரசாங்கத்தின் மசோதா ஓட்டுக்கு விடப்பட்ட போது, 53க்கு 55 என்ற வாக்கு வித்தியாசத்தில் சபை அதைத் தோற்கடித்தது. இது அரசாங்கத்துக்கு ஏற்பட்ட மிகப் பெரிய தோல்விகளில் ஒன்று.

### அட்லாண்டிக் ஒப்பந்தம் பற்றிய சட்டசபை விவாதம்:

பிரிட்டிஷ் யுத்தக் கொள்கைக்கும் இந்தியாவுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிய பிரச்சினை, மீண்டும் 1941 கூதிர்காலம் கூட்டத்தொடரின் போது சட்டசபையில் எழுந்தது. 1941

ஆகஸ்டில் ஏற்பட்ட அட்லாண்டிக் ஒப்பந்தம், எந்த நாட்டு மக்களுக்கும், அவர்கள் விரும்பும் அரசியல் முறையை ஏற்படுத்திக் கொள்வதற்கு உள்ள உரிமையை அமெரிக்காவும் பிரிட்டனும் மதிக்கின்றன என்றும் அந்த உரிமையை இழந்திருக்கிற மக்கள் சுய ஆட்சி பெறுவதற்கு அந்த இரண்டு நாடுகளும் உதவும் என்றும் அறிவித்திருந்தது. ஆனாலும், செப்டம்பர் 9ல் பிரிட்டிஷ் மக்கள் சபையில் சர்ச்சில் நிகழ்த்திய உரை, மேற்படி ஒப்பந்தத் தால் ஏற்பட்டிருந்த உற்சாகத்தையே சாய்ப்பதாக இருந்தது. அந்த ஒப்பந்தத்தில் குறிப்பிட்ட சுயஆட்சி உரிமை நாஜிகளிடம் சிக்கியுள்ள ஐரோப்பிய நாடுகளைப்பற்றி மட்டுமே பேசுகிறது என்றும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழுள்ள நாடுகளில் மேற் கொள்ளப்படும் சுயஆட்சிக்கான நடவடிக்கைகளுக்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்றும் சர்ச்சில் பேசியதே அதற்குக் காரணம்.

அக்டோபர் 29 ஆம் தேதி, அட்லாண்டிக் ஒப்பந்தத்தில் கண்டபடி இந்தியச் சுய ஆட்சிக்கு நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்று அரசாங்கத்தைக் கோரி ஒரு தீர்மானம் கொண்டு வந்தார் ரஷீத் செளதுரி. மேற்படி ஒப்பந்தத்தில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் கையொப்பமிட்டிருந்ததால், அந்த ஒப்பந்தம் இந்தியர் களுக்குப் பெரிய நம்பிக்கையைத் தந்தது; ஆனால், பிரிட்டிஷ் பிரதமர் அந்த ஒப்பந்தம் இந்தியாவுக்குப் பொருந்தாது என்று சொல்லிவிட்டார்; எதிரி நம் எல்லையில் வந்துவிட்டான்; இந்தியாவின் நிலைமை படுபயங்கரமாக இருக்கிறது என்று எச்சரித்தார் செளதுரி. "பிரிட்டிஷ்காரர்கள் ஏற்கனவே இந்தியாவிலிருந்து வேண்டியதைச் சுருட்டிக் கொண்டு விட்டார்கள். ஆகையால், இன்று மூண்டுள்ள நிலைமையைப் பற்றி அவர்கள் அக்கறை கொள்ளாமல் இருக்கலாம். ஆனால், நாம் அப்படி இருக்க முடியாது; பிரிட்டிஷாரின் வெளியேற்றத் தோடேயே நமது அடிமைத் தளைகளும் அற்று விழவேண்டும் என்பதே நமது திடமான முடிவு" என்று முழங்கினார் அவர்.

நாகபுரியைச் சேர்ந்த கோவிந்த தேஷ்முக், தீர்மானத்தை ஆதரித்து உரையாற்றுகையில், "அட்லாண்டிக் ஒப்பந்தத்துக்கும் இந்தியாவுக்கும் எந்த சம்பந்தமும் இருக்கக் கூடாது என்று

பிரிட்டிஷ்காரர்கள் கருதினால், யுத்தத்தில் மட்டும் அவர்கள் ஏன் நம்முடைய உதவியைக் கோர வேண்டும்? " என்று சுடச் சுடக் கேட்டார். லால்சந்த் நவல்ராய், சர்ச்சிலின் விளக்கத்தைப் பொய்ம்மையே வடிவானது என்றும் பின்னால் நினைத்துத் திரித்துக் கூறிய விளக்கம் என்றும் வருணித்தார். அமெரிக்காவைச் சேர்ந்த கார்டெல் ஹல், அந்த ஒப்பந்தத்தின் கோட்பாடுகள் உலகம் முழுமையிலும் செயல்படுத்தக் கூடியவை என்றும் செயல்படுத்துவதற்காகவே வகுக்கப்பட்டவை என்றும் அறிவித்ததையும் சுட்டிக்காட்டினார் நவல்ராய். இந்த ஒப்பந்தம் எல்லா நாட்டின் எல்லா இன மக்களுக்கும் சுயநிர்ணய உரிமை வழங்குகிறது என்று கூறிய ஜம்னாதாஸ் மேத்தா, புனிதமான ஒரு தருணத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் இட்ட கையொப்பத்தையே சர்ச்சிலின் பேச்சு செல்லாமலடித்து விட்டது என்று கண்டித்தார். ஒப்பந்தம் ரத்துச் செய்யப்பட்டதன் மூலம், இந்தியா மீண்டும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் (வைசிராயின்) ஆகஸ்ட் அறிவிப்பின் காலடிக்கே தள்ளப்பட்டு விட்டது. " தங்கள் நலக் காவலர்களின் கையில் ரத்து அதிகாரங்களைக் கொடுத்து, இந்தியாவை இடைக்கால நிலவுடைமைப் போக்குக்கும் வகுப்பு வெறிக்குமே ஆளாக்கியுள்ள இந்த அறிவிப்பு, இந்தியாவின் அடிமைச் சாசனமே தவிர வேறில்லை! " என்றும் சாடினார் ராய்.

" வாக்குறுதிகளைக் கொடுப்பதும் மீறுவதுமே பிரிட்டிஷ் அதிகாரிகள் மற்றும் அரசாங்கத்தின் வழக்கம்; இந்தக் கபட நாடகத்தைக் கொண்டுதான் அவர்கள் இந்திய ஆட்சியை நடத்துகிறார்கள் என்பது புதிதில்லையே! " என்றார் அகமது காஸிமி. அரசியல் அமைப்பு முன்னேற்றங்களைக் குறித்த பிரிட்டிஷ் மற்றும் இந்திய அரசாங்கங்களின் போக்கை வன்மையாகக் கண்டித்த காஸிமி, இந்தியர்கள் தங்கள் பலத்திலேயே நிற்கக் கற்றுக் கொள்ளவேண்டும் என்று தெளிவுறுத்தினார்.

காங்கிரஸ் தேசியக்கட்சியின் தலைவரான ஆனே அரசாங்கத்தைக் கடுமையாக விமர்சித்து வந்தவர். இப்போது ஜூலை 22ல் அவர் கவர்னர் ஜெனரலின் கவுன்சில் உறுப்பினராக நியமிக்கப்

பட்டிருந்தார். அரசாங்கக் கட்சியின் தலைவரும் அவரே. எனவே, அரசாங்கத்தின் கருத்தை எடுத்து விளக்க வேண்டிய பொறுப்பு அவர் தலையில் விழுந்தது. அவருடைய முந்திய நிலைகளை நன்கு அறிந்திருந்த உறுப்பினர்கள் அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதை மிக ஆவலோடு எதிர்பார்த்தார்கள். அவர்களிலும், உத்தியோகப் பற்றற்ற இந்திய உறுப்பினர்களின் ஆர்வம் மிகுதியாக இருந்தது.

அட்லாண்டிக் ஒப்பந்தத்தில் இந்திய அரசாங்கம் பங்குகொண்டு கையொப்பமிடவில்லை என்ற முன்னுரையோடு தமது பேச்சைத் தொடங்கினார் ஆனே. "அதில் கையொப்பமிட்டவர்களே அவர்கள் என்ன நோக்கத்தோடு இதைச் சொன்னார்கள் என்பதை விளக்க வல்லவர்கள். சர்ச்சில் அதிகார தோரணையிலேயே ஒரு விளக்கம் கொடுத்திருந்தாலும், இந்த யுத்தத்தின் போது உரிமையை இழந்துவிட்ட நாடுகளை மனதிற் கொண்டுதான் ஒப்பந்தக்காரர்கள் அப்படிச் சொல்லியிருப்பார்கள் என்றே நான் கருதுகிறேன். இந்த ஒப்பந்தத்தை இந்தியாவோடு சார்த்திப் பார்ப்பதானாலும் கூட, ஏற்கனவே கொடுக்கப்பட்டுள்ள வாக்குறுதிகளுக்கு ஏற்ப அதை மாற்றியே கையாள வேண்டியிருப்பதால், அப்படிப் பெரிய நன்மை எதுவும் ஏற்பட்டுவிடப் போவதில்லை" என்று விளக்கினார் ஆனே. என்றாலும், இங்கு நிலவும் கருத்து என்ன என்பது தொடர்புடையவர்களுக்குத் தெரிந்திருக்கும் வகையில், சபையில் நடந்த கருத்தாடல் அப்படியே அவர்களுக்கு அனுப்பி வைக்கப்படும் என்று உறுதியளித்தார் அவர்.

வாக்கெடுப்பு இல்லாமலே தீர்மானத்தைச் சபை ஏற்றுக் கொண்டது. முஸ்லிம் லீகைச் சேர்ந்தவர்கள் இந்தக் கூட்டத் தொடரில் கலந்து கொள்ளவில்லை. வைசிராயின் நிருவாக சபை விரிவுபடுத்தப்பட்ட விதத்திலும் தேசீயப் பாதுகாப்புக் கவுன்சில் அமைத்த விதத்திலும் அதிருப்தி கொண்டு அவர்கள் சபை நடவடிக்கைகளில் கலந்து கொள்ளாமல் இருந்து வந்தார்கள்.

**கிரிப்ஸ் தூது ;**
**'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் :**

1941 மே மாத வாக்கில், சிறைப்பட்ட சத்தியாக்கிரகிகளின் தொகை 14,000க்கும் மேலே போய்விட்டது. சட்டசபையில் என். எம். ஜோஷி, தத்தா, பானர்ஜி, சந்த் சிங், ரஷீத் சௌதுரி, அகமது காஸ்மி போன்ற உறுப்பினர்கள், அரசாங்கம் அடக்கு முறையைக் கைவிட்டு அரசியல் கைதிகளை விடுதலை செய்ய வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார்கள். குறிப்பாக ஜோஷி, அரசியல் தொண்டர்கள் மட்டுமன்றி, தொழிற்சங்கத் தலைவர் களும் விவசாயத் தொழிலாளர் தலைவர்களும் விடுதலை செய்யப்பட வேண்டும் என்று வற்புறுத்திக் கொண்டே இருந்தார். இவை களின் விளைவாக, ஜவஹர்லால் நேருவும் அபுல் கலாம் ஆசாத்தும் 1941 கடைசியில் விடுதலை செய்யப்பட்டார்கள். சிறிது காலத்துக் குள்ளேயே இந்திய அரசியல் நிலைமை மேலும் சிக்கலாயிற்று. டிசம்பர் 7ஆம் தேதி பர்ல் துறைமுகத்தைத் தாக்கியது ஜப்பான். எனவே, அமெரிக்கா ஜப்பான்மீது போர்ப் பிரகடனம் செய்தது. ஜப்பானியப் படை மலாயா, சிங்கப்பூர், பர்மா வழியாக இந்திய எல்லைக்கே வந்துவிட்டது. மார்ச் 8 ஆம் தேதி ரங்கூன் வீழ்ச்சி யடைந்தது. நிலைமை மிகவும் மோசமாகி, யுத்தத்தில் இந்தியாவின் ஒத்துழைப்பு இல்லாமல் முடியாது என்ற சூழ்நிலை உருவாயிற்று.

இந்த நெருக்கடியான சூழ்நிலையிலேதான், பிரிட்டிஷ் யுத்த மந்திரிசபையின் கருத்துக்களைக் கொண்ட அறிக்கைக் குறிப்பு மார்ச் 30 ல் வெளியிடப்பட்டது. முதன் முதலாக, இந்த அறிக்கைக் குறிப்பிலேதான், யுத்த நெருக்கடி தீர்ந்ததும் இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கும் அதிகாரம் உள்ள பிரதிநிதித்துவ அமைப்பு ஒன்று ஏற்படுத்தப்படும் என்று வெளிப்படையாக அறிவித்தது பிரிட்டிஷ் அரசாங்கம். பிரிட்டிஷ் பேரரசுக்கு உட்பட்டதும் அதன் மற்ற உறுப்பு நாடுகளைப்போல எல்லா உரிமைகளும் உடையதுமான இந்தியக் கூட்டரசு ஒன்று உருவாகும் ; இது தனது உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங் களைக் கவனிக்கின்ற முழு அதிகாரமும் பெற்றதாக அமையும். இப்படி ஓர் அரசாங்கத்தை இந்தியாவில் நிறுவுவதே பிரிட்டிஷ்

அரசாங்கத்தின் நோக்கம் என்றும் அந்த அறிக்கை கூறியது. பூரண சுயராச்சியமும் அதை நிறுவுவதற்காக ஓர் அரசியல் நிர்ணய சபையும் கோரி வந்த காங்கிரசுக்கு இது பெரிய வெற்றியே. அரசியல் நிர்ணய சபை உருவாக்கும் அரசியல் சட்டத்தைச் சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு, ஏற்று நடைமுறைப்படுத்தவும் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒப்புக்கொண்டது. அத்தகைய நிபந்தனைகளில் முக்கியமான ஒன்று பின்வருமாறு: "இப்போதுள்ள பிரிட்டிஷ் இந்திய மாநிலங்களில் ஒன்று புதிய அரசியல் சட்டத்தை ஏற்க விரும்பாவிட்டால், இப்போதுள்ள அரசியல் அமைப்பின்படியே இது இயங்கலாம்; நாளடைவில் அது விரும்பினால் இந்தியக் கூட்டரசோடு இணைந்து கொள்ள அதற்கு உரிமை உண்டு. என்றாலும், அப்படி இணையாத மாநிலங்களைத் தனிஉரிமை உள்ள பிரதேசங்களாகக் கொண்டு பிரிட்டிஷ் அரசாங்கம் அவைகளோடு அரசியல் உறவு கொள்ள உரிமை உண்டு." அறிக்கைக் குறிப்பில் காணப்பட்ட இந்த நிபந்தனை, அடிப்படையில் முஸ்லிம் லீகின் கோரிக்கையான பாகிஸ்தானை ஏற்றுக்கொண்டது என்பது தெளிவு.

புதிய அரசியல் சட்டம் உருவாகும் வரையில், இந்தியாவைப் பாதுகாக்க வேண்டியது பிரிட்டனின் தவிர்க்க முடியாத பொறுப்பு என்று கூறிய அந்த அறிக்கை, இந்தப் பணியில் விரைந்த ஒத்துழைப்பும் நிறைந்த ஒத்துழைப்பும் தருமாறு இந்தியத் தலைவர்களுக்கு அழைப்பு விடுத்தது.

இந்த அறிக்கைக் குறிப்பின் அடிப்படையில், கிரிப்ஸ், இந்தியத் தலைவர்களோடு பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினார். வெற்றி பெறப் போவது போலத் தோன்றிய பேச்சு வார்த்தை, கடைசியில் முறிவிலேதான் முடிந்தது. கிரிப்ஸ் இதுபோன்ற பேச்சு வார்த்தைக் கலையில் அவ்வளவு தேர்ந்தவரல்ல; தவிர, மேலே தெரிவித்துள்ளது போல, பிரிட்டிஷ் யுத்த மந்திரி சபையும் (நிபந்தனை என்னும் கயிற்றால்) அவருடைய கரங்களைக் கட்டிப் போட்டுவிட்டது.

இந்தியக் கூட்டரசில் இணையாமல் தனித்து இயங்க அதன் ஒரு மாநிலத்துக்கு உரிமை உண்டு என்ற நிபந்தனையைக் காங்கிரஸ்

ஏற்கவில்லை. இடைக்கால ஏற்பாடாக நாட்டுப் பாதுகாப்பை பிரிட்டிஷ் அரசாங்கமே வைத்துக்கொள்ள விரும்பியதும் காங்கிரசுக்கு உடன்பாடாக இல்லை. பாதுகாப்பைத் தவிர ஏனைய அதிகாரங்களை மட்டும் ஏற்கின்ற பொறுப்பாட்சி, உண்மையில் பொறுப்பாட்சியோ அதிகாரமுள்ள ஆட்சியோ ஆகாது என்று கருதிய காங்கிரஸ், அறிக்கையை நிராகரித்து விட்டது.

பாகிஸ்தான் ஏற்படுவதற்கு உள்ள வாய்ப்பை ஏற்றுக் கொண்டது பற்றி முஸ்லிம் லீக் உவகை அடைந்தது. ஆனாலும், அது முழுத்திருப்தியடையவில்லை. ஒரே ஒரு இந்தியக் கூட்டரசு அமைப்பதையே அறிக்கைக் குறிப்பு முதன்மைப்படுத்துகிறது; ஒன்றுக்கு மேற்பட்ட கூட்டரசுகள் (இந்தியாவில்) ஏற்படலாம் என்ற நோக்கு மிகவும் பின்னுக்குத் தள்ளப்பட்டு விட்டது என்று குறைப்பட்டுக் கொண்டது முஸ்லிம் லீக்.

கிரிப்ஸ் தூது கோஷ்டியின் முயற்சி தோல்வியடைந்ததும், பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியத் தேசிய இயக்கத்துக்குக் களங்கம் கற்பித்து உலகெங்கும் பிரசாரம் செய்யும் முயற்சியில் ஈடுபட்டது. காங்கிரஸ் கட்சி, இந்தச் சமயத்தில் ஜப்பானுக்கு எதிரான யுத்த முயற்சிகளைக் குலைக்க விரும்பாவிட்டாலும், அரசாங்கம் ஏற்படுத்தி வைத்த இந்த நெருக்கடியினால் அது ஒத்துழையாமை நெறியிலேயே செல்ல வேண்டியதாயிற்று. "அந்நிய ஆதிக்கம் தீங்கானது என்பதால் மட்டுமல்ல, இந்தியா அடிமைப்பட்டுக் கிடக்கும் வரையில், மனித சமுதாயத்தையே அல்லோல கல்லோலப் படுத்திவரும் யுத்தத்தில் அது பயனுள்ள பங்களிப்பைச் செய்யவோ தன்னைத் தக்கவாறு பாதுகாத்துக் கொள்ளவோ முடியாது என்பதாலும், இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் ஆதிக்கம் உடனடியாக ஒழிக்கப்படவேண்டும்" என்று காங்கிரஸ் செயற்குழு தீர்மானம் நிறைவேற்றியது. பிரிட்டிஷாரை இந்தியாவை விட்டு வெளியேறுமாறு கோரினாலும், பிரிட்டன் மற்றும் நேசநாடுகளின் யுத்த முயற்சிகளுக்கு எந்த விதத்திலும் குந்தகம் நினைவிப்பது காங்கிரசின் நோக்கமல்ல என்றும் அந்தத் தீர்மானம் தெளிவுபடுத்தியது.

இந்தக் கோரிக்கையை ஏற்றுக்கொள்ளுமாறு பிரிட்டிஷ் அரசாங்கத்தை வேண்டிக் கேட்டுக்கொண்ட காங்கிரஸ், அரசாங்கம் அப்படிச் செய்யத் தவறுமானால் ஏற்படக் கூடிய விளைவுகளையும் சுட்டிக்காட்டியது. "இந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டு இப்போது உள்ள நிலைமையே தொடர்ந்து நீடிக்குமானால் ஏற்படக்கூடிய விளைவுகளைக் குறித்துக் காங்கிரஸ் மிகுந்த அச்சம் கொள்கிறது. எனவே, மிகுந்த தயக்கத்தோடு (ஆனால் உறுதியோடு) காங்கிரஸ் தனது இருபதாண்டுச் சேமிப்பாகிய சத்தியாக்கிரகச் சக்தியை ஈடுபடுத்திப் பரவலான போராட்டத்தைத் தொடங்க வேண்டியது தவிர்க்க முடியாததாகி விட்டது. அந்தப் போராட்டம் காந்தியடிகளின் தலைமையிலேயே நடைபெறும்" என்று தெரிவித்தது செயற்குழு.

இதில் சம்பந்தப்பட்ட பிரச்சினை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்ததால், இந்தத் தீர்மானத்தின் மீது இறுதி முடிவு மேற்கொள்ளும் பொறுப்பு ஆகஸ்ட் 7ல் பம்பாயில் கூட இருந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியிடம் விடப்பட்டது. அங்கே, விவாதம் மிகமிக இறுக்கமான சூழ்நிலையிலேயே நடைபெற்றது. சீனா, ரஷ்யா ஆகிய நாடுகளின் சுதந்திரம் பாதுகாக்கப்பட வேண்டியது மிகவும் அவசியம்; அவைகளில் சுதந்திரத்தைக் காப்பாற்ற மேற்கொள்ளப்படும் முயற்சிகளுக்கு நாம் எந்த விதமான குந்தகத்தையும் விளைவித்துவிடக் கூடாது; ஐக்கிய நாடுகளின் பாதுகாப்பு ஆற்றலைச் சிதறடிக்கும் நடவடிக்கைகளிலும் நாம் இறங்கிவிடக் கூடாது, என்று எச்சரித்தது அகில இந்தியக் காங்கிரஸ். செயற்குழுவின் தீர்மானத்தில் உள்ள தேசீயக் கோரிக்கை சம்பந்தமான பகுதியை மட்டும், காங்கிரஸ், சில திருத்தங்களோடு ஏற்றது. இந்தியாவின் சுதந்திர வேட்கையையும் பிற நாடுகளைச் சார்ந்து நிற்க விரும்பவில்லை என்னும் அதன் உணர்ச்சியையும் வெளிப்படுத்தும் விதமாக ஒரு பரவலான போராட்டத்தை நடத்தலாம் என்று அனுமதித்த காங்கிரஸ், இது சம்பந்தமான நடவடிக்கைகளுக்குத் தலைமை ஏற்று நாட்டை வழிநடத்துமாறு காந்தியடிகளைக் கேட்டுக்கொண்டது.

ஆகஸ்ட் 8 ஆம் தேதிதான் இந்தத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. 9 ஆம் தேதி காலையிலேயே காந்தியடிகள், நேரு, ஆசாத், படேல், ராஜேந்திர பிரசாத் முதலான தலைவர்களை அரசாங்கம் கைது செய்தது ; காங்கிரஸ் நிறுவனத்தையும் சட்ட விரோதமானது என்று அறிவித்தது. இதன் விளைவாக, நாடெங்கும் "வெள்ளையனே வெளியேறு" என்ற போர் முழக்கம் தொடங்கியது ; அரசாங்கமும் அதை நசுக்கி விடத் தன்னால் ஆனதை எல்லாம் செய்யத் தலைப்பட்டது.

**சட்டசபையில் விவாதம் :**

காங்கிரசுக்குக் கெட்டபெயர் ஏற்படுத்தும் முயற்சிகளிலேயே கண்ணும் கருத்துமாக இருந்த அரசாங்கம், வெகு விரைவிலேயே, "வெள்ளையனே வெளியேறு !" இயக்கத்தைச் சட்டசபையின் கவனத்துக்குக் கொண்டுவந்தது. சபையின் கூதிர்காலக் கூட்டத் தொடர் செப்டம்பர் 14ல் தொடங்கியது. அடுத்த நாளே, உள்துறை உறுப்பினர் சர் ரெஜினல்ட் மாக்ஸ்வெல், இந்திய (அரசியல்) நிலைமையைப் பற்றி விவாதிக்க வேண்டும் என்ற தீர்மானத்தைக் கொணர்ந்தார்.

"ஆகஸ்ட் 8ல் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி தீர்மானம் நிறைவேற்றியதைத் தொடர்ந்து நாட்டிலே அபாயகரமான நிலைமை உருவாகியுள்ளது. காங்கிரஸ் தலைவர்கள் ஆகஸ்ட் 9ல் கைது செய்யப்பட்டார்கள் ; அன்றைக்கே நாடெங்கும் பலாத்காரம் தொடங்கிவிட்டது. பீகாரில் மிகவும் ஆபத்தான ஒரு நிலைமை ஏற்பட்டுள்ளது. செய்திப் போக்குவரத்துச் சாதனங்களையும் ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த இடங்களையும் நாசவேலைக்காரர்கள் தாக்கியிருக்கிறார்கள்" என்று வருணித்தார் மாக்ஸ்வெல். இப்படியான "நாசவேலைகள்" இயல்பாக உண்டாகா ; இவை திட்டமிட்டே செய்யப்பட்டிருக்க வேண்டும் ; இவற்றிற்கெல்லாம் காங்கிரசே பொறுப்பு என்பதுதான் அவர் விளக்கி வலியுறுத்த விரும்பிய கருத்து. இவை போன்ற இயக்கங்கள் முறையான யுத்த முயற்சிகளுக்குக் குந்தகம் விளைவிக்கக் கூடியவை ; அதனாலேயே, இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் தனக்கு உள்ள அதிகாரத்தை அரசாங்கம்

முழுமையாகப் பயன்படுத்தி நடவடிக்கை எடுத்தது என்று விளக்கினார் மாக்ஸ்வெல்.

இந்தத் தீர்மானத்துக்குப் பல திருத்தங்கள் கொண்டுவரப் பட்டன. அரசாங்கச் சார்பில் வந்த திருத்தம், இந்த இயக்கத்தை நசுக்குவதற்கு அரசாங்கம் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளுக்கு ஆதரவு தெரிவிக்க வேண்டும் என்றும் சட்டமறுப்பு இயக்கம் நிறுத்தப்படும் வரையில் இந்த நடவடிக்கைகளைத் தளர்த்தவே வேண்டியதில்லை என்றும் கேட்டுக்கொண்டது.

இதற்கு நேர்மாறாக, அகமது காஸ்மியின் தீர்மானம், "இந்தியாவின் கவலைக்குரிய நிலைமைக்கு" அரசாங்கமே பொறுப்பு என்றது. "இந்த அரசாங்கத்தார் மக்களின் பார்வையிலும் ஐக்கிய நாடுகளின் முன்னும் காங்கிரசைக் களங்கப்படுத்தி விட முழுமூச்சாக வேலை செய்கிறார்கள். சட்டமறுப்பு என்றால் என்ன என்பதை விளக்குவதற்குக் கூட வாய்ப்புத் தராமல் காங்கிரஸ் தலைவர்களை அவசர அவசரமாகக் கைது செய்தது இந்த அரசாங்கம். நிலைமையைச் சமாளிப்பதற்குத் தேவையானதைவிட அதிகமான அடக்குமுறைகளைப் பயன்படுத்தி, அரசாங்கம், நாட்டின் அமைதியையே குலைத்துவிட்டது. இது நிச்சயமாகப் போர் முயற்சிகளைப் பாதிக்கவே போகிறது!" என்று குற்றஞ் சாட்டினார் காஸ்மி "காங்கிரஸ் தலைவர்களின் மீது அரசு குற்றஞ் சுமத்துகிறது; ஆனால், அதற்குப் பதில் சொல்லித் தங்கள் நிலையைத் தெளிவுபடுத்தவும் வன்முறைகளைக் கைவிட்டு அமைதியான முறையில் தங்கள் கருத்து வேற்றுமையை வெளிப்படுத்தவும் அந்தத் தலைவர்களுக்கு வாய்ப்பே தரவில்லை. இந்தியாவைப் பொறுத்த அளவில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நோக்கம் என்ன என்பது மக்களுக்கு விளக்கித் தெளிவுபடுத்தப்பட வேண்டும். அரசாங்கத்தின் மீது மக்களுக்கு நம்பிக்கை ஏற்படும் வகையில் நிலைமைகளை மாற்றுவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்" என்றும் காஸ்மி அரசாங்கத்தை வற்புறுத்தினார்.

"உடனடியாக இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்க வேண்டும்; காங்கிரஸ் மீது உள்ள தடையை நீக்கி, அதன் தலைவர்களை

விடுதலை செய்து தேர்தல் நடத்த வேண்டும்; காங்கிரசையும் முஸ்லிம் லீகையும் அழைத்து இடைக்கால அரசாங்கத்தை அமைக்கச் சொல்ல வேண்டும்'' என்று ஒரு தீர்மானத்தின் மூலம் அரசாங்கத்தைக் கோரினார் சந்த் சிங்.

நியோகி அரசாங்கத்தின் கொள்கையைக் கடுமையாகத் தாக்கிப் பேசினார்: ''நாட்டில் மூண்டுள்ள நிலைமைக்குக் காரணங்கள் இரண்டு: முதலாவதாக, இங்கிலாந்தின் பிரதமராக இருப்பவர் இந்தியாவின் ஜென்ம விரோதி; இரண்டாவதாக, மனச்சான்றே இல்லாத ஒரு சில பழமைப் பித்தர்களின் கையிலேயே இந்திய ஆட்சிப் பொறுப்பு இருந்து வருகிறது. பிரிட்டிஷ் அரசாட்சியால் இந்த நாடு வறுமைப் பள்ளத்தில் தள்ளப்பட்டுக் கிடப்பதும் இப்போது ஏற்பட்டிருக்கிற நிலைமைக்கு ஒரு காரணமே.'' இவ்வாறு விவரித்த நியோகி, (சட்டமறுப்பு) இயக்கத்தை அடக்குவதாகச் சொல்லிக் கொண்டு ராணுவமும் போலீசும் நடத்தி வருகிற காட்டுமிராண்டித்தனமான அட்டூழியங்களை வன்மையாகக் கண்டித்தார். பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவின் மீது உள்ள ஆதிக்கத்தை விட்டுக்கொடுக்க விரும்பாததே இங்கே ஏற்பட்டுள்ள தொல்லைகளுக்கெல்லாம் மூல காரணம் என்றும் எடுத்துரைத்தார் நியோகி.

பிரிட்டிஷ் இந்தியக் கொள்கையின் வரலாற்றை விவரித்து, இங்கே பிரிட்டிஷ் அரசாங்கம் நடத்தி வந்திருக்கிற சுரண்டலும் அடக்குமுறையுமே இப்போது ஏற்பட்டுள்ள சங்கடங்களுக்கெல்லாம் அடிப்படைக் காரணம் என்று கூறிய மேத்தா, இந்த நிலைமைக்கு அரசாங்கமே முழுப்பொறுப்பு ஏற்க வேண்டும் என்று கூறினார். தேசீய உணர்ச்சியின் பொதுவான ஓட்டத்திலிருந்து ஒதுங்கித் தனித்து நிற்க வேண்டாம் என்று முஸ்லிம் லீகையும் கேட்டுக் கொண்டார் மேத்தா.

''சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்கியது காங்கிரஸ் செய்த தவறு என்று சொல்லப்படுமானால், அந்தத் தவறுக்கு இந்த அரசாங்கமே மூல காரணம்!'' என்றார் ஜோஷி. பேச்சு வார்த்தைகளுக்குக் காங்கிரஸ் தயாராக இருந்த போது,

அரசாங்கம் தான், அதைப் புரிந்துகொள்ளாமல் அதன் மீது தாக்குதல் தொடுத்து அதைச் சட்டமறுப்புக்குத் தள்ளியது; இப்போது, அவர்களை எல்லாம் ஜெயிலில் தள்ளிவிட்டு, அவர்கள் சட்ட மறுப்பு இயக்கத்தை வாபஸ் பெறவேண்டும் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது என்று சாடினூர் ஜோஷி. அவர் தொடர்ந்து பேசுகையில் கூறியதாவது:

"தங்களால் இயன்றதை எல்லாம் செய்ய வேண்டியதே இப்போது இந்த நாட்டு மக்களின் கடமை; தங்களால் இயன்றதை எல்லாம் செய்து ஜப்பானிடமிருந்து தங்கள் நாட்டைக் காப்பாற்ற வேண்டியதே இப்போது இந்த நாட்டு மக்களின் கடமை. ஜப்பானின் தாக்குதலிலிருந்து தங்கள் நாட்டைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானுல், இந்த நாட்டு மக்கள், முதலில் தங்களுக்குள் ஒற்றுமையை உண்டாக்கிக் கொள்ள வேண்டும். அதற்கு முதற்படியாக, இந்த நாட்டின் பெரும்பான்மை மக்கள், —அதாவது இந்த நாட்டு இந்துக்கள்—முஸ்லிம்களுக்குச் சுய நிர்ணய உரிமை வழங்க வேண்டும் என்பதே என் விருப்பம். சுயநிர்ணய உரிமை கோருவது அப்படி ஒன்றும் செய்யத்தகாத காரியமல்லவே!"

(சிக்கலைத் தீர்ப்பதற்கு) அரசாங்கம் ஆக்கபூர்வமான ஆலோசனை எதையும் தெரிவிக்கவில்லை என்று குற்றம் சாட்டிய நவல்ராய், அடக்குமுறை ஒன்றைக் கொண்டே இந்த நாட்டை ஆண்டுவிட முடியாது என்று பிரிட்டிஷ் அரசாங்கத்தை எச்சரித்தார்.

வன்முறையையும் காலித்தனங்களையும் பலமாகக் கண்டித்த பானர்ஜியும், இதற்கெல்லாம் காங்கிரசையே பொறுப்பாக்கிய உள்துறை உறுப்பினருக்கு எதிர்ப்புத் தெரிவித்தார். "காங்கிரசின் கொள்கைகளில் எனக்குக் கருத்து வேற்றுமை உண்டு. ஆனுல், காங்கிரஸ் தனது அகிம்சை நெறியிலிருந்து வழுவி விட்டதாக நான் சொல்ல மாட்டேன். நாட்டிலே ஏற்பட்டுள்ள நிலைமைக்குக் காங்கிரசும், ஓரளவு காரணம்தான். ஆனுல், அரசாங்கமே அதற்கு அதிகமான பொறுப்பு ஏற்க வேண்டும். காங்கிரஸ் செயற்குழு தீர்மானம் நிறைவேற்றி அதை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி முடிவாக ஏற்றுக்

கொண்டு மூன்றுவாரம் ஆகிவிட்டது. இந்த மூன்று வார காலத்தில் கட்சிப் பிரதிநிதிகளின் மாநாடு ஒன்றைக் கூட்டுவதற்கான எந்த முயற்சியையும் அரசாங்கம் மேற்கொள்ளவில்லை!" இவ்வாறு விளக்கிய பானர்ஜி, இங்குள்ள மற்றக் கட்சிகள் மற்றும் காங்கிரஸ் பிரதிநிதிகளின் மாநாடு ஒன்றைக் கூட்டி, பெரும்பகுதி அதிகாரத்தை மக்களிடம் மாற்றித்தர அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று வற்புறுத்தினர்.

ஆங்கிலோ இந்திய நியமன உறுப்பினர் ஃபிராங்க் அந்தோனி பேசுகையில், "இங்கு ஏற்பட்டுள்ள நிலைமைக்கு அரசாங்கமும் பொறுப்புத்தான்; அதை அரசாங்கம் தட்டிக் கழிக்க முடியாது" என்ருர். "சர்வ வல்லமை பொருந்திய அதிகார வர்க்கக் கூட்டம்" இந்தியா முழுவதும் வன்மையாகப் படர்ந்து கிடக்கிறது; மக்களிடம் பரவலான வெறுப்பு ஏற்பட்டிருப்பதையும் மறுக்க முடியாது என்றும் அவர் தெரிவித்தார். கிரிப்ஸ் திட்டத்தைப் புறக்கணித்ததோடு, நாட்டிலுள்ள மற்ற அரசியல் கட்சிகளைக் கலந்து ஆலோசிக்காமலே பகிரங்கமான கலகத்தில் நாட்டை இறக்கிவிட்டது என்று காங்கிரசைக் கண்டித்தார் ஜெஹாங்கீர்.

ஜின்னு இல்லாத சமயங்களில் சட்டசபை முஸ்லிம் லீகின் தலைமையை ஏற்றுவந்த நவாப்ஸாதா லியாகத் அலி கான், "நாட்டுக்குச் சுதந்திரம் தேடுவதை விடுத்து, தன் கோரிக்கைக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தை இணங்கச் செய்வதற்காகவே பகிரங்கக் கலகம் செய்யக் காங்கிரஸ் முடிவு செய்ததை ஏற்கனவே லீக் கண்டித்திருக்கிறது" என்று தெரிவித்தார். மூன்று ஆண்டு காலமாக அரசாங்கம் காங்கிரசை தாஜா செய்வதில் ஈடுபட்டிருக்கிறதே தவிர, முஸ்லிம் லீக் வழங்க முன்வந்த ஒத்துழைப்பை ஏற்கவில்லை என்று அரசாங்கத்தைச் சாடிய லியாகத் அலி கான், இப்போது ஏற்பட்டுள்ள நிலைமைக்குப் பொறுப்பு ஏற்காமல் அரசாங்கம் தப்பிவிட முடியாது என்றும் கூறினர். அவர் மேலும் பேசுகையில், "பாகிஸ்தான் உண்டாவதற்கு ஒப்புக் கொள்வது ஒன்றுதான் இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு உள்ள ஒரே வழி" என்ருர்.

"அகிம்சையே எங்கள் கொள்கை என்று காங்கிரஸ் உரிமை கொண்டாடுவது எல்லாம் சுத்த ஏமாற்று; நாட்டின் நெருக்கடியான நிலைமையைச் சமாளிப்பதற்குப் போலீசுக்கு மேலும் ஊக்கமளிக்க வேண்டும்" என்று வெதும்பினார் யாமின் கான்.

கஸ்னவி பேசுகையில், கிரிப்ஸ் இந்தியாவுக்கு வந்தபோது, காங்கிரஸ் தவிர மற்றுள்ள கட்சிகளை எல்லாம் புறக்கணித்துவிட்டார் என்று குறைப்பட்டுக் கொண்டார். 'காங்கிரஸ் இந்தியாவை முழுவதுமாகப் பிரதிநிதிக்கவில்லை; முஸ்லிம் லீகும் எல்லா முஸ்லிம்களையும் பிரதிநிதிக்கவில்லை. முஸ்லிம் லீக் தவிரவும் முஸ்லிம்களிடையே மிகுந்த செல்வாக்குள்ள ஜமியத் உல் உலீமா, மோமின்கள், அஹ்ரர்கள், ஆசாத் முஸ்லிம்கள் போன்றோர் உள்ளனர். அப்பால், காங்கிரசில் உள்ள முஸ்லிம்கள் மிகக் குறைவானவர்களாக இருந்தாலும், அவர்களும் கணக்கில் எடுத்துக்கொள்ளப் படவேண்டும்' என்று பேசிய கஸ்னவி, இந்திய மக்களின் முழு ஆதரவைப் பெற வேண்டுமானால், பிரிட்டன் அதிகாரத்தை இந்த நாட்டின் 40 கோடி மக்களிடம் ஒப்படைத்து, இந்த யுத்தம் மக்களின் யுத்தம் என்ற எண்ணத்தை உண்டாக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

அரசாங்கத்தின் சார்பில் விவாதத்துக்குப் பதிலளித்த ஆனே, காந்தியடிகளையும் காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர்களையும் கைது செய்து அரசாங்கமே நிலைமையைச் சிக்கலாக்கியது என்பதை ஏற்க முடியாது என்று வாதிட்டார். முடிவில், எல்லாத் திருத்தங்களும் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டன. வாக்கெடுப்பு எதுவும் நடத்தாமலே சபை, அடுத்த கூட்டத் தொடருக்கு ஒத்தி வைக்கப்பட்டது.

**காந்தியடிகளின் உண்ணாவிரதம்:**

ஆகஸ்ட் 9 ஆம் தேதி முதலே, நாட்டில் ஏற்பட்ட வன்முறைகளுக்கெல்லாம் காங்கிரசின் மீதே அரசாங்கம் குற்றஞ் சுமத்திக் கொண்டிருந்தது. பூனாவிலுள்ள ஆகா கான் மாளிகையில் அடைத்து வைக்கப்பட்டிருந்த காந்தியடிகள் உள்ளிருந்தவாறே, அரசாங்கத்தின் குற்றச்சாட்டுக்களுக்கு மறுப்புத் தெரிவித்து

வந்தார். அரசாங்கம் காங்கிரஸ் தலைவர்களைக் கண்மூடித் தனமாகக் கைது செய்ததால் நாட்டுமக்கள் பொங்கி எழுந்து தமது தன்னடக்கத்தையே இழந்து விடக்கூடிய நிலைமை உண்டாகி விட்டது என்று சுட்டிக்காட்டினார் அடிகள். "நான் தவறிழைத்திருந்தால் அதை ருசுப்படுத்துங்கள்; அல்லது நான் உண்ணாவிரதம் மேற்கொள்ள நேரும்" என்று லின்லித்கோவுக்கு எழுதினார் காந்தியடிகள். வைசிராய் (லின்லித்கோ) அதை எல்லாம் காதில் போட்டுக் கொள்ளவில்லை; ஆதாரம் எதுவும் காட்டாமல், பழையபடியே குற்றஞ்சாட்டிக் கொண்டு இருந்தார். எனவே, காந்தியடிகள் 1943 பிப்ரவரி 10ல் தம்முடைய 21 நாள் உண்ணாவிரதத்தைத் தொடங்கினார். காந்தியடிகள் நிபந்தனை யின்றி விடுதலை செய்யப்பட வேண்டும் என்று கோரி நாடெங்கும் கிளர்ச்சி நடந்தது. அடிகளை நிபந்தனையின்றி விடுதலை செய்ய முடியாது என்று மறுத்துவிட்டார் வைசிராய். உண்ணாவிரதம் நீள நீள நாடெங்கும் வேதனை படர்ந்தது. சட்டசபை நடவடிக் கையிலும் இந்தச் சோகத்தின் நிழல் வெகுவாகப் படர்ந்தது.

பிப்ரவரி 15 ஆம் தேதி, காந்தியடிகள் மேற்கொண்டுள்ள உண்ணாவிரதத்தைப் பற்றி விவாதிக்க வேண்டுமென்று கோரும் தீர்மானம் ஒன்றை மைத்ரா கொண்டுவந்தார். காந்தியடிகளுக்கும் வைசிராய்க்கும் இடையே நடந்த கடிதப் போக்குவரத்தைக் குறிப்பிட்டு, வைசிராய் காந்தியடிகளுக்குப் பேட்டியளிக்க மறுத்தது தவறு என்று சுட்டிக்காட்டினார் மைத்ரா. "காந்தி யடிகளைச் சிறைச்சாலையிலேயே சாகவிட்டால் இந்தியமக்கள் இந்த அரசாங்கத்தை மன்னிக்கவே மாட்டார்கள் என்பதைக் கூட அரசாங்கம் தெரிந்து கொள்ளவில்லையா?" என்று வேதனை வியப்போடு கேட்டார் அவர். "சிறையில் அடிகளின் நிலைமை மோசமடைய மோசமடைய நாட்டுமக்களின் உணர்ச்சி கரைகடந்து பொங்கும்; எவ்வளவு சக்தி வாய்ந்த எந்த அரசாங்கத்தாலும் அதைத் தடுத்து நிறுத்தவே முடியாது!" என்றும் அரசாங்கத்தை எச்சரித்தார் மைத்ரா.

மைத்ராவின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய டி. டி. கிருஷ்ணமாச்சாரி, அடிகளின் உண்ணாவிரதத்தை

"அச்சுறுத்திக் கொள்ளை" அடிப்பது (Black mail) என்று வருணித்த அரசாங்கத்தைக் கடுமையாகக் கண்டித்தார். இந்தியாவின் மாபெரும் மனிதரைக் குறித்து இத்தகைய ஒரு சொல்லை வீசுவது அரசாங்கத்தின் பெருந்தகைமைக்கே இழுக்கு, என்றார் அவர். இந்தியாவில் ஏற்பட்டுள்ள இக்கட்டான நிலைமையைச் சமாளிப்பதற்குக் கிடைத்த வாய்ப்பை எல்லாம் அரசாங்கம் கைநழுவ விட்டுவிட்டது என்றும் அவர் குற்றம் சாட்டினார். நிருவாகக் கவுன்சிலின் இந்திய உறுப்பினர்களைப் பார்த்து "காந்தியடிகளின் நிலைமை மோசமாகுமானால் உங்கள் நிலைமை ஆபத்தாகும்!" என்று எச்சரித்தார் கிருஷ்ணமாச்சாரி.

"அரசாங்கம் காந்தியடிகளைச் சிறையிலேயே மரணமடைய விட்டுவிடுமானால், இந்திய மக்களுக்கும் பிரிட்டிஷ் அரசுக்கும் இடையே உள்ள உறவு மட்டுமல்லாமல், இரண்டு நாட்டு மக்களுக்கும் இடையில் நிலவும் உறவே நிரந்தரமான பகைமையாகிவிடும்!" என்று எச்சரித்தார் ஜோஷி. காந்தியடிகள் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டால் இந்திய அரசியல் நிலைமை சீர்படுவதோடு, உண்ணாவிரதத்தோடு பின்னிப் பிணைந்து பேருருக் கொண்ட பல சிக்கல்களும் தீர்ந்துபோகும் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை என்றார் அவர். பானர்ஜியும் இதே கருத்தை வலியுறுத்திப் பேசினார்.

குறிப்பாக, கவுன்சிலின் இந்திய உறுப்பினர்களை எச்சரித்த சந்த் சிங், "இதுபோன்ற விவகாரங்களில் நீங்கள் சட்டதிட்டங்களையே நம்பிக்கொண்டு இருக்கக்கூடாது; புதிய சிக்கல் ஏற்படும் போது நீங்கள் அதற்கேற்ற புதிய நடைமுறைகளைக் கண்டறிந்து கடைப்பிடிக்க வேண்டும்" என்று குறிப்பிட்டார். "காந்தியடிகள் சிறையில் இறந்தால் அந்த மரணமே கிருஷ்ணபரமாத்மா சிறையில் பிறந்தது போல் ஆகிவிடும்!" என்றும் அவர் எடுத்துக் காட்டினார்.

லியாகத் அலி கான் இப்போதும் ஒரு அரசியல் பேச்சே நிகழ்த்தினார். ஆகஸ்ட் 8 முதல் நாட்டில் நடைபெற்றுள்ள அனைத்துக்கும் காங்கிரசும் காந்தியடிகளுமே பொறுப்பு என்ற அவர், காந்தி—வைசிராய் கடிதப் போக்குவரத்தில் இந்து முஸ்லிம்

ஒற்றுமையைப் பற்றி ஒன்றுமே இல்லை என்று குறைப்பட்டார். "காந்தியடிகள் விடுதலை செய்யப்பட்டால் இந்து முஸ்லிம் பிரச்சினை தீருவதற்கு வாய்ப்பு இருப்பதாக இங்குள்ள என் இந்து நண்பர்கள் நிரூபிப்பார்களா?" என்று கேட்ட லியாகத் அலி, "அதற்கான எந்த அறிகுறியும் தோன்றவில்லை" என்றார். "ஏதாவது ஏற்பாட்டுக்குக் காங்கிரஸ் இணங்கி வந்தால்தான் நாட்டுக்குச் சுதந்திரம் கொடுப்பது என்று அரசாங்கம் காத்திருப்பது தவறு; காங்கிரஸ் இணங்கவில்லை என்பதற்காக மற்ற இந்தியர்களும் உரிமையில்லாமல் கிடக்கவேண்டுமா?" என்று அரசாங்கத்தையும் சாடினார் லியாகத் அலி. காந்தியடிகளை உடனடியாக விடுதலை செய்ய வேண்டும் என்ற கோரிக்கையைக் குறிப்பிட்டு, இந்த விவகாரத்தில் முஸ்லிம் லீகுக்கு அதிகாரமோ பொறுப்போ இல்லாததால், அவரை அடைத்து வைப்பதைப் பற்றியோ விடுவிப்பதைப்பற்றியோ முஸ்லிம் லீக் எதுவும்சொல்ல இயலாது என்றார்.

லியாகத் அலியின் காந்தி எதிர்ப்புப் பேச்சைக் கண்டித்த மேத்தா, காந்தியடிகளை விடச் சிறந்த முஸ்லிம் ஆதரவாளர் யாரும் இந்த நாட்டில் இல்லை என்பதை லியாகத் அலி மறந்து விடக் கூடாது என்று எச்சரித்தார். இந்தத் தீர்மானத்தின் மீது வாக்கெடுப்பு நடைபெறுமலே சபை ஒத்தி வைக்கப்பட்டது.

### அரசியல் கைதிகளை விடுதலை செய்யக் கோரி நிர்ப்பந்தம் :

உண்ணாவிரதத்துக்குப் பிறகு, காந்தியடிகளையும் மற்ற அரசியல் கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்ற கோரிக்கை வலுத்துக் கொண்டே வந்தது. அவர்களை விடுதலை செய்து, அரசாங்கம் நாட்டில் ஏற்பட்டுள்ள அரசியல் சிக்கலைத் தீர்க்க வேண்டும் என்று பலமுறை கோரிக்கை விடப்பட்டது. ராஜகோபாலாச்சாரி, புலாபாய் தேசாய், ஸப்ரூ, ஜயகர் போன்ற 35 பிரபல தலைவர்கள் காந்தியடிகளை விடுதலை செய்து காங்கிரசுடன் சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்று அரசாங்கத்தை வற்புறுத்தி மார்ச் 9ல் அறிக்கை ஒன்றை வெளியிட்டார்கள். வைசிராய் இதற்கெல்லாம் அசையவில்லை.

சட்டசபையிலும் கிருஷ்ணமாச்சாரி, நியோகி, ஜோஷி, நீலகண்ட தாஸ், அகமது காஸ்மி மற்றும் பல உறுப்பினர்கள், அரசியல் கைதிகளை விடுதலை செய்ய வேண்டும் என்ற பிரச்சினையைப் பல தடவை எழுப்பினார்கள். ஆனாலும், 1943ஆம் ஆண்டு முழுவதும் அரசாங்கம் தனது நிலையை ஓர் இம்மியளவும் விட்டுக் கொடுக்கவே இல்லை.

1944 பிப்ரவரி 8ல், அரசியல் கைதிகளை விடுதலை செய்து நாட்டின் அரசியல் சிக்கலைத் தீர்த்து யுத்த முயற்சிகளுக்கு ஆதரவு தேடும்படி அரசாங்கத்துக்குக் கட்டளையிடுமாறு கவர்னர் ஜெனரலைக் கேட்டுக் கொள்ளும் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார் நவல்ராய். அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்பட்டால், பல அரசியல் கட்சிகளும் சந்தித்து நிலைமையைப் பரிசீலிப்பதற்குரிய வாய்ப்பு ஏற்படும் என்றும் அவர் கருதினார். இதெல்லாம் மாநில அரசுகளின் அதிகார வரம்புக்கு உட்பட்டது என்று இந்திய அரசாங்கம் சொல்லிக் கொண்டிருப்பது வெறும் கண் துடைப்புப் பேச்சே என்றும் கண்டனம் தெரிவித்தார் ராய். பகல்பூரைச் சேர்ந்த கைலாஷ் பீகாரி லால் பேசுகையில், "அரசாங்கம் தொடக்கத்திலிருந்தே எல்லையை மீறித்தான் செயல்பட்டு வந்திருக்கிறது" என்றும், அரசாங்கத்தின் கொள்கைக்கோ நலனுக்கோ எதிராளிகளாக இல்லாத பொது மக்களின் நலனைக் கருதி அரசாங்கம் தனது கொள்கையை மறு பரிசீலனை செய்ய வேண்டியது அவசியம் என்றும் வற்புறுத்தினார்.

அப்துல் கையூம் பேசும்போது, காங்கிரசின் நிலையை விளக்கித் தெளிவுபடுத்தினார். "பிரிட்டிஷ்காரர்கள் இந்த நாட்டை விட்டு வெளியேற வேண்டும் என்பதே எங்கள் கோரிக்கை. எனவே ஆகஸ்ட் 8ஆம் தேதித் தீர்மானத்தைத் திரும்பப் பெறுவது என்ற பேச்சுக்கே இடமில்லை. திரும்பப் பெறுவது என்ற நிலைமை உண்டாகுமானால் அரசாங்கமே தன் நடவடிக்கைகளைத் திரும்பப் பெறவேண்டும்!" என்றார் கையூம். உடனேயே, "இந்திய மக்களின் சார்பிலே பேசக் காங்கிரசுக்கு உரிமை இல்லை; இந்திய மக்களின் ஒரு பகுதியினராகிய முஸ்லிம்களின் சார்பிலே பேச அவர்களுக்கு ஏது உரிமை?" என்று சீறினார் லியாகத் அலி கான்.

ஜின்ஞு சொல்லியிருப்பது போல, "சுதந்திரப் பாகிஸ்தான் உருவாகிறது என்ருலே சுதந்திர இந்துஸ்தானமும் உருவாகிறது என்றே பொருள். ஆதலால் பாகிஸ்தானை அமைப்பதற்கு நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும்" என்று வற்புறுத்திஞர் அவர்.

நவல்ராயின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய கிருஷ்ண மாச்சாரி, தமது உரையிடையே பின்வருமாறு குறிப்பிட்டார்:

"இந்த அரசாங்கம் இருக்கும்வரை இந்த அரசியல் சிக்கல் தீரப் போவதில்லை; இந்து முஸ்லிம் பிரச்சினை தீரவில்லை தீரவில்லை என்றுதான் அது பாடிக்கொண்டு இருக்கப் போகிறது. அரசாங்கம் மேற்கொண்டிருப்பதாகச் சொல்லப்படும் யுத்த முயற்சி என்பது, உண்மையில் ஒன்றுமே இல்லை; அதைச் சொல்லி, இந்தப் பெரியோர்களை அரசாங்கம் சிறையில் அடைத்து வைத்திருப்பதில் எந்த நியாயமும் இல்லை. அரசாங்கம் சரியானபடி யுத்தத்தை நடத்தவில்லை. இந்த நிலையிலே எங்கள் தலைவர்களை விடுதலை செய்யக் கோருவதற்கு எங்களுக்கு உரிமை உண்டு, அரசு அவர்களை விடுதலை செய்தே ஆகவேண்டும்!"

ஜோஷி, அகமது காஸ்மி, மேத்தா முதலான பலர் தீர்மானத்தை ஆதரித்தும், (சபையில் அதை நிராகரித்து) அரசாங்கமே வெற்றி பெற்று விட்டது.

ஆயினும், அடுத்த நாளே எதிர்க்கட்சிகளுக்குச் சாதகமான நிலை உருவாயிற்று. இந்தியப் பாதுகாப்புச் சட்டம் அமுலாகும் விதத்தைப் பற்றி விவாதிக்கக் கோரும் தீர்மானம் ஒன்றை அகமது காஸ்மி கொண்டுவந்தார். "இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டபோது, இந்தச் சட்டத்தால் பறிக்கப்படுகிற உரிமைகளும் சலுகைகளும் கூடிய விரைவிலேயே மீட்கப்படும் என்று அரசாங்கம் உறுதியளித்திருந்தது. ஆனுலும், அரசாங்கம் தனது வாக்கைக் காப்பாற்ருதது மட்டுமல்ல, இந்தியப் பாதுகாப்புச் சட்டம் நீதிபரிபாலனத்திலும் தலையிட்டு வருகிறது" என்று சுட்டிக்காட்டி நினைவூட்டிஞர் காஸ்மி. ஒரு வழக்குரைஞர் என்ற முறையில், நீதி பரிபாலனக் கோட்பாட்டின் அடிப்படையில்

(காஸ்மியின்) தீர்மானத்தை ஆதரித்துப் பேசினார் அந்தோனி. "இப்போது உள்ள நீதிபரிபாலனம் மிகமிகப் பரிதாபமாக அடிமைப்பட்டுக் கிடக்கிறது; சுதந்திரமாகச் செயற்படுவதற்கு அதற்கு ஓர் அணுவளவு உரிமை கூட இல்லை. ஆனாலும், இதற்காக நாம் நீதிபதிகளைக் குறை கூற முடியாது; இப்படியான ஒரு நிலைமையை உருவாக்கியுள்ள (நீதிபரிபாலன) அமைப்பையே கண்டிக்க வேண்டும்" என்றார் அவர். ஜஃபர் அலி கானும் லியாகத் அலி கானும் கூட, இந்தத் தீர்மானத்தை ஆதரித்தார்கள். காஸ்மியின் தீர்மானம் 43க்கு 42 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. நீண்ட இடைவெளிக்குப் பிறகு அரசாங்கம் பெற்ற முதலாவது தோல்வி இது.

## பம்பாய்த் திட்டத்தின் மீது விவாதம் :

1944 நவம்பரில், இந்தியாவுக்கான பொருளாதாரத் திட்டத்தைப் பற்றிய சுவையான விவாதம் ஒன்று சட்டசபையில் நடை பெற்றது.

ரஷ்யாவில் ஐந்தாண்டுத் திட்டங்கள் வெற்றி பெற்றதால், உலகெங்குமே திட்டமிடுதலைப் பற்றிய ஓர் ஆர்வம் பரவியது. இந்தியாவில், இந்தியப் பொருளாதாரத்தைத் திட்டமிடுவது பற்றி எம். விசுவேசுவரய்யா முதன்முதலாக எழுதினார். 1938ல் சுபாஷ் சந்திர போஸ் காங்கிரசின் தலைவராக இருந்தபோது, இந்தியப் பொருளாதாரச் சீரமைப்புத் திட்டம் ஒன்றை வகுப்பதற்காக, ஜவஹர்லால் நேருவின் தலைமையில் தேசீயத் திட்டக்குழுவை அமைத்தது காங்கிரஸ். பொருளாதார ஏகாதிபத்தியச் சுழலில் சிக்கிக் கொள்ளாமல், இந்தியா முழுவதும் தன்னிறைவு பெறுவதற்கான ஒரு வழியை வகுப்பதே இந்தியத் திட்டக்குழுவின் நோக்கம் என்று குழு தனது பணியை வரையறுத்துக்கொண்டது. ஆனாலும், அடுத்து ஏற்பட்ட யுத்தத்தாலும் அதன் விளைவான அரசியல் கொந்தளிப்புகளாலும் திட்டக்குழுவின் பணி சீராக நடை பெற முடியாமல் போய் விட்டது.

யுத்தம் முடிவதற்கான அறிகுறிகள் தென்பட்டதும், யுத்தத்துக்குப் பிற்பட்ட இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்குத்

திட்டமிடும் முயற்சி மீண்டும் பலமுறை மேற்கொள்ளப்பட்டது. இந்த முயற்சிகளின் விளைவாக உருவான திட்டங்களில் ஒன்று தான், 15 இந்தியத் தொழிலதிபர் தயாரித்த "பம்பாய்த் திட்டம்."

பதினைந்து ஆண்டுகளில் இந்தியாவின் தனி நபர் வருமானம் இரட்டிக்கப்பட வேண்டும் என்றும் தேசீய வருமானம் மும்மடங் காக்கப்பட வேண்டும் என்றும் இந்தத் திட்டம் இலக்குகளை வகுத்தது. இந்திய அரசாங்கம், 1944 ஜூலையில், மேற்படித் திட்டத்தின் கர்த்தாக்களில் ஒருவரான சர் அர்தேஷிர் தலால் தலைமையில் திட்டம் மற்றும் அபிவிருத்தித் துறை ஒன்றை அமைத்தது. திட்டமிடுதலைப் பற்றிய பேச்சு பத்திரிகைகளில் மிகுதியாக அடிபட்டது. என்றாலும், நாட்டில் நிலவிய அரசியல் போக்கோடு அது குழப்பப்பட்டும் வந்தது. இந்த விவகாரத்தைப் பற்றிய சட்டசபை விவாதத்தில் இந்தப் போக்கு தெளிவாகவே பிரதிபலித்தது.

"இந்திய முதலாளிகள் தயாரித்த 15 ஆண்டுத் திட்டம் பொது மக்களின் நலனுக்கு உகந்ததல்ல; எனவே, அதை அரசாங்கம் ஏற்கக் கூடாது" என்று கேட்டுக் கொள்ளும் தீர்மானம் ஒன்றை நவம்பர் 3ல் சட்டசபையில் கொண்டு வந்தோர் ஸியாவுதீன் கான். "யுத்தம் முடிந்ததும் இந்தியா முழுமையின் பொருளாதாரத் தையும் கட்டுப்படுத்தும் தேசீய மத்திய அரசாங்கம் ஒன்று ஏற்படப் போகிறது என்ற முடிவின் பேரிலேயே இந்தத் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. அம்மாதிரி ஒரு தேசீய அரசாங்கம் நிறுவப்படும் என்ற கருத்தை இந்திய அரசு ஏற்றுக் கொண்டிருக்கிறது போல் தோன்றுகிறதே," என்று அச்சம் தெரிவித்தார் ஸியாவுதீன்.

பாட்னாவைச் சேர்ந்த முகம்மது நௌமன், ஸியாவுதீனின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில், திட்டத்திற்கு இன்னும் தெளிவாக எதிர்ப்புத் தெரிவித்தார். "இந்தத் திட்டம் எல்லா அதிகாரங்களையும் தன்வசப்படுத்திய ஒரு மத்திய அரசு என்ற கொள்கையின் மீது அமைந்திருப்பதால் முஸ்லிம்களாகிய நாங்கள் இதை ஏற்க முடியாது" என்றார் நௌமன். தவிர, விவசாயமும் குடிசைத் தொழிலும் பின்னணிக்குத் தள்ளப் பட்டிருப்பதையும் ஏற்க இயலாது, என்றார் அவர்.

பஞ்சாபைச் சேர்ந்த ஷேக் பஸ்லிஹுக் பிராசா, இந்த இருவர் எழுப்பிய எதிர்ப்புகளை மேலும் விளக்கினார். இந்தியா முழுமைக்கும் ஒரே தேசீய அரசாங்கம் அமைக்கப்படுவதை 10 கோடி மக்களைக் கொண்ட முஸ்லிம் இனம் ஒரு போதும் ஏற்காது. யுத்தம் முடிந்ததும் ஒவ்வொரு மாநிலமும் பொருளாதார உரிமை கோரவே போகிறது. அந்த நிலையில், எல்லாவற்றையும் கட்டுப் படுத்தி இயக்கும் ஒரே மத்திய அரசு என்ற திட்டம் நிச்சயமாகச் செயற்பட முடியாது. அது தவிர, விவசாயத் தேவைகளைப் புறக்கணித்து, நாட்டைத் தொழில்மயமாக்குவதற்குக் கொடுக்கப் பட்டுள்ள அந்த முக்கியத்துவமும் காரிய சாத்தியமானதல்ல என்றார் ஷேக் பிராசா.

கிருஷ்ணமாச்சாரி பேசுகையில், அரசாங்கம் இந்த (பம்பாய்)த் திட்டத்தின் பல்வேறு அம்சங்களையும் பரிசீலனை செய்து யுத்தத்திற்குப் பிறகு ஏற்பட வேண்டிய பொருளாதார வளர்ச்சிக்குப் புதிய திட்டம் ஒன்றை வகுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இந்தியத் தொழிலதிபர்கள் தொழில் தொடங்க விரும்பினால் பல தடைமுடைகளையும் கட்டுப்பாடு களையும் விதித்துத் தொல்லை கொடுக்கிற அரசாங்கம் அந்நியர் களுக்கு அப்படி எதுவும் விதிப்பதில்லை என்றும் குற்றஞ் சாட்டினார் கிருஷ்ணமாச்சாரி.

அவினாசிலிங்கம் செட்டியார் காங்கிரசின் சார்பில் திருத்தம் ஒன்றைக் கொண்டு வந்தார். யுத்தத்துக்குப் பிற்பட்ட இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்காக வகுக்கப்பட்டுள்ள திட்டங்களைப் பரிசீலனை செய்ய, சட்டசபை உறுப்பினர்களிலிருந்து தேர்ந் தெடுக்கப்படும் 15க்கு மேற்படாத உறுப்பினர்களைக் கொண்ட குழு ஒன்றை அமைக்க வேண்டும் என்று கோரியது இந்தத் திருத்தம். தமது ஆலோசனையை விளக்கிப் பேசுகையில், திட்டம் பொது மக்களின் நலன் என்ற நோக்கில் தயாரிக்கப்பட வேண்டும் என்றும், மோட்டார் வாகனங்கள் எந்திரங்கள் போன்ற பெருந் தொழில்கள் அரசுடைமையாக இருக்க வேண்டும் என்பதே காங்கிரசின் கொள்கை என்றும் தெரிவித்தார் அவினாசிலிங்கம்.

செட்டியாரின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய ராதாபாய் சுப்பராயன், திட்டமிட்டு வளர்ச்சி காண்பதில் ரஷ்யா நிகழ்த்தியுள்ள சாதனைகளைச் சுட்டிக்காட்டி, இதிலே இந்திய அரசாங்கம் போதிய அக்கறை காட்டவில்லை என்று இடித்துரைத்தார். "இப்போது நிர்ப்பந்தம் காரணமாக அரசாங்கம் திட்டமிடுவது பற்றிப் பேசத் தொடங்கியிருக்கிறதென்றாலும், மக்கள் நல வளர்ச்சியில் அரசாங்கத்துக்கு உண்மையான அக்கறை இருக்குமென்று தோன்றவில்லை. இங்குள்ள மக்களின் நலனைப் பலியிட்டு, பிரிட்டிஷ் தனியாதிக்க முதலாளிகளின் முன்னேற்றத்துக்கும் ஏகாதிபத்திய மேலாண்மையைப் பலப்படுத்துவதற்கும் தான் இந்த அரசாங்கம் பாடுபடும் என்பது கண்கூடு" என்றார் ராதாபாய். திட்டமிட்ட வளர்ச்சியின் மூலம் புதிய இந்தியாவை உருவாக்கும் பணியில் பெண்களும் தங்கள் பங்கைச் செய்ய வேண்டியது அவசியம் என்றும் வலியுறுத்தினார்.

முதலாளிவர்க்கத்தினராலேயே கட்டுப்படுத்தப்படும் ஒரு சமுதாயத்தில், மக்களுக்கிடையே சமத்துவம் உண்டாக்கும் சூழ்நிலை ஏற்படவே முடியாது என்று கூறிய ஜோஷி, சொத்துரிமைக்கு வரம்பு விதிக்கப்பட வேண்டும் என்றும் சில நிலைகளில் சொத்துரிமையே ஒழிக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார்.

எதிர்க்கட்சித் தலைவரான புலாபாய் தேசாய் செட்டியாரின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில், அந்நியச் செல்வாக்குக்கு உட்பட்டோ அந்நிய நலன்களைக் கருதியோ வகுக்கப்படும் எந்தத் திட்டமும், நாம் விரும்பி எதிர்பார்க்கும் பயனை ஏற்படுத்தாது என்றார். முழு உரிமை பெற்ற தேசீய அரசாங்கம்தான் மக்கள் நலனுக்கு உகந்த திட்டத்தை வகுக்க முடியும். இந்தியாவில் இந்த நிலை இப்போது இல்லை. ஆனால், இப்போது ஆலோசனையில் உள்ள கமிட்டியோடு இப்போதைய அரசாங்கம் ஒத்துழைக்க மறுத்தாலும் இந்தக் கமிட்டி, ஒரு அந்நியர் கைப்பிடியில் இருக்கும் வேற்றூர் தயாரிக்கும் திட்டத்தைவிட மேம்பட்டதான, ஒரு தேசீய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளத் தக்கதான ஒரு நல்ல திட்டத்தை வகுத்துத் தரும் என்பதில் ஐயமில்லை என்றார் தேசாய். அதன்மேல், அவினாசிலிங்கம் செட்டியாரின் திருத்தத்தைச் சபை ஏற்றுக்கொண்டது.

**தேசாய்–லியாகத் அலி ஒப்பந்தம் :**

*1944* இறுதியிலும் *1945* தொடக்கத்திலும், இந்திய அரசியல் சிக்கல்களைத் தீர்க்கும் முயற்சி ஒன்று சட்டசபை மட்டத்தில் மேற்கொள்ளப் பெற்றது. சட்டசபைக் காங்கிரஸ் கட்சியின் தலைவரான புலாபாய் தேசாய்க்கும் சட்டசபை முஸ்லிம் லீகின் தலைவரான லியாகத் அலி கானுக்கும் இடையே சுமுகமான உறவு நிலவியது. இதைப் பயன்படுத்திக் கொண்டு, காந்தியடிகளின் ஒப்புதலோடு, மத்தியில் இடைக்கால அரசாங்கம் அமைப்பதற்கான சாத்தியக் கூறுகள் பற்றி அலி கானுடன் பேச்சு வார்த்தை நடத்தினார் தேசாய். பேச்சு வார்த்தைகளின் போதே, காந்தியடிகளுக்கு நடப்பை விளக்கி அவருடைய ஆலோசனைகளையும் பெற்று வந்தார் தேசாய். இறுதியாக அவருக்கும் லியாகத் அலிக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. இது தான் "தேசாய்–லியாகத் ஒப்பந்தம்" என்று சொல்லப்படுகிறது. இந்த ஒப்பந்தத்தின் விவரம் வருமாறு :

"மத்தியில் ஓர் இடைக்கால அரசாங்கத்தை அமைக்கக் காங்கிரஸ் கட்சியும் முஸ்லிம் லீகும் ஒப்புக்கொள்கின்றன. இந்த அரசாங்கம் பின்வரும் அமைப்புக் கோப்பு உடையதாக இருக்கும் :

(அ) காங்கிரசும் லீகும் சமமான எண்ணிக்கையுள்ள நபர்களை நியமிப்பார்கள். (சட்டசபை உறுப்பினர்களிலிருந்தே இவர்களை நியமிக்கவேண்டுமென்ற கட்டாயமில்லை.)

(ஆ) சிறுபான்மையினரின் (குறிப்பாகத் தாழ்த்தப்பட்ட மக்கள் மற்றும் சீக்கியரின்) பிரதிநிதிகள்.

(இ) சேனாதிபதி. இந்தவிதமாக அமைகின்ற அரசாங்கம் நடைமுறையில் உள்ள (*1935*) இந்தியாச் சட்டத்தின் படியே செயல்படும். ஆனாலும், மந்திரிசபையால் குறிப்பிட்ட ஒரு மசோதாவைச் சட்டசபை மூலம் நிறைவேற்ற முடியாவிட்டால், அது, கவர்னர் ஜெனரலின் தனி அதிகாரத்தின் மூலம் சட்டமாக்கப்படமாட்டாது. (அரசாங்கத்தின் உறுப்பினர்கள் கவர்னர்

ஜெனரலின் அதிகார வரம்புக்கு உட்படாமல் செயல்பட இது உதவும்).

இவ்வாறு, காங்கிரஸ் லீக் கூட்டுமந்திரிசபை அமையுமானால், கைதுசெய்யப்பட்டிருந்த காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர் அனைவரும் உடனடியாக விடுதலை செய்யப்பட வேண்டும் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

இந்த ஒப்பந்தத்தைச் செயல்படுத்துவதற்கான திட்டங்களும் வகுக்கப்பட்டன :

கவர்னர் ஜெனரல், காங்கிரசும் முஸ்லிம் லீகும் இணைந்து ஓர் இடைக்கால அரசாங்கம் அமைக்குமாறு ஒரு குறிப்புக் காட்டும் படிச் செய்யவேண்டும். கவர்னர் ஜெனரல் தேசாயையும் ஜின்னாவையும் ஒன்றாகவோ தனித்தனியாகவோ அழைத்துப் பேசும் போது, மேற்கண்ட ஒப்பந்தப்படி இருவரும் சேர்ந்து அரசாங்கம் அமைக்கத் தயாராக இருப்பதாகத் தெரிவிக்கவேண்டும். இந்த அரசாங்கம் அமைந்ததும், 93ஆவது பிரிவை வாபஸ் பெறச்செய்து மாநிலங்களிலும் கூட்டணி மந்திரிசபைகள் அமைக்க வேண்டும்.

இந்த ஒப்பந்தத்தில் தேசாயும் லியாகத் அலி கானும் 1945 ஜனவரி 11ல் கையொப்பமிட்டார்கள். தேசாய், ஜனவரி 20ல் வைசிராயைச் சந்தித்து இந்தத் திட்டத்தைப் பற்றி அவருடன் ஆலோசனை கலந்தார். இந்த திட்டத்தைக் காந்தியடிகள் ஏற்றுக் கொண்டு இருப்பதாக வைசிராயிடம் தெரிவித்தார் தேசாய். ஜின்னாவுக்கும் இதுபற்றித் தெரியும், அவரும் இதை ஏற்றுக் கொண்டுள்ளார் என்றும் தெரிவித்தார். இதன் மூலம், பிரிட்டிஷ் அரசாங்கம் விரும்பினால் இப்போது அரசியல் கட்சிகளின் ஆதரவுடன் ஒரு மத்திய அரசை ஏற்படுத்திவிடலாம் என்ற நிலை உருவாகியது.

வைசிராய், இத்திட்டம் அரசியல் முன்னேற்றத்திற்கு அரிய வாய்ப்பளிக்கிறது என்று இந்தியா மந்திரிக்குத் தெரிவித்தார். ஆனால், பிரிட்டிஷ் அரசாங்கம் உடனடியாக அதை ஏற்கவில்லை. என்னென்னவோ விளக்கங்களைக் கேட்டுக்கொண்டு இருந்தது. இதற்கு மத்தியில், தேசாய்—லியாகத் ஒப்பந்தத்தைப் பற்றித் தமக்கு ஒன்றும் தெரியாது என்று பகிரங்கமாக அறிவித்து

விட்டார் ஜின்னா. இதைக் கண்டு தேசாய் தளர்ந்து விடவில்லை. ஆனால், 1945 ஜூனில் விடுதலை செய்யப்பட்ட காங்கிரஸ் செயற் குழுவும் தேசாயின் (இடைக்கால அரசாங்க அமைப்பு) முயற்சி களை ஒதுக்கித் தள்ளிவிட்டது.

**ஐந்தாவது சட்டசபையின் கடைசிக் கூட்டத்தொடர் :**

இந்தப் பின்னணியில்தான், ஐந்தாவது சட்டசபையின் கடைசிக் கூட்டத் தொடராகிய வரவு செலவுத் திட்டக் கூட்டத்தொடர் 1945 பிப்ரவரி 8ல் தொடங்கியது. 1944 ஆம் ஆண்டில் போலவே, இந்த ஆண்டிலும் காங்கிரசும் லீகும் இணைந்து நின்று வரவு செலவுத் திட்டத்தின் பல கோரிக்கைகளை நிராகரித்தன.

மார்ச் 9 ஆம் தேதி "நிருவாகக் கவுன்சில்" மானியத்தில் ஒரு ரூபாய் குறைக்க வேண்டும் என்று கோரும் தீர்மானத்தைக் கொண்டு வந்தார் அப்துல் கையூம். இந்திய அரசாங்கத்துக்கு எதிரான வெளிப்படையான கண்டனத் தீர்மானம் இது. இந்த மண்ணின் தலைமக்களை விசாரணையின்றி அடைத்துவைக்க அரசாங்கம் அமைத்த "சிறை முகாம்கள்" இந்தியாவின் நல்ல பெயருக்கே பெரிய களங்கத்தை ஏற்படுத்தி விட்டது என்று அரசாங்கத்தைக் குற்றஞ்சாட்டினார் கையூம். தவிர, இந்தியத் தலைவர்களை இழித்தும் பழித்தும் இந்திய அரசாங்கம் அமெரிக் காவில் துர்ப்பிரசாரம் செய்து வருகிறது என்றும் சாடினார் அவர்.

ரங்கா பேசுகையில், 1935 ஆம் ஆண்டில், எங்கும் அமைதி நிலவியபோதே இந்தியப் பழங்குடியினர் வாழும் பகுதிகளை இந்திய விமானப்படை குண்டுவீசித் தாக்கியது என்று கண்டித்தார்.

"முசோலினியிடமிருந்து இந்திய அரசு (அடக்குமுறைப்) பாடம் கற்கவில்லை ; முசோலினிதான் இந்தியாவிடமிருந்து அந்தப் பாடத்தைக் கற்றார்! என்றாலும், இன்னமும், ஃபாஸிஸத்தையும் நாஜிசத்தையும், ஹிட்லர், டோஜோ ஆகியவர்களையும் எதிர்த்துப் போரிட்டு வருவதாக இந்திய அரசாங்கம் எந்த முகத்தோடு சொல்லிக் கொண்டிருக்கிறது என்று தெரியவில்லை" என்று மாட்டினார் ரங்கா.

காமன்வெல்த் உறவு உறுப்பினராயிருந்த என். பி. கரே, நிருவாகக் கவுன்சிலின் இந்திய உறுப்பினர்களே இங்கே அரசியல் குழப்பத்தை விளைவித்தவர்கள் என்று சாட்டப்பட்ட குற்றத்தை மறுத்தார். யுத்தம் சம்பந்தப்பட்ட காங்கிரசின் கொள்கையைக் குறிப்பிட்டு, "காங்கிரஸ் புண்படுத்தத் தயாராக இருந்தது; அடிக்கவும் துணிந்து நின்றது. ஆனால், முஸ்லிம் லீக் புண்படுத்த விரும்பியிருந்தும் அடிக்கத் துணியவில்லை" என்றார் கரே. உடனேயே, "முஸ்லிம் லீக் அடிக்கத் துணியாமலில்லை. எப்போது அடிக்க வேண்டும், எப்படி அடிக்க வேண்டும் என்பது எங்களுக்கு தெரியும்!" என்று சீறினார் லியாகத் அலி. "இந்தியர்களைப் பொறுத்தவரை, 1919ல் ஜெனரல் டயர் எப்படி நடந்து கொண்டாரோ அதேவிதமான கொடுமைக்காரர்களாகத்தான் இன்றைக்கும் இருக்கிறார்கள் பிரிட்டிஷ்காரர்கள். கடந்த சில ஆண்டுகளில் அரசாங்கம் கடைப்பிடித்த கொள்கைகளாலேயே நாட்டுமக்கள் கடுமையான சோதனைக்கு உள்ளாகியிருக்கிறார்கள்" என்று கூறி, கையூமின் வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்தார் லியாகத் அலி கான்.

"காங்கிரஸ்காரர்கள் சபையில் இல்லாதபோது நிருவாகக் கவுன்சிலின் இந்திய உறுப்பினர்கள் தங்கள் கடமையைச் செம்மையாக நிறைவேற்றியதாகச் சொல்லிக் கொண்டார்கள். ஆனால், அவர்கள் நடந்துகொண்ட முறை இந்தியாவின் முகத்திலேயே கரியைப் பூசிவிட்டது!" என்று சாடினார் தேசாய். "யுத்தம் தொடங்கியதிலிருந்து இதுவரை இந்தியாவில் 830 கோடி ரூபாய் கடனாக வசூலிக்கப்பட்டுள்ளது என்று நிதித்துறை உறுப்பினர் கணக்குக் கொடுத்திருக்கிறார். இந்தியா இழந்த மக்கள் எத்தனை பேர் என்பதற்குக் கணக்கு எங்கே? இந்தியாவின் ஸ்டெர்லிங் சேமிப்பு என்னவாயிற்று என்பதற்குரிய கணக்கு எங்கே? பசி, பட்டினி, உழைப்பு மூலம் இந்திய மக்கள் சம்பாதித்த பணத்துக்கு இப்படி ஒரு மொட்டைக் கணக்கைக் காட்டுவதை நாங்கள் ஏற்க முடியாது!" என்று கொதித்தார் தேசாய்.

கையூமின் வெட்டுத் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு, 61க்கு 53 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. அடுத்த

நாளே, முஸ்லிம் லீக் உறுப்பினர் ஈஸாக் ஸேட், யுத்தத்துக்குப் பிற்பட்ட திட்டம் மற்றும் அபிவிருத்திக்கான மானியக் கோரிக்கையில் ஒரு ரூபாய் குறைக்க வேண்டும் என்ற தீர்மானத்தைக் கொண்டுவந்தார். காங்கிரஸ் உறுப்பினர்களும் இதை ஆதரித்தார்கள். தீர்மானம் 59க்கு 48 என்ற வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றது. காங்கிரசும் முஸ்லிம் லீகும் ஒன்றுபட்டு விட்டதைக் கண்ட அரசாங்கம் பெருத்த ஏமாற்றம் அடைந்தது.

அடுத்து, நிதிமசோதா கடுமையான தாக்குதலுக்கு உள்ளாயிற்று. மார்ச் 26ல் இந்த மசோதா மீது பேசிய லியாகத் அலி கான், அரசாங்கத்தின் அதிகாரத்திலும் பொறுப்பிலும் பங்கில்லாத நாங்கள் நிதி மசோதாவை ஆதரிக்க முடியாது என்று 1941லிருந்தே முஸ்லிம் லீக் சொல்லி வந்திருக்கிறது; அரசாங்கம் விரும்பியவாறே செலவழிக்க நாங்கள் அவர்களுக்குப் பணம் ஒதுக்கித் தந்து கொண்டிருக்க முடியாது என்று தாக்கினர். முஸ்லிம் லீகின் அரசியல் லட்சியத்தை விளக்கி லியாகத் அலி கான் பேசியதாவது:

"இந்தியாவின் பூரண சுதந்திரமே முஸ்லிம் லீகின் லட்சியம். இந்த நாட்டின் இரண்டு முக்கிய வகுப்பினரான இந்துக்களும் முஸ்லிம்களும் இந்த நாட்டின் வளத்திலும் நலத்திலும் சமமான உரிமை கொண்டாட வாய்ப்பு இருந்தால்தான் இங்கே அமைதியும் செழுமையும் நிலைக்கும் என்பது எங்கள் திடமான நம்பிக்கை. அந்த வாய்ப்புக்கு வில்லங்கம் ஏற்படாதிருக்க வேண்டுமானல் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் தனித்தனி நாடுகள் அமைந்தாக வேண்டும். நாங்கள் பாகிஸ்தான் கேட்பது இந்தியாவை அடிமைப்படுத்த அல்ல; இந்தியா சுதந்திரமாக விளங்குவதற்கே நாங்கள் பாகிஸ்தான் கேட்கிறோம்!"

"எனக்கும் நண்பர் தேசாய்க்கும் இடையே ஏதோ 'ரகசிய ஒப்பந்தம்' இருப்பதாகக் காமன்வெல்த் உறவு உறுப்பினர் கரே சொன்னர். அது அப்பட்டமான கட்டுக்கதை என்பதை சபைத் தலைவருக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்" என்று குறிப்பிட்ட அவர், மேலும் பேசியதாவது: "பார்த்த பார்வையிலேயே இது அபத்தம் என்பது எல்லோருக்கும் விளங்கும்.

நானோ தேசாயோ, வைசிராய் நிருவாகக் கவுன்சிலின் இந்திய உறுப்பினர்களைப் போன்ற அரசியல் அனாதைகளல்ல. நாங்கள் இரண்டு பேரும் சக்தி வாய்ந்த இரண்டு அகில இந்தியக் கட்சிகளின் உறுப்பினர்கள். நாங்கள் எங்களுக்குள் ரகசியத் தனி ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. அப்படியே, இந்து—முஸ்லிம் பிரச்சினையிலோ அரசியல் திட்டம் சம்பந்தமாகவோ ஒப்பந்தம் ஏற்படுவதாக இருந்தால், அது காங்கிரசுக்கும் முஸ்லிம் லீகுக்கும் இடையிலேயே ஏற்பட வேண்டும்!" என்று காரசாரமாகப் பதில் கொடுத்தார் லியாகத் அலி கான்.

லியாகத்தைத் தொடர்ந்து தேசாய் பேசினார். ஐக்கிய நாடுகள் சபையின் ஸான் பிரான்ஸிஸ்கோ மாநாட்டுக்குத் தூதுக்குழு அனுப்பப்படுவதைக் குறிப்பிட்டு, இந்தத் தூதுக்குழு இந்தியாவின் சார்பில் அனுப்பப்படுவதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார் தேசாய்.

யுத்தத்தைப் பற்றி இந்திய மக்கள் என்ன கருத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை விளக்கிப் பேசிய தேசாய், காங்கிரஸ் விதித்த நிபந்தனைகளின்படிதான் இந்தியா யுத்த முயற்சியில் ஒத்துழைக்க முடியும் என்று வலியுறுத்தினார் :

"யுத்தத்தின் நோக்கம் என்ன என்பது தெளிவாக அறிவிக்கப்பட வேண்டும் என்று நாங்கள் கேட்டுக்கொண்டோம். இப்படிக் கேட்டதின் நோக்கம் வேறொன்றுமில்லை. இந்த யுத்தம் முடிந்த பிறகாவது எங்கள் நிலைமையில் மாறுதல் ஏற்படுமா என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவே அப்படிக் கேட்டோம். முதலாவது உலகப் போரின் போது நாங்களும் சேர்ந்து சண்டையிட்டோம் ; சிறிய நாடுகளுக்கும் சுதந்திரம் வேண்டும் என்ற லட்சியத்தை முன்வைத்தே போரிட்டோம். ஆனால் எங்களுக்கு ஏற்பட்ட அனுபவம் என்ன? யுத்தம் முடிந்த பிறகும் நாங்கள் அடிமைகளாகவே அடக்கி வைக்கப்பட்டோம். அதனாலேதான், இப்போது, எங்கள் நிலைமையை முன்கூட்டியே தெரிந்து கொள்வதற்காக, யுத்தத்தின் நோக்கங்களை விளக்கி விடுங்கள் என்று கேட்டுக்கொண்டோம். நீங்கள் சண்டைபோட வேண்டும் என்றால், அதற்கு வேண்டிய பணத்தை உங்கள் நாட்டிலேயே

திரட்டிக்கொண்டு சண்டை போடுங்கள். நீங்கள் (உங்களுக்குள்) சண்டை போட்டுக் கொள்ள எங்களிடம் பணம் கறந்துகொண்டு, அதற்காக நாங்கள் பெருமைப்பட வேண்டும் என்றும் எதிர் பார்க்கிறீர்கள். நடக்கக் கூடிய காரியமா அது? நிலைமை உங்களுக்குத் தெளிவாகியிருக்கும் என்றே நம்புகிறேன். உங்கள் வெற்றிச் செய்தி உங்களுக்கு விடுதலை வழங்கும் அதே நேரத்தில் எனக்கு அடிமைத்தனத்தையே தரும் என்றால், மனிதப்பண்பு உள்ளவர்களானால், நீங்களே அதை வெற்றி என்று கருத முடியாது; அதை உண்மையான வெற்றி என்று ஏற்கவும் முடியாது. இதை விளங்கிக் கொண்டீர்களென்றால் உங்கள் கார்களிலும் தொப்பிகளிலும் உள்ள வெற்றிச் சின்னமான 'வி' என்னும் அடையாளத்தைக் கிழித்தெறியுங்கள்!" என்று கொந்தளித்தார் தேசாய்.

இறுதியாக, "இந்தச் சபையில் ஏற்படுத்தி வைக்கப்பட்டுள்ள வசதிச் சாதனங்களைத் தவிர்த்து இந்த யுத்தத்தால் இந்த நாட்டுக்கு விளைந்த நன்மை ஏதாவது உண்டா?" என்ற கேள்வியை எழுப்பிக்கொண்டு, அவரே அதற்கு உருக்கமாகவும் உணர்ச்சிகரமாகவும் விடையும் தந்தார்:

"நாட்டிலே பஞ்சம் தாண்டவமாடுகிறது; கொள்ளைநோய் பரவிக் கிடக்கிறது; தரித்திரக் கோலம் தலைவிரித்து ஆடுகிறது; கடன்சுமை ஏறிக்கொண்டே போகிறது; அரசாங்கத்தின் நடவடிக்கை ஒவ்வொன்றும் நாட்டை உறிஞ்சுவதை நோக்கமாகக் கொண்டிருப்பதால் நாட்டின் உற்பத்தி ஊற்றே வறண்டு கிடக்கிறது. இதைப் பற்றி எல்லாம் கவலைப்படுவாரில்லை. இந்த நிலையிலும், நாம் மசோதாவை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும் என்றே எதிர் பார்க்கிறார்கள். ஆனால் ஒன்று: இத்தனை இருட்டுக்கு நடுவிலேயும் நான் நம்பிக்கை தளர்ந்து போகவில்லை; நம்பிக்கையுடனேயே, கவிஞருடன் சேர்ந்து நானும் வேண்டுகிறேன்:

"எந்தாய்! கிழக்கை இனிதே தொடு நீ:
இனிதே தொடு நீ:
எழுந்தோர் புதிய
நம்பிக்கை படர,
ஏற்றிடு விளக்கை
ஏற்றிடு நீயே!"

அது நிறைவேறிய பிறகே,—கிழக்கிற்கு விடிவு ஏற்பட்ட பிறகே—நாங்கள் இத்தகைய மசோதாக்களின் மீது வாக்களிப்போம்" என்று உருக்கமாகவும் உறுதியாகவும் பேசினார் தேசாய்.

நிதிமசோதா சபையில் தோல்வியடைந்தது. அடுத்தநாளே, சபை அந்த மசோதாவை நிறைவேற்ற வேண்டும் என்று வைசிராய் அனுப்பிய பரிந்துரை வந்தது. மசோதாவைத் தாக்கல் செய்வதற்கு விடுக்கப்பட்ட கோரிக்கையைத் தேசாய் எதிர்த்து வாதாடினார். அவருடைய பேச்சு சுருக்கமாகவும் நினைவை விட்டு நீங்காததாகவும் அமைந்தது; அதுவே, சட்டசபையில் அவருடைய கடைசிப் பேச்சாகவும் அமைந்தது.

"முந்தாநாள்தான், பிரிட்டிஷ் வானொலி அறிவிப்பாளர் மிக உற்சாகமான குரலில், 'பெர்லின் மாநகரம் தன்னைப் புனிதப் படுத்திக் கொள்வதற்காக நெருப்பில் குளித்துக் கொண்டிருக்கிறது!' என்று அறிவித்ததைக் கேட்டேன். இதிலே பொதிந்துள்ள உண்மையை உலகம் தெளிவாக அறிந்துகொண்டு விட்டது என்பதில் யாதொரு ஐயமுமில்லை. பெர்லின் மாநகரம் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்வதற்காக நெருப்பிலே நீராடுகிறது என்றால், இதை விட அதிகமாகக் கழுவப்பட வேண்டிய ஏகாதிபத்திய ஸ்தாபகர்கள் பலர் உலகத்தில் இருக்கிறார்கள் என்றே நம்புகிறேன். இங்கிலாந்தின் சுதந்திரத்தைப் பறிக்க முயன்ற பாவத்துக்காக பெர்லின் மாநகரம் தன்னை எரித்துக் கொள்ள வேண்டும் என்றால், இங்கிலாந்து, இதுபோன்ற பல பாவங்களுக்காகத் தன்னை எரித்துக் கொண்டாக வேண்டும். பெர்லின் மட்டுமல்ல, வேறு பல ஏகாதிபத்தியங்களும் தங்கள் பழைய பாவங்களுக்காகக் கசிந்து அழும் காலம் வந்துவிட்டது. வானொலி

அறிவிப்பாளர் எல்லா ஏகாதிபத்தியவாதிகளையும் குறித்துத்தான் அப்படிச் சொன்னார் என்றே நான் கருதுகிறேன். இந்த நல்ல அறிவுரையை இப்போதாவது பிரிட்டன் ஏற்றுப் புரிந்து கொள்ளும் என்றும், இனிமேலும் சாக்குப் போக்குகள் சொல்லித் தட்டிக் கழிக்காது என்றும் நான் நம்புகிறேன். மசோதாவை நிராகரிக்கக் கோரிய தீர்மானத்துக்கு ஆதரவாக நேற்று நான் எடுத்துரைத்தது போல, இந்த நாட்டு விவகாரங்களை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நாங்களே நிர்வகிக்க வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். அதன் காரணமாகவே, நேற்று என்னோடு சேர்ந்து வாக்களித்த நண்பர்களையும், எங்களோடு வாக்களிக்கா விட்டாலும் பேரரசின் ஆணையை மீறவே விரும்புகின்ற மற்ற உறுப்பினர்களையும் இந்த மசோதாவை நிராகரிக்குமாறு வேண்டிக் கேட்டுக்கொள்ளுகிறேன்'' என்று முடித்தார் தேசாய்.

மசோதாவைத் தாக்கல் செய்ய அனுமதி கோரும் (அரசாங்கத்) தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டு, 57க்கு 50 என்ற வாக்கு வித்தியாசத்தில் தோல்வியடைந்தது. முதல் நாளில் போலவே, இந்தத் தீர்மானத்தின் மீதும் காங்கிரஸ், முஸ்லிம் லீக், தேசீயக் கட்சி உறுப்பினர்கள் அனைவரும் வைசிராயின் சிபாரிசை எதிர்த்து வாக்களித்தார்கள்.

இதுதான் ஐந்தாவது சட்டசபையின் கடைசி கூட்டத்தொடர். மிக நீண்டகாலம் நடைபெற்ற சட்டசபையும் இதுவே. 1934 கடைசியில் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தச் சபை இதுவரை (1945) நீடித்திருந்தது. இந்திய அரசியல் பிரச்சினையின் தீர்வைப் பொறுத்தே அடுத்த சட்டசபைக்கான புதிய தேர்தல் நடைபெற வேண்டியிருந்தது.

### அத்தியாயம் 8

# கடைசிக் கட்டம் (1945—1947)

ஐரோப்பாவில் யுத்தம் முடிவடையுமுன்பே, இந்தியா மந்திரியிடம் ஆலோசனை கலப்பதற்காக 1945 மே மாதத்தில் லண்டனுக்குப் பறந்தார் வைசிராய். அங்கிருந்து திரும்பியதும், ஜூன் 15ல், புதிய நிருவாகக் கவுன்சில் அமைப்பது பற்றி இந்தியத் தலைவர்களுடன் கலந்து ஆலோசிக்கப் போவதாக அறிவித்தார் அவர். இந்தப் புதிய கவுன்சிலில் உயர்சாதி இந்துக்கள் மற்றும் முஸ்லிம்களின் பிரதிநிதிகள் சம அளவில் இருப்பார்கள் என்றும் தெரிவித்தார். மேலும் வைசிராயும் தலைமை சேனாதிபதியும் தவிர, கவுன்சிலின் மற்றெல்லா உறுப்பினர்களும் இந்தியர்களாகவே இருப்பார்கள் என்றும், கவுன்சில் அப்போதைய அரசியல் சட்டத்தின்படிச் செயலாற்றும் என்றும் அறிவிக்கப்பட்டது. அத்துடன், நிரந்தரமான அரசியல் சட்டம் ஒன்று ஏற்றுக்கொள்ளப்பட்டு அமுலுக்கு வரும்வரை இந்த இடைக்கால அரசாங்கமே பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் காரியங்களை நடத்திவரும் என்றும் அறிவிக்கப்பட்டது.

தம்முடைய திட்டத்தின்படியே, காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களை எல்லாம் உடனடியாக விடுதலை செய்யுமாறு வைசிராய் ஆணை பிறப்பித்தார். அரசியல் சிக்கலைத் தீர்ப்பதற்காக வைசிராய் நடத்தத் திட்டமிட்டிருந்த மாநாடும் ஜூன் 25 முதல் ஜூலை 14 வரை சிம்லாவில் நடைபெற்றது. ஆனாலும், முஸ்லிம் லீக் உறுப்பினர் அல்லாத எந்த முஸ்லிமும் வைசிராயின் கவுன்சிலுக்கு நியமிக்கப்படக் கூடாது என்று ஜின்னா சொல்லி விட்டதாலும் அது காங்கிரசுக்கு உடன்பாடாக இல்லாததாலும் மாநாடு தோல்வியில் முடிந்தது.

ஜூலை இறுதியில் இங்கிலாந்தில் தொழிற்கட்சி அரசாங்கம் பதவிக்கு வந்தது. ஆகஸ்டில் ஜப்பான் தோல்வியடைந்து சரணடைந்தது. செப்டம்பர் 19ல் "விரைவிலேயே இந்தியாவில் பொறுப்பாட்சியை ஏற்படுத்துவதுதான்" பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொள்கை என்று வைசிராய் மற்றொரு அறிக்கையை வெளியிட்டார். அதற்கு முதல்படியாக, மத்திய மற்றும் மாநில (மாகாண)ச் சட்டசபைகளுக்குப் புதிய தேர்தல்கள் நடத்தப்படும் என்றும் அதைத் தொடர்ந்து அரசியல் சட்ட அமைப்புக் குழு கூட்டப்படும் என்றும் அறிவிக்கப்பட்டது.

**சட்டசபைகளுக்குத் தேர்தல் :**

இந்த அறிவிப்பின் படியே, 1945—46 கூதிர் காலத்தில் மத்திய மற்றும் மாநிலச் சட்ட சபைகளுக்குத் தேர்தல்கள் நடத்தப்பட்டன. காங்கிரசும் முஸ்லிம் லீகும் மக்கள் கருத்தின் பிரதிநிதிகளாக வெற்றி பெற்று நின்றன. மிக இறுகலான வாக்குரிமை முறையில் மத்திய சட்டசபைக்கு நடந்த தேர்தலில், காங்கிரஸ் 91.3 சதவீதம் வாக்குகளைப் பெற்று, பொதுத் தொகுதிகளில் 57 இடங்களைப் பிடித்தது. முஸ்லிம்களுக்கு ஒதுக்கப்பட்ட 30 (தனித்தொகுதி) இடங்களையும் 86.6 சதவீதம் வாக்குகளுடன் முஸ்லிம் லீக் கைப்பற்றியது. மாநிலச் சட்டசபைகளுக்குரிய தேர்தலில், காங்கிரஸ் 55.5 சதவீத வாக்குகளுடன் 930 இடங்களைப் பெற்றது ; 507 முஸ்லிம் தனித்தொகுதிகளில், 74.3 சதவீதம் வாக்குகளுடன் 427 இடங்களை முஸ்லிம் லீக் பெற்றது. யுத்த காலத்தில் தனக்குக் கிடைத்த வாய்ப்புக்களை முஸ்லிம் லீக் வீணாக்கவில்லை என்பதும் வகுப்புவெறியைப் பரப்புவதில் அது கணிசமாக வெற்றி பெற்றது என்பதும் இதிலிருந்து தெளிவாயிற்று. இப்போது, ஜின்னா, தம்முடைய கட்சியே பெரும்பான்மையான முஸ்லிம்களின் ஆதரவைப் பெற்றுள்ளது என்று உரிமை கொண்டாட முடிந்தது. நாட்டிலுள்ள வகுப்புவாதப் பத்திரிகைகளுக்கு எதிராகத் திட்டமிட்ட எதிர்ப்பு அணியை உருவாக்குவதிலும், வங்காளம் மற்றும் பஞ்சாப் மாநிலங்களிலுள்ள விவசாயப் பொதுமக்களுடன் நெருக்கமான தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதிலும் தேசீய இயக்கம்

தோல்வி கண்டதனுல் ஏற்பட்ட முதலாவது கசப்பான விளைவு இது.

இந்த நிலைமை இவ்வாறு இருக்க, இந்தியப் பொதுமக்களின் தீவிரவாத உணர்ச்சியும் விரைவாக எழுச்சி பெற்றுக் கொண்டிருந்தது. கல்கத்தா, பம்பாய் மற்றும் பல நகரங்களில் இந்தியத் தேசிய ராணுவத்துக்கு ஆதரவாக நடந்த பெரிய ஆர்ப்பாட்டங்களில் இந்தத் தீவிரத்தைத் தெளிவாகக் காண முடிந்தது. 1946 பிப்ரவரியில் பம்பாய், கராச்சி, சென்னை ஆகிய இடங்களில் இந்தியக் கப்பல் படையில் ஏற்பட்ட கிளர்ச்சிகளும், அவைகளுக்கு அனுதாபம் தெரிவிக்கும் முறையில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் தொழிலாளர்களும் மற்றவர்களும் நடத்திய வேலை நிறுத்தங்களும் நாட்டு மக்களிடையே ஏற்பட்டிருந்த தேசிய உணர்வின் தீவிரத்தைத் தெளிவாக வெளிப்படுத்தின. பொது மக்களிடையே ஏற்பட்ட அதிருப்தி மேலும் பரவியது. தொழிலாளர்கள், மாணவர்கள் மற்றும் போலீஸ்காரர்களும் கூட இந்த வேலை நிறுத்த ஆர்ப்பாட்ட அலைகளில் பங்கு கொண்டார்கள்; ராணுவமும் நிருவாகமும் கூட இந்தப் பொது அதிருப்தி அலைக்குத் தப்பவில்லை! எனவே, அடுத்துவந்த பொது ஜனப் போராட்டங்களின் போது, ஆங்கில அதிகாரிகளின் வழக்கமான அடக்குமுறைச் சாதனங்கள் கூட அவர்களுக்குப் போதுமான அளவில் கைகொடுக்கவில்லை.

### ஆருவது சட்டசபை:

இந்தச் சூழ்நிலையிலேதான் ஆருவது சட்டசபையின் முதலாவது கூட்டத்தொடர் 1946 ஜனவரி 21ல் தொடங்கியது. இந்தச் சட்டசபையின் உறுப்பினர்களில் பெரும்பாலோர் புதியவர்கள். காங்கிரஸ் உறுப்பினர்கள் காந்திக் குல்லாவுடன் உலாவினுர்கள்; முஸ்லிம் உறுப்பினர்கள், தலையில் துருக்கிக் குல்லாவுடனும் சட்டைக் காஜாக்களில் ஜின்னுவின் சிறிய படத்துடனும் காட்சியளித்தார்கள்.

சரத் சந்திர போஸை விடுதலை செய்ய வேண்டும் என்று ஐந்தாவது சட்டசபையில் பெரிய போரே நடந்ததல்லவா? அவர் தான், இந்த ஆருவது சட்டசபையில் காங்கிரஸ் கட்சியின்

தலைவராக வீற்றிருந்தார். ஆஸஃப் அலி காங்கிரஸ் கட்சியின் துணைத் தலைவர். முன்பு போலவே ஜின்னு முஸ்லிம் லீக் கட்சியின் தலைவராகவும் லியாகத் அலி கான் அதன் துணைத் தலைவராகவும் இருந்தார்கள். காங்கிரஸ் உறுப்பினர்களிலும் முஸ்லிம் லீக் உறுப்பினர்களிலும் பெரும்பாலானவர்கள் நெடுங் காலம் ஒன்ருக உழைத்தவர்களாகையால், சபையிலே ஒருவகை யான நல்லிணக்க உணர்வு பரவியிருந்தது. ஆயினும், நாட்டிலே புதிய சில சக்திகள் தலை தூக்கியிருப்பதைப் பற்றிய தெளிவான உணர்வும் அவர்களின் நெஞ்சில் இருந்து கொண்டுதான் இருந்தது.

இந்தப் புதிய சட்டசபையின் தோரணை, முதல் நாளிலேயே என். ஜி. ரங்காவால் தொடங்கி வைக்கப்பட்டது. "ஜப்பானுடன் நடந்த யுத்தம் முடிந்த பிறகும் இந்தோனீசியாவிலும் இந்தோ சீனுவிலும் பிரிட்டிஷ் அரசாங்கம் கடூரமான அடக்குமுறை நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறது. இந்தக் கொடிய நடவடிக்கைகளுக்கு இந்திய அரசாங்கம் ஒத்துழைப்புத் தர முடியாது என்று மறுத்திருக்க வேண்டும். ஆனல், இந்திய அரசாங்கம் அப்படிச் செய்யவில்லை. இதுபற்றி விவாதிப் பதற்காகச் சபையின் நடவடிக்கைகளைத் தள்ளிவைக்க வேண்டும்" என்று கோரும் ஒத்திவைப்புத் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார் ரங்கா. சட்டசபையைக் கலந்து ஆலோசிக்காமலே, அந்த நாடுகளுக்கு இந்தியப் படைகளை அனுப்புவது என்று இந்திய அரசு முடிவு செய்ததை அவர் வன்மையாகக் கண்டித்தார். இந்தக் கிழக்கு நாடுகளிலே நடைபெற்று வருகிற யுத்தம் வசதியாளிகளுக்கும் வறுமையாளிகளுக்கும் இடையே நடை பெறும் யுத்தம் என்று விளக்கிய ரங்கா, இந்தோனீசியாவிலும் இந்தோ சீனுவிலும் (முறையே) டச்சு மற்றும் பிரஞ்சு ஏகாதி பத்தியவாதிகள் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்குத் துணையாக இந்திய அரசு படையனுப்பியதைக் கடுமையாகத் தாக்கினுர்.

சரத் சந்திர போஸ் ரங்காவின் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினுர்: "பிரிட்டிஷ் அரசாங்கம் டச்சு அரசாங்கத்துக்குச் செய்ய வேண்டிய தனது தார்மிகக் கடமைகளைப் பற்றிப் பேசு

கிறது. இந்தத் தார்மிகக் கடமை என்ன தெரியுமா? மேற்கத்தியச் சுரண்டல் கூட்டம் ஒன்று கிழக்கத்திய நாடுகளிலே தன்னுடைய காலனி ஆதிக்கத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்கு மற்றொரு மேற்கத்தியச் சுரண்டல் கூட்டம் செய்யும் உதவிதான் அந்தத் தார்மிகக் கடமை. ஏகாதிபத்திய சக்திகள் இந்தியாவில் தங்கள் மேலாதிக்கத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காக மட்டுமே போராடவில்லை; பிரெஞ்சு, டச்சு, அமெரிக்க ஏகாதிபத்தியங்களை இங்கே (கிழக்கில்) நிலை நாட்டவும் அவை போராடி வருகின்றன!'' இவ்வாறு சாடிய சரத் போஸ், இந்திய அரசாங்கத்துக்கும் அதன் பொறுப்புணர்ச்சியை நினைவு படுத்தினார்: ''இந்த அரசுக்குச் சிறிதளவாவது தார்மிகப் பொறுப்புணர்ச்சி இருக்குமானால் அது இந்திய மக்களைப் பற்றியதாகவே இருக்க வேண்டும்; தங்கள் அனுதாபமும் ஆதரவும் கிழக்கத்திய நாடுகளிலுள்ள மக்களுக்கே (ஆட்சிகளுக்கு அல்ல) என்று இந்திய மக்கள் ஒரே குரலில் அறுதியிட்டு உறுதி கூறியிருப்பதை அரசாங்கம் மறந்து விடக்கூடாது'' என்று எச்சரித்தார் போஸ்.

இந்தோனீசியாவில் புதிதாக நிறுவப்பட்ட குடியரசின் உரிமையை அழிக்கவே இந்தியா தனது படைகளை அனுப்பியுள்ளது என்பதை அறிந்து திடுக்கிட்ட ஜின்னா, ''இந்த அரசாங்கம் பல பொய்களைச் சொல்லித் தனது நடவடிக்கை சரியானதே என்று காட்ட முயல்கிறது'' என்று கண்டித்தார்.

காங்கிரஸ் மற்றும் முஸ்லிம் லீக் உறுப்பினர்களில் பலர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் செயலை வன்மையாகக் கண்டித்து, ஒத்திவைப்புத் தீர்மானத்தை ஆதரித்தார்கள். அதன்பேரில், வாக்கெடுப்பு இல்லாமலே தீர்மானம் சபையில் நிறைவேறியது.

இந்திய அரசாங்கம் (அரசியல்) கைதிகளை விடுதலை செய்யாததைக் குறித்து அதைக் கண்டிப்பதற்காக மோகன்லால் சாக்சேனா ஜனவரி 23ல் ஒத்திவைப்புத் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார். தீர்மானத்தை முன்மொழிந்து பேசுகையில், ''சிறையில் இருக்கும் இவர்களில் யார் மீதாவது திட்டவட்டமான குற்றச்சாட்டுகள் ஏதேனும் உண்டா? அப்படியிருந்தால், அது

ஏன் நீதிமன்றத்துக்குக் கொண்டு செல்லப்படவில்லை?'' என்று அரசாங்கத்தைக் கேட்டார் சாக்சேனு. ''அரசாங்கம் தேசீய வாதிகளை விசாரணையில்லாமல் சிறையில் அடைத்துக்கொண்டே போகுமானல், அது தன்னுடைய நடத்தைக்காக வருந்த வேண்டிய காலம் வெகு விரைவிலேயே வந்துவிடும்!'' என்றும் அவர் எச்சரித்தார். ''அவசரச் சட்டத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டு அரசியல் கைதிகளை விடுதலை செய்வதே புத்தி சாலித்தனம்'' என்று அவர் அரசாங்கத்துக்கு அறிவுரை கூறினர்.

எம். ஆர். மசானி தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில் ஜெயப்பிரகாஷ் நாராயண், ராம் மனேகர் லோகியா, சர்தார் சர்துல் சிங் கவீஷர், கிருஷ்ணன் நாயர் ஆகியோரின் மீது எடுக்கப் பட்ட நடவடிக்கையைக் குறிப்பிட்டுக் கண்டனம் தெரிவித்தார். இங்கிலாந்தில் தொழில்கட்சி அரசாங்கம் பதவியில் இருக்கும் போது இந்தச் சோஷலிஸ்ட் தலைவர்கள் சிறையில் அடைக்கப் பட்டிருப்பது வருந்தத் தக்கது என்ருர். ஜெயப்பிரகாஷ் நாராயணைப் பற்றிப் பேசும் போது, ''இந்தியச் சமுதாயம் குடியாட்சி முறையிலேயே சமதர்ம (சோஷலிச) சமுதாயமாக மாறவேண்டும் என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டுள்ள ஒரே இந்தியத் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயண்'' என்று குறிப்பிட்டார் மசானி. அரசியல் கைதிகள் அனைவரையும் விடுதலை செய்யவேண்டும் என்றும் அவர் அரசாங்கத்தை வற்புறுத்தினர்.

கல்கத்தாவைச் சேர்ந்த அப்துர் ரஹ்மான் ஸித்திகி, தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில் ''இந்தியத் தேசீய ராணுவ வீரர்களை இவ்வளவு எளிதாக விடுதலை செய்த இந்திய அரசாங்கம், பிரிட்டிஷ் இந்தியப் பாதுகாப்புக்காகவே சட்டம் மற்றும் நியாயத்துக்கு உட்பட்ட முறையில் இந்த நால்வரையும் சிறையில் வைத்திருக்கிறது என்று சொல்லப்படுவதை என்னல் நம்பவே முடியவில்லை'' என்ருர்.

இந்த ஒத்திவைப்புத் தீர்மானமும் வாக்கெடுப்பும் இல்லாமலே சட்டசபையில் நிறைவேறியது.

### சட்டசபைத் தலைவர் தேர்தல் :

ஜனவரி 24 ஆம் தேதி சட்டசபைத் தலைவர் தேர்தல் நடைபெற்றது. காங்கிரஸ் கட்சி ஜி. வி. மாவ்லங்கரை அந்தப் பதவிக்குத் தனது வேட்பாளராக நிறுத்தியது; முஸ்லிம் லீக் கோவாஸ்ஜி ஜஹாங்கீரை நிறுத்தியது. அரசாங்கம், தனது வேட்பாளர் யாரையும் நியமிக்காவிட்டாலும், லீக் வேட்பாளரின் வெற்றிக்காக அது தீவிரமாக வேலை செய்தது. கடைசி நேரம் வரை,—அதாவது ஜனவரி 24 ஆம் தேதி காலை வரை—அரசாங்கக் கொறடாக்கள், லீக் வேட்பாளருக்கு ஆதரவு திரட்டும் வேலையில் தீவிரமாக ஈடுபட்டு இருந்தார்கள்.

ஒவ்வொரு கட்சியினரும் தங்களுக்கு ஆதரவு திரட்டுவதில் மும்முரமாக ஈடுபட்ட இந்தத் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளர் மாவ்லங்கர் மூன்று வாக்குகள் அதிகமாகப் பெற்று வெற்றி அடைந்தார். காங்கிரஸ் உறுப்பினர்கள் "ஜெய் ஹிந்த்" முழக்கி (மாவ்லங்கரின்) வெற்றியைப் பாராட்டினார்கள். தேர்தலில் முஸ்லிம் லீகும் அரசாங்கச் சார்பு உறுப்பினர்களும் ஐரோப்பியப் பிரதிநிதிகளும் ஒன்று சேர்ந்து காங்கிரஸ் வேட்பாளரை எதிர்த்து நின்றார்கள். பி. ஜே. க்ரிஃபித், ஐரோப்பிய உறுப்பினர்களின் சார்பில் புதிய தலைவரைப் பாராட்டி, "இந்தச் சட்டசபை முடிவு பெறுவதற்குள் இது ஒரு கீழ்நிலைச் சபை என்ற நிலைமை மாறி முழுஉரிமை பெற்ற சட்டசபையாக மலரும் என்று நம்புகிறோம்" என்று சொன்னபோது, மற்றெல்லா உறுப்பினர்களும் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்; லியாகத் அலிகான்மட்டும். "இல்லை!" என்று இரைந்தார்.

### இ. தே. ரா. அதிகாரிகளை விடுதலை செய்யக் கோரி நிர்ப்பந்தம் :

இந்தச் சட்டசபையின் முதல் கூட்டத்தொடரில் பல உறுப்பினர்கள் இந்தியத் தேசீய ராணுவ வீரர்களை விடுதலை செய்யுமாறு பலமுறை கோரினார்கள். பகதூர்கர் முகாமில் வைக்கப்பட்டுள்ள இந்தியத் தேசீய ராணுவ வீரர்களுக்கு

இழைக்கப்படும் கொடூரங்களைப் பற்றி விவாதிப்பதற்காகச் சபை நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டும் என்ற தீர்மானம் ஒன்றை திவான் சமன் லால் ஜனவரி 30 ஆம் தேதி கொண்டு வந்தார். "சுபாஷ் சந்திரபோஸ் ஊட்டிய எழுச்சியால் இந்தியத் தேசீய ராணுவமாக உருவான சுமார் 3000 வீரர்கள் ஜெர்மனியிலிருந்து இங்கே கொண்டுவரப்பட்டு பகதூர்கர் முகாமில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அங்கே அவர்கள் நடத்தப்படும் முறை மனிதத் தரத்துக்குகந்ததாக இல்லை. கொடுமைகளுக்கு எதிராகக் குரல் கொடுத்ததற்காகவும் தங்கள் சுதந்திரத்துக்காகப் போராடியதற்காகவுமே அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டுக் கொடுமைப் படுத்தப்படுகிறார்கள்" என்று உருக்கமாக எடுத்து உரைத்தார் சமன் லால்.

தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய ஸ்ரீபிரகாசா, "இந்திய அரசாங்கத்துக்கு இ. தே. ரா. வீரர்களின் மீது எந்த உரிமையும், சட்டப்படியான உரிமையோ தார்மிக உரிமையோ, கிடையாது" என்றார். அவர் மேலும் பேசுகையில், "உண்மையில் இந்த வீரர்கள் இந்திய அரசாங்கத்தால் வெளிநாடுகளில் கைவிடப் பட்டவர்கள்" என்று குறிப்பிட்டார். "இந்த வீரர்கள் பிரிட்டிஷ் அதிகாரிகளாலேயே ஜப்பானியரிடம் ஒப்படைக்கப்பட்டவர்கள் என்பது உண்மையல்லவா? (எதிரிகளிடம் ஒப்படைக்கப்பட்ட) அவர்கள் என்னதான் செய்திருக்க வேண்டும் என்று இந்த அரசாங்கம் எதிர்பார்க்கிறது? அவர்களுக்கு ஏற்பட்ட சூழ்நிலையில் அவர்கள் எளிதாகவே தங்கள் நாட்டுக்கு எதிராகத் திரும்பியிருக்கலாம்; ஆனால், இந்த வீரர்கள் அப்படிச் செய்யவில்லை என்பது பெருமைக்கு உரியது. பொறுப்பு வாய்ந்த அரசாங்கமாக இருந்தால், இந்திய அரசாங்கம் அவர்களைப் பாராட்டிச் சிறப்புச் செய்திருக்க வேண்டும். இந்த அரசாங்கமோ, பழி வாங்கும் வெறி உணர்ச்சிக்கு ஆட்பட்டு, அவர்களைச் சிறைப்படுத்தியும், கேள்விகள் கேட்டும் (விசாரணை நடத்தியும்), கொடுமைப்படுத்தியும் அவர்களின் இதய எழுச்சியையே கொன்றுவிட முயல்கிறது. நல்ல வேளை, அவர்கள் அந்த முயற்சியில் வெற்றி பெறவில்லை!" என்று பெருமிதத்தோடு எடுத்துரைத்தார் ஸ்ரீபிரகாசா.

லியாகத் அலி கான் இந்தத் தீர்மானத்துக்கு நிபந்தனைக்கு உட்பட்ட ஆதரவையே வழங்கினார். "இந்த வீரர்களில், தாங்களாகவே முன்வந்து இந்த ராணுவத்தில் சேர்ந்தவர்கள் மிகமிகக் குறைவே. ஆகையால் இ. தே. ரா. வீரர்களின் மீது இந்திய அரசாங்கம் வழக்குத் தொடுத்திருக்கவே வேண்டியதில்லை" என்றார் அவர். காங்கிரஸ், இந்த வீரர்களைத் தனக்குச் சாதக மான பிரசாரத்துக்கு ஒரு சாதனமாகப் பயன்படுத்தி வருகிறது என்றும் அவர் குற்றஞ்சாட்டினார்.

லியாகத் அலி கான் தொடர்ந்து பேசியதாவது: "தலைவ ரவர்களே! தீர்மானத்தைப் பிரேரேபித்த மதிப்புக்குரிய உறுப் பினரும் வேறு சில உறுப்பினர்களும் அவர்களை (இ. தே. ரா. வீரர்களை)த் தேசபக்தர்கள் என்று வருணித்தார்கள். ஆனால், (உண்மை வேறு;) சிலர், அதிகமான சவுகரியங்கள் கிடைக்கும் என்ற நம்பிக்கையால் இதிலே சேர்ந்தார்கள்; மற்றவர்கள் திரு. போஸின் தலைமையில் தங்கள் சாதியின் ராச்சியத்தை,—அதாவது, திரு. போஸுடைய—(இந்து) சாதியின் ராச்சியத்தை—இந்த நாட்டில் நிறுவி விடலாம் என்ற நம்பிக்கையில் இதிலே சேர்ந்தார்கள். வேறு சிலர், இதிலே சேராவிட்டால் இந்த ராணுவம் இந்தியாவுக்கு வரும்போது ஏற்படும் சுதந்திரம் ஒரு வகுப்பினருக்கு உரியதாகி மற்ற வகுப்பினரை அடக்குவதாக உருவாகி விடும் என்று அஞ்சியே இதிலே சேர்ந்தார்கள். இப்போது விசாரிக்கப்பட்டு வரும் கேப்டன் அப்துர் ரஷீத் கொடுத்துள்ள வாக்குமூலத்தில் இது தெளிவாக உள்ளது" என்றார் லியாகத்.

ஆனாலும் லியாகத் அலி கான் முஸ்லிம் லீகின் சார்பில் அவர்களுக்கு அநுதாபம் தெரிவித்துக் கொண்டார். இந்தத் தீர்மானத்தின் மீது பலரும் பேசியதோடு சரி; அதன்மீது வாக்கெடுப்பு நடத்தப்படவில்லை.

ஜனவரி 4ஆம் தேதி பண்டித கோவிந்த மாளவியா, இந்தியத் தேசீய ராணுவ அதிகாரிகள் மற்றும் சிப்பாய்கள் மீதான விசாரணையைக் கைவிட வேண்டும் என்றும் சிறையிலுள்ள மற்ற அரசியல் கைதிகள் அனைவரும் விடுதலை செய்யப்பட வேண்டும்

என்றும் கவர்னர் ஜெனரலுக்குச் சிபாரிசு செய்யும் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தார். இ. தே. ரா. சிப்பாய்களையும் அதிகாரிகளையும் தியாக வீரர்களாகவே இந்தியமக்கள் மதிக்கிறார்கள்; மக்களின் இந்த உணர்ச்சிக்கு அரசாங்கம் மதிப்பளிக்க வேண்டும், என்று அவர் கேட்டுக் கொண்டார். மேலும் பேசுகையில், "ஜெயப்பிரகாஷ் நாராயண், அச்சுத பட்டவர்த்தன் போன்றவர்கள் சுதந்திரமாகத் தங்கள் நாட்டு அரசியல் வாழ்வில் பங்கு கொள்ள முடியாதபடித் தடுத்து வைக்கப்பட்டிருக்கும் வரையிலே, ஒத்துழைப்பு, நல்லெண்ணம் என்பதெல்லாம் வெறும் பேச்சே; அந்தப் பேச்சு சிறுபிள்ளைத்தனமானதும் கூட" என்று இடித் துரைத்தார்.

தாக்கூர் தாஸ் பார்கவா, காட்கில், சசாங்க சேகர் சன்யால், டி. பி. கார்மார்க்கர் மற்றும் பலர் மாளவியாவின் தீர்மானத்துக்கு ஆதரவு தெரிவித்துப் பேசினார்கள்.

தீர்மானத்தின் மீது நிகழ்த்திய ஆற்றல் வாய்ந்த உரையில் சரத் சந்திர போஸ் குறிப்பிட்டதாவது: "தங்கள் தலைவரைப் பின்பற்றி(ப்போராடி)ய ஆயிரக்கணக்கான இந்தியத் தேசிய ராணுவத்தினர் சுதந்திரப் போராட்ட வீரர்களாகவே இந்திய மக்களால் என்றென்றும் மதித்துப் போற்றப்படுவார்கள். இந்தியப் பொதுமக்களைப் பொறுத்தவரையில் ஷா நவாஸுக்கும் அப்துர் ரஷீதுக்கும் இடையே எந்த வேறுபாடும் இல்லை." இவ்வாறு எடுத்துரைத்த போஸ், அவர்கள் அனைவரையும் நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டும் என்றும் அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்.

தீர்மானத்தை ஆதரித்து ஆஸஃப் அலி பின்வருமாறு பேசினார்: "இந்திய ராணுவம் என்னதான் சீராக அமைக்கப் பட்டதாக இருந்தாலும், முக்கியமானதோர் உந்துதல்,—எந்த நிலையிலும் பின்விளைவை எதிர்பாராமல் போரிட்டுத் தங்கள் உயிரையே பணயம் வைக்கும் படியான ஓர் உணர்வை வீரர்களுக்குத் தரும்படியான ஓர் உந்துதல்—அதனிடம் இல்லை. இ. தே. ரா. அதிகாரிகளின் மீது நடந்துவரும் விசாரணையில் இந்த உண்மை தெளிவாகப் புலப்பட்டு விட்டது. அவர்கள் எதற்காகப் போரிடு

கிறார்கள் என்ற ஒரு நோக்கம் இந்தியப் படைவீரர்களுக்குத் தெளிவாகத் தரப்பட்டதே இல்லை. ஆனாலும், தங்களுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்த போது, இ. தே. ரா. அதிகாரிகளும் சிப்பாய்களும் இந்தியாவின் நலன் என்ற நோக்கில் சிறிதும் தளராமல் நின்றிருக்கிறார்கள் ; அது மட்டுமல்ல, மிகமிகப் பாதகமான சூழ்நிலையிலும், இவர்கள் இந்தியாவுக்காகவே போரிட்டிருக்கிறார்கள் !'' என்று முழங்கினார் ஆஸஃப் அலி. அவர் தொடர்ந்து பேசுகையில், ஜப்பானியர்களின் கைப்பாவையாக இயங்குவதற்காகவே இந்தியத் தேசிய ராணுவம் அமைக்கப்பட்டது என்னும் கூற்றை மறுத்தார். ''இ.தே.ரா. பற்றிய முழு விவகாரத்தையும் விரைவில் பதவி ஏற்கப் போகும் புதிய அரசாங்கத்திடம் விட்டுவிட வேண்டும். இந்தியாவில் அதிகாரமாற்றம் நடைபெறப் போவதாக நிரம்பப் பேசப்படுகிறது. அது உண்மையானால், அத்தகைய மாற்றம் ஏற்படும் வரை இந்த அரசாங்கம் ஏன் பொறுத்திருக்கக் கூடாது?'' என்று கேட்டார் ஆஸஃப் அலி.

இந்தியத் தேசிய ராணுவ விசாரணையில் அரசாங்கம் தவறு இழைத்து விட்டது என்றார் ஜின்னா : ''விசாரணை நடத்தியபின் தீர்ப்பையும் தண்டனைகளையும் குறைத்தீர்கள் ; தண்டனைக்கு உரியவர்களை உடனேயே விடுதலையும் செய்துவிட்டீர்கள். இதன் மூலம் நீதிமன்றத்தின் தீர்ப்பையும் அது வழங்கிய தண்டனைகளையும் கேலிக்குரியவை ஆக்கி விட்டீர்கள் !'' என்றும் அவர் குறை கூறினார். ''இந்த விசாரணையைத் தொடங்கி இருக்கவே வேண்டியதில்லை. ரஷீத் குரூரத்தனக் குற்றத்துக்கு உரியவர் என்பதை என்னால் ஏற்க முடியாது. ஷா நவாஸ் கான் மற்றும் பலரை விட, அவர் ஒன்றும் குரூரத்தனம் என்னும் குற்றத்தைச் செய்துவிடவில்லை'' என்று விளக்கிய ஜின்னா மேலும் குறிப்பிட்டதாவது :

''நாளை பாகிஸ்தான் உருவாகும்போது பாகிஸ்தான் ராணுவம் எந்த நெருக்கடியிலும் தன் அரசாங்கத்துக்கு உண்மையுள்ளதாகவே நடந்துகொள்ளும். யாரேனும் இதிலிருந்து தவறுவாரானால்,—அவர் சிப்பாயாக இருந்தாலும் அதிகாரியாக இருந்தாலும் அல்லது சிவிலியனாகவே இருந்தாலும்,—வில்லியம் ஜாய்ஸ் அல்லது ஜான் ஏமெரிக்கு வழங்கப்படுவது போன்ற ஒரே

தண்டனை தான் அவருக்கு வழங்கப்படும்!'' இறுதியாக, இ.தே.ரா. வீரர்களும் அதிகாரிகளும் விடுதலை செய்யப்பட வேண்டும் என்று ஜின்னு கேட்டுக்கொண்டார்.

தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய திருமதி அம்மு சுவாமிநாதன், ''இந்திய மக்களால் மாபெரும் வீரர்களாக மதித்துப் போற்றப் படுகிற இந்த ஆயிரக்கணக்கான தேச பக்தர்கள் விடுவிக்கப்படும் வரை அரசியல் சிக்கல்களைத் தீர்ப்பதற்குரிய அமைதியான சூழ்நிலை இங்கே உருவாகப் போவதில்லை'' என்றார். ''யார் மீதும் நாட்டுத் துரோகக் குற்றம் சாட்ட இப்போது உள்ள அரசாங்கத்துக்கு உரிமை கிடையாது'' என்று கூறிய செல்வி மணிபென் காரா, ''இந்த அரசாங்கத்துக்கு இந்த நாட்டுமக்களின் ஆதரவு இல்லாத போது, இது எப்படி ஒருவரை நாட்டுத்துரோகக் குற்றத்துக்காக விசாரிக்க முடியும்?'' என்று கேட்டார்.

இந்தத் தீர்மானத்தின் மீதான விவாதம் மூன்றுநாள் தொடர்ந்து நடைபெற்றது; (காலம் போதாததால்) அடுத்த கூட்டத் தொடரிலும் இவ்விவாதம் தொடர்ந்தது. இந்தக் கூட்டத் தொடரும்,—அதற்குள் இடைக்கால அரசாங்கத்தில் இடம்பெற்றுவிட்ட லியாகத் அலி கான் மற்றும் சர்தார் வல்லபாய் படேல் ஆகியோர் தெரிவித்த ஆலோசனைப்படி,—இந்த விவாதத்தை அதற்கு அடுத்த கூட்டத் தொடருக்கு ஒத்திப் போட்டது. எது, எப்படி இருப்பினும், இந்தியத் தேசீய ராணுவ வீரர்களும் அதிகாரிகளும் விடுதலை செய்யப்படுவதையே சட்டசபை விரும்பியது என்பது மட்டும் அப்போதே தெளிவாகி விட்டது.

### இந்திய கடற்படைக் கிளர்ச்சி பற்றிய விவாதம்:

ஆறாவது சட்டசபையின் கவனத்தை மிகுதியாகக் கவர்ந்த மற்றொரு விவகாரம் ராயல் இந்தியக் கப்பற்படையில் ஏற்பட்ட கிளர்ச்சியைப் பற்றியது. இந்தியக் கப்பற்படைச் சிப்பந்திகள் அவர்களின் மேலதிகாரிகளால் நடத்தப்படும் விதத்தைப் பற்றி விவாதிப்பதற்காகச் சபை நடவடிக்கைகளை ஒத்தி வைக்க

வேண்டும் என்ற தீர்மானம் ஒன்றை பிப்ரவரி 22ஆம் தேதி ஆஸஃப் அலி கொண்டுவந்தார். கப்பற்படை மேலதிகாரிகள் அப்படையைச் சேர்ந்த இளைஞர்களிடம் தடித்தனமாக நடந்து கொள்ளுவதை அவர் வன்மையாகக் கண்டித்தார். இதுபற்றிப் பாதுகாப்பு ஆலோசனைக் குழுவைக் கலந்து ஆலோசிக்க வேண்டும்; இந்த விவகாரம் முழுதும் மக்கள் பிரதிநிதிகளின் முடிவுக்கு விடப்படும் என்றும் அந்தப் பிரதிநிதிகளைக் கலந்தாலோசித்தே யுத்த இலாகா இதுபற்றிய எதிர்காலக் கொள்கை நடைமுறைகளை வகுக்கும் என்றும் கிளர்ச்சியில் ஈடுபட்டுள்ள கப்பல் சிப்பந்திகளிடம் தெரிவிக்க வேண்டும் என்றெல்லாம் ஆலோசனைகள் தெரிவித்தார் ஆஸஃப் அலி.

அடுத்தநாளும் அதே விவாதத்தில் கலந்துகொண்டு தொடர்ந்து பேசிய ஆஸஃப் அலி பின்வரும் கருத்துக்களைத் தெரிவித்தார்: "ராணுவத்தில் ஏற்படும் வேலைநிறுத்தங்களின் அபாயத்தை நான் அறியாமலில்லை. ஆனால், இப்படி ஒரு நிலைமை ஏற்பட்டதற்கு யார் பொறுப்பாளி? இன்று ஏற்பட்டுள்ள சூழ்நிலையில் என்னை நான் கட்டுப்படுத்திக் கொள்வது மிகமிகக் கடினம்தான். என்றாலும், இன்று இந்தியாவின் அரசியல் ஒரு முக்கியமான எல்லையை அடையப் போகிறது என்பது எனக்கு நன்றாகத் தெரிவதால், நான் மிகுந்த எச்சரிக்கையோடும் கட்டுப்பாட்டுடனுமே பேச விழைகிறேன்".

ஆஸஃப் அலியின் ஆலோசனையை சரத் சந்திர போஸ் ஆதரித்தார். அவர் பேசுகையில், பம்பாயிலும் கராச்சியிலும் நிலைமை சீர்குலைந்து வருவதால் அரசாங்கம் தன்னுடைய நடவடிக்கைகளில் மிகமிக விழிப்பாக இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

நாடு முழுவதும் பரவலாக ஏற்பட்டிருக்கக் கூடிய ரத்தக் களரியைத் தடுத்ததற்காக நாடே சர்தார் வல்லபாய் படேலுக்குக் கடமைப்பட்டுள்ளது என்றார் சர்தார் மங்கல் சிங். இந்திய அரசாங்கத்தை எச்சரித்து உரையாற்றுகையில், அரசாங்கம் தனக்குத் தானே திருப்திப்பட்டுக் கொண்டு சும்மா இராமல்,

ஏற்பட்டுள்ள சிக்கலான நிலைமையின் பின்னணிகளைப் புரிந்து கொள்ள முயலவேண்டும் என்றார் அவர். யுத்த இலாகா இன வேறுபாட்டு அடிப்படையில் நடந்துகொள்வதே இந்தத் தொல்லைக்கு மூல காரணம் என்றும் அவர் குற்றஞ் சாட்டினார்.

மசானி பேசுகையில், தங்களுக்குப் போதிய பாதுகாப்பு இல்லை என்னும் ஓர் உணர்ச்சி கப்பல் சிப்பந்திகளிடையே நிலவுவதே இந்தக் குழப்பங்களுக்கு முக்கியமான காரணம் என்றார். "ஒரு பக்கம் நூற்றுக்கணக்கான இந்திய அதிகாரிகளும் ஆயிரக் கணக்கான (இந்தியச்) சிப்பந்திகளும் கலைக்கப்படுகிறார்கள் (வேலை நீக்கம் செய்யப்படுகிறார்கள்); மறுபக்கம் பிரிட்டிஷ் ராயல் கப்பல் படையைச் சேர்ந்த 300 அதிகாரிகள் இந்திய நிறுவனங் களில் வேலைக்கு அமர்த்தப்படுகிறார்கள். இதை நன்கு தெரிந் திருந்தும் கப்பல்படைத் தலைமையகம் இதுபற்றி எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளவில்லை. நிலைமை கட்டுக்கு அடங்கி இருக்கிறது என்றும் நாட்டின் கவுரவம் காப்பாற்றப்பட்டுள்ளது என்றும் இந்தச் சபையில் தெரிவிக்கப்பட்டுள்ளது. நாட்டின் கவுரவம் பேணப்பட்டிருப்பது உண்மைதான். ஆனால், (அரசாங் கத்தின் நடவடிக்கையால் அது காப்பாற்றப்படவில்லை ;) எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த தேசியத் தலைவர்கள் அரசாங் கத்தின் வேண்டுகோளை ஏற்று எதிரொலித்ததாலேயே அது காப்பாற்றப்பட்டது!" மசானி மேலும் பேசுகையில் குறிப்பிட்ட தாவது: நாம் பெற்றுள்ள இந்த வெற்றி உண்மையான வெற்றிதானா என்று நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். கப்பற் படைச் சிப்பந்திகளின் நியாயமான உரிமைகள் பாதுகாக்கப்பட்டு அவர்களின் தேசிய ஆர்வமும் தன்மானமும் உரியவாறு மதிக்கப் பட வேண்டும் என்பதே என் விருப்பம்; அப்படிச் செய்யப்படும் என்று நான் உறுதியாக நம்புகிறேன் என்றார் மசானி.

சிப்பந்திகளின் குறைகளைக் கேட்டு அறியவோ அவைகளைத் தீர்க்கவோ அரசாங்கம் எந்த முயற்சியும் செய்யவில்லை என்றார் லியாகத் அலி கான். அவர் தொடர்ந்து பேசுகையில், இந்திய அரசாங்கம் தனது சுறுசுறுப்பற்ற போக்கிலிருந்து விடுபட்டு மக்களின் கருத்துக்கும் இந்த அவையில் வெளியிடப்படும்

கருத்துக்கும் செவிசாய்க்க முன்வரவேண்டும் என்று வற்புறுத்தினார்.

இந்தத் தீர்மானத்தின் மீது இரண்டுநாள் விவாதம் நடந்தது. கடைசியாக 74க்கு 40 என்ற வாக்கு வித்தியாசத்தில் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## காபினெட் குழுவின் திட்டம் :

இந்தியக் கப்பற்படைக் கிளர்ச்சியும் அதற்கு அனுதாபம் காட்டும் விதமாக நடந்த வேலை நிறுத்தங்களும் உச்சக் கட்டத்தை அடைந்தபோது, பிரிட்டிஷ் பிரதமர் அட்லி, இந்திய ஆட்சியியல் மற்றும் அரசியல் சிக்கல்களைத் தீர்ப்பதற்காகக் காபினெட் குழு ஒன்றை இந்தியாவுக்கு அனுப்ப (பிரிட்டிஷ்) அரசாங்கம் முடிவு செய்திருப்பதாகத் தெரிவித்தார். இந்தச் செய்தி பிப்ரவரி 19 ஆம் தேதியன்று மக்கள் சபையில் தெரிவிக்கப்பட்டது. இந்தியா மந்திரி லார்டு பெதிக் லாரன்ஸ் மற்றும் ஸ்டாஃபார்ட் கிரிப்ஸ், ஏ. வி. அலெக்சாண்டர் ஆகியோரைக் கொண்ட காபினெட் குழு மார்ச் மாதத்தில் இந்தியா வந்து சேர்ந்தது. இந்தியத் தலைவர்களுடன் நீண்ட பேச்சு வார்த்தைகளையும் நடத்தியது. ஓர் அரசியல் சட்டத்தை வகுப்பதற்குரிய அடிப்படை நோக்கில் காங்கிரசும் முஸ்லிம் லீகும் ஒத்துப்போக முடியாததால், காபினெட் குழுவினரே தங்களின் திட்டத்தை மே 16 ஆம் தேதி அறிவித்தார்கள்.

அரசியல் சட்ட அமைப்பு ஆலோசனைகளில் ஒரு பகுதியாக அரசியல் நிர்ணய சபை ஒன்றை அமைக்கவேண்டும் என்று குழு சிபாரிசு செய்தது. இந்த அரசியல் நிர்ணய சபையை, அப்போது தான் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த மாநிலச் சட்டசபைகளே தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும் குழு தெரிவித்தது. ஒவ்வொரு மாநிலத்தின் மக்கள் தொகைக்கும் போதிய பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையில் பின்வரும் முறைகள் சிபாரிசு செய்யப்பட்டன :

(அ) வயது வந்தோர்க்கெல்லாம் வாக்குரிமை என்ற முறையில் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்குப்

பதிலாக, ஒவ்வொரு மாநிலமும் பத்து இலட்சம் மக்களுக்கு ஒரு பிரதிநிதி என்ற விகிதத்தில் அரசியல் நிர்ணய சபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுந்து அனுப்பவேண்டும்.

(ஆ) மாநிலவாரியான இடங்கள் அந்தந்த மாநிலத்திலுள்ள பெருவாரியான வகுப்பினரின் விகிதத்துக்கு ஏற்றபடி, அவர்களிடையே பங்கிட்டுத் தரப்படவேண்டும்.

(இ) அந்தந்த மாநிலத்தின் ஒவ்வொரு வகுப்பினரின் பிரதிநிதிகளும் அந்த வகுப்பினராலேயே தேர்ந்தெடுக்கப்படுவதற்கு வாய்ப்பாக, அந்தந்த மாநிலச் சட்டசபைகளில் உள்ள அந்த வகுப்புப் பிரதிநிதிகளாலேயே (அ. நி. சபை) உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டும்.

தேர்தலைப் பொறுத்தவரை, காபினெட் குழு, பொதுவானவர்கள், முஸ்லிம்கள், சீக்கியர்கள் என்னும் மூன்று வகுப்பினரை மட்டுமே பெருவாரி வகுப்பினராக அங்கீகரித்தது. முஸ்லிம்களும் சீக்கியர்களும் அல்லாத மற்றெல்லோரும் "பொதுவானவர்கள்" என்ற பிரிவிலேயே அடக்கப்பட்டார்கள்.

## அரசியல் நிர்ணய சபைத் தேர்தல்கள் :

குழுவின் திட்டத்தைப் பற்றிக் கருத்து வேற்றுமை இருந்தாலும், காங்கிரசாரும் லீகினரும் அரசியல் நிர்ணய சபைத் தேர்தலுக்கான ஆயத்தங்களில் தீவிரமாக ஈடுபட்டார்கள். 1946 ஜூலை இறுதியில் தேர்தல்கள் முடிவடைந்தன. பிரிட்டிஷ் இந்திய மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் 296. இதில், பொதுவானவர்களுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களில் ஒன்பது இடங்கள் நீங்கலாக 205 இடங்களில் காங்கிரஸ் வெற்றி பெற்றது. முஸ்லிம்களுக்கு ஒதுக்கப்பட்ட 78 இடங்களில் 73 இடங்களை லீக் கைப்பற்றியது. சீக்கியருக்கு ஒதுக்கப்பட்ட இடங்கள் சிறிதுகாலம் காலியாகவே இருந்தன.

**வகுப்புவாத வெறி :**

காபினெட் குழுவின் திட்டத்திலும் அது தொடர்பான பேச்சு வார்த்தைகளிலும் மிகமிக வருந்தத்தக்கது என்னவென்ருல், இந்த நடவடிக்கைகள், ஒரு பக்கம் செயற்பட்டு வந்தபோதே, நாட்டில் வகுப்புக் கலவரமும் வலுவடையத் தொடங்கிவிட்டது. முஸ்லிம் லீக், ஏற்கனவே திட்டமிட்டபடியே, ஆகஸ்ட் 16 ஆம் தேதி இந்தியா எங்கும் "நேரடி நடவடிக்கை தினம்" கொண்டாடியது. இந்த நிகழ்ச்சி கல்கத்தாவில் வகுப்புவாதக் கொலை வெறியாட்டமாகவே உருக்கொண்டது. இதைத் தொடர்ந்து கிழக்கு வங்காளத்திலும் பீகாரிலும் பயங்கரமான வகுப்புக் கலவரங்கள் ஏற்பட்டன. சிறிது காலத்துக்கு முன்பு தான் இ. தே. ரா. ஆர்ப்பாட்டங்கள், தபால் ஊழியர் வேலை நிறுத்தம், 1946ல் நடந்த கப்பற்படைக் கிளர்ச்சி போன்றவை களில், பொதுஜன இயக்கம் என்ற அளவில் இந்திய மக்களிடையே பலமான வகுப்பு ஒற்றுமை ஏற்பட்டிருந்தது. ஆனுல், காபினெட் குழுத் திட்டத்தின் பின் விளைவுகளால், இந்த ஒற்றுமை, வகுப்பு வெறிக் கொலைகள் என்ற பெருவெள்ளத்தில் மூழ்கடிக்கப்பட்டுப் போயிற்று.

**சட்டசபை நடவடிக்கைகளில் பாதிப்பு :**

காங்கிரஸ் கட்சி செப்டம்பர் 2 ஆம் தேதி இடைக்கால அரசாங்கத்தை அமைத்தது ; சில வாரங்கள் கழித்து, அக்டோபர் 26ல் லீக் உறுப்பினர்களும் இதில் சேர்ந்து கொண்டார்கள்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கும் இந்தியத் தேசீயத்துக்கும் நடைபெற்று வந்த போராட்டத்துக்குரிய களமே சட்டசபை என்னும் நிலை, காங்கிரசும் முஸ்லிம் லீகும் இடைக்கால அரசாங்கத்தை அமைத்தது முதல் அறவே மாறத் தொடங்கி விட்டது. இ. தே. ரா. வீரர்களின் விடுதலை பற்றிய விவகாரத் திலேயே இது தெளிவாகத் தெரிந்தது. பிப்ரவரி 18 ஆம் தேதி, இ. தே. ரா. வீரர்கள் உடனடியாக விடுதலை செய்யப்பட வேண்டும் என்னும் தீர்மானத்தை அப்துல் கனி கான் முன் மொழிந்தார். ஆருவது சட்டசபையின் முதல் கூட்டத் தொடரி

விருந்தே இதுபற்றி நீளநீள விவாதிக்கப்பட்டிருந்தது. இப்போது அரசாங்கத்தில் பொறுப்பேற்றிருந்த பல தலைவர்கள் இந்த விவகாரம் பற்றி ஓங்கிப் பேசியிருந்தார்கள். கனி கானின் தீர்மானத்தின் மீது விவாதம் தொடங்கிய போது, கனி கான் உள்ளிட்ட பல உறுப்பினர்கள்,—குறிப்பாக கனி கான், அகமது இ. எச். ஜஃபர், திருமதி சுவாமிநாதன், சசாங்க சேகர் ஸன்யால் ஆகியோர்,—மக்கள் அரசாங்கம் ஏற்பட்டுப் பல மாதங்கள் ஆன பின்னும் இ. தே. ரா. வீரர்கள் விடுதலை செய்யப்படாதது குறித்து ஆச்சரியப்பட்டார்கள். இவர்களைத் தொடர்ந்து பேசிய பண்டித பாலகிருஷ்ண சர்மா பின்வருமாறு குறிப்பிட்டார்:

"நாம் எல்லோரும் ஓராண்டுக்கு முன்பு இந்தச் சபையில் பேசிய அதேவிதமாக இப்போது பேச முடியாது என்றாலும், இ. தே. ரா. வீரர்கள் விடுதலை செய்யப்பட வேண்டும் என்பதில் நம்மிடையே எந்தவிதமான கருத்து வேற்றுமையும் இல்லை. மக்களரசாங்கம் பொறுப்பேற்று எட்டுமாதம் ஆகிவிட்டது; அதிலே ஏழுமாதக்காலம் கூட்டணி அரசாங்கம் நடைபெற்று வந்திருக்கின்றது. ஆனால், பண்டித நேருவும் லியாகத் அலி கானும் இ. தே. ரா. வீரர்களை விடுதலை செய்ய முடியவில்லை என்றால், இவர்கள் அந்த நடவடிக்கையை மேற்கொள்வதற்குப் பெரிய தடையாக ஏதோ ஒன்று இருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும்; இந்தச் சபை மிகமிக விரும்புகிற அதை நிறை வேற்றுதபடி அவர்களை மறித்து வந்திருக்கிற அந்தத் தடை என்ன என்பதைப் புரிந்துகொள்ளாமல், வீணிலே பண்டித நேருவின் மீது பழிபோடுவதில் அர்த்தமில்லை" என்றார் சர்மா.

மாறிவிட்ட புதிய நிலையை விளக்கிய மற்றோர் அம்சமும் குறிப்பிடத்தக்கது. இப்போதெல்லாம், உறுப்பினர் ஒவ்வொரு வரும் தங்கள் தங்கள் கட்சிநோக்கிலேயே அரசாங்க நடவடிக்கைகளை நோக்கத் தொடங்கிவிட்டார்கள். அதாவது, எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வருகிறார் என்பதைப் பொறுத்தே அதுபற்றி அவர்கள் கருத்துத் தெரிவிக்கலானார்கள். 1947 ஆம் ஆண்டுக்கான வரவு செலவு பற்றிய விவாதங்களில் இது பளிச்சென்று தெரிந்தது. நிதித்துறை

உறுப்பினரான லியாகத் அலி கான் வர்த்தக வருமானங்களின் மீது அதிகமான வரிவிதிக்கும் தமது வரவு செலவுத் திட்டத்தைச் வெளியிட்டு, "இந்தியாவில் நிலவுகிற பெரிய (பொருளாதார) ஏற்றத்தாழ்வுகளைச் சரிக்கட்டவே இவ்வாறு செய்யப்பட்டது" என்று பேசினார். இந்த வரவு செலவுத் திட்டத்தின் சில அம்சங்கள் எல்லாத் தரப்பினராலும் வரவேற்கப்பட்டன என்றாலும், அதைக் கொண்டுவந்தவர் லியாகத் அலி கான் என்பதாலேயே முஸ்லிம் லீக் உறுப்பினர்கள் அதற்கு முழு ஆதரவு கொடுத்தார்கள்; அதே காரணத்தாலேயே, பல காங்கிரஸ் உறுப்பினர்கள், காங்கிரஸ்காரர்களுக்கு ஒரு சங்கடமான நிலைமையை உண்டாக்கவே அவர் இதைக் கொண்டு வந்திருக்கிறார் என்று முணுமுணுத்தார்கள்.

**நாட்டுப் பிரிவினையை நோக்கி:**

இதற்கிடையில், அரசியல் நிர்ணய சபையைப் பற்றிய சிக்கல் நீடித்துக்கொண்டுதான் இருந்தது. டிசம்பர் 9 ஆம் தேதி தொடங்க இருந்த அரசியல் நிர்ணய சபைக் கூட்டத்தில் முஸ்லிம் லீக் பங்குகொள்ள மறுத்தது. இடைக்கால அரசாங்கத்தில் பங்குபற்றிக் கொண்டே அரசியல் நிர்ணய சபையில் பங்கு கொள்ள முஸ்லிம் லீக் மறுப்பது பொருத்தமற்ற செய்கை என்று காங்கிரஸ் கருதியது. (இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்காக) டிசம்பர் மாதத்தில் லண்டனில் ஒரு மாநாடு கூட்டப்பட்டது. அதில் அட்லி, வேவல், நேரு, ஜின்னா, பல்தேவ் சிங் ஆகியோர் கலந்து கொண்டார்கள். மாநாட்டில் எந்த முடிவும் ஏற்பட முடியவில்லை. ஆயினும், பிரிட்டிஷ் அரசாங்கம், பின்வரும் (கருத்துக்களை உள்ளிட்ட) அறிக்கை ஒன்றை வெளியிட்டது:

"இந்திய மக்களில் கணிசமான ஒரு பகுதியினர் பிரதிநிதித்துவம் பெறாத அரசியல் நிர்ணய சபையினால் உருவாக்கப்படும் அரசியல் சட்டத்தை (அத்தகைய) பிரதிநிதித்துவம் பெறாத இந்திய மக்கள் தொகுதியின் மீது திணிக்க மேன்மை தங்கிய மன்னரின் (பிரிட்டிஷ்) அரசாங்கம் முயலாது; காங்கிரசும், அப்படிப்பட்ட நடவடிக்கையில் ஈடுபட மாட்டோம் என்று அறிவித்திருக்கிறது."

நாட்டுப் பிரிவினை நோக்கிலேயே பிரிட்டிஷ் அரசாங்கம் கவனம் செலுத்தி வந்தது என்பதற்கு இதுதான் முதலாவது தெளிவான அறிகுறி. இதன் மூலம் அசைக்க முடியாத ரத்து அதிகாரம் ஒன்று முஸ்லிம் லீகுக்குக் கிடைத்துவிட்டது. அதாவது மேலும் சிறிதுகாலத்துக்கு முஸ்லீம் லீக் விட்டுக்கொடுக்காமல் விறைப்பாக இருந்தால் அதன் லட்சியம் (பாகிஸ்தான்) நிறைவேறிவிடும் என்பது தெளிவாகி விட்டது.

டிசம்பர் 9 ஆம் தேதி தொடங்கிய அரசியல் நிர்ணய சபைக் கூட்டத்தை முஸ்லிம் லீக் பகிஷ்கரித்தது. ஆனாலும், திட்டமிட்ட படி, சபையின் நடவடிக்கை தொடர்ந்து நடந்தது. சபையின் மூத்த உறுப்பினரான சச்சிதானந்த சின்ஹா தாற்காலிகமாகச் சபையின் தலைமையை ஏற்குமாறு வேண்டிக்கொள்ளப்பட்டார். ராஜேந்திரப் பிரசாத் அரசியல் நிர்ணய சபையின் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். "அரசியல் சட்டத்தின் நோக்கங்கள் பற்றிய தீர்மானத்" தை நேரு சபையில் முன் மொழிந்தார். நிகழ்ச்சி நிரலில் இருந்தவைகளுள் இதுவே அரசியல் நோக்கில் மிக முக்கியத்துவம் வாய்ந்த விவகாரம். (மத்திய அரசுக்கு உள்ளவை போக) எஞ்சிய அதிகாரங்களையும் சுயநிர்ணய உரிமையையும் உடைய மாநிலங்களைக் கொண்ட 'சுதந்திர முழு உரிமைக் குடியரசு" என்று இந்தியாவைப் பிரகடனப்படுத்தும் தீர்மானம் அது. இந்தியாவின் எல்லாத் தரப்பினருக்கும் சமுதாய, பொருளாதார, அரசியல், குடியாட்சி உரிமை வழங்கப்படும் என்றும், பின்தங்கிய வகுப்பினருக்கும் சிறுபான்மை வகுப்பினருக்கும் பின்தங்கிய பகுதிகளின் மக்களுக்கும் போதிய பாதுகாப்புகள் தரப்படும் என்றும் இந்தத் தீர்மானம் அறிவித்தது. ஆயினும், முஸ்லிம் லீக் உறுப்பினர் களும் சுதேச சமஸ்தானங்களின் பிரதிநிதிகளும் அரசியல் நிர்ணய சபையில் பங்கு கொள்வதற்கு வாய்ப்பளிப்பதற்காக, இந்தத் தீர்மானத்தின் மீதான விவாதம் 1947 ஜனவரி 20 ஆம் தேதி வரை ஒத்திப் போடப்பட்டது. ஆனால், இதற்குள் லீகின் போக்கு மேலும் பிடிவாதமாக மாறிவிட்டிருந்தது; முஸ்லிம் லீக் உறுப் பினர்கள் சபையின் நடவடிக்கைகளில் கலந்து கொள்ள மறுத்து

விட்டார்கள். சபை ஜனவரி 20 ஆம் நாள் கூடி, "நோக்கங்கள் பற்றிய மேற்படி தீர்மானத்தை" நிறைவேற்றியதுடன், அந்தப் பணியை மேற்கொள்வதற்குச் சில குழுக்களையும் நியமித்தது.

ஒன்று, முஸ்லிம் லீக் அரசியல் நிர்ணய சபையில் பங்குகொள்ள வேண்டும்; அல்லது, அது இடைக்கால அரசாங்கத்திலிருந்தே வெளியேற வேண்டும். இந்த இரண்டில் ஒன்றை லீக் ஏற்கும்படி பிரிட்டிஷ் அரசாங்கம் லீகை வற்புறுத்த வேண்டும் என்று காங்கிரஸ் கோரியது. பிரிட்டிஷ் அரசாங்கம் இந்த இரண்டில் ஒன்றைச் செய்யாவிட்டால், அரசாங்கத்திலிருந்து ராஜிநாமாச் செய்துவிடப் போவதாகக் காங்கிரஸ் பயமுறுத்தியது. பிரிட்டிஷ் அரசாங்கமோ, 1948 ஜூனில் தாங்கள் (இந்தியாவிலிருந்து) வெளியேறி விடுவது என்றும் ஆட்சி (அதிகார) மாற்றத்தைப் பற்றிப் பேசுவதற்கு லார்டு மவுண்ட்பேட்டனை வைசிராயாக அனுப்புவது என்றும் முடிவு செய்திருப்பதாக அறிவித்தது. இந்த (வெளியேற்றத்) தேதியை ஆகஸ்ட் 15, 1947 என்று முன் கொண்டுவந்ததோடு இந்தியா பிரிவினை செய்யப்படும் என்றும் அறிவித்தார் மவுண்ட்பேட்டன்.

### இந்திய சுதந்திரச் சட்டமும் மத்திய சட்டசபை முடிவும் :

மவுண்ட்பேட்டன் திட்டத்தின் ஷரத்துக்கள் பிரிட்டிஷ் மக்கள் சபையில் கொண்டு வரப்பட்ட இந்திய சுதந்திர மசோதாவில் இடம் பெற்றன. இந்த மசோதா ஜூலை 18 ஆம் நாள் சட்டமாயிற்று. இந்திய சுதந்திரச் சட்டம், ஆகஸ்ட் 15 ஆம் தேதி முதல் இங்கே இந்தியா, பாகிஸ்தான் என்னும் இரண்டு டொமினியன்களை உருவாக்கியது. இரண்டு டொமினியன்களின் அரசியல் நிர்ணய சபைகளுக்கும், அவை விரும்பும் விதமான அரசியல் சட்டத்தை உருவாக்கி நிறைவேற்றிக் கொள்ள முழுஉரிமை வழங்கப்பட்டது. மேலும் சட்டசபையும் ராச்சியக் கவுன்சிலும் ஆகஸ்ட் 14 ஆம் தேதியுடன் முற்றுப் பெற்றுவிடும் என்றும் அவைகளின் பொறுப்புக்களை அரசியல் நிர்ணய சபையே ஏற்று நடத்தும் என்றும் அறிவிக்கப்பட்டது.

**சுதந்திர இந்தியாவின் உதயம்**

ஆகஸ்ட் மாதம் 14 ஆம் தேதி நள்ளிரவில் இந்திய அரசியல் நிர்ணய சபை டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் தலைமையில் கூடியது. விரைவிலேயே இந்தியாவின் முதல் பிரதமராகப் பொறுப்பேற்க இருந்த பண்டித ஜவஹர்லால் நேரு, அந்த நாளின் வரலாற்று முக்கியத்துவத்தை உணர்ந்து நாட்டுப்பணிக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும் என்று அனைவரையும் கேட்டுக்கொண்டு உணர்ச்சிமயமான சொற்பொழிவு ஒன்றை நிகழ்த்தினர். அதிலே அவர் குறிப்பிட்டதாவது :

"பல ஆண்டுகளுக்கு முன்னே, காலத்துடன், விதியுடன், நாம் ஒப்பந்தம் ஒன்றைச்செய்து கொண்டோம். இதோ, முழுமையாக இல்லாவிட்டாலும், கணிசமான அளவில் அந்த ஒப்பந்தத்தைச் செயலாக்கும் நேரம் வந்திருக்கிறது. உலகமெல்லாம் உறங்கிக் கொண்டிருக்கும் இன்றைய நள்ளிரவு நேரத்திலே, வாழ்வையும் சுதந்திரத்தையும் நோக்கி இந்தியா விழிப்படையப் போகிறது. நாம் பழமையிலிருந்து புதுமையில் அடியெடுத்து வைக்கும்போது ஒரு யுகம் முடிந்து, நெடிய அழுத்தல்களுக்கு ஆட்பட்டுக் கிடந்த ஒரு நாட்டின் ஆன்மா, மீண்டும் பேசக் கற்றுக்கொள்ளப் போகிறது. இது ஒரு அரிய தருணம்; இந்தப் புனிதமான தருணத்திலே, இந்தியா, இந்திய மக்கள் மற்றும் பரந்த மனிதக் குலத்தின் சேவைக்கு நம்மை நாமே அர்ப்பணித்துக் கொள்வதாகச் சபதம் எடுத்துக்கொள்வது மிகப் பொருத்தமானது."

ஆமாம்; சட்டசபையிலேதான் இந்தியச் சுதந்திரப் போராட்டம் தனது முழுமையை அடைந்தது—1947 ஆகஸ்ட் 15 ல் சுதந்திர இந்தியாவின் பிறப்புடன்.

## முடிவுரை

இந்தியாவில் ஏற்பட்டு வந்த மக்கள் எழுச்சிக்குக் காலனி ஆதிக்கக்காரர்கள் அளித்த பதில்தான் அவர்கள் சிறுகச் சிறுக அமுல்படுத்திய ஆட்சியியல் சீர்திருத்தம். இந்தியாவிலுள்ள நடுத்தர வகுப்பினரையும் உயர்நடுத்தர வகுப்பினரையும் இந்திய நிருவாகத்துடன் இணைத்துக் கொள்வதற்கு மேற்கொள்ளப்பட்ட ஒருவகையான ஏகாதிபத்திய நடவடிக்கை அது. இந்த நடவடிக்கை பல்வேறு காலக்கட்டங்களில் இந்தியாவின் அரசியல் வளர்ச்சியில் உண்டான தேசீயக் கிளர்ச்சிகளுக்கு ஓரளவு ஈடு கொடுப்பதாக அமைந்தது. ஆனால், இந்தியாவின் தேசீயக் கோரிக்கை தீவிரமடைந்து விடாதபடியும் அதற்குப் பின்னணியாக இருந்த தேசீய இயக்கங்களில் ஒரு கட்டுக்கோப்பு ஏற்பட்டு விடாதபடியும் பார்த்துக்கொள்ளும் நடவடிக்கையாகவும் அது அமைந்தது.

இதைச் சாதித்துக் கொள்ள ஆங்கிலேயர் இரண்டு வழிகளைப் பின்பற்றினர்: முதலாவது, இந்திய அரசியல் உணர்வைப் பலவீனப் படுத்தும் விதமான, இங்குள்ள நிலச்சுவான்தார்கள், தொழில் அதிபர் மற்றும் வணிகர்கள், தொழிலாளர்கள், பல சாதியார்கள், ஐரோப்பியர்கள் என்னும் பல பிரிவினருக்கும் தனித் தனி வாக்குரிமை என்னும் முறையை உண்டாக்கினார்கள். முக்கியமாக, முஸ்லிம்களுக்குத் தனியான வாக்குரிமை என்ற முறையை ஏற்படுத்தியதன் மூலம் (இங்கே) வகுப்புவாத அரசியல் வளர்வதற்குத் துணைபுரிந்தார்கள். மாண்டேகு—செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தின் மூலம் நுழைக்கப்பட்ட தனித் தொகுதிமுறையால் ஒத்துழையாமை இயக்கம் மற்றும் 1919க்குப் பிற்பட்ட இடதுசாரி இயக்கங்களின் வாயிலாக அரசியல் விழிப்புப் பெற்றிருந்த கிராமிய மக்கள், இங்கு ஏற்பட்ட ஆட்சியியல் வளர்ச்சியில் தங்கள் பாதிப்பை ஏற்படுத்தாதபடித் தடுக்கப் பட்டார்கள். இரண்டாவதாக, ஆட்சியியல் சீர்திருத்தங்களின் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஏதாவது ஒரு முக்கியமான

அரசியல் குழுவினரை தனிப்பிரித்து அவர்களைத் தேசியப் பேரியக்கத்தில் சேராமல் தடுத்துவிட ஆங்கில ஆட்சியாளர்கள் திட்டமிட்டு வேலை செய்தார்கள். தீவிரவாதிகளையும் மிதவாதிகளையும் பிரித்துவைத்துக் கொண்டே இருப்பதுதான் அவர்களின் ஒரே நோக்கம். 1909ஆம் ஆண்டு (மார்லி—மிண்டோ)ச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதற்குச் சற்று முன்பு மார்லியும் மிண்டோவும் மேற்கொண்ட முயற்சிகள், சைமன் குழு நியமிக்கப் பட்டபோது வைசிராய்க்கு பர்க்கன்ஹெட் வழங்கிய ஆலோசனைகள், இரண்டாம் உலகப்போரின் தொடக்க ஆண்டுகளில் ஜின்னாவுடன் லின்லித்கோ நடத்திய பேச்சுவார்த்தைகள் ஆகிய இவை எல்லாம் ஆங்கிலேயர்களின் இந்த நோக்கத்தை விளக்கும் நிகழ்ச்சிகளே.

ஆங்கிலேயரின் அரசியல் மற்றும் ஆட்சியியல் கொள்கையின் கட்டுக்கோப்புக்கு உட்பட்டு நின்று, மத்திய சட்டசபை இந்தியச் சுதந்திரப் போராட்டத்துக்கு எந்த வகையில்தான் உதவிட முடியும்? இதைப் பற்றி முழுமையாக ஆராயும்போது, 'சட்டசபைப் பிரவேசம் ஆங்கில ஏகாதிபத்தியத்தோடு ஒத்துழைப்பதில்லை என்னும் நமது கொள்கையை வெகுவாகச் சிதைத்துவிடும்' என்று காந்தியடிகள் சந்தேகித்தது சரிதான் என்பதே உறுதியாகிறது. சட்டசபைப் பிரவேசத்தை முழுமூச்சாக ஆதரித்து அச்சபையில் சுயராச்சியக் கட்சியின் சிறந்த தலைவராக விளங்கிய மோதிலால் நேருவும் கூட, சில ஆண்டுகளில் இதை நன்கு உணரலானார். அவரும் சுதந்திரத்துக்கான போராட்டத்தைச் சட்டசபைக்கு வெளியேதான் நடத்த வேண்டியதாயிற்று. மாளவியாவும் வித்தல்பாய் படேலும், தேசிய ஒத்துழையாமை உணர்வைப் புறக்கணித்து, 1930ஆம் ஆண்டின் சில மாதங்கள் வரையில் சட்டசபையில் அங்கம் வகித்துவந்தார்கள். ஆனால் அவர்களும், சட்டசபை "சுரண்டலுக்கேற்ற சாதனமே" என்பதை உணர்ந்து விரைவிலேயே அதிலிருந்து விலகிக் கொண்டார்கள்.

இந்தியச் சுதந்திரப் போராட்டம் சட்டசபைகளுக்கு வெளியே தான் பெரிய வெற்றிகளைக் கண்டது. ஆனாலும், பல்வேறு காரணங்களால் தேசிய இயக்கத்தில் தடைமுடைத் தளர்ச்சிகள்

ஏற்பட்டபோதெல்லாம், ஏகாதிபத்தியத்தின் கொள்கைகளை எதிர்த்தும் மறுத்தும் பேசுவதற்குச் சட்டசபைகள் சரியான களங்களாக அமைந்தன என்பது உண்மையே. இத்தகைய சமயங்களில், சட்டசபையில் இருந்த எதிர்க்கட்சிகளே ஏகாதிபத்தியத்துக்கு எதிரான பிரச்சினைகளை மக்கள் மன்றத்தில் வெளிப்படுத்தி வந்தன. சட்டசபைத் தேர்தல்களின் போது, "ஆங்கில ஆட்சியுடன் ஒத்துழைத்துப் பொறுப்பாட்சி பெறுதல்" என்னும் கொள்கை தவறானது என்று மக்களிடம் எடுத்துரைப்பதற்கும் போதிய வாய்ப்புக் கிடைத்தது. இரண்டாவது, மூன்றாவது, ஐந்தாவது, ஆறாவது சட்டசபைத் தேர்தல்களில் மிதவாதிகளும் பொறுப்பான ஒத்துழைப்புக்காரர்களும் முறியடிக்கப் பட்டதால், ஆங்கில ஏகாதிபத்தியத்தோடு ஒத்துழைப்பது என்னும் கொள்கையை மக்கள் நிராகரித்துவிட்டார்கள் என்பதும் தெளிவாயிற்று. இருந்த போதிலும், (ஆங்கில ஏகாதிபத்தியம் கொண்டு வந்த ஆட்சியியல்) சீர்திருத்தங்களை உள்ளிருந்தே முழுமையாகத் தகர்த்துவிட முடியும் என்று எண்ணுவது தவறு. சட்டசபையில் ஏற்படும் தருமசங்கடமான நிலைமைகளிலிருந்து அரசு தப்பித்துக் கொள்வதற்கு வசதியான உள்சூழ்ச்சிகள் சீர்திருத்தச் சட்டங்களில் எப்போதும் அமைக்கப்பட்டே இருந்தன. எனவே, சட்டசபையில் அரசு தோற்கடிக்கப்பட்ட போதும் அதன் கொள்கைகள் செயற்படாமல் நிற்கவில்லை. வரவுசெலவுத் திட்டங்கள், நிதிமசோதாக்கள், இந்திய—பிரிட்டிஷ் ஒப்பந்தங்கள் மற்றும் பலவற்றையும், சட்டசபை பல சமயங்களில் நிராகரித்தது. ஆனாலும், அந்த மசோதாக்கள் முதலியவற்றில் அடங்கிய கொள்கைகள் அமுல் நடத்தப்படுவதைத் தடுக்க முடியவில்லை. புலாபாய் தேசாய் ஒருமுறை சட்டசபையில் சொன்னது போல, "(சட்டசபையின் இந்திய உறுப்பினர்களாகிய) நாம் (அரசுடன்) ஒத்துப் போகும்போதெல்லாம் நாம் பயனுள்ளவர்கள் என்பது போலவும் அதனோடு ஒத்துப் போக முடியாத போதெல்லாம் நாம் பயனில்லாதவர்கள் என்பது போலவுமே இந்திய அரசு நடந்து வந்திருக்கிறது!" நிலைமை இப்படி இருந்ததால், சட்டசபையில் இருந்தவாறே சீர்திருத்தங்களைத் தகர்க்க முடியவில்லை. ஃபைஸ்பூரில் நிகழ்த்திய தலைமை உரையில் ஜவஹர்லால் நேரு

இதைத் தெளிவாகக் குறிப்பிட்டிருந்தார்: "சட்டசபை நடவடிக்கைகளின் மூலமாக மட்டுமே ஆட்சியியல் சட்டத்தைத் தகர்த்துவிட முடியாது; வெளியே மேற்கொள்ளப்படும் பொது ஜன நடவடிக்கையும் இதற்குத் தேவை. எனவே, நமது தேசீயப் போராட்டத்தின் வெற்றி பொதுஜன இயக்கங்களையும் அதன் நடவடிக்கைகளையும் பொறுத்தது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்."

இத்தனை எதிர்மறை அம்சங்கள் இருந்தபோதிலும், சுதந்திரப் போராட்டத்தில் மத்திய சட்டசபை ஆக்கபூர்வமாகப் பங்கு கொண்டுதான் வந்திருக்கிறது. ஆட்சியியல் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவது, ராணுவம், நிருவாகம், ரயில்வே ஆகியவற்றை இந்திய மயமாக்குவது, உள்நாட்டுத் தொழில்களுக்கு உதவுவது, சமுதாயச் சீர்திருத்தங்களையும் தொழிலாளர் நலச் சீர்திருத்தங்களையும் கொண்டுவருவது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டிய நிர்ப்பந்தத்தை இந்திய உறுப்பினர்கள் ஏகாதிபத்தியத்துக்கு ஏற்படுத்தினார்கள். இந்திய உறுப்பினர்களிலே பலர், ஆட்சியாளரின் அடக்கு முறைச் சட்டங்களுக்கு எதிரான மக்கள் இயக்கங்களோடு கருத்து ஒற்றுமை கொண்டிராவிட்டாலும், அடக்குமுறைச் சட்டங்களைக் கண்டிப்பதில் இந்திய உறுப்பினர் அனைவரும் அநேகமாக ஒன்றுபட்டே நின்றார்கள். 1928—1929ல் பொதுப் பாதுகாப்பு மசோதாவின் மீது நிகழ்ந்த மிக நீண்ட விவாதமும், அந்த விவாதத்தின் போது தலைவர் படேல் மேற்கொண்ட நடவடிக்கையும் இந்த வகையில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவை. மேலும், ஏகாதிபத்தியவாதிகளின் நலனையே உள்நோக்காகக் கொண்ட (அரசாங்கத்தின்) நடவடிக்கைகளை எதிர்த்து இந்தியர்கள் தொடுத்த எதிர்ப்புகளின் ஆழ அகலங்களையும் இந்த விவாதங்கள் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. உருக்குப் பாதுகாப்பு மசோதா, நாணய மசோதா, ஆட்டவா வாணிப ஒப்பந்தம், இந்திய பிரிட்டிஷ் ஒப்பந்தம் ஆகியவற்றின் மீது நிகழ்ந்த விவாதங்கள் மேற்குறித்த சிறப்பை விளக்குவனவாக உள்ளன. இதிலே வேடிக்கை என்னவென்றால், சட்டசபையின் தொழிலாளர் பிரதிநிதிகளை ஏகாதிபத்திய ஆட்சியே நியமித்தது; ஆனாலும், தொழில் தகராறுகள், தொழிலாளர்

உரிமைகள், தொழிலாளர்களுக்கு வாக்குரிமை, அவர்களின் பணிநிலை வசதிகள், தொழில் நிருவாகம் போன்ற பிரச்சினைகளில், அந்த நியமன உறுப்பினர்களின் குரல் தொழிலாளர்களின் அப்பட்டமான குரலாகவே சட்டசபையில் ஒலித்தது!

சட்டசபை மற்றும் சட்டசபை உறுப்பினர்களின் உரிமைகளையும் சலுகைகளையும் கட்டிக்காத்துப் பெருக்கிக் கொள்வது சம்பந்தமான சட்டசபை நடவடிக்கைகளில் இந்திய உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றுபட்டு உறுதிக் குரல் எழுப்பி வந்தார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்திகளிலே ஒன்று. இந்தியாவில் இந்தியப் பாராளு மன்றம் ஒன்றைப் பின்வாசல் மூலம் நுழைத்து விட இந்திய உறுப்பினர்கள் முயல்கிறார்கள் என்று ஏகாதிபத்திய அரசு கருதி வந்ததால், இத்தகைய சமயங்களில், ஆளும் கட்சியினரோடும் அரசாங்கத்தோடும் அவர்கள் (இந்திய உறுப்பினர்கள்) நேருக்கு நேர் மோதிக்கொள்ள வேண்டியிருந்தது. தலைவர் படேல் இதில் ஓரளவு வெற்றியும் பெற்றார். பொதுவாக மக்களின் உரிமைகளுக்காகவும், குறிப்பாக, பேச்சுரிமை, எழுத்துரிமை, கூடிப்பயிலும் உரிமை போன்றவைகளுக்காகவும் இந்திய உறுப்பினர்கள் அயராது போராடி வந்தார்கள்.

இந்தியா பற்றிய ஆங்கில அரசாங்கத்தின் கொள்கை மற்றும் நடைமுறைகளை வெட்டுப் பிரேரணைகள், ஒத்திவைப்புத் தீர்மானங்கள், தீர்மானங்கள், கேள்விகள் முதலியவைகளின் மூலம் பகிரங்கப்படுத்துவதிலும் இந்திய உறுப்பினர்கள் கணிசமாக வெற்றி பெற்றார்கள். இத்தகைய சமயங்களில் இந்திய அரசின் பிரதிநிதிகள், பாவம், மிகவும் சங்கடப்பட்டார்கள். அகில இந்தியக் கிராமத் தொழில் சங்கத்தைப் பற்றி அரசு அனுப்பிய ரகசியச் சுற்றறிக்கையின் மீது 1934ல் நடைபெற்ற விவாதம் இதற்குச் சரியானதோர் எடுத்துக்காட்டு.

இந்தியாவின் முக்கியமான அரசியல் சக்திகள் எல்லாம் சட்டசபையில் இடம் பெற்றிருந்த 1924—1929, 1935—1939 காலமே சட்டசபைப் போராட்டத்தில் சிறப்புக்குரிய காலம். (1945க்கும் 1947க்கும் இடைப்பட்ட காலம் மிகவும் குறுகலான காலமாதலால்,

அதிலே பெரும்பயன் விளையக் கூடிய பணி எதுவும் நடைபெற முடியவில்லை; மேலும், அந்தக் காலக்கட்டத்தில் சட்டசபைக்கு வெளியே நிகழ்ந்த பல முக்கியமான நிகழ்ச்சிகளாலும் சட்டசபை நடவடிக்கை மறைப்புண்டு போயிற்று.) சிறப்புக்குரிய இந்தக் காலகட்டத்தில் (காங்கிரஸ் கட்சியின் ஒரு பகுதியினரான) சுயராச்சியக் கட்சியினரும் காங்கிரஸ் கட்சியினருமே சட்ட சபையில் தனித்த பெரும்பான்மைக் குழுவினராக இருந்தார்கள். தவிர, மோதிலால் நேரு, புலாபாய் தேசாய், சத்தியமூர்த்தி, கோவிந்த் வல்லப பந்த், ஆஸஃப் அலி போன்ற புகழ்பெற்ற 'பார்லிமென்டேரியன்'களின் தகுதி வாய்ந்த தலைமையும் அவர் களுக்குக் கிடைத்திருந்தது. இவர்கள் தகுதி மிக்க விவாதக் காரர்கள் என்பதும் முக்கியமான தலைவர்கள் என்பதும் ஒருபுற மிருக்க, சட்டசபைக்கு வெளியே பொங்கிப் பெருகிய தேசிய இயக்கம் என்னும் வெள்ளத்திலிருந்து ஓர் ஆர்வ உந்துதலைப் பெறக் கூடிய மக்கள் தலைவர்களாகவும் இருந்தார்கள். அவர் களுக்கு இருந்துவந்த பொதுஜன செல்வாக்கு அரசாங்கத்தின் மீது அவர்கள் தொடுத்த தாக்குதல்களுக்கு மேலும் உறுதி சேர்த்தது. எனவே, அரசாங்கம் இவர்களின் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் தனது குகையிலேயே தோல்வியைத் தழுவுவதைக் கண்டபோதெல்லாம் பொதுமக்கள் பெரும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.